# பெரிய புராண விளக்கம்

கி.வா.ஜ.



பகுதி 2

அல்லயன்ஸ்

# அல்லயன்ஸாரைப் பற்றிய அமுத மொழிகள்

**THE FREE PRESS :-** A Notable Publisher. ...No Library of Modern Tamil Literature will be complete, it can be safely affirmed, without the Excellent Books of The Alliance Company.

**கலைமகள் :-** *மனோகரமான புத்தகங்களை அழகான முறையில் பிரசுரிப்பவர்களுக்குள் முன்னணியில் நிற்பவர் அல்லயன்ஸ் கம்பெனியார்.*

**ஆனந்த விகடன் :-** *வெகு அழகான புத்தகங்களை, அல்லயன்ஸார் தயாரிப்பதன் மூலம் தமிழ் நாட்டுக்கே பெருமையும் மதிப்பும் வாங்கிக் கொடுக்கிறார்கள்.*

**பாரத தேவி:-** *அல்லயன்ஸ் புத்தகங்களைப் படிக்கத் தவறியவர்கள் தமிழ் இலக்கியத்தில் வளர்ச்சி பெற்று வரும் புதிய வித்தையைப் பார்த்து இன்புறத் தவறிவிட்டவர்களே யாவார்கள்.*

**THE HINDU :-** ...Alliance Co., proves that it still continues and wants to continue as a vibrant Publisher, hitching the wagon to the stars.

**பாலர் கல்வி :-** *இக்காலத்தில் நல்ல தமிழ் நூல்களை அச்சிட்டு தமிழ் மொழியின் வளர்ச்சிக்குப் பெரிதும் உழைத்து வரும் அல்லயன்ஸ் கம்பெனியார், இவ்வளவு அழகான புத்தகங்களை வெளியிட்டுக் கொண்டிருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும்.*

**திருச்சி ரேடியோ :-** *பிரசுரங்களில் அல்லயன்ஸ் "ஓர் உன்னத சித்திரம்."*

*அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை-4*

**INDIAN EXPRESS :-** ...With out the flambuoyant and aggressive advertising that marks modern Publishing enterprise, Alliance has been serving to the cause of literature in a silent but substantial way.

**''கல்கி'' :-** உண்மையில் இந்தப் புத்தக வெளியீட்டை ஓர் வியாபார விஷயமாகச் சொல்வதற்கேஇல்லை. அல்லயன்ஸார் தமிழ் நாட்டுக்குச் செய்து கொண்டிருக்கும் ஓர் அரும் பெரும் தொண்டு என்றுதான் சொல்ல வேண்டும்.... தமிழ் நாட்டில் மறுமலர்ச்சி இயக்கம் புத்தக பைண்டுத் தொழிலுக்குக் கூட ஏற்பட்டிருக்கிறதென்பதற்கு அல்லயன்ஸ் புத்தகங்கள் அத்தாட்சி.

**பாரத மணி :-** தமிழ் நாட்டில் இதுவரையில் இத்தகைய நூல்கள் வெளி வந்ததில்லை. புத்தகங்களின் அமைப்பு மிகவும் சிறந்து விளங்குகின்றது. தமிழுலகம் நவயுகத்தில் முன்னேற்ற மடைவதற்குரிய வழிகளில் உழைத்து மாசற்ற சேவை செய்து வருகின்றனர் அல்லயன்ஸ் கம்பெனியார்.

**SUNDAY TIMES :-** The Alliance Co., that enterprising Publishers of Madras deserves the thanks of all book lovers for the service to the language.

**ஈழகேசரி :-** தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு, ஊக்கம் குன்றாது உழைத்து வரும், அல்லயன்ஸ் கம்பெனியாரை ஒவ்வொரு தமிழனும் பாராட்ட வேண்டும்.

**ஹநுமான் :-** எவ்வளவோ பொருள்களைச் சந்ததியின் ஞாபகத்திற்காக வைத்து விட்டுப் போகிறோம். இன்றைய தமிழ் முன்னேற்றத்தின் அறிகுறியாக அல்லயன்ஸ் புத்தகங்களை சந்ததிகளிடம் நாம் பெருமையுடன் விட்டுச் செல்லலாம்.

**சக்தி :-** தமிழிலக்கிய நவமலர்ச்சியின் கொழுந்து அல்லயன்ஸாரின் நூல்கள். இது உபசாரமல்ல, உண்மை.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை-4

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் :-** ... இதற்குத் தூண்டு கோல் போன்றும், இவற்றை அனுபவிக்க மக்களைத் தட்டி எழுப்புவது போன்றும், நமது நாட்டு மக்கட்குக் கலைப் பயிற்சியையும் ஞான உணர்ச்சியையும் ஊட்டுவதில் முனைந்து ஈடுபட்டுள்ள நமது அல்லயன்ஸ் கம்பெனியார், மிகுந்த ஊக்கத்துடன் சிறந்த புத்தகங்களை சுத்தமாக வும், அழகாகவும் பதிப்பித்துக் கொண்டிருப்பது பாராட்டத் தக்கது.

**வ. ரா :-** அல்லயன்ஸார் நீண்ட காலம் வாழ்ந்து மேலும் நல்ல நூல்களை தமிழ் நாட்டவருக்கும், பிறநாட்ட வருக்கும், பயன்படுமாறு அடிக்கடி வெளிக்கொண்டு வர வேண்டும் என்பது என் பிரார்த்தனை.

**கி. வா. ஜ :-** இந்தப் புத்தக வெளியீட்டின் மூலம் அல்லயன்ஸ் கம்பெனியார் தமிழுக்கு பெருந்தொண்டு செய்து வருகிறார்கள்.

**Shri. T.K. Chidambaranatha Mudaliar :-** ...By means of the Publication, you have in a way gauged the literary talents of Tamilnadu. I heartily Congratulate you on the Publication.

**பெ. நா. அப்புஸ்வாமி :-** அல்லயன்ஸார் யாதொரு இடையூற்றையும் பொருட்படுத்தாது சிறிதும் ஊக்கம் குன்றாது நடத்தி வரும் இந்த நிறுவனத்தின் மூலம் ஈடு செய்ய முடியாத அளவிற்கு தமிழிற்குச் செய்து கொண்டி ருக்கும் பெருந்தொண்டு மிகவும் வியந்து பாராட்டுதற் குரியது.

**கா.சி. வேங்கடரமணி :-** யுத்த நெருக்கடியில், கடுமையான காகிதப் பஞ்சம் பரவி நிற்கும் சமயத்தில், ஒரு நல்ல புத்தகத்தை வெளியிட முயல்வது, இரு கரையி லிருந்தும், ஆகாயத்திலிருந்தும் குண்டு சரம் மாதிரி பொழிந்து கொண்டிருக்கும் போதே ஒரு பேராற்றுக்குப் புதிதான பாலம் கட்ட முயல்வது போல் கிடக்கிறது. இருந் தாலும் வெற்றியடைய வேண்டுமென்றால் இரவுக்கிரவே பாலம் கட்டத்தானே வேண்டும் .. இந்த வெற்றியின் பெருமை எனக்கல்ல; அல்லயன்ஸ் கம்பெனியாருக்கே.

---

# பெரிய புராண விளக்கம்

## பகுதி-2

கி. வா. ஜகந்நாதன்




அல்லயன்ஸ் கம்பெனி

தபாற் பெட்டி எண். 617

மயிலாப்பூர் சென்னை-600 004.

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| 1. | Title of the Book | : Periya Purana Vilakkam Part II |
| 2. | Author | : Ki. Va. Jagannathan, M.A., |
| 3. | Language | : Tamil |
| 4. | Edition | : First Edition |
| 5. | Date of Publication | : December, 1987 |
| 6. | Copy Right Holder | : Author |
| 7. | Paper used | : 10.9 kg. D/Cr. white printing |
| 8. | Size of the Book | : 18.5 cms x 12.5 cms |
| 9. | Printing point Used | : 10 point |
| 10. | Number of pages | : (476+4) 480 Pages |
| 11. | Number of Copies | : 1100 Copies |
| 12. | Artist | : Muthu |
| 13. | Printer | : Sri Suriya Chandra Achagam Madras-600 086 |
| 14. | Binding | : Card Board Binding |
| 15. | Price | : Rs. 37-50 |
| 16. | Publisher (with full address) | The Alliance Company<br>244, R. K. Mutt Road<br>Post Box No. 617<br>Mylapore, Madras-600 004<br>Phone : 7 1 3 1 4 |
| 17. | Subject | : Appreciative (II Part) Commentary of "Periya Puranam" |

## நூற்றாண்டை நோக்கி.........

''தமிழில் நல்ல நூல்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸ் ஸ்தாபகர் ஸ்ரீ வி. குப்புஸ்வாமி ஐயரை நான் பாராட்டுகின்றேன்.''

—மகாத்மா காந்தி

''நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளையும், பல நாடகங்களையும், பல மொழி பெயர்ப்புக்களையும் இன்னும் பல விஷயங்களையும் எளிய அழகிய நடையில் வெளியிட்டு வரும் அல்லயன்ஸாரை நான் பாராட்டுகின்றேன்.''

—மஹாமஹோபாத்தியாய Dr. உ. வே. சாமிநாத ஐயர்

"Books Published by Alliance Co., are highly popular Books."

—Rt. Hon'ble V. S. Srinivasa Sastri

''தமிழில் பல அழகிய புத்தகங்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸாருக்கு நன்றி செலுத்தி அவர்களைத் தமிழ் மக்கள் ஆதரிக்க வேண்டுகிறேன்.''

—சக்கரவர்த்தி ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார்

''அல்லயன்ஸ் கம்பெனியார் நல்ல நூல்களை வெளியிடுவதில் தேர்ந்தவர்கள். அவர்களுக்குத் தமிழ் நாட்டார் தக்க ஊக்கம் தர வேண்டும் என விரும்புகிறேன்.''

—சத்தியமூர்த்தி

''மயிலை அல்லயன்ஸ் கம்பெனியாரின் வெளியீட்டுத் திறத்தை ஈண்டு விரித்துக் கூற வேண்டியதில்லை. அதை நாடறியும். அல்லயன்ஸ் கம்பெனியாரால் வெளியிடப் பெற்ற நூல்கள் யாவும் தமிழ்நாட்டுக்குப் பல வழிகளிலும் பயன் விளைத்து வருதல் கண்கூடு. நாட்டு நலங்கருதி ஒழுங்கு முறையில் உழைக்கும் அவர்களுக்கு நாடு கடமைப் படுவதாக.''

—திரு. வி. க.

# முகவுரை

இந்தப் புத்தகத்தில் பெரிய புராணத்தில் வரும் தடுத்தாட்கொண்ட புராணத்தில் உள்ள பாடல்களுக்கு விளக்கத்தை எழுதியிருக்கிறேன். ஒப்புமைப் பகுதிகளையும், இலக்கணக் குறிப்புக்களையும், சிறப்புப் பெயர்கள் முதலியவற்றையும், பிரதி பேதங்களையும் கூடிய வரையில் எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

இவற்றைப் படித்துத் தமிழ் மக்கள் பயனை அடைவார்கள் என்றும் பெரிய புராணத்தைப் படிக்க வேண்டும் என்னும் விருப்பத்தை அடைவார்கள் என்றும் நம்புகிறேன்.

அன்பன்,

**கி. வா. ஜகந்நாதன்**

# தடுத்தாட்கொண்ட புராணம்

**பெரிய புராணத்தில் 5-ஆவதாக விளங்குவது தடுத்**தாட்கொண்ட புராணம். இது சுந்தரமூர்த்தி நாயனாரைத் திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் அருட்டுறை என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் கிருபாபுரீசர் தடுத்து ஆட்கொண்ட வரலாற்றைக் கூறுவது. இதில் உள்ள முதல் செய்யுளின் கருத்து வருமாறு:

'தங்கையாற்றையும் பிறைச்சந்திரனையும் பாம்புகளையும் கொன்றை மலர் மாலையையும் தம்முடைய திருமுடியின்மேல் தங்கவைத்தவரும், அழகிய கண்களைப் பெற்றவருமாகிய கிருபாபுரீசர் ஓலையைக் காண்பித்துத் தடுத்து ஆட்கொண்டவராகிய சுந்தரமூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய திருநாவலூர் உள்ள நாடு, மங்கைப் பருவத்தை அடைந்த பெண்மணிகளுடைய முகங்களாகிய குளிர்ச்சியைப் பெற்ற சந்திரனுடைய இரண்டு பக்கங்களிலும் ஓடிச் சென்று சிவந்த கயல் மீன்களைப் போன்ற கண்கள் அவர்கள் காதுகளில் அணிந்த மகரக் குழைகளை விரும்பிச் சேரும் காட்சியைப் பெற்ற திருமுனைப்பாடி நாடு என்னும் நாடு ஆகும்.' பாடல் வருமாறு:

**''கங்கையும் மதியும் பாம்பும்**
**கடுக்கையும் முடிமேல் வைத்த**
**அங்கணர் ஓலை காட்டி**
**ஆண்டவர் தமக்கு நாடு**
**மங்கையர் வதன சீத**
**மதிஇரு மருங்கும் ஓடிச்**
**செங்கயல் குழைகள் நாடும்**
**திருமுனைப் பாடி நாடு.''**

கங்கையும்—கங்கையாற்றையும். மதியும் — பிறைச் சந்திரனையும். பாம்பும்—பாம்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். கடுக்கையும்—கொன்றை மலர் மாலையையும், முடிமேல்—தம்முடைய தலையின்மேல். வைத்த—தங்க வைத்த. அங்கணர்—அழகிய கண்களைப் பெற்ற கிருபாபுரீசர். கணர்: ஒருமை பன்மை மயக்கம்; இடைக்குறை. ஓலை—ஆளோலையை. காட்டி—காண்பித்தருளி. ஆண்டவர் தமக்கு—தடுத்து ஆட்கொண்டவராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்கு. தம்: அசை நிலை. நாடு—திருவவதாரம் செய்தருளிய திருநாவலூர் உள்ள நாடு. மங்கையர்—மங்கைப் பருவத்தை அடைந்த பெண்மணிகளுடைய. வதன—முகங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். சீத—குளிர்ச்சியைப் பெற்ற. மதி—சந்திரர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். இரு மருங்கும்—இரண்டு பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். ஓடி—ஓடிச் சென்று. ச்:சந்தி. செங்கயல்—சிவந்த கயல் மீன்களைப் போன்ற கண்கள்; உவம ஆகு பெயர். கயல்; ஒருமை பன்மை மயக்கம். குழைகள்—அந்தப் பெண்மணிகள் தங்களுடைய காதுகளில் அணிந்த மகரக் குழைகளை. நாடும்—விரும்பிச் சேரும். காதளவோடிய கண்கள் என்பது கருத்து. திருமுனைப்பாடி நாடு-திருமுனைப் பாடி என்னும் நாடு ஆகும்.

அங்கணர்: ''அங்கட் கருணை பெரிதா யவனே.'',''விடத்தினை நுகர்ந்த அங்கணன்.'',''தேவூர் அங்கணன்.'', ''அங்

கணா அஞ்சவென்றருள்.'', ''அங்கணா அருள்'' என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், ''அங்கணாய் அடைந்தார் வினைதீர்ப்பரே.'', ''அங்கணார் அடியார்க் கருள் நல்குவர்.'', ''அங்கணன் எந்தை.'',''அங்கணாற்கது வாலவன் தன்மையே.'', ''அங்கணனே அமரர்கள்தம் இறைவா போற்றி'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அங்கணனே அருளாய்.'', ''அங்கண் நம்பி.'', ''அங்கணா எனை அஞ்சலென் றருளாய்.''என்று சுந்தரமூர்த்தி நாயனாரும்,''அங்கண் அரசை.'', ''அங்கணன் அந்தணனாய்.'', ''அங்கணனே உடையாய்.'', ''குருந்தம் மேவிய சீர் அங் கணா.'', ''அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்'' என்று மாணிக்கவாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

மகளிர் கண்களுக்குக் கயல்மீன்கள் உவமை: ''கய லார் தடங்கண்ணியொடும்.'', ''கயலார் தடங்கண் அஞ்சொல் நல்லார்.'', ''கயலினிணைக் கண்ணாள்.'', ''கயலார் கண்ணார்.'', ''கயலன அரிநெடுங் கண்ணி.'', ''அங்கய லனகணி அரிவை.'', ''கயல சேவகரும் கண்ணியர்.'', ''கண்கள் இணைக்கயலே.'', ''அங்கயற் கண்ணி'' என்று திருஞான சந்பந்தமூர்த்தி நாயனாரும், ''கயல்மாண்ட கண்ணி.'', ''செங்கயல் ஒண்கண் மடந் தையர்'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 2-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'பெருகியுள்ள நலங்களோடு மிகுதியாக உள்ளதும், பெருமையைப் பெற்றதும் ஆகிய அழகிய அந்தத் திருமுனைப்பாடி நாட்டில் பொருள் அறிவதற்கு அருமை யாகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர் வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் சைவ சமயமும் ஓங்கி வளரும் வண்ணம் திருநாவலேசுவரர் வழங்கிய திருவருளால் திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய தும்,தவசிகள் பொருந்திய தவம் புரிவதால் மிகுதியாக உள்ள

வளப்பத்தைப் பெற்ற சிவத்தலமுமாக இருப்பது உண்மை பேசுவதில் ஒருகாலமும் குறையாத அழகிய வேதியர்கள் நெடுங்காலமாக வாழ்வதும் ஆகிய சிறப்புக்களைக் கொண்டது திருநாவலூர் ஆகும்.' பாடல் வருமாறு:

**''பெருகிய நலத்தால் மிக்க பெருந்திரு நாடு தன்னில்**
**அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவத ரித்த**
**மருவிய தவத்தால் மிக்க வளம்பதி வாய்மை குன்றாத்**
**திருமறை யவர்கள் நீடும் திருநாவ லூராம் அன்றே.''**

பெருகிய—பெருகி உள்ள. நலத்தால்—பலவகை நலங்களோடு; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். அந்த நலங்களாவன; நீர்வளம், நிலவளம், செல்வ வளம், நன்மக்கள் வாழும் வளம் முதலியவை. மிக்க—மிகுதியாக உள்ள. பெரும்—பெருமையைப் பெற்றதும். திரு—அழகைப் பெற்றதுமாகிய. நாடுதன்னில்—திருமுனைப் பாடி நாட்டில். தன்: அசைநிலை. அரு—பொருளைத் தெரிந்துகொள்வதற்கு அருமையாக இருக்கும். மறை—இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சைவம்—சைவ சமயமும். ஓங்க—ஓங்கி வளரும் வண்ணம். அருளினால்—திருநாவலேசுவரர் வழங்கிய திருவருளால். அவதரித்த-திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியதும்; பெயரெச்சவினையாலணையும் பெயர். மருவிய-பொருந்திய. தவத்தால்- தவசிகள் செய்யும் தவத்தினால். மிக்க—மிகுதியாக அமைந்த. வளம்—பல வகையான வளங்களைப் பெற்றதும். பதி—சிவத்தலமும். வாய்மை-உண்மை பேசுவதில்; ஆகுபெயர். குன்றா—ஒருநாளும் குறையாத. த்: சந்தி. திரு-அழகிய; 'செல்வத்தைப் பெற்ற' எனலும் ஆம். மறையவர்கள்—வேதியர்கள். நீடும்—நெடுங்காலமாக வாழ்வதும் ஆகிய சிறப்புக்களைக் கொண்டது. திருநாவலூர்—திருநாவலூர் என்னும் சிவத்தலம். ஆம்—ஆகும். அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

அடுத்து வரும் 3-ஆம் பாட்டின் கருத்து வருமாறு:

'விருப்பம் மருவிய சுந்தரநாயகி யம்மையைத் தம்மு டைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்த திருநாவலேசுவர ருக்குப் பரம்பரை பரம்பரையாக அடிமைத் தொண்டைப் புரியும் மறையவர்களுடைய சாதியில் திருவவதாரம் செய் தருளி மேம்பாட்டைப் பெற்ற சடையனாருக்குக் குற்றம் இல்லாத கற்போடு கூடிய வாழ்க்கையை நடத்தும் அவரு டைய மனைவியாராகிய இசை ஞானியாரிடம் தீமைகள் யாவும் நீங்கி உலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் சுந்தரமூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளினார்.' பாடல் வருமாறு:

**''மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்**
**வேதியர் குலத்துள் தோன்றி மேம்படு சடைய னாருக்**
**கேதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானி யார்பால்**
**தீதகன் றுலகம் உய்யத் திருவவ தாரம் செய்தார்.''**

மாது-விருப்பம் மருவிய சுந்தர நாயகி அம்மையை. ஒரு பாகனார்க்கு-தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்த திருநாவலேசுவரருக்கு. வழிவழி-பரம்பரை பரம் பரையாக. அடிமை-அடிமைத் தொண்டை. செய்யும்-புரியும். வேதியர்-மறையவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலத்துள்-சாதியில்; 'குடும்பத்தில்' எனவும் ஆம். தோன்றி-திருவவதாரம் செய்தருளி. மேம்படு-மேம் பாட்டைப் பெற்ற. சடையனாருக்கு-சடையனார் என்னும் திருநாமத்தைக் கொண்ட வேதியருக்கு. ஏதம்-ஒரு குற்றமும். இல்-இல்லாத; கடைக்குறை. கற்பின்-கற்பு நிறைந்து விளங்கிய. வாழ்க்கை-வாழ்க்கையை நடத்தும். மனை-மனைவியாராகிய; ஒருமை பன்மை மயக்கம். இசை ஞானி யார்பால்-இசை ஞானியார் என்னும் திருநாமத்தைக் கொண்ட அன்னையாரிடத்தில். தீது-தீமை கள்; ஒருமை பன்மை மயக்கம். அகன்று-நீங்கி. உலகம்-இந்தப் பூமண்டலத்தில் வாழும்

மக்கள்; இட ஆகு பெயர். உய்ய-உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். த்:சந்தி. திருவவதாரம் செய்தார்-சுந்தரமூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளினார்.

வழிவழி அடிமை செய்தல்: ''மாதொரு பாக ரன்பின் வழிவரு மலாடர் கோமான்'' என்று பெரிய புராணத்தில் வருவதைக் காண்க.

அடுத்து வரும் 4-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தலைவனாகிய திருநாவலேசுவரன் வழங்கிய திருவருளால் அறிவிற் சிறந்த சான்றோர்கள் வாழ்த்தும் நம்பி ஆரூரர் என்றே திருநாமத்தையும் சடையனாருக்கும் இசை ஞானியாருக்கும் பிறந்த ஆண் குழந்தைக்குச் சொல்லி வைத்து அழகு மிகுதியாக உள்ள ஐம்படைத் தாலியையும் சதங்கைகளையும் அணிந்து, அழகிய மாணிக்கச் சுட்டியையும் புனைந்து, சிவந்த தங்கத்தாற் செய்த அரைநாண் தம்முடைய இடுப்பில் மின்னலைப் போல ஒளியை வீச, வீதியில் சிறு தேரைத் தள்ளி வரும் காலத்தில்.' பாடல் வருமாறு:

**''தம்பிரான் அருளி னாலே தவத்தினால் மிக்கோர் போற்றும்**
**நம்பியா ரூரர் என்றே நாமமும் சாற்றி மிக்க**
**ஐம்படை சதங்கை சாத்தி அணிமணிச் சுட்டி சாத்திச்**
**செம்பொன்நாண் அரையில் மின்னத் தெருவில்தேர்**
**உருட்டும் நாளில்.**

இந்தப் பாடல் குளகம். தம்பிரான்-தலைவனாகிய திருநாவலேசுவரன். அருளினால் - வழங்கிய திருவருளால். ஏ: அசை நிலை. தவத்தினால்-தாங்கள் புரிந்த தவத்தினால். மிக்கோர்-சிறப்பை மிகுதியாகப் பெற்ற தவசிகள்; ஒருமை பன்மை மயக்கம். போற்றும்-வாழ்த்தும். நம்பி ஆரூரர் என்று- நம்பி ஆரூரர் என. ஏ:அசைநிலை. நாமமும்-திருநாமத்தையும். சாற்றி-சடையனாருக்கும் இசை ஞானியாருக்கும் பிறந்த ஆண் குழந்தைக்கு இட்டுச் சொல்லி, மிக்க-அழகு மிகுதியாக

உள்ள. ஐம்படை-திருமாலுக்குரிய ஐந்து ஆயுதங்களாகிய சங்கு, சக்கரம், கதை, வில், வாள் என்பவற்றைப் பொறித்த ஐம்படைத் தாலியை. சாத்தி-மார்பில் அணிந்து. சதங்கை-சலங்கைகளை; ஒருமை பன்மை மயக்கம். சாத்தி-இடுப்பில் அணிந்து. 'சாத்தி' என்பதை ஐம்படைக்கும் கூட்டுக. அணி-அழகிய. மணி-மாணிக்கத்தாற் செய்த. ச்:சந்தி. சுட்டி-சுட்டியை. சாத்தி-முன்னுச்சி மயிரில் தொங்கும் வண்ணம் அணிந்து. ச்:சந்தி. செம்-சிவந்த. பொன்-தங்கத்தாற் செய்த. நாண்-அரைநாணை. அரையில்-அந்தக் குழந்தையினுடைய இடுப்பில். மின்ன-மின்னலைப் போல ஒளியை வீசும் வண்ணம். த்:சந்தி. தெருவில்-திருநாவலூரில் உள்ள ஒரு வீதியில். தேர்-சிறு தேரை; நடைவண்டியை; இது மூன்று சக்கரங்களை உடையது; 'முக்கால்சிறு தேர்' என வழங்கும். உருட்டும்-தள்ளி ஓட்டும். நாளில்-காலத்தில்.

ஐம்படைத் தாலியைக் குழந்தைகள் அணிந்திருத்தல்: "'தாலி ஐம்படைத் தழுவு மார்பிடை.'' (**கம்பராமாயணம்**), ''ஐம்படை மார்பிற் காணேன்.'' (**திருவிளையாடற்புராணம்**, 39;25).'' ''எழிலார் திருமார்வுக் கேற்கும் இவையென்று அழகிய ஐம்படையும்.'' (**பெரியாழ்வார் திருமொழி** 1-2;48), ''மங்கல ஐம்படையும்.'' (ஷை. 1:5:10) என வருவனவற்றைக் காண்க.

சிறுதேர் உருட்டுதல்: ஆண்பாற் பிள்ளைத் தமிழ்களில் சிறுதேர்ப் பருவம் என ஒரு பருவம் உண்டு. ''மருவாய் நறுந்தாதகித் தொங்கல் வளவர்கோ மகனுடன் இவர்ந் திருகையும் மணிக்கவரி வாங்கி வீசக் கற்பகப்பூ மகிழ்ந்து வானாடர் தூற்றப், பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம் பெரும்பிணையெலாம் முழங்கப் பிறங்குமூ வாயிரவர் முதலியோர் மறையொலி பிறங்கத் தொடந்து போதக், கருவாய் உறாமற்றை யாரும் தலைக்குமேற் கைகுவித்

தேத்தி மேவக், கருதும் புராண முடிவிற் குஞ்சரத்தில் கடத்திவர்ந் தோங்கு தில்லைத், தெருவாய் உலாப்போது சேவையர் குலாதிபன் சிறுதேர் உருட்டியருளே. சிறுகோல் எடுத்தரசு செங்கோல் நிறுத்தினோன் சிறுதேர் உருட்டியருளே,'' **(சேக்கிழார் பிள்ளைத்தமிழ்**, 10:1), ''பருந்து பல சூழப் புலால்கமழும் வெம்படைப் பருவலித் தகுவர் மூவர் பற்றியமர் குங்கும உடம்பனைய திரிபுரப் பாழிமுற் றும் கெடுப்பான், பொருந்துவட மேருவில் வளைத்தரவு நாண் கொளீஇப்பொருகடல் சுவற்று வாளிப் பொருகணை கரம் கொண்டு நான்மறைப் பரிமலர்ப் புத்தேள் கடாவி நிற்ப, மருந்துபடு மதியும் பருதியும் சகடாய் வயங்கக் கொடிஞ்சி முதலா மற்றுள உறுப்பு மற்றுள தேவராக நெடு வாழ்த்துமல் குறஇலர்ந்து, திருந்துபுவி யாகிய பெருந்தேர் உருட்டினோன் சிறுதேர் உருட்டியருளே செல்லமலி துறைசையம் பலவாண தேசிகன் சிறுதேர் உருட்டியருளே.'' **(அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்**, 10: 1)என்று திரிசிர புரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய வற்றைக் காண்க. ''தண்டேன் உடைந்தொழுகு மருமாலை நீள்முடிதரிக்கும் சதக்கிருது செந்தருணமணி ஆசனத்தேறமா தலிசெழுந் தமனியத் தேர்உருட்டப், பண்டே பழம்பகை நிசாசரர்கள் உட்கப் பரப்புநிலை கெட்ட தென்று பரவும் குபேரன் வட பூ தரம்பொரு புட் பகத்தேர் உருட்ட வீறு, கொண்டே உதித்தசெங் கதிர் ஆயிரக்கடவுள் குண்டலம் திருவில் வீசக் கேலப் ரபா மண்டலச்சுடர் துளக்கமுட் கோல்எடுத் தருணவருணன், திண்டேர் உருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே சிறுதேர் உருட்டியருளே சேவற் பதாகைக் குமாரகம் பீரனே சிறுதேர் உருட்டியருளே.'' **(திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்**, 10: 1,), ''இந்திரன் குடைபிடிக்க அழற்கடவுள் எதிரிலே நின்று விசிறி வீச எமனும் நிருதியும் சாமரை பரிமாற வாயுவும், சந்திரனும் உடைவாள் ஏந்தி இருபுறமும் நிற்கக்

குபேரன் அன்போடு காளாஞ்சி ஏந்த ஈசானன் இதுசரி என்று புன்முறுவல் செய்யப் பிரமன் முதலிய வேத முனிவர்கள், மந்திரநீர் கொண்ட ருச்சித்துத் துதிக்க விண்ணுலகத் தமரர்கள் நறுமலர் தூவச் சூரியனை மறைத்த கருமுகில்கள் மழைபெய்ய மனம்மகிழ்ந்து நவரத்தினத்தால் செய்துஒளி மிகுந்த சிறுதேரை உருட்டியருள்க அழகிய பழனியில் சிவகிரியில் வாழும் முருகையனே சிறுதேர் உருட்டியருள்க.'' **(பழனிப் பிள்ளைத்தமிழ்,** 10:1), 'இசைக்குழலும் வீணையும் கஞ்சமும் பல்லியமும் எல்லாம் பயின்று பாடி ஏறுதக ரானைபரி தேருகைத்தும் கடல்கள் ஏழையும் துளியாக்கியே, வசைத்தொழில் அரக்கர்கள் துணுக்கென மலைத்தமரர் வஞ்சகம்இ தென்ற யிர்ப்ப வானவர்கள் தானவர்கள் செய்கையென் றேமதி மருண்டுளம் வெருண்டு சோர, மிசைப்படும் உடுக்கதிர் களைத்தலை மயக்கிமக மேருவை முறித்துழக்கி விண்டுவிண் டண்டம் குலுங்கநவ வீரர்கள் இலக்கர் சூழத், திசைக்கிரி அனைத்தையும் உருட்டிவிளை யாடும்நீ சிறுதேர் உருட்டியருளே சிவஞான முத்திதரு திருமா மலைக்கடவுள் சிறுதேர் உருட்டியருளே.'' **(திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்,** 10;1) என வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 5-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நரசிங்க முனையர் என்ற திருநாமத்தைப் பெற்றவரும், திருமுனைப்பாடி நாட்டில் வாழ்பவரும், அந்த நாட்டை ஆட்சி புரிபவரும் ஆகிய அந்த அரசர் சுந்தரமூர்த்தி என்னும் ஆண்குழந்தையைப் பார்த்துப் புகழ்வதற்கு அருமையாக இருக்கும் வாத்ஸல்யம் மிகுதியாக உண்டாக, அந்த ஆண் குழந்தையைப் பெற்றவர்களாகிய சடையனார், இசைஞானியார் என்பவர்களிடம் போய்க் கலந்திருக்கும் நட்பினால் அவர்களிடம் வேண்டிக் கொண்டு அந்த ஆண்குழந்தையைப் பெற்றுக் கொண்டு தங்களுடைய இளவரசனாகிய குமார

னுக்கு ஏற்றவாறு அன்போடு தம்முடைய புதல்வனாகும் தன்மையை மேற்கொண்டார்.' பாடல் வருமாறு:

**"நரசிங்க முனையர் என்னும்**
**நாடுவாழ் அரசர் கண்டு**
**பரவரும் காதல் கூரப்**
**பயந்தவர் தம்பாற் சென்று**
**விரவிய நண்பி னாலே**
**வேண்டினர் பெற்றுத் தங்கள்**
**அரசிளங் குமரற் கேற்ப**
**அன்பினால் மகன்மை கொண்டார்."**

நரசிங்கமுனையர் என்னும்-நரசிங்கமுனையர் என்று திருநாமம் கூறப்படும். நாடு-திருமுனைப்பாடி நாட்டில். வாழ்-வாழ்பவரும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். அரசர்-அந்த நாட்டை ஆட்சி புரிபவரும் ஆகிய மன்னர். கண்டு-அந்த ஆண் குழந்தையைப் பார்த்து. பரவு அரும்-புகழ்வதற்கு அருமையாக இருக்கும். காதல்-வாத்ஸல்யம். கூர-மிகுதியாக உண்டாக. ப்:சந்தி. பயந்தவர்தம்பால்-அந்த ஆண்குழந்தையைப் பெற்றவர்களாகிய சடையனாரிடத்திலும் இசை ஞானியாரிடத்திலும். தம் : அசைநிலை. சென்று-போய். விரவிய-கலந்துள்ள. நண்பினால்-நட்பால். ஏ:அசைநிலை. வேண்டினர்-வேண்டிக் கொண்டு; முற்றெச்சம். பெற்று-அந்த ஆண் குழந்தையை வாங்கிக் கொண்டு. த்:சந்தி. தங்கள்-தங்களுடைய; பன்மை நரசிங்கமுனையரையரையும் அவருடைய மனைவியாரையும் சேர்த்து. அரசிளங்குமரற்கு-இளவரசனாகிய குமாரனுக்கு. அரசு:திணைமயக்கம். ஏற்ப-ஏற்றவாறு. அன்பினால்-அன்போடு; உருபுமயக்கம். மகன்மை-தம்முடைய புதல்வனாகும் தன்மையை. என்றது வளர்ப்புப் புதல்வனாக என்றபடி. கொண்டார்-மேற்கொண்டார்.

அடுத்து வரும் 6-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெருமை மிகுதியாக அமைந்த நரசிங்க முனையரையர் என்னும் மன்னருடைய வாத்ஸல்யத்தைப் பெற்ற ஆண் குழந்தையாகிப் பிறகும் தங்களுடைய பரம்பரையில் தொன்று தொட்டு வரும் முறைப்படி அந்த அரச பரம்பரை யில் தங்கியிருந்து வளர்ச்சியை அடைந்து மங்கல காரியங் களைப் புரிவதற்குரிய வடிவத்தோடு பொருளை அறிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள வேத விதிப்படி மூன்று புரிகளைக் கொண்ட பூணூலை அணிந்து கொண்டு அளவு இல்லாத பழையவையாகிய அறுபத்து நான்கு கலைகளையும் ஆராய்ந்து தெரிந்து கொண்டு செல்வம் மிகுதியாக அமைந்த சிறப்போடு ஓங்கி வளர்ந்து சீர்த்தியைப் பெற்ற திருமணப் பருவத்தை அந்தச் சிறுவர் அடைந்தார்.' பாடல் வருமாறு:

**"பெருமைசால் அரசர் காதற் பிள்ளையாய்ப் பின்னும் தங்கள்**
**வருமுறை மரபின் வைகி வளர்ந்துமங் கலம்செய் கோலத்**
**தருமறை முந்நூல் சாத்தி அளவில்தொல் கலைகள் ஆய்ந்து**
**திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப் பருவம் சேர்ந்தார்."**

பெருமை சால்-பெருமை மிகுதியாக அமைந்த. அரசர்-நரசிங்கமுனையரையர் என்னும் திருநாமத்தைக் கொண்ட மன்னருடைய. காதல்-வாத்ஸல்யத்தைப் பெற்ற. பிள்ளை யாய்-ஆண்குழந்தையாகி. ப்:சந்தி. பின்னும்-பிறகும். தங்கள்-தங்களுடைய. வரு-தொன்றுதொட்டு வரும். முறை-முறைப்படி. மரபில்-அரச பரம்பரையில். வைகி—தங்கியிருந்து. வளர்ந்து-வளர்ச்சியை அடைந்து. மங்கலம்-மங்கல காரியங்களை; ஒருமை பன்மை மயக்கம். அந்தக் காரியங்களாவன: குடுமி வைத்தல், அன்னப் பிராசனம் செய்தல் முதலியவை. செய்-புரிவதற்குரிய. கோலத்து—வடிவத்தில். அரு-பொருளைத் தெரிந்து கொள்வதற்கு அருமையாகிய. மறை-வேதவிதிப்படி. முந்நூல்-மூன்று புரிகளைக்கொண்ட பூணூலை. சாத்தி-அணிந்துகொண்டு.

உபநயனம் செய்யப் பெற்றுக் காயத்திரி மந்திரத்தை ஜபிக்கும் தகுதியைப் பெற்று என்றவாறு. அளவு இல்-கணக்கு இல்லாத. இல்: கடைக்குறை. தொல்-பழமையான. கலைகள்-அறுபத்து நான்கு கலைகளை; அவை இன்ன என்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ஆய்ந்து-ஆராய்ச்சி செய்து கற்றுத் தேர்ச்சியை அடைந்து. திரு-அரசச் செல்வம். மலி-மிகுதியாக உள்ள. சிறப்பின்-சிறப்போடு. ஓங்கி-ஓங்கி வளர்ந்து. ச்:சந்தி. சீர்—சீர்த்தியைப் பெற்ற. மண—திருமணம் புரிவதற்குரிய. ப்: சந்தி. பருவம்-பருவத்தை. சேர்ந்தார்-அந்த இளைஞர் அடைந்தார்.

பிறகு உள்ள 7-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த இளைஞருடைய தகப்பனாராகிய சடையனார் தம்முடைய ஒப்பற்ற அழகிய புதல்வனுக்குச் சைவசமயத்தைச் சார்ந்த ஒரு வேதியருடைய குடும்பத்தில் தங்களுடைய அருமையும் பெருமையும் கொண்ட பரம்பரைக்கு ஏற்றவாறு தொன்று தொட்டு வந்த சிறப்போடு புத்தூர் என்னும் ஊரில் வாழும் சடங்கவி என்னும் திருநாமத்தைப் பெற்ற வேதியனிடம் சிவந்த நிறத்தைக் கொண்ட திருமகளைப் போன்ற கன்னிகையைத் திருமணம் புரிந்து கொள்ளும் செய்தியைச் சொல்லி ஆளை அனுப்பினார்.'

பாடல் வருமாறு:

**"தந்தையார் சடைய னார்தம்**
**தனித்திரு மகற்குச் சைவ**
**அந்தணர் குலத்துள் தங்கள்**
**அரும்பெரும் மரபுக் கேற்ப**
**வந்ததொல் சிறப்பிற் புத்தூர்ச்**
**சடங்கவி மறையோன் தன்பால்**
**செந்திரு அனைய கன்னி**
**மணத்திறம் செப்பி விட்டார்."**

தந்தையார்-அந்த இளைஞருடைய தகப்பனாராகிய. சடையனார் தம்-சடையனார் என்னும் திருநாமத்தைக் கொண்டவருடைய. தம்: அசை நிலை. தனி-ஒப்பற்ற. த்:சந்தி. திரு-அழகிய. மகற்கு-புதல்வனுக்கு. ச்:சந்தி. சைவ அந்தணர்-சைவசமயத்தைச் சார்ந்த பிரர்மணராகிய சிவாசாரியாருடைய. குலத்துள்-குடும்பத்தில். தங்கள்-தங்களுடைய. அரும்-அருமையும். பெரும்-பெருமையும் கொண்ட. மரபுக்கு-பரம்பரைக்கு. ஏற்ப-ஏற்றவாறு. வந்த-தொன்று தொட்டு வந்த. தொல்-பழமையான. சிறப்பில்-சிறப்பைப் பெற்ற; உருபுமயக்கம். புத்தூர்-புத்தூர் என்ற ஊரில் வாழும். சடங்கவி மறையோன் தன்பால்-சடங்கவி சிவாசாரியனிடத்தில். தன்: அசை நிலை. மறையோன்-ஆதிசைவ அந்தணன். செம்-சிவந்த நிறத்தைக் கொண்ட. திரு-திருமகளை. அனைய-போன்ற அழகை உடைய. கன்னி-கன்னிகையை. மணத்திறம்-திருமணம் புரிந்து கொள்ளும் செய்தியை. செப்பி-சொல்லி. விட்டார்-ஆளை அனுப்பினார்.

பெண்மணிகளுக்குத் திருமகள் உவமை: ''பங்கயச் செல்வி பாண்டிமா தேவி.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பெருந் திரு இமவான் பெற்றபெண்கொடி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 8-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

''பிறந்த சாதி முதலியவற்றைப்பற்றி அறிந்த அறிவில் சிறந்து நின்ற வேதியர்கள் கோத்திரத்தின் வகையையும் ஆராய்ந்து பார்த்தார்கள்; நல்ல பண்புகளைப் பெற்ற முதியவர்கள் கூறச் சடங்கவி சிவாசாரியார் அவர்கள் கூறிய நல்ல குணங்களை ஏற்றுக்கொண்டு மலர்ச்சியை வெளியிடும் முகத்தை உடையவராகித் திருமணமாகிய மங்கலகாரியத்தினுடைய உண்மையைப் பற்றிப் பல கருத்துக்களை வந்தவர்களுடன் சொல்லி மணப்பதற்கு இருந்த ஆடவனும், கன்னிகையும் பலவகையில் ஒத்திருந்த இயல்

பினால் அன்போடு தம்முடைய புதல்வியைத் திருமணம் புரிந்து வழங்குவதற்கு ஒப்புக்கொண்டார்.' பாடல் வருமாறு:

**''குலமுதல் அறிவின் மிக்கார்**
**கோத்திர முறையும் தேர்ந்தார்**
**நலமிகு முதியோர் சொல்லச்**
**சடங்கவி நன்மை ஏற்று**
**மலர்தரு முகத்தன் ஆகி**
**மணம்புரி செயலின் வாய்மை**
**பலவுடன் பேசி ஒத்த**
**பண்பினால் அன்பு நேர்ந்தான்.**

குல-பிறந்த சாதி.முதல்-முதலியவற்றை. அறிவின்-தெரிந்து கொண்டிருந்த அறிவினால். மிக்கார்-சிறப்பை அடைந்திருந்த வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கோத்திர-கோத்திரத்தினுடைய. முறையும்-வகையையும். தேர்ந்தார்-ஆராய்ந்து பார்த்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒரே கோத்திரத்தில் பிறந்த ஆடவனையும் கன்னிகையையும் திருமணம் புரிவித்தல்மரபன்று; ஆதலால் கோத்திரத்தின் வகையை ஆராய்ந்து பார்த்தார்கள். நலம்-நல்ல பண்புகள்; ஒருமை பன்மை மயக்கம். மிகு-மிகுதியாகப் பெற்ற. முதியோர்-தன்னுடைய குடும்பத்தில் உள்ள முதியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சொல்ல-ஒப்புக்கொண்டு கூற. ச்: சந்தி. சடங்கவி-சடங்கவி சிவாசாரியன். நன்மை-சுந்தர மூர்த்தியின் நல்ல பண்பு களை. ஏற்று-ஏற்றுக்கொண்டு. மலர்தரு-மலர்ச்சியை வெளிப் படுத்தும். முகத்தன் ஆகி-முகத்தை உடையவனாகி. மணம்-திருமணத்தை. புரி-செய்யும். செயலின்-மங்கல காரியத்துக்கு உரிய, பல-பல கருத்துக்களை. உடன்-வந்தவர்களோடு. பேசி-மொழிந்து. ஒத்த-சுந்தரமூர்த்திக் கும் தன்னுடைய புதல்விக்கும் ஒத்திருந்த. பண்பினால்-

அழகு முதலிய குணங்களால்; ஒருமை பன்மை மயக்கம். அன்பு-அன்போடு. நேர்ந்தான்-தன்னுடைய புதல்வியைச் சுந்தரமூர்த்திக்குத் திருமணம் புரிந்து கொடுக்கச் சம்மதித்தான்.

பின்பு உள்ள 9-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சடங்கவி சிவாசாரியன் தன்னுடைய புதல்வியைச் சுந்தரமூர்த்திக்குத் திருமணம் செய்து கொடுக்கச் சம்மதித்துக் கூறிய வார்த்தைகளைக் கேட்டவர்கள் வள்ளலாகிய சுந்தரமூர்த்தியைப் பெற்ற தந்தையார் அன்னையார் ஆகியவர்களிடம் போய்க் கூறிய பிறகு, பெருகியுள்ள தங்களுடைய உள்ளங்களில் உண்டானதாகிய ஒரு மகிழ்ச்சியை அடைந்து திருமணமாகிய மங்கல காரியத்தை மகிழ்ச்சியை அடைந்து கூறி, அரசர்களுடைய செல்வ நிலைக்கு ஏற்றபடி ஒரு முகூர்த்தத்தைக் குறிப்பிட்டு அந்தத் திருமணநாளைத் தெரிவிக்கும் ஓலையைச் சடங்கவி சிவாசாரியனும் அவனுடைய மனைவியும் ஓர் ஆள் மூலம் அனுப்பினார்கள்.''

பாடல் வருமாறு:

**''மற்றவன் இசைந்த வார்த்தை**
**கேட்டவர் வள்ளல் தன்னைப்**
**பெற்றவர் தம்பால் சென்று**
**சொன்னபின் பெருகு சிந்தை**
**உற்றதோர் மகிழ்ச்சி எய்தி**
**மணவினை உவந்து சாற்றிக்**
**கொற்றவர் திருவுக் கேற்பக்**
**குறித்துநாள் ஓலை விட்டார்.''**

மற்று: அசைநிலை. அவன்—அந்தச் சடங்கவி சிவாசாரியன். இசைந்த—தன்னுடைய புதல்வியைச் சுந்தரமூர்த்திக்குத் திருமணம் செய்து கொடுக்கச் சம்மதித்துக் கூறிய.

வார்த்தை—வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்டவர்—கேட்ட முதிய வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வள்ளல்தன்னை—வள்ளலாகிய சுந்தரமூர்த்தியை. தன்: அசைநிலை. பெற்றவர்தம்பால்—பெற்றவர்களாகிய சடையனார், இசைஞானியார் என்பவர்களிடம். பெற்றவர்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. சென்று—போய். சொன்னபின்—கூறிய பிறகு. பெருகு—பெருகி எழுந்த. சிந்தை—தங்களுடைய உள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். உற்றது—உண்டானதாகிய, ஓர்—ஒரு; 'ஒப்பற்ற' எனலும் ஆம். மகிழ்ச்சி-மகிழ்ச்சியை. எய்தி-அடைந்து. மண—திருமணமாகிய. வினை—மங்கல காரியத்தை. உவந்து—மகிழ்ச்சியை அடைந்து. சாற்றி—கூறி. க்:சந்தி. கொற்றவர்—அரசர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். திருவுக்கு—செல்வ நிலைக்கு. ஏற்ப—ஏற்ற வகையில். க்:சந்தி. குறித்து-ஒரு முகூர்த்தத்தைக் குறிப்பிட்டு. நாள்-அந்த முகூர்த்தம் உள்ள நாளைக் குறிக்கும். ஓலை-ஓலையை. விட்டார்-சடங்கவி சிவாசாரியனும் அவனுடைய மனைவியும் ஓர் ஆள் மூலமாக அனுப்பினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 10-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மங்கலம் விளங்கும் வண்ணம் புரியும் திருமணமாகிய சடங்கை அறிவிக்கும் திருமண ஓலையைத் தங்களுடைய கைகளில் எடுத்துக் கொண்டு அழகிய கயல் மீன்களைப் போன்ற கண்களைப் பெற்ற பெண்மணிகளும், ஆண்கள் பல பேர்களும் கூட்டமாகக் கூடித் தேன் நிரம்பிய மலர்கள் மலர்ந்த பல வகை மரங்கள் வளர்ந்து நிற்கும் பொழில் சூழ்ந்த பழைய ஊராகிய புத்தூரை அடைந்தார்கள்; அவர்களுக்கு எதிரில் வந்து செந்தாமரை மலர்களைப் போன்ற முகங்களைப் பெற்ற பெண்மணிகளும், வலிமையைக் கொண்ட ஆடவர்களும் வணங்கிவிட்டு அந்த முகூர்த்த ஓலையை வாங்கிக் கொண்டார்கள்.' பாடல் வருமாறு:

**''மங்கலம் பொலியச் செய்த**
**மணவினை ஓலை ஏந்தி**
**அங்கயற் கண்ணி னாரும்**
**ஆடவர் பலரும் ஈண்டிக்**
**கொங்கலர் சோலை மூதூர்**
**குறுகினார்; எதிரே வந்து**
**பங்கய வதனி மாரும்**
**மைந்தரும் பணிந்து கொண்டார்.''**

மங்கலம் பொலிய-மங்கலம் விளங்கும் வண்ணம். ச்: சந்தி. செய்த-புரிந்த. மண-திருமணமாகிய. வினை-சடங்கை அறிவிக்கும். ஓலை-ஓலையை. ஏந்தி-தங்களுடைய கைககளில் எடுத்துக் கொண்டு. அம்-அழகிய. கயல்-கயல்மீன்களைப் போன்று விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். கண்ணினாரும்-கண்களைப்பெற்ற பெண்மணிகளும்; ஒருமை பன்மை மயக்கம். கண்: ஒருமை பன்மை மயக்கம். ஆடவர்-ஆண்மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். பலரும்-பல பேர்களும். ஈண்டி-கூட்டமாகக் கூடிக் கொண்டு. க்: சந்தி. கொங்கு-தேன்; 'மகரந்தப் பொடி' எனலும் ஆம்; ''கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி.'' என்று **குறுந்தொகையில்** வருவதைக் காண்க. அலர்-மலர்கள் மலர்ந்த பல வகை மரங்கள் வளர்ந்து நிற்கும். சோலை-பொழில் சூழ்ந்த. அந்த மரங்களாவன: மகிழமரம், மாமரம், வாகை மரம், வில்வ மரம், வேங்கை மரம், விளா மரம், பூவரச மரம், பவளமல்லிகை மரம், வாத நாராயண மரம், வேப்ப மரம் முதலியவை. மூதூர்-பழைய ஊராகிய புத்தூரை. குறுகினார்-அந்தப் பெண்மணிகளும் ஆடவர்களும் அடைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். எதிர்-அவர்களுக்கு எதிரில். ஏ: அசைநிலை. வந்து-அவர்களை வரவேற்பதற்காக வந்து. பங்கய-செந்தாமரை மலர்களைப் போன்ற அழகைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வதனி

மாரும்-முகங்களைப்பெற்ற பெண்மணிகளும்; ஒருமை பன்மை மயக்கம். மைந்தரும்-வலிமையைக் கொண்ட ஆடவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். பணிந்து-வந்தவர்களை வணங்கிவிட்டு. கொண்டார்-திருமண முகூர்த்த ஓலையை வாங்கிக் கொண்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 11-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மகிழ்ச்சியோடு திருமணத்தைப் பற்றிய வார்த்தைகளை மேலாக எடுத்துச் சொல்லி, மங்கலமான காரியங்கள் எல்லாம் புகழ்ச்சியோடு விளங்கிக் காட்சியை அளிக்க, அவற்றை வாழ்த்திய வேலையைப் பெற்றவர்களாகி இகழ்ச்சி சிறிதளவேனும் இல்லாமல் தங்கள் கைகளில் எடுத்துக் கொண்ட மலர் மாலைகளைத் தொங்கவிட்ட காவணத்தைக் கட்டும் வேலையில் வலிமையைப் பெற்ற ஆடவர்கள் கூடிக்கொண்டு நீண்ட நெற்கள் முளைத்த பயிர்கள் நிரம்பிய பாலிகைகளை வைத்தார்கள்.' பாடல் வருமாறு:

**''மகிழ்ச்சியால் மணமீக் கூறி**
**மங்கல வினைகள் எல்லாம்**
**புகழ்ச்சியாற் பொலிந்து தோன்றப்**
**போற்றிய தொழில ராகி**
**இகழ்ச்சியொன் றானும் இன்றி**
**ஏந்துபூ மாலைப் பந்தர்**
**நிகழ்ச்சியின் மைந்தர் ஈண்டி**
**நீள்முளை சாத்தி னார்கள்.''**

மகிழ்ச்சியால்—பெருமகிழ்ச்சியோடு; உருபு மயக்கம். மணம்—திருமணத்தைப் பற்றி. மீக்கூறி—மேலாக எடுத்துச் சொல்லி. மங்கல—மங்கலமாக உள்ள. வினைகள்—சடங்குகள். எல்லாம்—யாவும். புகழ்ச்சியால்—பிறர் பாராட்டிக் கூறும் புகழ்ச்சியோடு; உருபு மயக்கம். பொலிந்து—விளங்கி. தோன்ற—காட்சியை வழங்க; 'தோற்றப்பொலி

வோடு விளங்க' எனலும் ஆம். ப்:சந்தி. போற்றிய—அவற்றை வாழ்த்திப் பாராட்டிய. தொழிலராகி—வேலையைப் பெற்றவர்களாகி; ஒருமை பன்மை மயக்கம். இகழ்ச்சி—பிறர் இகழ்ந்து பேசுதல். ஒன்றானும்—ஒரு சிறிதளவேனும். இன்றி—இல்லாமல். ஏந்து—தங்கள் கைகளில் எடுத்துக் கொண்ட. பூமாலை-மலர்மாலைகளைத்தொங்கவிட்ட: ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி: பந்தர்—காவணத்தைக் காட்டும். நிகழ்ச்சியின்-வேலையில். மைந்தர்—வலிமையைப் பெற்ற ஆடவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஈண்டி—கூட்டமாகக் கூடி நின்று. நீள்—நீளமாகிய. முளை—நெற்பயிர்களின் முளைகளைப் பெற்ற பாலிகைகளை; ஒருமை பன்மை மயக்கம். சாத்தினார்கள்—திருமணம் நடைபெறும் காவணத்தில் கொண்டுபோய் வைத்தார்கள்.

பிறகு வரும் 12-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருமணமாகிய மங்கலச் சடங்கிற்கு வேண்டிய பொருத்தமான காரியங்களை விருப்பம் மருவிய அந்தக் கன்னிகையைப் பெற்ற தாயாரும் தந்தையாரும் புரிய, கொத்துக்களைப் பெற்ற மலரைச் சூடிய குஞ்சியையும், மாலையையும், அந்த மாலையில் வண்டுகள் வந்து மொய்க்கும்வண்ணம் அந்தத் தாரைஅணிந்த தோள்களையும் பெற்ற சுந்தரமூர்த்தியை உறவினர்கள் கூடும் திருமணம் நடைபெறும் அழகிய நாளுக்கு முன்பு உள்ள நாளில் பொருத்தமாக உள்ள வேதவிதியின்படி பருத்த முரசம் ஒலிக்க, வாழ்த்துக்களைக் கூறிப் பசுமையான தங்கத்தாலாகிய கயிறாகிய காப்பு நாணை மணமகனாகிய சுந்தரமூர்த்தியினுடைய வலக்கரத்தில் வைத்துக் கட்டினார்கள்.' பாடல் வருமாறு:

**''மணவினைக் கமைந்த செய்கை**
**மாதினைப் பயந்தார் செய்யத்**
**துணர்மலர்க் கோதைத் தாமச்**
**சுரும்பணை தோளி னானைப்**

**புணர்மணத் திருநாள் முன்னாட்**
**பொருந்திய விதியி னாலே**
**பணைமுர சியம்ப வாழ்த்திப்**
**பைம்பொன்நாண் காப்புச் சேர்த்தார்.''**

மண-திருமணமாகிய. வினைக்கு-மங்கலச்சடங்குக்கு. அமைந்த-பொருத்தமாக உள்ள. செய்கை-காரியங்களை; ஒருமை பன்மை மயக்கம். மாதினை-விருப்பம் மருவிய கன்னிகையை. ப:சந்தி. பயந்தார்-பெற்றவர்களாகிய சடங்கவி சிவாசாரியாரும் அவருடைய பத்தினியாரும்; ஒருமை பன்மை மயக்கம், செய்ய—முறைப்படி புரிய. த்:சந்தி. துணர்—தளிர்களோடு கூடிய; ஒருமை பன்மை மயக்கம். மலர்-மலர்களைச் சூடிய; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கோதை-தலைமயிரையும். தாம-மாலையில். ச்:சந்தி. சுரும்பு-வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அணை-அடைந்து மொய்க்கும். தோளினானை-தோள்களைப் பெற்ற சுந்தரமூர்த்தியை; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. புணர்-உறவினர்கள் கூடிய. மண-திருமணத்துக்கு உரிய. த்:சந்தி. திரு-அழகிய. நாள்-நாளுக்கு. முன்-முதல். நாள்-தினத்தில். பொருந்திய-பொருத்தமாக உள்ள. விதியினால்-வேத விதிப்படி. ஏ:அசை நிலை. பணை-பருத்த. முரசு-முரசம். இயம்ப-அதை உடையவர் கொட்ட. வாழ்த்தி-வாழ்த்துக்களைக் கூறி. ப்: சந்தி. பைம்-பசுமையான. பொன்-தங்கத்தாற் செய்த. நாண்-காப்பு நாணை. ச்:சந்தி. சேர்த்தார்-சுந்தரமூர்த்தியின் வலக்கரத்தில் வைத்துக் கட்டினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 13-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெருமையைப் பெற்ற வேதம் விதித்த முறையிலிருந்து தவறாமல் திருமணமாகிய சடங்குக்கு வேண்டிய கடமைகளைச் செய்து பரிசுத்தமான வேதியர்கள் வாழும் பழைய

ஊராகிய புத்தூரில் திருமண நாளுக்கு முதல் நாள் இரவில் மங்கல வாத்தியங்கள் ஒன்று சேர்ந்து வாசிப்பவர்கள் வாசிக்கத் தேன் நிரம்பிய மலர்களைக் கட்டிய மாலையைப் பூண்ட மார்பைக் கொண்ட சுந்தரமூர்த்தியினுடைய திருமணத்துக்குரிய கோலத்தைப் பார்க்க விருப்பத்தைக் கொண்ட உள்ளத்தை உடையவனைப் போலக் கிரணங் களை வீசும் சூரியன் உதயமானான்.' பாடல் வருமாறு:

**''மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்**
**தூமறை மூதூர்க் கங்குல் மங்கலம் துவன்றி ஆர்ப்பத்**
**தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலம் காணக்**
**காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்**
**தான்.''**

மா-பெருமையைப் பெற்ற. மறை-வேதம். விதி-விதித்தமுறையிலிருந்து. வழாமல்-தவறாமல். மணத்துறை-திருமணத்தினுடைய வகைகளுக்கு இன்றியமையாத. துறை; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கடன்கள்—கடமைகளை. ஆற்றி-செய்து நிறைவேற்றி. த்: சந்தி. தூ-தூய்மையான.மறை-வேதியர்கள் வாழும்; திணை மயக்கம். மூதூர்-பழைய ஊராகிய புத்தூரில். க்:சந்தி. கங்குல்-திருமண நாளுக்கு முன் நாள் இரவில். மங்கலம்-மங்கல வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அந்த வாத்தியங் களாவன: நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்ச தாளங்கள், சல்லரி, முகவீணை முதலியவை. துவன்றி-ஒன்று சேர்ந்து. ஆர்ப்ப-அந்த வாத்தியங்களை வைத்திருப்பவர்கள் வாசித்து முழக்கத்தை உண்டாக்க. த்:சந்தி. தே-தேன். மரு-நிரம்பிய. தொடையல்-மலர்களைக் கட்டிய மண மாலையை அணிந்த. மார்பன்-திருமார்பைக் கொண்ட சுந்தரமூர்த்தி யாகிய மணமகனுடைய. திருமண-திருமணம் புரிவதற்காகப் புனைந்த. கோலம்- கோலத்தை. காண-பார்ப்பதற்கு. க்:சந்தி. காமுறு-விருப்பத்தைப் பெற்ற. மனத்தான் போல-உள்ளத்தைக் கொண்டவனைப் போல. க்:சந்தி.

கதிரவன்-கிரணங்களை வீசும் சூரியன். கதிர்:ஒருமை பன்மை மயக்கம். உதயம் செய்தான்-கீழ் வானத்தில் உதயம் ஆனான்.

பிறகு வரும் 14-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருமணம் புரியும் நாள் அன்று காலை நேரத்தில் புரிய வேண்டிய காரியங்களை நிறைவேற்றி விட்டுச் சோதிட சாத்திரத்தில் வல்ல புலவராகிய சோதிடர் கூறிய வேளை வந்து சேர்வதற்கு முன்னால் வேதவிதிப்படி திருமணக் கோலத்தைக் கொள்ளும்பொருட்டுப் பூணூல் ஆடி விளங்கும் திருமார்பையும், நுட்பமாகப் பல நூல்களை அறிந்தவர்கள் வாயிலாய்க் கேட்ட கேள்வியைப் பெற்ற மேம்பாட்டையும் உடைய சுந்தர மூர்த்தி மணமாலையும், வேறு மாற்று மாலைகளும் பொங்கி மணத்தை வீசத் திருமஞ்சன சாலையில் நுழைந்தான்.' பாடல் வருமாறு:

**''காலைசெய் வினைகள் முற்றிக்**
**கணிதநூற் புலவர் சொன்ன**
**வேலைவந் தணையும் முன்னர்**
**விதிமணக் கோலம் கொள்வான்**
**நூலசைந் திலங்கு மார்பின்**
**நுணங்கிய கேள்வி மேலோன்**
**மாலையும் தாரும் பொங்க**
**மஞ்சன சாலை புக்கான்.''**

காலை-திருமணம் புரிந்து கொள்ளும் நாள் அன்று காலை நேரத்தில். செய்-புரிய வேண்டிய. வினைகள்-காரியங்களை. முற்றி-நிறைவேற்றி விட்டு. க்:சந்தி. கணித-சோதிட. நூல்- சாத்திரத்தில் வல்ல. புலவர்-புலவராகிய சோதிடர். சொன்ன- குறிப்பிட்டுக் கூறிய. வேலை-வேளை. வந்து அணையும்-வந்து சேர்வதற்கு. முன்னர்-முன்னால். விதி-வேதம் விதித்த விதியின்படி. மணக்கோலம்- திருமணக் கோலத்தை. கொள்வான்-கொள்ளும் பொருட்டு. நூல்-

பூணூல். அசைந்து-ஆடி. இலங்கு-விளங்கும். மார்பின்-திருமார்பையும். நுணங்கிய-நுட்பமாக உள்ள. கேள்வி—பல நூல்களை அறிந்தவர்கள் வாயிலாய்க் கேட்ட கேள்வியையும் பெற்ற. மேலோன்-மேம்பாட்டைப் பெற்ற சுந்தர மூர்த்தி. மாலையும்-திருமணமாலையும். தாரும்-மாற்று மாலைகளும்; ஒருமை பன்மை மயக்கம். திருமணத்திற்கு முன்பு மணமகனும் மணமகளும் மாலைகளை மாற்றி மாற்றிப் போட்டுக் கொள்வது வழக்கம். பொங்க-பொங்கி நறுமணம் கமழ. மஞ்சன சாலை-திருமஞ்சன சாலை; குளிக்கும் அறை. புக்கான்-நுழைந்தான்.

பின்பு வரும் 15-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'நறுமணம் கமழும் எண்ணெயைத் தலையில் தேய்த்துக் கொண்டு, மிகுதியாக உள்ள மலர்களின் வாசனை பொருந்திய பரிசுத்தமான நீரை நிரப்பிய பாத்திரத்தில் பொருந்திய பக்கத்தில் பருத்த மாணிக்கத்தைப் பதித்ததும் பசுமையான தங்கத்தால் செய்ததும், உறுதியான கால்களைக் கொண்டதுமாகிய ஓர் ஆசனத்தில் இருக்கச் செய்து அழகுள்ள நீரால் அபிஷேகம் செய்து குளிப்பாட்டி மஞ்சளை அணிந்து அன்போடு பரமேசுவரனாகிய திருநாவலீசுவரனுக்கு இனிய பக்தனாகிய சுந்தர மூர்த்தியினுடைய திருமேனி அழகைப் பெற்று விளக்கத்தை அடையுமாறு வேதியர்கள் செய்தார்கள்.' பாடல் வருமாறு:

**''வாசநெய் ஊட்டி மிக்க மலர்விரை அடுத்த தூநீர்ப்**
**பாசனத் தமைந்த பாங்கர்ப் பருமணிப் பைம்பொன் திண்கால்**
**ஆசனத் தணிநீர் ஆட்டி அரிசனம் சாத்தி அன்பால்**
**ஈசனுக் கினியான் மேனி எழில்பெற விளக்கி னார்கள்.''**

வாச-நறுமணம் கமழும்.நெய்-எண்ணெயை.ஊட்டி-சுந்தர மூர்த்தியினுடைய தலையில் தேய்த்து. மிக்க-மிகுதியாக உள்ள. மலர்-பல வகை மலர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். விரை-நறுமணம். அடுத்த-பொருந்திய.

தூ: தூய்மையான. நீர்-நீரை நிரப்பிய. ப்:சந்தி. பாச னத்து-ஒரு பாத்திரத்தில். அமைந்த-ஊற்றிய. பாங்கர்-பக்கத்தில். ப்:சந்தி. பரு-பருத்த. மணி-மாணிக்கங் களைப் பதித்ததும்; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பைம்-பசுமையான. பொன்-தங்கத்தால் செய்ததும்; ஆகு பெயர். திண்-உறுதியான. கால்-கால்களைப் பெற்றது மாகிய; ஒருமை பன்மை மயக்கம். ஆசனத்து-ஓர் ஆசனப் பலகையில் அமர்த்தி. அணி—அழகிய. நீர்-நீரினால். ஆட்டி-குளிப்பாட்டி. அரிசனம்-மஞ்சளை. ஆடவருக்கும் மஞ்சளைப் பூசுதல்: ''பைய ஆட்டிப் பசுஞ்சிறு மஞ்ச ளால்.'' (**பெரியாழ்வார் திருமொழி**, 1: 18:2) என வருத லைக் காண்க. சாத்தி-பூசி. அன்பால்-அன்போடு; உருபு மயக்கம். ஈசனுக்கு-பரமேசுவரனாகிய திருநாவலீசுவர னுக்கு. இனியான்-இனிய பக்தனாகிய சுந்தரமூர்த்தியி னுடைய. மேனி-திருமேனி. எழில்-அழகை. பெற-பெறும்வண்ணம். விளக்கினார்கள்-வேதியர்கள் விளக் கத்தை அடையுமாறு செய்தார்கள்.

பின்பு உள்ள 16-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அகில் மரக்கட்டைகளைத் தீயில் இட்டு எரித்த வாசனை வீசும் புகை பொருந்திய அழகைக் கொண்ட பட்டு டையை இடையில் உடுத்துக்கொண்டு மேகங்களினூடே நுழையும் சந்திரனைப் போலத் தன்னுடைய கைத்தொழி லில் வல்லமை பெற்ற மயிர்வினைஞன் தன் முன் கைகளில் சுற்றியுள்ள மெல்லிய ஆடையைக்கொண்டு தலைமயிரில் உள்ள ஈரத்தைத் துடைத்து உலரச்செய்து தன்னுடைய தூய்மையான சிவந்தகையினால் நகங்களினுடைய நுனிகளை முறைப்படி வெட்டிப் போக்கிவிட்டு ஒளி வீசும் நறுமணம் கமழும் கொண்டையைக் கட்டிவிட்டான்.' பாடல் வருமாறு:

**''அகில்விரைத் தூபம் ஏய்ந்த**
**அணிகொள்பட் டாடை சாத்தி**
**முகில்நுழை மதியம் போலக்**
**கைவலான் முன்கை சூழ்ந்த**
**துகில்கொடு குஞ்சி ஈரம்**
**புலர்த்தித்தன் தூய செங்கை**
**உகிர்றுதி முறையில் போக்கி**
**ஒளிர்நறும் சிகழி ஆர்த்தான்.''**

*அகில்-அகில்மரக்கட்டைகளைத் தீயில் இட்டு எரித்த; ஒருமை பன்மை மயக்கம். விரை-நறுமணம் கமழும். த்: சந்தி. தூபம்-புகை. ஏய்ந்த-பொருந்திய. அணி. அழகை. கொள்-கொண்ட. பட்டாடை-பட்டு உடையை-சாத்தி-தன்னுடைய இடுப்பில் உடுத்துக்கொண்டு. முகில்-மேகங்களினூடே; ஒருமை பன்மை மயக்கம். நுழை-நுழையும். மதியம்போல-சந்திரனைப்போல. க்:சந்தி. கை—கைத் தொழில். வலான்-வல்ல மயிர்வினைஞன்; இடைக் குறை. முன்கை-கைகளின் முன்னால்; கை:ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்த-சுற்றியிருந்த. துகில்-மெல்லிய ஆடையை. கொடு-கொண்டு. குஞ்சி-குளித்ததால் இருந்த தலைமயிரில் உள்ள. ஈரம்-ஈரத்தை. புலர்த்தி-துடைத்து உலரச்செய்து. த்:சந்தி. தன்-தன்னுடைய. தூய-தூய்மையான. செம்-சிவந்த. கை-வலக்கையினால். உகிர்-சுந்தரமூர்த்தியினுடைய கைகளிலும் பாதவிரல்களிலும் உள்ள நகங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். றுதி-நுனிகளை; ஒருமை பன்மை மயக்கம். முறையில்-முறைப்படி. போக்கி-வெட்டி நீக்கிவிட்டு. ஒளிர்-ஒளியை வீசும். நறும்-நறுமணம் கமழும். சிகழி-கொண்டையை. ஆர்த்தான்-சுந்தர மூர்த்தியின் தலையில் கட்டிவிட்டான்.*

''மின்வாள் அழித்த மேதகு கைவினைப்
பொன்வாள் பற்றிப் பன்மாண் பொலிகென
வலப்பாற் சென்னி வகைபெறத் தீட்டி
இலக்கணம் பிழையா எஃகமை இருப்பின்
நீரளந் தூட்டிய நிறையமை வாளினைப்
பஞ்சிப் பட்டொடு துருஉக்கிழி நீக்கிப்
பைங்கதிர் அவிர்மதிப் பாகத் தன்ன
அங்கேழ்க் கல்மிசை அறிந்துவாய் தீட்டி
வெங்கேழ்த் துகில்மிசை விதியுளி புரட்டிச்
செங்கேழ்க் கையிற் சிறந்துபா ராட்டி
ஆசறு நறுநீர் பூசனை கொளீஇ
வாட்டொழிற் கம்மம் வல்லிதிற் பிழையாது
சேட்டெழிற் பொழிந்த திருமுகக் கேற்ப
மூரிக் கொள்ளான் முனிதல் செல்லான்
ஆவிக் கொள்ளான் அயர்ந்தும் பிறர்நோக்கான்
சீர்கெழு நெடுந்தகை செல்வியில் திரியான்
கண்ணினும் மனத்தினும் கையினும் அமைத்த
மண்ணுவினை மயிர்த்தொழில் நன்னல நாவிதன்
எல்லை வகுப்ப......
.......
அடிவினைக் கம்மியர் வெடிபட அடுக்கிய
உயர்நலக் கோலத் தொள்ளொளி திகழ
வகையமை கொல்லியின் வகையறத் துடைத்துச்
சேவடிக் கேற்பச் செழுமதிப் பாகென
வாருசிர் குறைத்து வனப்புவீற் றிறீஇய
ஒண்ணிறக் கல்லின் நன்னிறம் பெறீஇ
விரவிற் கொண்ட வெண்ணிற றுண்டாது
விரிகதிர் மதியின் விளங்கொளி கழிப்ப
நிறம்பெற உறிஞ்சி நெர்துசிற் றுடைத்து.''

(பெருங் கதை, 2.4:161-191) என வருதலைக் காண்க.

பிறகு உள்ள 17-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரிசுத்தமானதும் நறுமணம் கமழ்வதும் ஆகிய பச்சைக் கர்ப்பூரத்தைக் குழைத்துச் செய்த வாசனைப் பொடியோடு நல்ல நிறத்தைக் கொண்ட மலர்களிலிருந்து உண்டான குளிர்ச்சியைப் பெற்ற பன்னீரையும் சேர்த்துக் குழம்பாகச் செய்த அரைத்த சந்தனக் கலவையைக் கொண்டு குளிக்கச் செய்து கத்தூரியினால் செய்த சாந்து படிந்த மங்கலமான கலவையைத் திருமேனியில் பூசிவிட்டுப் பாலும் மறையும் வெண்மையைக்கொண்ட மூன்று புரிகளை உடைய பூணூல் மின்னலைப் போல ஒளியை வீச, பவித்திரத்தை அணிந்த சிறப்பை அடைந்த வலக்கரத்தைப் பெற்று விளங்கும் மண மகனாகிய சுந்தர மூர்த்தி.' பாடல் வருமாறு:

**''தூநறும் பசுங்கர்ப் பூரச்**
**சுண்ணத்தால் வண்ணப் போதில்**
**ஆனதண் பனிநீர் கூட்டி**
**அமைத்தசந் தனச்சே றாட்டி**
**மான்மதச் சாந்து தோய்ந்த**
**மங்கலக் கலவை சாத்திப்**
**பால்மறை முந்நூல் மின்னப்**
**பவித்திரம் சிறந்த கையான்.''**

இந்தப் பாடல் குளகம். தூ—தூய்மையான. நறும்—நறுமணம் கமழ்வதும். பசும் கர்ப்பூர-பச்சைக் கர்ப்பூரத்தைக் கூட்டி அரைத்துச் செய்த. ச்:சந்தி. சுண்ணத்தால்-வாசனைப் பொடியோடு; உருபு மயக்கம். வண்ண-அழகிய நிறங்களைக்கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. போதில்--மலர்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். ஆன-உண்டான. தண்-குளிர்ச்சியைப் பெற்ற. பனிநீர்-பன்னீரை. கூட்டி-கலந்து. அமைத்த—குழம்பாகச் செய்த. சந்தன—அரைத்த சந்தனத்தினுடைய. ச்:சந்தி. சேறு—கலவையில். ஆட்டி—சுந்தரமூர்த்தியை முழுகச் செய்து; குளிப்பாட்டி, மான்மத-கத்தூரி மானிடமிருந்து பெற்ற கத்தூரி. ச்:சந்தி. சாந்து—கலவை. தோய்ந்த—படிந்த. மங்கல—மங்கலமான. க்:சந்தி.

கலவை—கலந்த குழம்பை. சாத்தி—சுந்தரமூர்த்தியினுடைய திருமேனியில் பூசிவிட்டு. ப்:சந்தி. பால்—பசுமாட்டினுடைய பால். மறை—மறையும் வண்ணம் வெண்மையாக விளங்கும். முந்நூல்—மூன்று புரிகளைக் கொண்ட பூணூல். மின்ன—மின்னலைப் போல ஒளியை வீச. ப்:சந்தி. பவித்திரம்—தருப்பைப் புல்லால் செய்த பவித்திரத்தை அணிந்த. சிறந்த—சிறப்பை அடைந்த. கையான்—வலக் கரத்தைப் பெற்ற சுந்தரமூர்த்தி.

பிறகு உள்ள 18-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தூய்மையான மலர்களைக் கட்டுதலைப் பெற்ற மாலையையும், கொத்துக்களும் இதழ்களையும் கொண்ட தலைமாலையையும், வேறு வகையான மாலையையும், மற்றொரு விதமான மாலையையும் இத்தகைய வேறு வேறு மாலைகளைத் தக்க வகையினால் பொருந்தும் வண்ணம் சுந்தரமூர்த்தி அணிந்து பெருமையைப் பெற்ற மாணிக்கத்தைப் புனைந்த பரிசுத்தமான வளரும் பிரகாசத்தை வீசுவதும் இருட்டைஅடியோடு போக்குவதும் ஆகிய பல வகைப் பெயர்களைக் கொண்ட நீளமான ஆபரணங்களை அணிந்து நன்மையைப் பெற்ற திருமணக் கோலத்தை மேற்கொண்டான்.' பாடல் வருமாறு:

**''தூமலர்ப் பிணையல் மாலை**
**துணர்இணர்க் கண்ணி கோதை**
**தாமம்என் றினைய வேறு**
**தகுதியால் அமையச் சாத்தி**
**மாமணி அணிந்த தூய**
**வளர்ஒளி இருள்கால் சீக்கும்**
**நாமநீள் கலன்கள் சாத்தி**
**நன்மணக் கோலம் கொண்டான்.''**

தூ—பரிசுத்தமான. மலர்—மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பிணையல்—கட்டிய மாலை. மாலை—

வேறு வகையான மாலை. துணர்—கொத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். இணர்—இதழ்களையும் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கண்ணி—தலைமாலை. கோதை—மற்றொரு வகையான மாலை. தாமம்—நிலை மாலை. என்று—என்று உள்ள. இனைய—இத்தகைய. வேறு—வேறு மாலைகளை; ஒருமை பன்மை மயக்கம். தகுதியால்—தக்க வகையால். அமைய—பொருத்தமாக விளங்க.ச்: சந்தி.சாத்தி-சுந்தரமூர்த்தி அணிந்து. மா—பெருமையைப் பெற்ற. மணி—மாணிக்கங்களை; ஒருமை பன்மை மயக்கம். அணிந்த—புனைந்த; அலங்கரித்த. தூய—தூய்மையான. வளர்—வளரும். ஒளி—பிரகாசம். இருள்—இருட்டை. கால் சீக்கும்—அடியோடு போக்கும். நாமம்—பல வகையான பெயர்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். கலன்கள்—ஆபரணங்களை. அவையாவன: தங்கச் சங்கிலி, முத்து மாலை, மாணிக்க மாலை, மரகத மாலை, நவமணி மாலை, கிரீடம் முதலியவை. சாத்தி—அணிந்து கொண்டு. நன்—நன்மையைப் பெற்ற. மணக்கோலம்—திருமணக் கோலத்தை. கொண்டான்—சுந்தரமூர்த்தி மேற்கொண்டான்.

பிறகு வரும் 19-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அரசர்களுக்கு உரிய செல்வ நிலையும், தங்களுடைய வைதிகர்களுக்கு உரிய செல்வ நிலையும் பொங்கி விளங்க, நன்மைகளைப் பெற்ற நகரமாகிய திருநாவலூர் விழாக் கோலத்தை மேற்கொண்டு திகழ, நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய தலைவனாகிய திருநாவலூர் அரனுடைய திருவடிகளைத் தம்முடைய திருவுள்ளத்தில் வைத்துத் தியானித்து பொருத்தமாக விளங்கும் விபூதியைப் பூசிக்கொண்டு தங்கத்தை அணிந்ததும், மாணிக்கத்தைப் பதித்த அங்கவடியைப் பெற்றதுமாகிய யோகக் குதிரையின் மேல் ஏறிக்கொண்டு போனார்.' பாடல் வருமாறு:

**''மன்னவர் திருவும் தங்கள்**
**வைதிகத் திருவும் பொங்க**
**நன்னகர் விழவு கொள்ள**
**நம்பியா ரூரர் நாதன்**
**தன்னடி மனத்துட் கொண்டு**
**தகும்திரு நீறு சாத்திப்**
**பொன்னணி மணியார் யோகப்**
**புரவிமேற் கொண்டு போந்தார்.''**

மன்னவர்—அரசர்களுக்கு உரிய. திருவும்—செல்வ நிலையும். தங்கள்—தங்களுடைய. வைதிக—வைதிகர் களுக்கு உரிய; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி. திருவும்—நிதி நிலையும். பொங்க—பொங்கி விளங்க. நல்—பல நன்மைகளைப் பெற்ற. அந்த நன்மைகளாவன: நீர்வளம், நிலவளம், நன்மக்கள் வாழும் வளம், உணவு வளம், ஆபரண வளம் முதலியவை. நகர்-நகரமாகிய திருநாவலூர். விழவு—விழாக் கோலத்தை. கொள்ள—மேற் கொண்டு திகழ. நம்பி ஆரூரர்—நம்பி ஆரூரர் என்னும் இயற்பெயரைப் பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார். நாதன் தன்—திருநாவலூரனுடைய. தன்; அசை நிலை. அடி—திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். மனத்துள்—தம் முடைய திருவுள்ளத்தில். கொண்டு—வைத்துத் தியானித்து. தகும்—தக்க வண்ணம் திகழும். திருநீறு-விபூதியை. சாத்தி-திருமேனி முழுவதும் பூசிக்கொண்டு. ப்:சந்தி. பொன்—தங்கத்தால். அணி—புனைந்த அங்கவடிகளைப் பெற்றதும்; ஒருமை பன்மை மயக்கம். யோகப்புரவி—யோகக்குதிரையும் ஆகிய வாகனத்தின். மேல்-மீது. கொண்டு—ஏறிக்கொண்டு. போந்தார் — எழுந்தருளினார். சுந்தரமூர்த்தி நாயனா ருடைய இயற்பெயர் ஆரூரன் என்பது, ''ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே'' என்று அவரே தம்மைக் கூறிக்கொள்வ தால் விளங்கும்.

அடுத்து உள்ள 20-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வாத்தியங்கள் பலவற்றை அவற்றை வாசிப்பவர்கள் வாசிக்க, எவ்விடங்களிலும் தம்மைத் துதிக்கும் சத்தம் எடுப்பாக முழங்க, விருப்பம் மருவிய பெண்மணிகள் விரும்பிப் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்த இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய வேதியர்கள் அந்த நான்கு வேதங்களை ஓதும் இனிய கானத்தைப் போல ஓங்கி எழ, உலகத்தில் வாழும் மக்கள் வியப்பை அடைந்து விருப்பத்தைக் கொள்ள, குதிரையின் மேல் ஏறிக் கொண்டு வந்து கலந்துள்ள மக்களுக்கு பேரானந்தத்தை உண்டாக்கி உயரமான வாகனங்களும், பல்லக்குகளும் ஏறி வந்தவர்களுடைய பக்கத்தில் விளங்குபவர் ஆனார் சுந்தரமூர்த்தி நாயனார்.' பாடல் வருமாறு:

**''இயம்பல துவைப்ப எங்கும்**
**ஏத்தொலி எடுப்ப மாதர்**
**நயந்துபல் லாண்டு போற்ற**
**நான்மறை ஒலியின் ஓங்க**
**வியந்துபார் விரும்ப வந்து**
**விரவினர்க் கின்பம் செய்தே**
**உயர்ந்தவா கனயா னங்கள்**
**மிசைக்கொண்டார் உழைய ரானார்.''**

இயம்-வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பல—பலவற்றை. அவையாவன: நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், சல்லரி, வீணை, யாழ், துந்துபி, எக்காளம், புல்லாங்குழல், முகவீணை, ஜலதரங்கம், முரசம், பேரிகை முதலியவை. துவைப்ப-அவற்றை வாசிப்பவர்கள் வாசிக்க. எங்கும்-எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மாதர்-விருப்பம் மருவிய பெண்மணிகள்; ஒருமை பன்மை மயக்கம். நயந்து-விரும்பிய. பல்லாண்டு-பல்லாண்டு

பல்லாண்டு வாழ்க என்று. போற்ற—வாழ்த்த. நான்மறை—இருக்கு வேதம், யஜுர் வேதம். சாம வேதம். அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய வேதியர்கள் ஓதும். மறை; ஒருமை பன்மை மயக்கம். ஒலியின்—கானத்தைப் போல. ஓங்க-அந்த வாத்தியங்களின் இனிய ஒலி ஓங்கி எழ. பார்—உலகத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். வியந்து—ஆச்சரியத்தை அடைந்து. விரும்ப-விழையும் வண்ணம். வந்து—சுந்தரமூர்த்தி நாயனார் யோகப் புரவியின்மேல் ஏறிக்கொண்டு வந்து. விரவினர்க்கு—திருமண ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். இன்பம்—பேரானந்தத்தை. செய்து—உண்டாக்கி. ஏ: அசைநிலை. உயர்ந்த—உயரமாக உள்ள. வாகன—குதிரை, யானை, தேர் முதலிய வாகனங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். யானங்கள்—முத்துப் பல்லக்குகளாகிய வாகனங்களிலும். மிசை—மேல். க்:சந்தி. கொண்டார்— ஏறிக்கொண்டவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். உழையர்—சுந்தரமூர்த்தி நாயனார் பக்கத்தில் திகழ்பவர். ஆனார்—ஆயினார்.

பின்பு வரும் 21—ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மங்கலமாகிய இசைப்பாடல்களின் இனிய ஒலியோடும், வேதியர்கள் கூடிய கூட்டங்களோடும், மாலைகளும் வாசனைத் திரவியங்களும் அணிந்து சுற்றியுள்ள வலிமையைப் பெற்ற ஆடவர்களும், கூட்டமாகக் கூடிச் சூதாடு காய்களையும் தாமரை அரும்புகளையும் வென்று பெருத்து எழுந்து விளங்கிப் பல வகையான ஆபரணங்களை மிகுதியாக அணிந்து, குங்குமப்பூவை அரைத்த குழம்பைப் பூசிக்கொண்ட கொங்கைகளை உடையவர்கள் ஆகிய பெண்மணிகளும் பரவித் திருமண ஊர்வலத்தில் எழுகின்ற கொள்கையை உடையதாகி.' பாடல் வருமாறு:

**"மங்கல கீத நாத மறையவர் குழாங்க ளோடு**
**தொங்கலும் விரையும் சூழ்ந்த மைந்தரும் துவன்றிச் சூதும்**
**பங்கய முகையும் சாய்த்துப் பணைத்தெழுந் தணியில் மிக்க**
**குங்கும முலையி னாரும் பரந்தெழு கொள்கைத் தாகி."**

இந்தப் பாடல் குளகம். மங்கல-மங்கள வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், யாழ், வீணை, தம்புரா, முக வீணை, சல்லரி, தாரை, தப்பட்டை, முரசு, பேரிகை, ஜலதரங்கம் முதலியவை. கீத-எழுப்புகின்ற பாடல்களி னுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதம்-இனிய ஒலியும். மறையவர்-வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். குழாங்களோடு-கூடிய கூட்டங்களோடும். தொங்கலும்—மலர்மாலைகளும்; ஒருமை பன்மை மயக்கம். விரையும்—வாசனைத் திரவியங்களும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன; அத்தர், புனுகு, ஜவ்வாது, பன்னீர், வாசனைப் பொடி, தசாங்கம் முதலியவை. சூழ்ந்த-அணிந்து கொண்டு சுற்றி வந்த. மைந்தரும்-வலிமையைப் பெற்ற ஆடவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். மைந்து-வலிமை. துவன்றி-சுந்தரமூர்த்திநாயனாருடைய திருமண ஊர்வலத் தில் சேர்ந்துகொண்டு. ச்:சந்தி. சூதும்-சூதாடும் காய் களையும்; ஒருமை பன்மை மயக்கம். பங்கய முகையும்-தாமரை அரும்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். சாய்த்து-தோல்வி அடையச் செய்து வெற்றியைப் பெற்று. ப்:சந்தி. பணைத்து எழுந்து- பெருத்து மேல்நோக்கி எழுந்து. அணியில்-பலவகை ஆபரணங்களால்; உருபு மயக்கம். அவையாவன: தங்கச்சங்கிலி, கம்மல்கள், தோடுகள், சுட்டி, புல்லாக்கு, ஜிமிக்கிகள், வங்கிகள், அட்டிகை, ஒட்டியாணம், தங்க வளையல்கள், கங்கணங்கள், காற்சிலம்புகள், தண்டைகள், காற் காப்புக்கள், மோதிரங்கள், மெட்டிகள், சதங்கைகள், பாதசரங்கள் முதலியவை. மிக்க-மிகுதியாக விளங்கிய.

குங்கும-குங்குமப்பூவை அரைத்த குழம்பைப் பூசிக்கொண்ட. முலையினாரும்-கொங்கைகளைப் பெற்ற பெண்மணிகளும். பரந்து-பரவி நின்று. எழு-ஊக்கத்தோடு எழுந்து வரும். கொள்கைத்து ஆகி-கொள்கையைப் பெற்றதாகி.

பெண்களின் கொங்கைகளுக்குச் சூதாடும் வல்லக்காய்கள் உவமை: ''சூதகம்சேர் கொங்கையாள்.'', ''சூது லாவிய கொங்கையொர் பங்குடையீர்.'', ''சூதுறு தளிர்நிற வன முலை யவை'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியவற்றைக் காண்க.

பெண்களின் கொங்கைகளுக்கு அரும்புகள் உவமை: ''அரும்பும் குரும்பையும் அலைத்தமென் கொங்கை.'', ''அருப்பினார் முலைமங்கை பங்கினன்'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும்'', ''அருப்புப் போல் முலை யார்.'', ''அருப்போட்டு முலைமடவாள்.'' என்று திருநா வுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 22-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அருமையாக விளங்கும் திருமண ஊர்வலம் எழுந்து வந்த சமயத்தில் முழங்கிய வெண்மையான சங்கவாத்தியங்க ளாலும், பெண்மணிகள் தங்களுடைய காதுகளில் அணிந் திருக்கும் பெரிய மகரக் குழைகளாலும், அவர்களுடைய ஆபரணங்களில் பதித்து விளங்கிய பிரகாசம் வீசும் மாணிக் கங்களாலும் , நெருங்கியுள்ள மயிற் பீலிகள் சோலையைப் போல நீலநிறத்தைப் பெற்ற ஒளி அலைகளாலும், கருமை யான சமுத்திரத்தில் வீசும் அலைகள் கிளர்ச்சியைப் பெற்றுக் கரையை மோதியதைப் போன்ற தோற்றத்தோடு புத்தூர் விளங்கியது.' பாடல் வருமாறு:

**''அருங்கடி எழுந்த போழ்தில்**
**ஆர்த்தவெள் வளைக ளாலும்**
**இருங்குழை மகரத் தாலும்**
**இலங்கொளி மணிக ளாலும்**

நெருங்கிய பீலிச் சோலை
நீலநீர்த் தரங்கத் தாலும்
கருங்கடல் கிளர்ந்த தென்னக்
காட்சியிற் பொலிந்த தன்றே.''

அரும்-அருமையாக இருக்கும். கடி-திருமண ஊர்வலம். எழுந்த-எழுந்து வந்த. போழ்தில்-சமயத்தில். ஆர்த்த— ஊதப்பட்டு முழங்கிய. வெள்-வெண்மையான. வளைக ளாலும்-சங்க வாத்தியங்களாலும். இரும்-பெரியவையாக இருக்கும். குழை மகரத்தாலும்-ஊர்வலத்தில் கலந்து கொண்ட பெண்மணிகள் தங்களுடைய காதுகளில் அணிந் திருக்கும் மகரக் குழைகளாலும்; ஒருமை பன்மை மயக்கம். இலங்கு-அவர்கள் அணிந்திருக்கும் ஆபரணங்களில் பதிக்கப் பெற்று விளங்கும். ஒளி-பிரகாசத்தை வீசும். மணிகளா லும்-மாணிக்கங்களாலும். 'நவரத்தினங்களாலும், எனலும் ஆம். அவையாவன: முத்து, நீலக்கல், மரகதக்கல், மாணிக் கம், பதுமராகம், கோமேதகம், வயிரம், பவளம், வைடூரி யம் என்பவை. நெருங்கிய-நெருக்கமாக விளங்கிய. பீலி- ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்கள் தங்களுடைய கைக ளில் வைத்திருக்கும் விசிறிகளாகிய மயிற் பீலிகளாகிய. ஒருமை பன்மை மயக்கம் ச்:சந்தி. சோலை-பொழில். மயிற் பீலி விசிறிகள் மிகுதியாக இருந்தமையால் அவை சோலை யைப் போலக் காட்சியை அளித்தன. நீல-அந்த மயிர்ப்பீலி களின் நீலமாகிய. நீர்-நிறமாகிய இயல்பு. த்:சந்தி. தரங் கத்தாலும்-அலைகளைப் போலத் தோன்றியதாலும். தரங் கம்: ஒருமை பன்மை மயக்கம். கரும் கடல்-கருமையான கடலில் வீசும் அலைகள்; இட ஆகுபெயர். கிளர்ந்தது- கிளர்ச்சியைப் பெற்று எழுந்தன; ஒருமை பன்மை மயக்கம். என்ன- என்று கூறும் வண்ணம். ச்:சந்தி. காட்சியில்- தோற்றத்தோடு; உருபு மயக்கம். பொலிந்தது-புத்தூர் விளங்கியது. அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

பெண்மணிகள் தங்களுடைய காதுகளில் குழைகளை அணிந்து கொண்டிருத்தல்: "காதார் குழைஆட." (**திருவெம்பாவை**, 14), "கையார் வளைசிலம்பக் காதார் குழையாட." (**திருஅம்மானை**, 13) "வயிரக் கொடுங்குழை வார்ந்த காதில்.", "கனங்குழை கதுமெனக் கண்டே.", "பூங்குழை மாதர்.", "சுடர்க்குழை மாதர்.", "பூக்குழை மாதரை." (**பெருங்கதை**, 2, 16;12, 2. 5; 2, 2. 18: 94, 20. 19; 33, 3. 1: 80) "குழைமுக ஞானம் என்னும் குமரியை.", "வில்விட் டிருங் குழைக்கீழ் இலங்கு மாறும்.", "மின்னுக் குழையும் பொற்றோடும் மிளிர.", "குழைமுக நெற்றி.", "பூங்குழையாற் பொறி ஒற்று பு.", "அருமணிக் குழையோர் காதிற் கலந்தொளி கான்று.", "மகளிர் குழை சிதறி." (**சீவகசிந்தாமணி**, 368, 644, 1658, 1680, 1768, 2060, 2355), "கடைக்குழை ஒட்டி.", "கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதின்.", "வார்குழை ஆடாது" (**சிலப்பதிகாரம்**, 4: 69, 4: 51, 28, 73),", "இழைகளும் குழைகளும் மின்ன.", "காதொடும் குழைபொரு கயற்கண் நங்கை.", "வடங்களும் குழைகளும் வான வில்லிட.", "குழைகளும் இழைகளும் விளங்க.", "தெய்வக் குழைகளும் சேர்ந்து மின்ன.", "கனங்குழை மயிலனாள்.", "கணங் குழை கருத்தினுறை கள்வனென லானான்.", "ஏதமில் இரு குழை." "குழைக்குவ முகத்தியர் குழங்கொண் டேகினர்.", "பொலங்குழை மகளிர்.", "குழைபொரு கண்ணினாள்.", "குழைதொடர் நயனக் கூர்வேல்.", "குழைமுகத் தாயம்." "குழைபுகு கமலம் கோட்டினர்.", "குழைமுகத்து நின் சிந்தனை.", "குழைப்பொலி நல்லணிக் குலங்கள்." (**கம்பராமாயணம்**, மிதிலைக் காட்சிப்படலம், 24, 46, எழுச்சிப்படலம், 58, வரைக்காட்சிப் படலம் 10, பூக் கொய் படலம், 5, உண்டாட்டுப் படலம், 43, கோலங்காண் படலம், 39, கடிமணப் படலம், 53, நகர் நீங்கு படலம், 202, குகப் படலம், 55, கலன்காண் படலம், 3, ஊர்தேடு

படலம், 116, 384, நிந்தனைப் படலம், 18, 33, இராவணன் வதைப் படலம் 237), என வருவனவற்றைக் காண்க. ''கனங்குழை மாதர்கொல்.'' (**திருக்குறள்** 1081) என வருவதையும் காண்க.

பிறகு வரும் 23-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'நெருங்கியுள்ள பல வகையான வாத்தியங்களை அவற்றை வாசிப்பவர்கள் வாசித்து இனிய ஒலியை எழுப்ப, வரிசையாக வைத்திருந்த செந்தாமரை மலர்களும், வெண்டாமரை மலர்களும் ஓங்கி விளங்க, பெரிய குடைகள் நெருங்கிப் போக, ஒன்றனோடு ஒன்று இணைந்த மலர்க் கொடிகள் அசைய, அருமையான திருமணம் வந்து சேர, அன்று முதல் எல்லாக் காலத்திலும் அன்போடு பிறந்திருக்கும் உயர் குலத்தைச் சார்ந்த வேதியர்கள் வாழும் புத்தூர் என்னும்ஊர் மணம் வந்த புத்தூர் என்ற பெயரோடு விளங்குவதாகும்.' பாடல் வருமாறு:

**''நெருங்குதூ ரியங்கள் ஏங்க**
**நிரைத்ததா மரைகள் ஓங்கப்**
**பெருங்குடை மிடைந்து செல்லப்**
**பிணங்குபூங் கொடிகள் ஆட**
**அருங்கடி மணம்வந் தெய்த**
**அன்றுதொட் டென்றும் அன்பின்**
**வரும்குல மறையோர் புத்தூர்**
**மணம்வந்த புத்தூ ராமால்.''**

நெருங்கு—நெருங்கியிருக்கும். தூரியங்கள்—பல வகையான வாத்தியங்களை. அவையாவன: நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், வீணை, யாழ், முரசு, பேரிகை, சல்லரி, எக்காளம், தாரை, தப்பட்டை, கரடிகை, புல்லாங்குழல், பெருவங்கியம், முகவீணை, களிற்றுயிர்த்தூம்பு முதலியவை. ஏங்க-வாசிப்பவர்கள் வாசிப்பதால் இனிய ஒலியை

எழுப்ப. நிரைத்த-வரிசையாக வைத்த. த்:சந்தி. தாமரைகள்—செந்தாமரை மலர்களும் வெண்டாமரை மலர்களும். ஓங்க—சிறந்து விளங்க. ப்:சந்தி. பெருங்குடை—பெரிய குடைகள்; ஒருமை பன்மை மயக்கம். மிடைந்து—நெருங்கி. செல்ல—திருமண ஊர்வலத்தில் போக. ப்:சந்தி. பிணங்கு—ஒன்றனோடு ஒன்று இணைந்த. பூங்கொடிகள்—பல வகையான மலர்க்கொடிகள்; அவையாவன: மல்லிகைக் கொடி, முல்லைக்கொடி, இருவாட்சிக்கொடி,ஜாதிமல்லிகைக் கொடி, ஊசி மல்லிகைக் கொடி முதலியவை. ஆட—அசைய. அரும்—அருமையான. கடி—பன்னீர், வாசனைத் திரவியம் முதலியவற்றை ஊர்வலத்தில் கலந்துகொண்டவர்களின்மேல் வீசுகின்ற காட்சியைப் பெற்ற. மணம்—சுந்தர மூர்த்தி நாயனாருடைய திருமணம். வந்து எய்த—வந்து அடைய. அன்று தொட்டு- திருமணம் நடந்த அன்றைத் தினம் முதலாக. என்றும்-எல்லாக் காலத்திலும். அன்பில்-அன்போடு; உருபு மயக்கம். வரும்-அந்த ஊரில் பிறந்து விளங்கி வரும். குல—உயர்குலத்தில் பிறந்த. மறையோர்—வேதியர்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். புத்தூர்—புத்தூர் என்னும் பெயரோடு இருந்த ஊர். மணம் வந்த புத்தூர்-மணம் வந்த புத்தூர் என்ற பெயரைப் பெற்றது. ஆம்—ஆகி விளங்கும். ஆல்: ஈற்றசை நிலை.

அடுத்து வரும் 24-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நீரை நிரப்பிய பூரண கும்பம், தூபக்கால், விளக்கு, நெருங்கியிருக்கும் பாலிகைகள் ஆகியவற்றைத் தங்களுடைய கைகளில் எடுத்துக்கொண்டு, தேன் நிரம்பிய பல வகை மலர்களையும், அறுகம்புற்களையும், பொற் சுண்ணத்தையும், நறுமணம் வீசும் நெற் பொரிகள் பலவற்றையும் தூவி, அரைத்தல் மிகுதியான கலவைச் சந்தனக் குழம்பைப் பெற்ற நீரைத் தெளித்து,அந்த அக்கிரகாரத் தெருவில் வேதியர்கள், மடப்பத்தை உடைய அந்தணப் பெண்மணிகள்ஆகியவர்கள்

வள்ளலாகிய சுந்தரமூர்த்தி நாயனாரைத் திருமணம் புரிந்து கொள்வதற்காக எதிர்கொண்டு வரவேற்க, அவர் சடங்கவி சிவாசாரியாருடைய திருமாளிகைக்கு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**''நிறைகுடம் தூபம் தீபம்**
**நெருங்குபா லிகைகள் ஏந்தி**
**நிறைமலர் அறுகு சுண்ணம்**
**நறும்பொரி பலவும் வீசி**
**உறைமலி கலவைச் சாந்தின்**
**உறுபுனல் தெளித்து வீதி**
**மறையவர் மடவார் வள்ளல்**
**மணம்எதிர் கொள்ள வந்தார்.''**

நீரை—நீரை நிரப்பிய. குடம்—பூர்ண கும்பத்தையும், தூபம்—தூபக் காலையும். தீபம்—திருவிளக்குகளையும்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கு—நெருக்கமாக இருக்கும். பாலிகைகள்—நவதானியங்களின் முளைகள் உள்ள பாலிகை களை: பாலிகை—சிறு மண்சட்டி. ஏந்தி—பெண்மணிகள் தங்களுடைய கைகளில் எடுத்துக்கொண்டு. நறை—தேன்; 'நறுமணம்'எனினும் ஆம். மலர்-பலவகையான மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: ஜாதி மல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், மஞ்சட் செவ்வந்தி மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், பவளமல்லிகை மலர், தாழம்பூ, அல்லி மலர், ஆம்பல் மலர், நீலோற்பல மலர், குமுத மலர் முதலி யவை. அறுகு-அறுகம்புற்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அறுகம் புல் மங்கலமான பொருள்களில் ஒன்று. அதை மங்கல காரியங்களைச் செய்யும் போது எடுத்துக் கொண்டு வருவார்கள். இது, ''அறுகெடுப்பார் அயனும் அரியும்'' என்று **திருவாச**கத் தில் வருவதனால் தெரியவரும். சுண்ணம்-மகளிர் உரலில் இடித்த பொற் சுண்ணத்தையும்; ''ஐயாறன் அம்மானைப்

பாடி ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''செம் பொன்செய் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''உமையாள் கொழுநற் கேய்ந்தபொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''பாடிப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''முக்கணப் பற் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே,'', ''பாடிப் பாடி மகிழ்ந்து பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஆடக மாமலை அன்ன கோவுக் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''நம்மை இம்மை ஆட்கொண்ட வண் ணங்கள் பாடிப் பாடி ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஐயன் அணிதில்லை வாணனுக்கே ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''அத்தன் கருணையொ டாட ஆட ஆடப்பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''அம்பலத் தாடினானுக் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''மடந்தை நல்லீர் பாடிப் பொற்சுண்ணம் இடித் தும் நாமே.'', ''மங்கைநல்லீர் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''பொங்கிய காதலிற் கொங்கை பொங்கப் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''பானற் றடங்கண் மடந்தைநல்லீர் பாடிப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''சேவகன் நாமங்கள் பாடிப்பாடிச் செம்பொன்செய் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''போனக மர நஞ்சுண்டல் பாடிப் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''நாதற்குச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஈசற்குச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஆதியும் அந்த மும் ஆயினாருக் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே'' என்று **திருவாசக**த்தில் வருபவற்றைக் காண்க. நறும்-நறு மணம் கமழும். பொரி-நெற்பொரிகள்; ஒருமை பன்மை மயக்கம். பலவும்-பலவற்றையும். வீசி-தூவி. உறை மலி- சந்தனக் கல்லில் வைத்துஅரைத்தலால் மிகுதியாகச் சேர்ந்த. கலவைச் சாந்தின்-கலவைச் சந்தனத்தை; உருபு மயக்கம். உறுபுனல்-கரைத்த நறுநீரை. தெளித்து-பெண்மணிகள் தங்களுடைய கைகளால் வாரித் தெளித்து. வீதி-மணம்

வந்த புத்தூரில் உள்ள தெருவில் வாழும். மறையவர்-வேதியர்களும்; ஒருமை பன்மை மயக்கம். மடவார்-மடப்பத்தை உடைய பெண்மணிகளும்; ஒருமை பன்மை மயக்கம். வள்ளல்-வள்ளலாகிய சுந்தரமூர்த்தி நாயனாரை. மணம்-திருமண மண்டபத்திற்கு. எதிர்கொள்ள-அந்த வேதியர்களும் பெண்மணிகளும் எதிர்கொண்டு வரவேற்க. வந்தார்- அந்த நாயனார் எழுந்தருளினார்.

பின்பு உள்ள 25-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

' ''இந்தக் காளைமாட்டைப் போன்ற மணமகனாகிய சுந்தரமூர்த்தியைப் பார்ப்பதற்குக் கணக்கு இல்லாத கண்கள் நமக்கு வேண்டும்'' என்று சிலர் கூறுவார்கள். ''சடங்கவி சிவாசாரியாருடைய பேதைப் பருவத்தைப் பெற்ற புதல்வி பெண்மணிகளுக்குள் தான் உயர்ச்சியாக இருக்கும் வண்ணம் முன் பிறவியில் தவத்தைச் செய்திருக்கிறாள்'' என்று வேறு சில மக்கள் இயம்புவார்கள். இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள் மகிழ்ச்சியை மிகுதியாக அடையுமாறு இந்த திருமணத்தைப் பார்த்து நல் வாழ்வைப் பெற்றோம்.'' என்று மற்றும் சிலர் நவில்வார்கள்; பல வகையான பண்களால் நிறைந்திருக்கும் இசைப்பாடல்களை ஆடவர்களும் பெண்மணிகளும் பாடுவார்கள்; ஆனந்தத்தால் கூத்தாடுவார்கள்.' பாடல் வருமாறு:

**'' 'கண்கள்எண் இலாத வேண்டும்**
**காளையைக் காண' என் பார்;**
**'பெண்களில் உயர நோற்றாள்**
**சடங்கவி பேதை' என்பார்;**
**'மண்களி கூர வந்த**
**மணம் கண்டு வாழ்ந்தோம்,' என்பார்;**
**பண்களில் நிறைந்த கீதம்**
**பாடுவார்; ஆடு வார்கள்.''**

காளையை—இந்தக் காளைமாட்டைப் போன்ற மணமகனாகிய சுந்தரமூர்த்தியை. க்:சந்தி. காண—நாம் பார்ப்பதற்காக. எண்--கணக்கு. இலாத—இல்லாத; இடைக்குறை. கண்கள்—விழிகள். வேண்டும்-நமக்கு இருக்க வேண்டும். என்பார்-என்று சில மக்கள் கூறுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். சடங்கவி-சடங்கவி சிவாசாரியாருடைய. பேதை-பேதைப் பருவத்தில் உள்ள புதல்வி. பெண்களில்-உலகத்தில் வாழும் பெண்மணிகளுக்குள். உயர-தான் உயர்ச்சியை உடைய வளாக விளங்கும் வண்ணம். நோற்றாள்-முன் பிறவியில் நல்ல தவத்தைப் புரிந்திருக்கிறாள். என்பார்-என்று வேறு சிலர் பாராட்டுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மண்-இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். களி-ஆனந்தத்தை. கூர-மிகுதியாக அடையுமாறு. வந்த-இந்த மணம் வந்த புத்தூருக்கு வந்த. மணம்-திருமணக் காட்சியை. கண்டு-பார்த்து. வாழ்ந்தோம்-நாங்கள் நல் வாழ்வைப் பெற்றோம். என்பார்- என்று மற்றும் சில பேர்கள் நவில்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.பண்களில்-பலவகையான பண்களால்; உருபுமயக்கம். அந்தப் பண் களாவன: நட்ட பாடை, தக்கராகம், பழந்தக்க ராகம், தக்கேசி, குறிஞ்சி, வியாழக் குறிஞ்சி, மேகராகக் குறிஞ்சி, யாழ்மூரி, இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந் தைக் காந்தாரம், செவ்வழி, நட்டராகம், காந்தாரபஞ்சமம், கொல்லி,கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம் பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி, செந்துருத்தி முதலியவை. நிறைந்த-நிரம்பியுள்ள. கீதம்-இசைப்பாடல்களை; ஒருமை பன்மை மயக்கம். பாடுவார்-ஆடவர்களும் பெண்மணிகளும் பாடுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆடுவார்கள்- அந்த இரண்டு பாலார் களும் ஆனந்தத்தால் கூத்தாடுவார்கள்.

ஆடவருக்குக் காளை மாடுஉவமை; ''ஏறனான் வைகுறும்.'', ''ஏறனார்க்கிருளை நீக்க'', ''விடையவன்னவன்,'' (**சீவகசிந்தாமணி**,1351, 1542, 742), ''மால்விடையும்..காண நடந்தான்.'', ''விடைபொரு நடையினான்.'', ''மழவிடையனையாரும்.'' ''வெவ்விடை போலிள வீரனை.'', ''வெவ் விடை யனைய போர்வீரத் தூதனும்.'', ''விடையேநிகர் அங்கதன்.'', ,'விடைக்குவங்கள் போல் இராக்கதப் பதாதியும் மிடைந்த,'', ''விடைக்கு வங்களின் நடுவணோர் விடை கிடந்தென்னக் கடைக்கண் தீயுக அங்கதக் களிற்றினைக் கண்டான்.'' (கார்முகப் படலம், 22, எழுச்சிப் படலம், 10, கடிமணப் படலம், 23, அயோமுகிப் படலம், 38, காட்சிப்படலம், 54, அதிகாயன் வதைப் படலம், 251, பிரமாத்திரப் படலம், 99, 197) என்று **கம்பராமாயணத்தில்** வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 26-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''ஆண்மையையும் தகுதியையும் பெற்ற இந்தச் சுந்தரமூர்த்தி என்னும் திருநாமத்தைக் கொண்ட மணமகனுடைய திருவருட்பார்வையினுடைய வெள்ளத்துக்குள் நாம் துளைந்து ஆனந்தத்தை அடைந்தோம்'' எனறு மணம் வந்த புத்தூரில் வாழும் சில பெண்மணிகள் கூறுவார்கள்; ''தாவி ஓடிய குதிரையும் நம்மிடத்தில் நாம் காணும் தகுதி பெற நடந்து வந்தது'' என்று சில மாதர்கள் இயம்புவார்கள்; ''ஆபரணங்களோடு விளங்கும் இந்த மணமகனே புண்ணியமே வடிவெடுத்தவன்'' என்று சில மங்கைமார் நவில்வார்கள்; அங்கே கூடியிருந்த மடப்பத்தைப் பெற்ற பெண்மணிகளினுடைய கூட்டம் இத்தகைய வார்த்தைகளைக் கூறச் சுந்தரமூர்த்தி நாயனார் யோகப் புரவியின்மேல் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**'' 'ஆண்டகை அருளின் நோக்கின்**
**வெள்ளத்துள் அலைந்தோம்.' என்பார்;**
**'தாண்டிய பரியும் நம்பால்**
**தகுதியின் நடந்த' தென்பார்;**
**'பூண்டயங் கிவனே காணும்**
**புண்ணிய மூர்த்தி' என்பார்;**
**ஈண்டிய மடவார் கூட்டம்**
**இன்னன இசைப்பச் சென்றார்.''**

ஆண்-ஆண்மையையும். தகை-தகுதியையும் பெற்ற இந்தச் சுந்தரமூர்த்தியினுடைய. அருளின் நோக்கின்_ திருவருட் பார்வையாகிய. வெள்ளத்துள்-வெள்ளத்தில். அலைந்தோம்-நாம் துளைந்து இன்பத்தை அடைந்தோம். என்பார்-என்று மணம் வந்த புத்தூரில் வாழும் சில பெண் மணிகள் கூறுவார்கள்: ஒருமை பன்மை மயக்கம். தாண்டிய—தாவி ஓடிய. பரியும்—இந்த மணமகன் ஏறிக் கொண்டிருக்கும் குதிரையும். நம்பால்- நம்மிடத்தில். தகுதியின்-இந்த மணமகனைப் பார்க்கும் தகுதியை அடையும் வண்ணம். நடந்தது- ஓடுவதை விட்டு விட்டு நடந்து வந்தது. என்பார்—என்று சில மங்கைமார் இயம்புவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். பூண்—பலவகை ஆபரணங்களோடு, ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: தங்கச் சங்கிலி, சன்ன வீரம், கிரீடம், தங்கக் கைக் காப் புக்கள், தங்க அரை ஞாண், கால்களில் சிலம்புகள், கைவிரல் களில் மோதிரங்கள் முதலியவை. தயங்கு—விளங்கும். இவனே- இந்த மணமகனே. புண்ணிய —புண்ணியங்களின்; ஒருமை பன்மை மயக்கம். மூர்த்தி -- வடிவமாக விளங்கு பவன். மூர்த்தம்—வடிவம். என்பார்—என்று சில மாதரசி கள் மொழிவார்கள்: ஒருமை பன்மை மயக்கம். ஈண்டிய— கூட்டமாகக் கூடிய. மடவார்—மணம் வந்த புத்தூரில் வாழும் மடப்பத்தைப் பெற்ற பெண்மணிகளினுடைய. கூட்டம்—குழு. இன்னன—இத்தகைய வார்த்தைகளை.

இசைப்ப—கூற. ச்:சந்தி. சென்றார்—சுந்தரமூர்த்தி நாயனார் யோகப் புரவியின்மேல் ஏறிக்கொண்டு எழுந்தருளினார்.

அடுத்து வரும் 27-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு எழுந்தருளும் திருமணக் கோலத்தோடு அடியேங்களுடைய வள்ளலாராகிய சுந்தரமூர்த்தி நாயனார் தெளிவாக விளங்கும் நறுமணம் உள்ள பன்னீர், பொற் சுண்ணம் முதலிய வாசனைத் திரவியங்களைத் தெளித்திருக் கும் திருமணப் பந்தலுக்கு முன்னால் எழுந்தருளி வெண்மை யான சங்க வாத்தியங்கள் எல்லா இடங்களிலும் பெரிய மேகக் கூட்டத்தைப் போல முழக்கத்தைச் செய்யத் தாம் ஏறிக்கொண்டு எழுந்தருளிய யோகப்புரவியின்மேலிருந்து இறங்கி, விரும்புவதற்கு உரியதாக இருக்கும் அந்த ஒப்பற்ற திருமணத்தினுடைய வகையில் அந்தத் திருமணப் பந்தலில் நடந்ததை அடியேன் பாடுவேன்; அதனால் உஜ்ஜீவனத்தை அடைந்தவன் ஆவேன்.' பாடல் வருமாறு:

**''வருமணக் கோலத் தெங்கள்**
**வள்ளலார் தெள்ளும் வாசத்**
**திருமணப் பந்தர் முன்பு**
**சென்றுவெண் சங்கம் எங்கும்**
**பெருமழைக் குலத்தின் ஆர்ப்பப்**
**பரிமிசை இழிந்து பேணும்**
**ஒருமணத் திறத்தின் அங்கு**
**நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்.''**

இது சேக்கிழார் கூற்று. வரும்—இவ்வாறு எழுந்தருளும். மணக்கோலத்து—திருமணக் கோலத்தைக் கொண்ட. எங்கள் —அடியேங்களுடைய. வள்ளலார்—வள்ளலாராகிய சுந்தர மூர்த்தி நாயனார். தெள்ளும்—தெளிவாக விளங்கும். வாச- பன்னீர். பொற்சுண்ணம் முதலிய வாசனைத் திரவியங் களைத் தூவியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி.

திருமணப் பந்தல்-திருமணம் புரிவதற்காக அமைத்த பந்தலினுடைய. முன்பு-முன்னால். சென்று—எழுந்தருளி. வெண்-வெண்மை நிறத்தைப் பெற்ற. சங்கம்—சங்க வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும்—எந்த இடத்திலும். பெரு—பெரிய. மழைக் குலத்தின்—மேகங்களினுடைய கூட்டத்தைப் போல, மழை; ஒருமை பன்மை மயக்கம். ஆர்ப்ப-முழக்கத்தை எழுப்ப. ப்:சந்தி. பரிமிசை—தாம் ஏறிக் கொண்டு எழுந்தருளிய யோகப் புரவியின்மேலிருந்து. இழிந்து-இறங்கி வந்து. பேணும்—விரும்பும். ஒரு—ஒப்பற்ற. மணத்திறத்தின்—திருமண நிகழ்ச்சியின் வகையில். அங்கு—அந்தத் திருமணப்பந்தலில். நிகழ்ந்தது-நடந்ததை. மொழிவேன் இனிமேல் அடியேன் பாடுவேன். உய்ந்தேன்-அதனால் அடியேன் உஜ்ஜீவனத்தை அடைந்தவன் ஆவேன்.

சுந்தரமூர்த்தி நாயனார் வள்ளல் என்று கூறப்படுதல்: "மற்றவன் வார்த்தை கேட்ட வள்ளல்.'', ''வள்ளலும்கடிது சென்றான்.'', ''மன்னு காதல னாகிய வள்ளல்'' என்று பெரிய புராணத்தில் வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 28-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'முழங்கும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களின் கானமும் சுற்றிலும் கேட்கும் கயிலாச மலையில் கைலாசபதி முன்பு திருவாய் மலர்ந்தருளிச் செய்த பொருந்தும்வார்த்தைகளால் சுந்தரமூர்த்தி நாயனாரை வழியில் தடுத்து அடிமையாகக் கொள்ளும்பொருட்டு ஆகாயத்தை அளாவி அன்னப்பறவையாகப் பறந்தும், மிகுதியாக நிலத்தின்கீழே சென்று பன்றியாகத் தோண்டித் தேடியும் பிரம தேவனும் திருமாலும் திருமுடியையும், திருவடிகளையும் காண அரியவரும் ஒப்பற்றவரும் ஆகிய கிருபாபுரீசர் எழுந்தருளி வந்தார்.' பாடல் வருமாறு:

**"ஆலுமறை சூழ்கயிலை யின்கண்அருள் செய்த**
**சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்**
**மேலுற எழுந்துமிகு கீழுற அகழ்ந்து**
**மாலும்அய னுக்கும்அரி யார்ஒருவர் வந்தார்."**

ஆலு—கானம் செய்யப்பெறும். மறை— இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களை ஓதும் இனிய கானம்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். சூழ்—சுற்றிலும் கேட்கும். கயிலை யின்கண்—கயிலாய மலையில். அருள்செய்த – முன்காலத் தில் கைலாசபதி ஆலால சுந்தரனுக்குத் திருவாய் மலர்ந் தருளிச் செய்த. சாலும்—பொருந்தும். மொழியால்— வார்த்தைகளுக்கு ஏற்ப; உருபு மயக்கம்; மொழி: ஒருமை பன்மை மயக்கம். வழி –சுந்தரமூர்த்தி நாயனார் திருமணப் பந்தலுக்கு எழுந்தருளும் வழியில். தடுத்து-அவரைப் போகா மல் தடுத்து. அடிமை-தம்முடைய அடிமையாக. கொள் வான்-கொள்ளும் பொருட்டு.மேல்உற-ஆகாயத்தில் அன்னப் பறவையாகிப் பறக்க. எழுந்து. எழுந்து சென்றும். கீழ் உற- நிலத்தை ஆழமாக. அகழ்ந்து-பன்றியாக உருவெடுத்துத் தோண்டிப் பார்த்தும். அயனுக்கு-பிரம தேவனுக்கும். மாலும்-திருமாலுக்கும்; எதிர் நிரனிறை. அரியார் பார்ப்ப தற்கு அரியவரும்.ஒருவர்-ஒப்பற்றவரும் ஆகிய கிருபாபுரீசர். வந்தார்-எழுந்தருளினார்.

அடுத்து வரும் 29—ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய கண்களுக்கு நடுவில் மறைந்திருந்த ஒளி வீசும் வெள்ளை ஆடை என்று சொல்லும் வண்ணம் சுற்றி யிருக்கும் புண்ணியத்தைப் பெற்ற தம்முடைய நெற்றியில் தூய்மையான விபூதி விளக்கத்தை அடையும் வண்ணம் குளிர்ச்சியைக் கொண்ட சந்திரன் முதுமையை அடைந்து அதனுடைய கிரணங்கள் சாய்வதைப் போலத் தம்முடைய தலையின்மேல் வெண்மையான நரைமயிர்களை முடிந்து

வைத்து அது தாழ்ந்து இடுப்பில் வந்து விளங்க.' பாடல் வருமாறு:

**''கண்ணிடை கரந்தகதிர் வெண்படம் எனச்சூழ்'
புண்ணிய நுதல்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை தழங்க.''**

இந்தப் பாடல் குளகம். கண்ணிடை-தம்முடைய கண்களுக்கு நடுவில்; ஒருமை பன்மை மயக்கம். கரந்த-மறைந்திருந்த. கதிர்-ஒளியை வீசும். வெண்-வெள்ளை நிறத்தைக் கொண்ட. படம்-துணி. என—என்று சொல்லும் வண்ணம்; இடைக்குறை. ச்:சந்தி. சூழ்-சுற்றியிருக்கும். புண்ணிய—புண்ணியத்தைப் பெற்ற. நுதல்—நெற்றியில். புனித—தூய்மையாகிய. நீறு—விபூதி. பொலிவு—விளக்கத்தை; தோற்றப் பொலிவை. எய்த—அடைய. த்:சந்தி. தண்—குளிர்ச்சியை உடைய. மதி—சந்திரன். முதிர்ந்து—முதுமையை அடைந்து. கதிர்—தன்னுடைய கிரணங்களாகிய நிலா; ஒருமை பன்மை மயக்கம். சாய்வதென—படிவதைப் போல, என: இடைக்குறை. மீது—தலையின்மேல். ஏ; அசைநிலை. வெண்—வெள்ளை நிறத்தைக் கொண்ட. நரை—நரைத்த மயிர்களை. ஒருமை பன்மை மயக்கம். முடித்து—கொண்டையாக முடிந்துகொண்டு. அது—அந்த நரைத்த மயிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். விழுந்து—பிதிர்ந்து கீழே தொங்கி. இடை—தம்முடைய இடுப்பில். தழங்க—விளங்க.

புனித நீறு: ''பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்.'', ''பூதி யாகிய புனிதநீ றாடி.'', ''தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும்.'', ''தூய நீறு தங்கள் திருமுடியில் வாங்கித் தொழுதணிந்து.'' என்று பெரிய புராணத்தில் வருவனவற்றைக் காண்க.

அடுத்து வரும் 30—ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு வந்த வேதியரினுடைய காதுகளில் அணிந்திருக்கும் உருத்திராக்கங்கள் ஆகிய அழகு அமைந்த குழைகள் தொங்க, ஒளி வீசும் அழகிய திருமார்பில் அசைகின்ற பூணூலோடு தம்முடைய வலத்தோளின்மேல் அங்க வஸ்திரமாகிய வெண்மையானதும் மெல்லியதும் ஆகிய ஆடை அசைய, வெயிலை மறைக்கும் குடையைப் பிடித்துள்ள திருக்கரம் திகழ.' பாடல் வருமாறு:

**''காதில்அணி கண்டிகை வடிந்தகுழை தாழச்**
**சோதிமணி மார்பின்அசை நூலினொடு தோளின்**
**மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க**
**ஆதபம் மறைக்குடை அணிக்கரம் விளங்க.''**

இந்தப் பாடலும் குளகம். காதில்—அவ்வாறு எழுந்தருளிய வேதியருடைய காதுகளில்; ஒருமை பன்மை மயக்கம். அணி—அணிந்திருக்கும். கண்டிகை—ஒற்றை உருத்திராக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வடிந்த—அழகாக அமைந்த. குழை—குழைகள்; ஒருமை பன்மை மயக்கம். தாழ-தொங்க. ச்:சந்தி. சோதி-ஒளி வெள்ளத்தை வீசும். மணி-உருத்திராக்க மாலையை அணிந்த. மார்பின்-திருமார்பில். அசை — அசைந்து புரளும். நூலினொடு—பூணூலோடு. தோளின் மீது—தம்முடைய இடத் தோளின்மேல், புனை—அணிந்த. உத்தரிய—அங்க வஸ்திரமாகிய. வெண்—வெள்ளை நிறத்தைக் கொண்ட. துகில்—மெல்லிய ஆடை. நுடங்க—அசைய. ஆதபம்—வெயிலை. மறை—மறைத்தலை உடைய. க்:சந்தி. குடை—ஒரு தாழங்குடை. அணி-அழகைப் பெற்ற. கரம்—தம்முடைய திருக்கரத்தில். விளங்க-திகழ.

பிறகு உள்ள 31—ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தம்முடைய வயிற்றிலிருந்து சரிந்து விளங்கும் பஞ்ச கச்ச வேட்டி, பழமையை மிகுதியாக எடுத்துக்காட்ட, தாம் உடுத்துக்கொண்டிருப்பதாகிய நழுவும் ஆடை நிரம்பி எழிலைக் கொண்டு விளங்க, வெண்மையான மெல்லிய ஆடையோடு, தருப்பைப் புல்லை முடிந்து விட்டிருக்கும் மூங்கில் தடியைத் தம்முடைய ஒரு கையில் ஊன்றிக் கொண்டு, வீரக்கழலைப் பூண்ட திருவடிகள் தள்ளாடும் நடையை மேற்கொண்டிருக்க.' பாடல் வருமாறு:

**"பண்டிசரி கோவண உடைப்பழமை கூரக்**
**கொண்டதொர் சழங்கலுடை ஆர்ந்தழகு கொள்ள**
**வெண்துகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்**
**தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள."**

இந்தப் பாடலும் குளகம். பண்டி-வயிற்றிலிருந்து. சரி-சரியும்; தாழும். கோவண உடை-பஞ்சகச்ச வேட்டி. ப்:சந்தி. பழமை—பழமையை. கூர—மிகுதியாக எடுத்துக் காட்ட. க்:சந்தி. கொண்டது—தாம் உடுத்துக்கொண்ட தாகிய. ஓர்—ஒரு. சழங்கல்—தழுவுதலை உடைய. உடை—இடுப்பில் உடுத்துக்கொண்ட ஆடை. ஆர்ந்து—இடுப்பில் நிரம்பி. அழகு கொள்ள—எழிலைக் கொண்டு திகழ. வெண்—வெண்மையான. துகிலுடன்—மெல்லிய துணியோடு. குசை—தருப்பைப்புல்லை. முடிந்துவிடு—முடிந்துவிட்ட. வேணுத் தண்டு—மூங்கில் தடியை. ஒரு கை-ஒப்பற்ற வலக்கையால். கொண்டு—ஊன்றிக்கொண்டு. கழல்—வீரக் கழலைப் பூண்ட திருவடிகள்; ஆகுபெயர்: ஒருமை பன்மை மயக்கம். 'கழல்' என்பது முழங்காலுக்குக் கீழே பாதத்துக்கு மேலே அணியும் ஒரு வகை அணிகலன். இதை வீரக்கழல், வெற்றிக்கழல் என்றும் கூறுவர். தள்ளு—தள்ளாடி நடக்கும். நடை—நடையை. கொள்ள-கொண்டு திகழ.

கோவணஉடை: "கோவண ஆடையும் நீற்றுப் பூச்சும்.", "அரைகெழு கோவண ஆடையின்மேல்.", "கோவணமும் உழையின் னதளும் உடை ஆடையர்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "கோவணத் துடையான் குடமூக்கிலே.", "உடையர் கோவணம்.", "துன்னக் கோவணச் சுண்ணவெண்ணீறணி...புகலூரரோ.", "அரையார் கோவண ஆடையன்.", "துன்னம் சேர் கோவணத்தாய்" என்று திருநாவுக்கரசு நாயனாரும், "கோவணமேற் கொண்ட வேடம்.", "கீளார் கோவணமும்.", "அரைவிரி கோவணத்தோ டரலார்த்து." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 32-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

"மிகுதியாக அமைந்து வளரும் பெரிய எழில் முதுமையை அடைந்த திருவுருவமோதான்? அத்தகைய தன்மையைப் பெற்ற முதுமைப்பருவம் என்னும் அதனுடையதிருவுருவமோ தான்? உண்மையாக விளங்கியுள்ள வழியாகிய வைதிகம் உண்டான முதல் பரம்பொருள்தானோ? இந்தப் பான்மையைப் பெற்ற முதிய வேடம்" என்று பார்த்தவர்கள் சந்தேகத்தை அடையும் வண்ணம் திருமணப் பந்தலை அடைந்து.' பாடல் வருமாறு:

**"மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ?**
**அத்தகைய மூப்பெனும் அதன்படிவ மேயோ?**
**மொய்த்தநெறி வைதிகம் விளைந்தமுத லேயோ?**
**இத்தகைய வேடம்என ஐயமுற எய்தி."**

இந்தப் பாட்டும் குளகம். இத்தகைய-இந்தத் தன்மையை உடைய. வேடம்-இவருடைய வேடம். மொய்த்து-தம்மை அண்டி. வளர்-வளரும். பேரழகு-பெரிய எழில். மூத்த-முதுமையை அடைந்த. வடிவேயோ-திருவுருவமோ.

அத்தகைய-பலரும் கூறும் அந்த இயல்பை உடைய. மூப்பு-முதுமை. எனும்-என்று சொல்லப்படும்; இடைக் குறை. அதன்-அந்த முதுமைப் பருவத்தினுடைய. படிவ மேயோ-வடிவந்தானோ. மெய்த்த-உண்மையாக உள்ள. நெறி-வழியாகிய. வைதிகம் - வேதநெறி; ''வேதநெறி தழைத்தோங்க.'' என வருதல் காண்க. விளைந்த-உண் டான. முதலேயோ-முதலாக விளங்கும் பரம்பொருள் தானோ? என-என்று; இடைக்குறை. ஐயம் உற-தம்மைப் பார்த்தவர்கள் சந்தேகத்தை அடையும் வண்ணம். எய்தி- திருமணப் பந்தலை அடைந்து. இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது.

அடுத்து உள்ள 33-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு எழுந்தருளி அழகும் பெருமையும் பெற்ற வேத விதிப்படி சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருமணச் சடங்கை ஆரம்பிக்கும் பந்தலில் நம்பியாரூரனாகிய அந்த நாயனாருக்கு எதிரில் பல வார்த்தைகளைப் பேசிக்கொண் டிருக்கும் சபையினருக்கு முன்னால் நின்று கொண்டு, ''நான் கூறும் இந்த வார்த்தைகளை என்னுடைய எதிரில் அமர்ந் திருக்கும் எல்லோரும் கேளுங்கள்'' என்று முன்பு பழையவை யாக உள்ள ஆயிரம் வேதங்களைத் திருவாய் மலர்ந்தருளிய திருவாயை உடைய அந்த முதியவன்.' பாடல் வருமாறு:

**''வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும்**
**பந்தரிடை நம்பிஎதிர் பன்னுசபை முன்னின்**
**'றிந்த மொழி கேண்மின்எதிர் யாவர்களும்' என்றான்**
**முந்தைமறை ஆயிரம் மொழிந்ததிரு வாயான்.''**

இந்தப் பாடலும் குளகம். வந்து-அவ்வாறு எழுந்தருளி. திரு-அழகையும். மா-பெருமையையும் பெற்ற. மணத் தொழில்-சுந்தரமூர்த்தி நாயனாருடைய திருமணச் சடங்கு. தொடங்கும்-ஆரம்பிக்கும். பந்தரிடை-பந்தலில். நம்பி— நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்கு. எதிர் -

எதிரில் அமர்ந்துகொண்டு. பன்னு—பல வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்கும். சபை—சபையோர்களுடைய; இட ஆகு பெயர். முன்-முன்னால். நின்று-நின்றுகொண்டு. இந்த -யான் கூறும் இந்த. மொழி—வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். எதிர்—என்னுடைய எதிரில் அமர்ந்திருக் கும். யாவர்களும்-எல்லாப் பெரியவர்களும். கேண்மின்-கேளுங்கள்.முந்தை-முன்காலமாகிய பழமையான காலத்தில். மறை—வேதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆயிரம்—ஆயிரத்தை. வேதங்கள் இந்தக் காலத்தில் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என நான் காக இருந்தாலும் பழைய காலத்தில் கணக்கு இல்லாத வேதங்கள் இருந்தன. இது, 'அநந்தாவை வேதா' என்பத னால் அறியலாகும். இந்தப் பாடலில் ஆயிரம் என்றது கணக்கு இல்லாத வேதங்களைக் குறித்து நின்றது; அனந்த வாசி. மொழிந்த—திருவாய் மலர்ந்தருளிச் செய்த. திரு—அழகிய. வாயான்—வாயைப் பெற்றவனாகிய சிவபெருமான் வேறு வடிவெடுத்து வந்த முதியவன். என்றான்—என்று கூறினான்.

மறை மொழிந்த திருவாயான்: ''அங்கமும் வேதமும் ஓதும் நாவர்.'', ''மறையும் ஓதி.'', ''மறையும் பலபாடி.'', ''நுணங்குமறை பாடி.'', ''வேதம் ஓதி.'', ''மறையும் பலபாடி.,'' மயானத் துறைவாரும்.'', ''அங்க மொராறும் அருமறை நான்கும் அருள்செய்து.'',''பாடலன் நான்மறையன்.'',''அங்கமும் நான்மறையும் அருள்செய்து.'', ''அங்கமொ டருமறைஅருள்புரிந்தான்.'',''நான்மறை ஓதி.'', ''நால்வேதம் ஆலின்கீழ் இருந்தருளி.'', ''வேதம் எல்லாம் முறையால் விரித்து.'', ''மறையும் ஓதுவர்.'', ''மறையார் தரு வாய்மையினாய்.'', ''வேத நாவினர்.'', ''பன்னினார் மறை பாடினார்.'', ''சொற்றரும் மறை பாடினார்.'', ''மறைநின்றிலங்கு மொழியார்.'', ''மறைவளர் நாவன்.'', ''வேதம் ஓதிய நாவுடையான்.'', ''வேதம் நான்கும் பதினெட்டொ டாறும் விரித்தார்க்கிடம்.'', ''வேதம்

விரித்தோத வல்லவர்.'', ''மறை ஓதி.'', ''பாடினாய் மறையோடு.'', ''மறைபுனை பாடலர்.'', ''மறைமல்கு பாடலன்.'', ''தொகுத்தவன் அருமறை.'', ''விரித்தவன் அருமறை.'', ''பாடினார் அருமறை.'', ''மறையணி நாவினான் மாமழ பாடியே.'', ''பண்ணினார் அருமறை பாடினார்.'', ''மறையர் வாயின் மொழி.'', ''அருமறையின் பொருள் பாடினார்.'', ''வாயிடைம்மறை யோதி.'', ''மறையிலங்கு பாடலாய்.'', ''மறைமொழி வாய்மையினான்.'', ''மறைநவின்ற பாட லோடு.'', ''பாடல் மறை.'', ''மறைத்திற மறத்தொகுதி கண்டு சமயங்களை வகுத்தவன்.'', ''பாடினர் அருமறை முறைமுறை.'', ''மறையொலி பாடி.'', ''வேதம் ஓதுவர்.'', ''ஓதி வாயதும் மறைகளே.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்.'', ''நாலுகொ லாம்மறை பாடின தாமே.'', ''ஓதினார் வேதம் வாயால்.'', ''மறையும் கொப்புளித்த நாவர்.'', ''பாடினார் மறைகள் நான்கும்.'', ''அரியன அங்கம் வேதம் அந்தணர்க் கருளும் வைத்தார்.'', ''வேதங்கள் விரும்பி ஓதப் பண்ணினார்.'', ''வேதராய் வேதம் ஓதி.'', ''தூயநன் மறைகள் நான்கும் பாடினார்.'', ''மறையது பாடி.'', ''ஓதிய வேத நாவர்.''' ''மறையணி நாவி னானை.'', ''மறையுறு மொழியர்.'', ''மறையொலி பாடி.'', ''பன்னிய மறையர்.'', ''மறைநவில் நாவி னானை.'', ''வேதங்கள் ஓதும்.'', ''மறை நான்குடன் ஓதியை.'', ''அரிய நான்மறை ஓதிய நாவரோ.'', ''வேதம் ஓதும் விரிசடை அண்ணலார்.'', ''மறையும் ஓதுவர்.'', ''பண்ணினார் மறை.'', ''வேதம் ஓதி விளங்குவெண் தோடராய்.'', ''வேதம் ஓதி வந்து.'', ''மறைகொள் வாய்மொழியார் வன்னி யூரரே.'',''பன்மறை ஓதி.'', ''பாடினார் மறைநான்கினொ டாறங்கம்.'', ''நல்ல நான்மறை ஓதிய நம்பனை.'', ''மறைகொள் நாவினன்.'', ''அழகாகிய நான்மறை பாடினார்.''. ''பண்ணி

னான் மறை.'', ''வேத நாவர்.'', ''வேத நாவன்.'', ''மறைகொள் நாவன்.'', ''மறையும் பாடுதிர்.'', ''பாடுமே ஒழியாமே நால்வே தம்மும்.'', ''மறையார்ந்த வாய்மொழியான்.'', ''வேதங்கள் வேள்வி பயந்தார்.''. ''மறைநால்வர் விண்ணோர்க் கென்றும் வேதத்தை விரிப்ப தற்கு முன்னோ.'', ''மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மறை நான்கும் கல்லால் நிழற்கீழ்ப் பன்னிய எங்கள் பிரான்.'', ''வேதம் ஓதி வெண்ணீறு பூசி.'', ''மறைநான்கினையும் ஓதியன்'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''வேதமெய்ந் நூல் சொன்னவனே.'', ''பேசுவதும் திருவாயால் மறை.'', ''அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி.'', ''வேத மொழியர் வெண்ணீற்றர்.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 34-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'என இவ்வாறு கூறிய வேதியனைக் கணக்கு இல்லாத அந்தணர்களும், திருமணச் சடங்காகிய மங்கலமான காரியத் தைப் புரிய இருந்தவனும் ஆண்சிங்கத்தைப் போன்றவனு மாகிய சுந்தரமூர்த்தியும், ''உங்களுடைய வரவு நல்வரவே; நீங்கள் இங்கே வந்திருப்பது நாங்கள் செய்த தவத்தின் பயனே'' என்று கூறிவிட்டு, ''இங்கே நீங்கள் வந்துநின்றதைப் பற்றிச் சொல்லவேண்டிய வார்த்தைகளைச் சொல்லுங்கள்'' என்று மீண்டும் கூறினார்கள்.' பாடல் வருமாறு:

**''என்றுரைசெய் அந்தணனை எண்ணில்மறை யோரும்**
**மன்றல்வினை மங்கல மடங்கலனை யானும்**
**'நன்றுமது நல்வரவு நங்கள்தவம் என்றே**
**நின்றதிவண் நீர்மொழிமின் நீர்மொழிவ' தென்றார்.''**

என்று-என. உரைசெய்—இவ்வாறு 'யான் கூறும் இந்த வார்த்தைகளைக் கேளுங்கள்.' என்ற வார்த்தைகளைக் கூறிய. உரை: ஒருமை பன்மை மயக்கம். அந்தணனை-

வேதியனை. எண்—கணக்கு. இல்-இல்லாத; கடைக்குறை. மறையோரும்—அந்தத் திருமணப் பந்தலில் அமர்ந்திருந்த அந்தணர்களும்; ஒருமை பன்மை மயக்கம். மன்றல் —திருமணமாகிய. வினை—சடங்கு என்னும். மங்கல —மங்கலமாகிய நிகழ்ச்சியைப் புரிய இருந்தவனும்; திணை மயக்கம். மடங்கல்—சிங்கத்தை. அனையானும்—போன்றவனும் ஆகிய சுந்தரமூர்த்தியும். உமது—உங்களுடைய. நல்வரவு—நல்ல வருகை. நன்று-நல்லது. நங்கள்-நீங்கள் இங்கே இப்பொழுது வந்தது நாங்கள் செய்த. தவம்—தவத்தின் பயன்; ஆகுபெயர். என்று—என்று கூறி. ஏ:அசைநிலை. இவண்—இந்தத் திருமணப் பந்தலில். நின்றது—வந்து நின்றதற்குரிய காரணமாக. நீர்—நீங்கள். மொழிவ—சொல்ல வேண்டிய வார்த்தைகளை. நீர்—தாங்கள். மொழிமின்—கூறுங்கள். என்றார்—என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

ஆடவனுக்குச் சிங்கம் உவமை: ''மடங்கல்போல் மொய்ம்பினான்.'', ''மாக மடங்கலும்—நாண நடந்தான்.''. ''அரிதிற் பெற்ற நின் சிங்கவேறு.'', ''சிங்கவேறனைய வீரன்.'', ''சிங்கவே றெனத்திறற் சித்தர்.''. ''சிங்கமெனத் தமியன் திரிவானை.'', ''சிங்கவேறனைய வீரச் செய்தவச் செல்வன் என்றான்.'', ''மடங்கலின் எழுந்து.'', ''மடங்கலரி யேறும் மதமால் களிறும் நாண நடந்து.'', ''சிங்கவே றனையான் சொன்ன வாசகம்.'', ''சிங்கவேறு கடல்போல் முழங்கி.'' ''அதிகாயனாம் சிங்கம்.'',''ஆளியன்ன துப்பின் வீரர்.'', ''சிங்கவேறனைய வீரர் யாவரும்.'', ''சிங்கம் அன்னபோர்த் தலைவர்.'', ''சிங்கமும் நடுக்குறத் திருவின் நாயகன் சங்கம் ஒன்றொலித்தது.'', ''சிங்க மன்னவர் ஆக்கை.'', ''சிங்கவேறன்ன இலக்குவன்.'', ''சிங்கவே றிடியுண்டென நெடுநிலம் சேர்ந்தான்.'', ''சிங்கவே றனைய வீரன் செறிகழற் பாதம் சேர்ந்தான்.'', ''ஆளி போன்றுளன் எதிர்ந்தபோது.'',

''சிங்கவே றன்ன சீற்றத்தான்.'', ''சிங்கவே றனையான் செய்ய திருமுடி ஆட்டும் நன்னீர்.'' (கையடைப் படலம், 3, கார்முகப் படலம், 32, தைலமாட்டுப் படலம், 25, கங்கைப் படலம், 43, மாரீசன் வதைப் படலம், 9, அயோமுகிப் படலம், 39, கிட்கிந்தைப் படலம், 10, பிலம் நீங்கு படலம், 68, ஊர் தேடு படலம்,65, விபீடணன் அடைக்கலப் படலம், 125, நாகபாசப் படலம், 62, 76, 96, 176, படைத்தலைவர் வதைப் படலம், 51, பிரமாத்திரப் படலம், 47, 69, 78, 176, மாயா சீதைப் படலம், 56, வேலேற்ற படலம், 17, 33, திருமுடி சூட்டுப் படலம், 35) என்று **கம்பராமாயணத்**திலும், ''சினச்சிங்கம் எனஎழுந்து.'', ''ஆளியனார்தம்ஆருயிர் கொள்வார்.'', (இலவணன் வதைப் படலம் 104, அசுவமேத யாகப் படலம், 37) என்று **உத்தர காண்டத்**திலும், ''அரிமா னன்னதன் பெருமான்.'' ''அரிமான் அன்ன நம் பெருமாற் சேர'', ''வரையே றரிமாப் போல மற்றதன் கரையேறினனால்'', ''அரிமா வளைந்த நரிமாப் போல.'', ''வலைநாண் இமிழ்ப்புண் வயமாப் போலக் காட்சிக் கின்னாஆற்றல னாகி.'',''அரிமான் அன்னோர்க்கு.'', ''மன்னுயிர் காவலன் ஆட்டிடைப் பாயும் அரிமாப் போல.'', ''அரிமான் அன்ன அஞ்சுவரு துப்பின் எம்பெருமான்.'' (**பெருங்கதை,** 1.42:11, 44:134, 51;90-91, 56:25, 54-5, 122, 2.9:159-60, 17:170:71),''மலைபக இடிக்கும் சிங்க மடங்கலின் முழங்கி.'', ''சேட்டிளம் சிங்கம் அன்னாய்.'', ''ஏற்றை அரிமான் இடிபோல இயம்பினானே.'', ''சிங்க ஏற்றை சீவக சாமி என்பான்.'', ''சிங்கவே றெள்ளிச் சூழ்ந்த சிறுநரிக் குழாத்திற்சூழ்ந்தார்'', ''சிங்கவேறு தன்துணைப் பெட்டையோடு தான்புறப் பட்டதொத்தான்.'', ''முழையுறை சிங்கம் பொங்கி முழங்கிமேற் பாய்ந்து.'',''சிங்கம் போலக் கடல்மருள் சேனை.'', (**சீவக சிந்தாமணி**, 392, 404, 432, 665, 1083-84, 1928, 2256), ''மடங்கலிற் சினைஇய மடங்கா உள்ளத் தடங்காத்

தானை வேந்தர்'' (**புறநானூறு**, 71:1-2) என்று வருவனவற்றைக் காண்க.

பிறகு வரும் 35-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பின்னிய சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் பெற்றவனாகிய கிருபாபுரீசனும், திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவரும் பெருமையையும் தகுதியையும் பெற்றவரும் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனாரைப் பார்த்து, ''என்னிடத்திலும் உன்னிடத்திலும் முன்பிருந்தே உள்ள சம்மதத்தால் நான் முன்னால் பெற்றதாகிய ஒரு பெரிய வழக்கைத் தீர்த்துக்கொண்ட பிறகே உன்னுடைய திருமணத்தை நீ செய்துகொள்ள முயல்வாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**''பிஞ்ஞகனும் நாவலர் பெருந்தகையை நோக்கி**
**'என்னிடையும் நின்னிடையும் நின்றஇசை வால்யான்**
**முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே**
**நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி' என்ன.''**

இந்தப் பாடல் குளகம். பிஞ்ஞகனும்—பின்னிய சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் பெற்ற கிருபாபுரீசனும். நாவலர்—திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவரும். பெரும்—பெருமையையும். தகை—தகுதியையும் பெற்றவரும் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனாரை. நோக்கி—பார்த்து. என்னிடையும்—எனக்கு நடுவிலும். நின்னிடையும்—உனக்கு நடுவிலும். நின்ற-தீராமல் நின்றுள்ள. இசைவால்-சம்மதத்தால். யான்—நான். முன்—முன் காலத்தில். உடையது-பெற்றதாகிய. ஓர்-ஒரு. பெரு வழக்கினை-பெரிய வழக்கை. முடித்தே—தீர்த்துக்கொண்ட பிறகே. நின்னுடைய—உன்னுடைய. வேள்வியினை—திருமணத்தை. நீ முயல்தி-நீ செய்துகொள்ள முயல்வாயாக. என்ன-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

பின்பு உள்ள 36-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'இவ்வாறு தன்னுடைய நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் படைத்த கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, அந்தத் திருமணப் பந்தலில் நின்றுகொண்டிருந்த தனக்கு ஒப்பார் யாரும் இல்லாதவனாகிய சுந்தரமூர்த்தி, "அவ்வாறு நமக்கு நடுவில் இருப்பதாகிய ஒரு வழக்கை என்னிடத்தில் நீ பெற்றது இருக்குமானால் அதைத் தீர்த்துவிட்டால் அல்லாமல் நான் என்னுடைய திருமணத்தைப் புரிந்து கொள்ள மாட்டேன்; அந்த வழக்கு முழுவதையும் இந்த இடத்தில் நீ கூறுவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்யவே, தனக்கு ஓர் எல்லையும் முடிவும் இல்லாதவனாகிய கிருபாபுரீசன்.' பாடல் வருமாறு:

**"நெற்றிவிழி யான்மொழிய நின்றநிகர் இல்லான்**
**'உற்றதொர் வழக்கெனிடை நீஉடைய துண்டேல்**
**மற்றது முடித்தலதி யான்வதுவை செய்யேன்;**
**முற்றஇது சொல்லு' கென எல்லைமுடி வில்லான்."**

இந்தப் பாடலும் குளகம். நெற்றி—தன்னுடைய நெற்றியில். விழியான்—ஒற்றைக் கண்ணைப் பெற்றவனாகிய கிருபாபுரீசன். மொழிய—இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்தவுடன். நின்ற—திருமணப் பந்தலில் நின்று கொண்டிருந்த. நிகர்—தனக்கு வேறு யாரும் சமானம். இல்லான்—இல்லாதவனாகிய சுந்தரமூர்த்தி. உற்றது—அவ்வாறு உண்டானதாகிய. ஓர்—ஒரு. வழக்கு—வழக்கை. நீ உடையது—நீ பெற்றது. உண்டேல்—இருக்குமானால், மற்று:அசை நிலை. அது—அந்த வழக்கை. முடித்தலது—தீர்த்துக்கொண்டால் அல்லாமல். இ:குற்றியலிகரம். யான்-நான். வதுவை—என்னுடைய திருமணத்தை. செய்யேன்-புரிந்துகொள்ள மாட்டேன். முற்ற—அது முழுவதையும். இது—இந்த இடத்தில். சொல்லுக—கூறுவாயாக. என—என்று சுந்தரமூர்த்தி திருவாய் மலர்ந்தருளிச் செய்ய; இடைக் குறை. சொல்லுகென: தொகுத்தல் விகாரம்.

எல்லை-தனக்கு ஓர் எல்லையும்; வரம்பும். முடிவு-முடிவும். இல்லான்—இல்லாதவனாகிய கிருபாபுரீசன்.

முடிவு இல்லான்: ''கேடும்மிலர்.'', ''துஞ்சுநாள் துறந்து.'' ''பராய்த்துறை அந்தம் இல்ல அடிகளே.'', ''அந்தம் இல்ல அளவில்ல அனேகதங் காவதம் எந்தை.'', ''ஆதி அந்தம் இலா அடிகள்.'', ''மயேந்திரப் பள்ளியுள் அந்தமில் அழகனை.'', ''அந்தமும் அளவும் அறியாததோர் சந்தமால் அவர் மேவிய சாந்தமே.''என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''அந்தமோ டளவிலாத அடிகள்.'',''அந்தமில் அடிகள் போலும் ஆலங்காட் டடிக ளாரே.'', ''அந்தமில் சோதி.'', ''அந்தம் இல்லா அணிமறைக் காடரோ.'', ''பிறப்போ டிறப்பென்றும் இல்லாதான்.'' ''மூவாய் பிறவாய் இறவாய் போற்றி.'', ''பிறவாதும் இறவாதும் பெருகினானை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மூப்பதும் இல்லை பிறப்பதும் இல்லை இறப்பதில்லல.'', ''பிறவாய் இறவாய் பேணாய் மூவாய்'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும்,, ''அந்தமும் ஆதியும் அகன்றோன்.'', ''அழிவிலா ஆனந்த வாரி போற்றி.'', ''அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி.'', ''ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியை.'', ''தான்அந்தம் இல்லான்,'', ''ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே.'', ''அந்தமில் அமுதே.'', ''சாதல் சாதல் பொல்லாமை அற்ற தனிச்சரண்.'', ''யாதும் ஈறில்லாச் சித்தனே.'' என்று மாணிக்கவாசகரும், ''இறப்பில் கடியார் நறுஞ்சோலைக் காளத்தி ஆள்வார்'' என்று நக்கீர தேவ நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 37-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தேவலோகத்தில் வாழும் தேவர்களையும், திருமாலையும், அயனையும் ஆகிய இவர்கள் முதலிய செல்வத்தில் மிக்கவர்களாகிய எல்லோரையும் வேறு வேறாகத் தன்னுடைய அடிமைகளாகப் பெற்ற அடியேங்களுடைய தலைவ

னாகிய கிருபாபுரீசன், ''நான் கூறுவதை வேதியர்களே கேளுங்கள்; இந்தத் திருநாவலூர் என்னும் நகரத்தில் பிறந்த ஊரனாகிய சுந்தரமூர்த்தி என்னுடைய அடியவன்; இது தான் யான் கூறுவது'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**''ஆவதிது கேண்மின்மறை யோர், என் அடியான்இந்**
**நாவல்நகர் ஊரன்; இது நான்மொழிவ தென்றான்,**
**தேவரையும் மாலயன் முதல்திருவின் மிக்கோர்**
**யாவரையும் வேறடிமை யாஉடைய எம்மான்.''**

ஆவது—நான் கூறவருவதாகிய: இது-இந்த வார்த்தையை மறையோர்—இந்தத் திருமணப் பந்தலில் அமர்ந்திருக்கும் வேதியர்களே; ஒருமை பன்மை மயக்கம். கேண்மின்—கேளுங்கள். என்—என்னுடைய. அடியான்—அடிமையாக உள்ளவன். இ—இந்த. ந்:சந்தி. நாவல்—திருநாவலூராகிய. நகர்—பெரிய ஊரில் பிறந்த. ஊரன்—ஆரூரனாகிய சுந்தரமூர்த்தி. இது—இதுதான். நான்—யான். மொழிவது—கூறும் வார்த்தை தேவரையும்—தேவலோகத்தில் வாழும் தேவர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மால்—திருமாலையும். அயன்—அயனாகிய பிரமதேவனையும், முதல்-இவர்கள் முதலிய. திருவின்-செல்வத்தில். மிக்கோர்-மிகுதியாகப் படைத்து விளங்குபவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். யாவரையும்-எல்லோரையும். வேறு-வேறு வேறாக. அடிமையா-தனக்கு அடிமைகளாக; ஒருமை பன்மை மயக்கம். உடைய-பெற்ற. எம்மான்-அடியேங்களுடைய தலைவனாகிய கிருபாபுரீசன்; அடியேங்கள் என்றது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துப் பாடியது. என்றான்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

தேவரையும் மாலயன்...யாவரையும் அடிமையாக உடையவன்: ''திருமால் அடிவீழ.'',''வண்ணநன் மலருறை

மறையவனும் கண்ணனும் கழல்தொழ.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 38-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'என்று இவ்வாறு இறைவனாகிய கிருபாபுரீசன் திரு வாய் மலர்ந்தருளிச் செய்தான்; அவன் கூறிய வார்த்தை களைக் கேட்டவர்களாக எல்லா இடங்களிலும் நின்று கொண்டிருந்தவர்களும் அமர்ந்திருந்தவர்களும்''இந்த அந்த ணன் என்ன எண்ணினானோ?'' என்று கூறிக்கொண்டே எழுந்துபோய் விட்டார்கள்; அவர்கள் கோபத்தைக் கொண் டார்கள்; சிரித்தார்கள்; திருநாவலூரில் பிறந்தவனாகிய சுந்தரமூர்த்தி, ''இந்த வேதியன் கூறும் வார்த்தைகள் மிக நன்றாக இருக்கின்றன!'' என்று கூறி' அந்த அந்தணனை எதிரே பார்த்துச் சிரித்தான்.' பாடல் வருமாறு:

**''என்றான் இறையோன் அதுகேட்டவர் எம்மருங்கும்**
**நின்றார் இருந்தார், 'இவன்என் நினைந்தான்கொல்?' என்று**
**சென்றார், வெகுண்டார், சிரித்தார்; திருநாவலூரான்**
**'நன்றால் மறையோன்மொழி' என்றெதிர் நோக்கி நக்கான்.''**

இறையோன்—இறைவனாகிய கிருபாபுரீசன். என்றான்- இந்தச் சுந்தரமூர்த்தி என்னுடைய அடிமை என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான். அது—அந்த அந்தணன் கூறிய வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்டவர்- கேட்டவர்களாக; ஒருமை பன்மை மயக்கம். எம்மருங்கும்— எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நின்றார்— நின்றுகொண்டிருந்தவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். இருந்தார் — அமர்ந்துகொண்டிருந்தவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். இவன்—இந்த முதிய அந்தணன். என்— என்ன. நினைத்தான்—எண்ணினான். கொல். அசைநிலை என்று—என்று கூறிக்கொண்டே. சென்றார் — அந்தத்

திருமணப்பந்தலிலிருந்து எழுந்து போய் விட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெகுண்டார்—போகும்பொழுது அவர்கள் கோபத்தை அடைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிரித்தார்—பிறகு சிரித்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். திருநாவலூரான்—திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தரமூர்த்தி. மறையோன்-இந்த அந்தணன். மொழி—கூறிய வார்த்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். நன்று நன்றாக உள்ளன, ஒருமை பன்மை மயக்கம் 'நன்றாக இல்லை' என்பது அவனுடைய எண்ணம்; ஆல். அசைநிலை. என்று—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து. எதிர்—அந்த அந்தணனை அவனுடைய எதிரில். நோக்கி—பார்த்து. நக்கான்—சிரித்தான்.

பிறகு வரும் 39-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'எல்லாத் தேவர்களுக்கும் மேலாகிய தேவனாகிய கிருபாபுரீசன் அவ்வாறு சிரித்த சுந்தரமூர்த்தியினுடைய முகத்தைப் பார்த்து நடுக்கத்தை அடைந்து ஒடுங்கிக்கொண்டு தன்னுடைய தோளின்மேல் போட்டுக்கொண்டிருந்த உத்தரீயமாகிய மெல்லிய ஆடையைத் தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டு சுந்தரமூர்த்திக்கு முன்னால் சென்று, "அந்தப் பழைய காலத்தில் உன்னுடைய தந்தையினுடைய தந்தையாகிய பாட்டன் எனக்கு எழுதிஅளித்த அடிமை ஓலை இது; நான் கூறிய இந்த அடிமை வேலையைக் கேட்டு இன்றைக்கு நீ நகைத்தது ஏன் அடா?" என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

**"நக்கான் முகம்நோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்**
**மிக்கான் மிசையுத் தரியத்துகில் தாங்கி மேற்சென்**
**'றக்காலம் உன்தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்;**
**இக்காரி யத்தைநீ இன்று சிரித்ததென் ஏட!' என்ன."**

இந்தப் பாடல் குளகம். யார்க்கும்—எல்லாத் தேவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மிக்கான்—மேலாக

விளங்கும் தேவனாகிய கிருபாபுரீசன். நக்கான்-அவ்வாறு சிரித்தவனாகிய சுந்தரமூர்த்தியினுடைய. முகம்-திருமுகத்தை. நோக்கி—பார்த்து. நடுங்கி—நடுக்கத்தை அடைந்து. நுடங்கி—ஒடுங்கிக்கொண்டு. மிசை—தன்னுடைய தோளின்மேல் போட்டுக்கொண்டிருந்த. உத்தரிய—அங்கவஸ்திரமாகிய. த்:சந்தி. துகில்—மெல்லிய ஆடையை. தாங்கி—தன்னுடைய கையில் எடுத்துக்கொண்டு. மேல்—சுந்தரமூர்த்திக்கு முன்னால். சென்று—போய். அக்காலம்—அந்தப் பழைய காலத்தில்; அ:பண்டறி சுட்டு. உன்—உன்னுடைய. தந்தை தன்—தந்தைக்கு; தன்: அசைநிலை. தந்தை—தந்தையாகிய பாட்டன். ஆள்—எனக்கு எழுதித்தந்த அடிமை. ஓலைஈது-இது ஓலை. ஆல்:அசைநிலை. இக்காரியத்தை-இந்த அடிமை வேலையைக் கேட்டு. நீ இன்று-நீ இன்றைக்கு. சிரித்தது-நகைத்தது. என்—ஏன், ஏட-அடா. என்ன-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

யார்க்கும் மிக்கான்: ''இமையோர்கள் எங்கள் உச்சி எம்இறைவன் என்றடியே இறைஞ்ச.'', ''தேவர் தேவர் திரிசூலத்தர்.'', ''விண்ணோர் பெருமானே.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''தேவர்கள் தேவர் போலும்.'', ''விண்ணினார் விண்ணின் மிக்கர்.'', ''தேவர்கள்தம் கோனை.'', விண்ணுலகின் மேலார்கள் மேலான்.''' ''விணோர் பெருமானை.'', ''வானவன்காண் வானவர்க்கும் மேலா ளான்காண்'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''விண்ணாளும் தேவர்க்கு மேலாய வேதியனை.'', ''விண்ணோர் முழுமுதல்.'', ''வானவன் மாலயன் மற்றுமுள தேவர்கட்கும் கோன்.'', ''எம்பெருமான் தேவர்பிரான்.'', ''உம்பர்கட் கரசே.'', ''தேவ தேவன்மெய்ச் சேவகன்.'', ''யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 40-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிறிதளவும் குற்றம் இல்லாத பரம்பரையில் திருவவதாரம் செய்தருளிய சுந்தரமூர்த்தி நாயனார் அந்த அந்தணனைப் பார்த்து, நட்பு முன்னால் அமைந்திருந்த தம்முடைய திருவுள்ளத்தில் உண்டான நெகிழ்ச்சியினால் தாம் சிரித்த சிரிப்பை விட்டு விட்டு, ''குற்றம் இல்லாத வேதியர்கள் வேறு ஒரு வேதியருக்கு அடிமையாக ஆவதை நீ சொல்ல இன்றுதான் கேட்டோம். அந்தணனே, நீ பித்துப் பிடித்தவனோ?'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**''மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி**
**நேசம்முன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் சிரிப்பு நீங்கி**
**'ஆசில்அந் தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்**
**பேசஇன் றுன்னைக் கேட்டோம்; பித்தனோ மறையோன்'**
**என்றார்.''**

மாசு—சிறிதளவும் குற்றம். இலா—இல்லாத; இடைக்குறை. மரபில்—சிவாசாரியர்களுடைய பரம்பரையில். வந்த—திருவவதாரம் செய்தருளிய. வள்ளல்—வள்ளலாகிய சுந்தரமூர்த்தி நாயனார். வேதியனை—அந்த முதிய அந்தணனை. நோக்கி-பார்த்து. நேசம் முன்—இப்போது பிறந்ததற்கு முன்னால் இருந்த நட்பு. கிடந்த—அமைந்திருந்த. சிந்தை—தம்முடைய திருவுள்ளத்தில் உண்டான. நெகிழ்ச்சியால்—உருக்கத்தால். சிரிப்பு—தாம் நகைத்த சிரிப்பை. நீங்கி—விட்டுவிட்டு. ஆசு—குற்றம். இல்-இல்லாத; கடைக்குறை. அந்தணர்கள்—வேதியர்கள். வேறு ஓர்—வேறு ஒரு. அந்தணர்க்கு—வேதியருக்கு. அடிமை ஆதல்-அடிமையாக ஆவதை. பேச இன்று-இன்றைக்கு நீ கூறியதனால்தான். உன்னை-உன்னுடைய வார்த்தைகளை; ஆகுபெயர். கேட்டோம்-நானும் இங்கே அமர்ந்திருக்கும் வேதியர்களும் கேள்விப்பட்டோம். மறையோன்-அந்தணனே. பித்தனோ-நீ

பித்துப் பிடித்தவனோ. என்றார்-என்று திருவாய்மலர்ந் தருளிச் செய்தார்.

வள்ளல்: ''வருமணக் கோலத் தெங்கள் வள்ள லார்'' (27) என்று முன்பு வந்ததையும், சுந்தரமூர்த்தி நாயனாரை வள்ளல் என்று குறிப்பிடுவதைக் காட்டும் இடங்களையும் கண்டு உணர்க.

அடுத்து வரும் 41-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'''நான் பித்துப் பிடித்தவனாகவும் இருக்கட்டும்; மேலும் பேய் பிடித்தவன் ஆகவும் இருக்கட்டும்; நீ என்னைப் பார்த்து இன்றைக்கு எவ்வளவு அடாத வார்த்தைகளைக் கூறினாலும் அந்த வார்த்தைகளால் நான் வெட்கத்தை அடைய மாட்டேன்; அவ்வளவு நீ பேசியதற்குக் காரணம் என்னை நீ சிறிதளவும் தெரிந்து கொள்ளவில்லை; அவ்வா றானால் நீ இங்கே நின்றுகொண்டு பரிகாசமான வார்த்தை களைக் கூற வேண்டாம்; நீ எனக்கு அடிமையாக இருந்து நான் கட்டளையிட்ட வேலைகளைப் புரியவேண்டும்'' என்று அந்தக் கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய் தார்.' பாடல் வருமாறு:

**'' 'பித்தனும் ஆகப் பின்னும் பேயனும் ஆக நீஇன்**
**றெத்தனை தீங்கு சொன்னால் யாதும்மற் றவற்றால்**
**நாணேன்;**
**அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை யாகில் நின்று**
**வித்தக பேச வேண்டாம்; பணிசெய வேண்டும்.'**
**என்றார்.**

பித்தனும்—நான் பித்துக் கொண்டவனாகவும். ஆக—இருக்கட்டும். ப்:சந்தி. பின்னும்—மேலும். பேயனும்—பேய் பிடித்தவனும். ஆக—ஆக இருக்கட்டும். நீ இன்று—நீ இன்றைக்கு. எத்தனை—எவ்வளவு. தீங்கு—தகாத தீய வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். சொன்னால்—கூறினாலும். யாதும்—ஏதும். மற்று: அசை நிலை. அவற் றால்—அந்த வார்த்தைகளால். நாணேன்—நான் வெ

கத்தை அடையமாட்டேன். அத்தனைக்கு—அந்த அளவு என்னை நீ பரிகாசம் செய்து பேசியதற்கு. என்னை—இங்கே வந்த என்னை. ஒன்றும்—ஓரளவும். அறிந்திலை—நீ தெரிந்துகொள்ளவில்லை. ஆகில்—ஆனால். நின்று—இங்கே நின்று கொண்டு. வித்தகம்—பரிகாச வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். பேச வேண்டாம்—நீ கூற வேண்டாம். பணி—எனக்கு அடிமையாக இருந்துகொண்டு யான் இட்ட வேலைகளை; ஒருமை பன்மை மயக்கம். செய—புரிய; இடைக்குறை. வேண்டும் என்றார்-வேண்டும் என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 42-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' "யான் பார்ப்பதாகிய இவருடைய ஒரு கோலத்தால் என்னுடைய உள்ளம் இவரிடம் விருப்பத்தை உண்டாக்கி உருக்கத்தை அடையும்; இவருடைய திருவாய் பேசிக் கொண்டு வரும் ஒப்பற்ற பைத்தியக்காரத்தனமான வார்த்தைகள் சினத்தையும் அதனோடே உண்டாக்கும்; இவர் ஓர் அடிமை ஓலை இருக்கிறது என்று கூறும் அந்த வார்த்தைகளினுடைய உண்மையை நான் தெரிந்து கொள்வேன்." என்று எண்ணித் தொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார்; துணைவராக வந்த கிருபாபுரீசரிடம், "எங்கே, அந்த அடிமை ஓலையை எனக்குக் காட்டுவாயாக." என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**" 'கண்டதோர் வடிவால் உள்ளம் காதல்செய் துருகா நிற்கும்**
**கொண்டதோர் பித்த வார்த்தை கோபமும் உடனே ஆக்கும்;**
**உண்டொராள் ஓலை என்னும் அதன்உண்மை அறிவேன் என்று**
**தொண்டனார், 'ஓலை காட்டு' கென்றனர் துணைவ னாரை."**

கண்டது—நான் பார்த்ததாகிய. ஓர்—இவருடைய ஒப்பற்ற. வடிவால்—கோலத்தால். உள்ளம்—என்னுடைய உள்ளம். காதல்—இவரிடம் விருப்பத்தை. செய்து—உண்

டாக்கி. உருகா நிற்கும்—உருக்கத்தை அடைந்து நிற்கும். கொண்டது—இவர் தம்முடைய திருவாயால் பேசிக்கொண்டு வரும். ஓர்—ஒப்பற்ற. பித்த—பைத்தியக்காரத்தனமான. வார்த்தை—வார்த்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். கோபமும்—இவரிடம் எனக்குச் சினத்தையும். உடனே—அந்த விருப்பத்தோடே. ஆக்கும்—உண்டாக்கும். ஓர் ஆள்—ஓர் அடிமை. ஓலை உண்டு—ஓலை என்னிடம் இருக்கிறது. என்னும்—என்று இவர் கூறும். அதன்—அந்த வார்த்தைகளில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். உண்மை-உண்மையை. அறிவேன்—நான் தெரிந்து கொள்வேன். என்று—என எண்ணி. தொண்டனார்—திருநாவலூர் அரனுடைய திருத்தொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார். துணைவனாரை—துணைவராக எழுந்தருளிய கிருபாபுரீசரிடம்; உருபு மயக்கம். ஓலை—அந்த அடிமை ஓலையை. காட்டுக-என்னிடம் காண்பிப்பாயாக. என்றனர்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 43-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த அடிமை ஓலையைக் காட்டுவாயாக என்று நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, ''நீ அந்த அடிமை ஓலையைப் பார்ப்பதற்குத் தகுதியைப் பெற்றிருக்கிறாயோ? நான் அந்த ஓலையை நியாய சபையில் உள்ள சான்றோர்களுக்கு முன்னால் காண்பிக்க, நீ எனக்கு அடிமையாக யான் இட்ட வேலைகளைப் புரியக் கடமைப்பட்டிருக்கிறாய்'' என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த சமயத்தில் நாவலாரூரர் ஆகிய அந்த நாயனார் கோபத்தை அடைந்து வேகமாகப் போய்த் திருமாலும், அயனாகிய பிரமதேவனும் தொடர முடியாதவனாகிய கிருபாபுரீசனை வலிமையாகச் சென்று அவனுக்குப் பின்னால் தொடர்ந்து எழுந்தருளலானார்.' பாடல் வருமாறு:

**" 'ஓலைகாட்'டென்று நம்பி உரைக்க, 'நீ ஓலை காணற்**
**பாலையோ? அவைமுன் காட்டப் பணிசெயற் பாலை'என்ற**
**வேலையில் நாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று**
**மாலயன் தொடரா தானை வலிந்துபின் தொடர லுற்றார்."**

ஓலை—அந்த அடிமை ஓலையை. காட்டு—எனக்குக் காண்பிப் பாயாக. என்று-என. நம்பி—நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திநாயனார். உரைக்க-திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. நீ ஓலை—நீ அந்த அடிமை ஓலையை. காணற்பாலையோ—பார்ப்பதற்குத் தகுதியை உடையாயோ. அவை—திருவெண்ணெய் நல்லூரில் உள்ள நியாய சபையில் அமர்ந்திருக்கும் அந்தணர்களுக்கு; இட ஆகு பெயர். முன்—முன்னால். காட்ட—யான் காண்பிக்க. ப்:சந்தி. பணி—யான் இடும் வேலைகளை; ஒருமை பன்மை மயக்கம். செயற்பாலை—புரிவதற்குக் கடமைப் பட்டிருக்கிறாய். என்ற—என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த. வேலையில்—சமயத்தில். நாவலூரர்—திருநாவலூரில் திருவவதாரம் புரிந்தருளிய அந்த நாயனார். வெகுண்டு—கோபத்தை அடைந்து. மேல்—கிருபாபுரீசரிடம். விரைந்து—வேகமாக. சென்று—போயருளி. மால்—திருமாலும். அயன்—அயனாகிய பிரமதேவனும். தொடராதானை—பன்றி உருவத்தை எடுத்துக்கொண்டும் அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்துக்கொண்டும் நிலத்தைத் தோண்டியும், ஆகாயத்தில் பறந்தும் திருவடிகளையும் திருமுடியையும் தேடிப் பார்த்தும் தொடர்வதற்கு முடியாத கிருபாபுரீசனை. இந்தக் கருத்தைப் புலப்படுத்தும் இடங்களை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. வலிந்து—வலுக்கட்டாயமாக. பின்—அவனுடைய பின்னால். தொடரலுற்றார்—தொடர்ந்து எழுந்தருளலானார்.

பின்பு வரும் 44-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்த அடிமை ஓலையைக் கிருபாபுரீசரிடமிருந்து பறித்துக்கொள்ளும்பொருட்டு வேகமாகச் சுந்தரமூர்த்தி நாயனார் போன சமயத்தில், அந்த வேதியனாக

வந்த கிருபாபுரீசர் திருமணப் பந்தலுக்குள் ஓடிப் போக, வேகமாக அவருடைய பின்னால் தொடர்ந்து சென்று நம்பி யாரூரராகிய அந்த நாயனார் செந்தாமரை மலரைப்போன்ற நிறத்தைப் பெற்றவராகிய கிருபாபுரீசரை அடைந்தார்; அந்த நாயனாரை அல்லாமல் மூன்று புரங்களை அழித்த அம்பையும், பொன்நிறத்தைக் கொண்ட மேரு மலையாகிய வில்லையும் பிடித்தவராகிய கிருபாபுரீசரைத் தொடர்ந்து சென்று எட்டிப் பிடிக்க வல்லமையைப் பெற்றவர் யார்?' பாடல் வருமாறு:

**''ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்**
**காவணத் திடையே ஓடக் கடிதுபின் தொடர்ந்த நம்பி**
**பூவணத் தவரை உற்றார்; அவரலால் புரங்கள் செற்ற**
**ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார்.''**

ஆவணம்—அந்த அடிமை ஓலையை. பறிக்க—கிருபா புரீசரிடமிருந்து பறித்துக்கொள்ளும் பொருட்டுச் சுந்தர மூர்த்தி நாயனார். ச்:சந்தி. சென்ற—அவரைத் தொடர்ந்து பின்பற்றிப் போன. அளவினில்—சமயத்தில். அந்தணாளன்—வேதியனுடைய கோலத்தோடு எழுந்தருளி வந்த கிருபாபுரீசன். காவணத்து—திருமணப் பந்தலின். இடை—நடுவே. ஏ:சந்தி. ஓட—ஓடிப்போக. க்:சந்தி. கடிது—வேகமாக. பின்—பின்னால். தொடர்ந்த—தொடர்ந்து அவரைப் பின்பற்றி எழுந்தருளிய. நம்பி—நம்பியாரூரராகிய அந்த நாயனார். பூ—செந்தாமரை மலரைப் போன்ற. வணத்தவரை—நிறத்தைப் பெற்ற கிருபாபுரீசரை. உற்றார்-அடைந்தார். அவர்-அந்த நாயனார். அலால்-அல்லாமல்; இடைக்குறை. புரங்கள்—தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை. செற்ற—அழித்த. ஏ—திருமாலாகிய அம்பையும். வண—பொன் நிறத்தைக் கொண்ட. ச்:சந்தி. சிலையினாரை—மேரு மலையாகிய வில்லை ஏந்திய கிருபாபுரீசரை. தொடர்ந்து—பின்பற்றிச்

சென்று. எட்ட—எட்டிப் பிடிக்க. வல்லார்—வல்லமையைப் பெற்றவர், யார்—யார் இருக்கிறார்.

செந்தாமரை மலரைப் போன்ற நிறத்தைப் பெற்றவர்: ''பூந்தாமரை மேனி.'', ''பூவணத்தவன்.'', ''பூவின் நிறத்தானுமாம்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''செந்தாமரைக் காடனைய மேனித் தனிச் சுடரே.'', ''செங்கமலப் பைம்போதால் ... எங்கோனும் போன்று.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

மேருமலையை வில்லாக ஏந்தியவன்: ''பெரிய மேருவரை சிலையாமலை வுற்றார் எயில்மூன்றும்.'', ''விலங்கலொன்று வெஞ்சிலையாக் கொண்டு விறலரக்கர் குலங்கள் வாழும் ஊர்எரித்த கொள்கை.'', ''இரும் பொன்மலை வில்லா எரி அம்பா நாணில் திரிந்த புரம் மூன்றும் செற்றான்.'', ''மால்வரையே வில்லாக எரி கணையால் முப்புரங்கள் எய்துகந்த எம்பெருமான்.'', ''மாமேரு வில்லா நாண்அரவா அனலெரி அம்பாப் பொருது மூவெயில் செற்றவன்.'', ''விலங்கலே சிலை.'', ''விலங்கல் ஒன்று சிலையா மதில்மூன்றுடன் வீட்டினான்.'', ''மருவலார் திரிபுரம் எரிய மால்வரை பருவிலாக் குனித்த பைஞ்ஞீலி மேவலான்.'', ''வில்மால் வரையா மதிலெய்து.'', ''வில் மலை நாண்அரவம் மிகு வெங்கனல் அம்பதனால் புன்மை செய் தானவர்தம் புரம்பொன்று வித்தான்.'', ''திரியும் புரம் மூன்றையும் செந்தழல் உண்ண எரியம் பெய்த குன்றவில்லி.'' என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், ''கல்லினார் புரம் மூன்றெய்த கடவுளை.'', ''கற்றுணை வில்லதாகக் கடியரண் செற்றார்.'', ''அயிலார் அம்பெரி மேரு வில்லாகவே எயிலாரும் பொடியாய் விழ எய்தவன்.'' என்று திருநாவுக்கரசுநாயனாரும், ''வன்னாகம் நாண்வரைவில் அங்கிகணை அரிபகழி தன் ஆகம் உறவாங்கிப் புரம்எரித்த தன்மையனை.'', ''புரிசை மூன்றையும் பொன்றக் குன்றவில் ஏந்தி.''

என்று சுந்தரமூர்த்தி நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க. ''நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம், பாணந்தான் மண்தின்ற பாணமே—தாணுவே, சீராரூர் மேவும் சிவனேவில் வாளிஎங்ஙன், நேரார் புரமெரித்தாய்-நீ.'' என்று வரும் தனிப்பாடலையும் காண்க.

பின்பு உள்ள 45-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வேதங்கள் ஆனவை முன் ஒரு காலத்தில் வாழ்த்திச் செந்தாமரைமலர்களைப் போன்ற திருவடிகளைப் பற்றிக் கொண்டு நின்ற இறைவனாகிய கிருபா புரீசனைப் பின் தொடர்ந்து சென்று சுந்தரமூர்த்திநாயனார் பிடித்துக் கொண்டு, எழுதப்பட்டிருக்கும் அடிமை ஓலையைத் தம் முடைய கைகளில் வாங்கிக் கொண்டு, ஒலிக்கின்ற வீரக் கழலைப் பூண்ட திருவடிகளைப் பெற்றவனும் பெருமையை உடையவரும் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனார், ''அடிமை யாகி வேதியர் பணிகளைப் புரிதல் என்ன நியாயம்?'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து அந்த ஓலையைக் கிழித்துப் போட்டு விட்டார்; முடிவே இல்லாதவனாகிய கிருபாபுரீசன் முறையிட்டருளினான்.' பாடல் வருமாறு:

**''மறைகள்ஆ யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற**
**இறைவனைத் தொடர்ந்து பற்றி எழுதும்ஆள் ஓலை வாங்கி**
**அறைகழல் அண்ணல், 'ஆளாய் அந்தணர் செய்தல் என்ன**
**முறை?' எனக் கீறி இட்டார்; முறையிட்டான் முடிவி லாதான்.''**

மறைகள்-வேதங்கள். ஆயின-ஆனவை. முன்-முன்பு ஒரு காலத்தில். போற்றி-வாழ்த்தி. மலர்-செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பதம்-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பற்றி-பிடித்துக் கொண்டு. நின்ற-நிலையாக நின்று விளங்கிய. இறைவனை-எங்கும் நிறைந்தவனாகிய கிருபாபுரீசனை.

த்:சந்தி. தொடர்ந்து-பின் தொடர்ந்து சென்று. ஆள்-அடிமை. ஓலை-ஓலையை. வாங்கி-தம்முடைய கைகளில் வாங்கிக்கொண்டு. அறை-ஒலிக்கும். கழல்-வீரக்கழலைப் பூண்ட திருவடிகளைப் பெற்ற; ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம். 'கழல்' இன்னதென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. அண்ணல்-பெருமையைப் பெற்றவராகிய சுந்தரமூர்த்தி நாயனார். ஆளாய்-அடிமையாகி. அந்தணர்-வேதியர். செய்தல்-பணிகளைப் புரிதல். என்ன முறை-என்ன நியாயம்.என்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து; இடைக்குறை. க்:சந்தி. கீறி-அந்த அடிமை ஓலையைக் கிழித்து. இட்டார்-போட்டுவிட்டார். முடிவு-அந்தம்; மரணம். இலாதான்-இல்லாதவனாகிய கிருபாபுரீசன்; இடைக்குறை. முறையிட்டான்—ஓலமிட்டருளினான்.

மறைகள் போற்ற நின்றவர்: "கழல் நாடொறும் பேணி ஏத்த மறையுடையான்.", "மறைவழி வழிபடு மறைவன்.", "சதுரம் மறைதான் துதி செய்து வணங்கும் மைந்தா.", "மறை வழிபட்ட...செல்வா.", "வேதம் பல..வியந்தடி போற்ற.", "மந்திர மறையவை... வழிபட நின்ற எம்இறை.", "முன்னை நான்மறையவை முறைமுறை குறையொடும் தன்னதாள் தொழுதெழ நின்றவன்.", என்று திருஞான சம்பந்த மூர்த்திநாயனாரும், "வேதங்கள் ஐயா எனவோங்கி.", என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

எங்கும் நிறைந்தவன்: "நிலனொடு வானும் நீரொடு தீயும் வாயு மாகி ஓரைந்து புலனொடு.", "பல்கதிரோன் மதிபார் எற்றுநீர் தீக்காலும் மேலைவிண் இயமானனோடு மற்று மலதோர் பல்லுயிராய்.", "நீருளான் தீயுளான் அந்தரத் துள்ளான்.", "மறையவன் உலகவன் மாயமவன் பிறையவன் புனலவன் அனலுமவன் இறையவன்.", "மண்புனல் அனலொடு மாருதமும் விண்புனை மரு-

விய விகிர்தன்.'', ''மறையவன் உலகவன் மதியவன் மதிபுல்கு துறையவன்.'', ''மறையவன் மதியவன் மலையவன் நிலையவன் நிறையவன்...இறையவன்.'', ''புவிமுதல் ஐம் பூதமாய் புலனைந்தாய் நிலனைந்தாய்க் கரணம் நான்காய் அவையவைசேர் பயனுருவாய்.'', ''எங்கும் ஆகி நின்றானும்.'', ''மண்ணொடு நீர்அனல் காலோடாகாயம் மதிஇரவி எண்ணில் வரும் இயமானன் இகபரமும் எண்டி சையும் பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையு மாம் பேரர்ளன்.'', ''மண்ணர் நீரர்வண் காற்றினர் ஆற்றலாம் எரியுரு.'', ''மண்ணர் நீரர் அழலார் மலிகாவி னார் விண்ணவர்.'', ''விளிதரு நீரும் மண்ணும் விசும் போடனல் காலு மாகி அனிதரு பேரருளான்.'', ''வானமர் தீவளி நீர்நிலனாய் வழங்கும் பழியாரும்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''நீரானே தீயானே நெதியானே கதியானே ஊரானே உலகானே உடலானே உயிரானே பேரானே.'', ''நீரவன் தீயி னோடு நிழலவன் எழில தாய பாரவன் விண்ணின் மிக்க பரமவன் பரம யோகி யாரவ னண்டம் மிக்க திசையினோ டொளி களாகி.'', ''தானலா துலகம் இல்லை.'', ''இரவியும் மதியும் விண்ணும் இருநிலம் புனலும் காற்றும் உரகமார் பவனம் எட்டும் திசையொளி உருவ மானாய்.'', ''எல்லாம் சிவன்என்ன நின்றாய் போற்றி.'', ''விண்ணானாய் விண்ணவர்கள் விரும்பி வந்து வேதத்தாய் கீதத்தாய் விரவி எங்கும் எண்ணானாய் எழுத்தானாய் கடலே ழானாய் இறையானாய் எம்மிறையே என்று நிற்கும் கண்ணானாய் காரானாய் பாரு மானாய்.'', ''எல்லா உலகமும் ஆனாய் நீயே.'', ''தன்னவனாய் உலகெல்லாம் தானே யாகி.'', ''மின்னுருவை விண்ணகத்தில் ஒன்றாய் மிக்கு வீசும்கால் தன்னகத்தில் இரண்டாய்ச் செந்தீத் தன்னுருவின் மூன்றாய்த் தாழ்புனலின் நான்காய்த் தரணிதலத் தஞ்சாகி எஞ்சாத் தஞ்ச மன்னுருவை.'', ''மண்ணிலங்கு நீரலைகால் வானு மாகி.'', ''மண்ணதனில் ஐந்தை மாநீரில்

நான்கை வயங்கெரியில் மூன்றை மாருதத் திரண்டை விண்ணதனில் ஒன்றை விரிகதிரைத் தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க எண்ணதனில் எழுத்தை.'', ''ஒன்றா உலகனைத்தும் ஆனார் தாமே நின்றாகி எங்கும் நிமிர்ந்தார் தாமே நீர்வளிதீ ஆகாசம் ஆனார் தாமே.'', ''விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற எண்ணாகி எழுத்தாகி.'', ''எத்திக்கு மாய்நின்ற இறைவன்.'', ''இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான ளாய் எரியும் காற்று மாகி அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாச மாய்அட்ட மூர்த்தி யாகிப் பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவும் தம்முருவும் தாமே யாகி நெருகலையாய் இன்றாகி நாளை யாகி நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.'', ''காற்றாகிக் கார்முகிலாய்க் காலம் மூன்றாய்க் கனவாகி நனவாகிக் கங்கு லாகி.'', ''தீயாகி நீராகித் திண்மை யாகித் திசையாகி அத்திசைக்கோர் தெய்வ மாகித் தாயாகித் தந்தையாய்ச் சார்வு மாகித் தாரகையும் ஞாயிறும்தண் மதியு மாகி.'', என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மண் நீர் தீவெளி கால் வரு பூதங்கள் ஆகி மல்கும் பெண்ணோடா ணலியாய்.'', என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''பாரிடை ஐந்தாய்ப்பரந்தாய் போற்றி, நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி, தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி, வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி, வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி.'', ''வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி, ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்....நின்றாயை.'', ''பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர், விண்ணாகி மண்ணாகி.'', ''பூதங்கள் தோறும் நின்றாய்'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 46-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண

வேதம் என்னும் நான்கு வேதங்களும் ஓலமிட்டும் இன்னும் தெரிந்து கொள்வதற்கு அருமையானவன் ஆகிய கிருபாபுரீசன் சுந்தரமூர்த்தி நாயனாரைப் பிடித்துக் கொண்டு ஒரு தடவை, "இது நியாயமா?" என்று ஓலமிடப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த மக்கள் அவரை விலகச் செய்து, "இத்தகைய பெருமையைப் பெற்ற நியாய முறை உள்ள இந்தப் பூமண்டலத்தில் இல்லாத வழியை மேற்கொண்டு கோபத்தை அடைகின்ற அழகிய வேதியராகிய முனிவரே, நீர் எந்த ஊரில் வாழ்கின்றீர்? அதைச் சொல்லும்" என்று கூறினார்கள்.' பாடல் வருமாறு:

**"அருமறை முறையிட் டின்னும் அறிவதற் கரியான் பற்றி**
**ஒருமுறை முறையோ என்ன உழைநின்றார் விலக்கி 'இந்தப்**
**பெருமுறை உலகில் இல்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற**
**திருமறை முனிவ ரேநீர் எங்குளீர் செப்பும்' என்றார்."**

அரு—பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை—இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். முறையிட்டு—ஓலமிட்டும். இன்னும்—இனியும். அறிவதற்கு—தெரிந்து கொள்வதற்கு. அரியான்—அருமையானவன் ஆகிய கிருபாபுரீசன். பற்றி—சுந்தரமூர்த்தி நாயனாரைப் பிடித்துக்கொண்டு. ஒரு முறை—ஒரு தடவை. முறையோ—இது நியாயமா. என்ன—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. உழை—அவருடைய பக்கத்தில். நின்றார்—நின்றுகொண்டிருந்த மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். விலக்கி—அவர் ஓலமிடுவதைத் தடுத்து விட்டு. இந்த—இத்தகைய. பெரு—பெருமையைப் பெற்ற. முறை—நீதி முறை நடைபெற்று வரும். உலகில்—பூமண்டலத்தில். இல்லா—எங்கும் இல்லாத. நெறி—வழியை. கொண்டு — மேற்கொண்டு. பிணங்குகின்ற—கோபத்தை அடைகின்ற. திரு—அழகைப் பெற்ற. மறை—வேதியராகிய;

திணை மயக்கம். முனிவரே நீர்—முனிவரே நீங்கள். எங்கு —எந்த ஊரில். உளீர்—வாழ்கிறீர்; இடைக்குறை. செப்பும் —அதைக் கூறுங்கள். என்றார்—என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

மறை அறிவதற்கரியான்: ''மறையிலீறுமுன் தொடரொணாத நீ.'', ''நான்மறையும்....தாமறியாச் சேலேறு சேவடிக்கே.'', ''பண்டாய நான்மறையும்....கண்டாரும் இல்லை'' என்று மாணிக்கவாசகர் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 47-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அவருடைய பக்கத்தில் நின்றுகொண்டிருந்தவர்கள் கேட்டவுடன் நின்றுகொண்டிருந்த யாவருக்கும் தந்தையாரைப் போன்ற கிருபாபுரீசர், ''நான் இந்த ஊரில் தான் இருக்கிறேன்; என்னுடைய இல்லமும் நெடுந்தூரத்தில் இருப்பது அன்று; இந்த வெண்ணெய் நல்லூர்தான்; அது இருக்கட்டும்; தரும வழி இல்லாமல் வலுக்கட்டாயத்தைப் புரிந்து என்னுடைய கையில் வைத்திருந்த அடிமை ஓலையை வலிந்து வாங்கிக்கொண்டு நின்ற இந்தச் சுந்தரமூர்த்தி அதைக் கிழித்துப் போட்டுவிட்டுத் தானே என்னுடைய அடிமை என்பதை நிரூபித்துவிட்டான்'' என்று கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**''என்றலும் நின்ற ஐயா, 'இங்குளேன், இருப்பும் சேய**
**தன்றிந்த வெண்ணெய் நல்லூர்; அதுநிற்க; அறத்தா றின்றி**
**வன்றிறல் செய்தென் கையில் ஆவணம் வலிய வாங்கி**
**நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினான் அடிமை'**
**என்றான்.''**

என்றலும்—அவருடைய பக்கத்தில் இருந்த மக்கள் என்று இவ்வாறு கேட்டவுடன். நின்ற—அந்தத் திருமணப் பந்தலில் நின்றுகொண்டிருந்த. ஐயர்—யாவருக்கும் தந்தையாரைப் போன்றவராகிய கிருபாபுரீசர். இங்கு—இந்தப் பக்கத்தில் தான். உளேன்—இருக்கிறேன்; இடைக்குறை. இருப்பும்—

யான் தங்கி வாழும் இல்லமும். சேயது-தூரத்தில் இருப்பது. அன்று—அல்ல. இந்த—இதோ இருக்கும். வெண்ணெய் நல்லூர்—திருவெண்ணெய் நல்லூர்தான். அது நிற்க—அது இருக்கட்டும். அறத்தாறு—தரும வழியில். இன்றி—இல்லாமல். வன்—வலிமையான. திறல் செய்து—ஆற்றலைக் காட்டி. என்—என்னுடைய. கையில்—கையில் நான் வைத்துக் கொண்டிருந்த. ஆவணம்—அடிமை ஓலையை. வலிய — வலுக்கட்டாயமாக. வாங்கி — வாங்கிக் கொண்டு. நின்ற இவன்—நின்றுகொண்டிருந்த இந்தச் சுந்தரமூர்த்தி. நின்றிவன்; தொகுத்தல் விகாரம். கிழித்து —கிழித்துப் போட்டு. த்:சந்தி. தானே—இவனே. அடிமை. தான் எனக்கு அடிமை என்பதை. நிரப்பினான்-நிரூபித்து விட்டான். என்றான்-என்று கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

யாவருக்கும் தந்தையார்: ''ஐயன் நொய்யன்.'', ''புளமங்கை அத்தன்.'' ''எங்தாயென இருந்தான்.'', ''எந்தை என்றங் கிமையோர் புகுந்தீண்டி.'', ''வெண்ணீற் றப்பர்.'', ''ஐயர் தோற்றுத்துறை.'', ''உயர்காழி அத்தன்.'', ''வேத முதல்வன் எந்தை.'' ''தாயும் நீயே தந்தை நீயே சங்கரனே.'', ''மாற்பேற் றிருக்கின்ற ஐயா.'', ''பல்லவ வனீச்சரத்தெம் அத்தன்.'', ''எந்தையார் வளநகர் இலம்பையங் கோட்டூர்.'', ''கொன்றைப் புன்சடை வைத்த எந்தை.'', ''அத்தன் ஆரூரை.'', ''ஐயன் ஆரூரை.'', ஐயன் அணிஆரூர்.'', ''அத்தன் முதுகுன்றை.'',''ஐயன் முதுகுன்றை.'',''முதுகுன்றில் ஐயா.'', ''அத்தன் முதுகுன்றை மொய்த்துப் பணிமினே.'', ''அந்தமில்புகழ எந்தை.'', ''எந்தை மருதரை.'', ''அத்தர் அன்னியூர்ச் சித்தர்.'', ''தந்தை அன்னியூர் எந்தையே.'', ''மறையோனே ஐயா.'', ''எந்தைதன் வளநகர் இடைமருதே.'', ''ஐயன் சேவடி யதனை உள்க.'', ''எந்தைதன் கழலடி.'', ''சிவபுர நகருறை எந்தையை.'', ''எந்தை

மேவிய ஏகம்பம்.'', ''அனேகதங் காவதம் எந்தை.'', ''திருவாஞ்சி யத்தையர்.'', ''எந்தையான் இமையாத முக்கண்ணினன்.'', ''கங்கை செறிசடை ஐயன்.'', ''மங்க லக்குடி மன்னிய எந்தையை.'', ''வெண்ணியில் அத்தனை.'', ''தாயானே தந்தையு மாகிய தன்மைகள் ஆயானே.'', ''மருகல் எந்தாய்.'', ''அத்தா அருளாய்.'', ''கருவூருள் ஆனிலை அத்தர்.'', ''கருவூருள் ஆனிலை எந்தையை.'', ''அத்தன்எமை ஆளுடைய அண்ணல்.'', ''எந்தை இரும்பூளை இடங்கொண்ட ஈசன்.'', ''நாலூர் மயானத்தெம் அத்தன்.'', ''கலிக்காழி ஐயனே.'', ''அத்தனே அரனே.'', ''இமையோர் பரவிடும் அத்தனே.'', ''பனங்காட்டூர் ஐயனே.'', ''புத்தூரில் ஐயா.'', ''எந்தை இவனென் றிரவி முதலா இறைஞ்சுவார்.'', ''ஐய அரனே பெருமான் அருள்.'', ''எந்தை ஆரூர் தொழு துய்யலாம்.'', ''தேவூர் அத்தன்.'', ''எந்தை ஈசன் எம்பெருமானே.'', ''இன்னமு தெந்தை.'', ''மரதோட்டத் தத்தர்.'', ''கொன்றை சூடிய ஐயன்.'', ''முனிகள் பலர் எந்தை பெம்மான் எனநின் றிறைஞ்சும் இடம்.'',''விடையூர் தியான் எந்தை.'',''எந்தைபெம்மான் இடம் எழில்கொள் சோலை இரும்பை.'', ''எந்தை ஈசன் இருக்கும் உலகு.'', ''எந்தை மூக்கீச் சரத்தடிகள்.'', ''அப்பாஉன் னடியலால் அரற்றாதென் நா.'', ''அத்தா உன்னடியால் அரற்றாதென் நா.'', ''இருவர் மருவொணா அத்தன்.'', ''ஐயன் நல்லதி சயன்.''. ''அத்தனார் உறைவிடம் அணிமழ பாடியே.'', ''மதிசூடிய ஐயனார்.'', ''காளத்தி எந்தையார் இணையடி.'', ''அத்தன்றன் காளத்தி.'', ''ஐயன் ஆண்டகை அந்தணன்.'', ''காழியுள் எந்தையார் அடி.'', ''கடற்காழி யுள் ஐயன்.'', ''கழிப்பாலைஎம் ஐயன்.'', ''திரு ஆரூர் எம் எந்தை.'', ''கருகாவூர் எம்அத்தர்.'', ''கருகாவூர் எம் ஐயர்.'', ''கருகாவூர் எம்எந்தை வண்ணம்.'', ''யானையின் ஈருரி மூடிய அத்தனே.'', ''மழபாடியுள் எந்தை.'', ''திருஆலவாய் மேவிய ஐயனே.'', ''திரு

ஆலவாய் மேவிய அத்தனே.'', ''அப்பன் ஆவலாய் ஆதி.'', ''கொன்றை துன்று சென்னிஎம் ஐயன்.'', ''அழலதுருவத்தான் எங்கள் ஐயன்.'', ''எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ.'', ''திருவான்மியூர் உறையும் ஐயா.'', ''கயிலாய மலைமேல் எந்தை.'', ''மேனி அழகார் ஐயன்.'', ''கொச்சை மேய எந்தையர்.'', ''குரங்காடுதுறை எந்தையார்.'', ''நடமதாடும் ஐயன்.'', ''ஐயனே அனலாடிய மெய்யனே.'', ''மழுவுடன் தரித்த ஐயனார்.'', ''அத்தனார் உமையோ டின்புறுகின்ற ஆல வாய்.'' என்று திருஞான சம்பந்தமூர்த்திநாயனாரும், ''ஐயா நமர்ந்தஐயனை.'', ''எந்தை பெருமான் என்னெம் மான்.'', ''அத்தன் ஆரூர் ஆதிரை நாளால்.'', ''தில்லை அம்பலத்தாடுகின்ற அத்தா.'', ''எந்தைநீ அருளிச் செய் யாய்.'', ''ஐயநீ அருளிச் செய்யாய்.'', ''ஐயநான் அலந்து போனேன்.'', ''தந்தையும் தாயுமாகி.'', ''எந்தை நீ சரணம்.'', ''தந்தையாய்த் தாயுமாகிய.'', ''எந்தையார் எம்பிரானார்.'', ''ஐயன் ஐயாற னாரே.'', ''ஐயன் ஐயாற னார்க்கே.'', ''எந்தையே ரக மூர்த்தி.'', ''எந்தை எம்பிரானாய நின்ற இறைவனை.'', ''அத்தனே அமரர் கோவே.'',''ஆதியே ஆல வாயில் அப்பனே.'', ''ஆலவாயில் அப்பனே அருளிசெயாயே.'', ''அருமருந்தா ஆலவாயில் அப்பனே.'', ''ஐயனே ஆலவாயில் அப்பனே.'', ''அண்டனே ஆலவாயில் அப்பனே.'', ''அஞ்ச லென் றாலவாயில் அப்பனே அருள்செ யாயே'', ''அழகனே ஆல வாயில் அப்பனே.'', ''அறிவனே ஆலவாயில் அப்பனே.'', ''அலந்தனன் ஆலவாயில் அப்பனே.'', ''அடர்த்தனே ஆலவாயில் அப்பனே.'', ''எந்தையும் எந்தை தந்தை தந் தையுமாய ஈசர்.'', ''பழனை மேய அத்தனார்.'', '' 'நாகைக் காரோணம் கோயில்கொண்ட ஐயனை.'', '''வேத வேள்விக் கேள்வியை விளங்க நின்ற அத்தனை.'', ''திருவேதிகுடி ஐயனை.'', ''அத்தனை ஆரா அமுதினை.''

''ஈன்றாளு மாய்எனக் கெந்தையுமாய்.'', ''பாதிரிப்புலியூர் அத்தன்.'', ''அத்தா அடியேன் அடைக்கலம்.'', ''ஐயன் அணிவயல் ஆரூர்த் திருமூலட் டானனுக்கு.'', ''அம்பலத் துள் நின்ற அத்தனை.'',''சிற்றம் பலத்தெங்கள் ஐயனை.'', ''புரமூன்றெய்த அத்தனை.'', ''கண்ணுதல் ஐயன்.'', ''எந்தை நீ.'', ''திருவீழி மிழலையுள் அத்தனே.'', ''எந்தை என்னிடை மருதினில் ஈசனை.'', ''ஐயன் ஆவடு தண்டுறையா.'', ''ஐயனைஅறி யார்சிலர் ஆதர்கள்.'', ''பழனத்தான் எந்தை தாய்தந்தை.'', ''செம்பொன் பள்ளி ஐயர்.'', ''கழிப்பாலை எம் ஐயனே.'', ''ஐயனே அழகே.'', ''அத்தனை அணியார் கழிப்பாலைஎம் சித் தனை.'',''பைஞ்ஞீலிஎம் அத்தனை'',''தேவர் தொழப்படும் அத்தனை.'', ''எந்தை ஏகம்பம்.'',''கச்சி ஏகம்பம் மேவிய ஐயனை.'', ''நான்மறை வேதியர் பேணிய அத்தனே.'', ''கோளிலி அத்தனை'', ''ஐயனே அரனேஎன் றரற்றினால் உய்யலாம்.'', ''எந்தை ஈசனைக் கண்டினி தாயிற்றே.'', ''குரங்காடுதுறை அத்தன்.'', ''குரக்குக்கா ஐயனை.'', ''திருக்கானூரில் அத்தன்.'', ''சேறைச் செந்நெறி மேவிய அப்பனார்.'', ''திருச்செந் நெறியுறை அத்தர்.'', ''ஐயன் எம்பிரான் அன்பிலா லந்துறை மெய்யன்.'', ''எந்தை ஈச னென் றேத்திட வல்லிரேல்.'', ''வானவர் ஐயனை.'', ''ஆயிழையார் பணிந்தெந்தை ஈசன் என்றேத்தும் இறை வனை.'', ''காட்டுப் பள்ளிஎம் ஐயன்.'', ''மணஞ்சேரி எம் அத்தனார்.'',''ஐயன் வெய்ய அழல்நிற வண்ணனை.'', ''எந்தை ஏறுகந் தேறெரி வண்ணனை.'', ''எந்தை பிரா னிரே.'', ''எந்தை எம்பிரான் என்றவர் மேல்மனம்.'', ''எந்தையே எம்பிரானே எனஉள்கி.'', ''ஐயன் அந்த ணன்.'',''எந்தையைக் கண்டு கொண்டதென் உள்ளமே.'', ''அத்தனென் றரியோடு பிரமனும் துத்தியம் செயநின்றநற் சோதியே.'', ''அருந்தவர்கள் தொழுதேத்தும் அப்பன்.'',

''எந்தை பெருமானை ஈசன் தன்னை.'', ''காமற் காய்ந்த ஐயனே.'', ''என் தாதாய் போற்றி.'', ''ஆமாத்தூர் ஐய னாரே.'', ''ஐயனார் போகின்றார்.'', ''கழிப்பாலை மேய கபாலப்பனார்.'', ''ஈசனை எந்தை தந்தை.'', ''ஆடல் அமர்ந்த ஐயன்.'', ''ஆக்கூரில் தான்றோன்றி அப்ப னாரே.'', ''ஐ ய ன் க ா ண் குமரன்காண்.'', ''வானோர் தங்கள் அப்பனை.'', ''அத்தனை ஆரூரில் அம் மான் தன்னை.'', ''ஆரூர்எம் ஐயா.'', ''அரநெறியில் அப்பன்.'', ''எந்தா யெம்பிரா னானாய் நீயே.'', ''என் னானை எந்தை பெருமான் தன்னை.'', ''வெய்ய தீர்க்கும் அத்தனை.'', ''அத்தனொடும் அம்மையெனக் கானார்.'', ''மதியம் சூடும் ஐயனார்.'', ''அத்தாஉன் பொற்பாதம் அடையப் பெற்றால்.'', ''ஐயாஉன் பொற்பாதம் அடையப் பெற்றால்.'', ''விடையொன் றேறும் எந்தை.'', ''அரிபிர மர் தொழுதேத்தும் அத்தன்.'', ''வானவர்க்கும் முதலாய் மிக்க அத்தன்.'', ''எந்தையார் திருநாமம் நமச்சிவாய.'', ''மாதா பிதாவாகி.'', ''அப்பன்நீ அம்மைநீ ஐயனும் நீ.'', ''அத்தாஉன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''வெண்ணெய் நல்லூர் அருட்டுறையுள் அத்தா.'', ''அஞ்சைக்களத் தப்பனே.'' ''அணியார் பொழில் அஞ்சைக்களத் தப்பனை.'', ''அத்தர் கோயில் எதிர்கொள் பாடி.'', ''அம்மை நமக்கருளும் ஐயர்,''. ''மதியம் சூடும் எந்தை.'', ''ஆரூர் அப்பனே அஞ்சி னேனே.'', ''மழுவா ளுடைய அத்தன்.'', ''துறை யூர் அத்தா.'', ''துறையூர் எந்தாய்.'', ''துறையூர் ஐயா.'', ''தாயவளாய்த் தந்தை ஆகி.'', ''திருமேற்றளி உறையும் எந்தாய்.'', ''திருமேற்றளி உறையும் ஐயா.'', ''அத்தா தந்தருளாய்.'', ''ஐயா தந்தருளாய்.'', ''திருக் காளத்திஎன் ஐய.'', ''திருக்கற்குடி மன்னி நின்ற ஐயா.'', ''எந்தாய் எம்பெருமான் அ டி யே னை யு ம் ஏன்று கொள்ளே.'', ''ஐயாஎன் அமுதே எனக் கார் துணை

நீயலதே.'', ''கொகுடிக் கோயில் ஐயனை.'', ''பைஞ்ஞீலி எந்தை.'', ''அத்தன் அம்பொற்கழல் அடிகள்.'', ''மதியம் சடைவைத்த ஐயா.'', ''ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்தூர் அண்ணலை.'', ''ஆரூர் அத்தா.'', ''அத்தா ஆலங் காடா.'', ''பழையனூர் மேய ஐயா.'', ''எம்மான் எந்தை மூத்தப்பன்.'', ''பழையனூர் மேய அத்தன்.'', ''அமுதே அத்தா.'', ''எந்தையை எந்தை தந்தை பிரானை.'', ''அத்தன் எந்தை பிரான் எம்பிரானை.'', ''எந்தை நீஎனக் குய்வகை அருளாய்.'', ''திருவாவடு துறையுள் அப்பனே.'', ''ஐயனே எனை அஞ்சலென் றருளாய்.'', ''எந்தை இருப்பதும் ஆரூர்.'', ''தந்தைதாய் உலகுக்கு.'', ''எந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே.'',''கூடலை யாற்றூரில் ஐயன்.'', ''அத்தன் இவ்வழி போந்த அதிசயம்.'', ''பனங்காட்டூர் ஐயன்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''ஈசன் அடி போற்றி எந்தை அடிபோற்றி.'', ''வேதங்கள் ஐயா என ஓங்கி.'', ''ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே.'', ''ஆற்றின்ப வெள்ளமே அத்தா.'', ''ஆற்றேன் எம் ஐயா அரனேயோ.'', ''இடரைக் களையும் எந்தாய் போற்றி.'', ''ஐயா போற்றி அணுவே போற்றி.'', ''அத்தா போற்றி அரனே போற்றி.'', ''ஏகம் பத்துறை எந்தாய் போற்றி.'', ''ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி.'', ''அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி.'', ''அத்தா போற்றி ஐயா போற்றி.'', ''உத்தமன் அத்தன் உடையான்.'', ''ஈசனே எந்தாய் எந்தை பெருமானே.'', ''இமையோர் கூட்டம் எய்துமா றறியாத எந்தாய்.'', ''மூதாதை மாதாளும் பாகத் தெந்தை.'', ''எந்தையைப் பந்தனை அறுப்பானை.'', ''எந்தை எம்பிரான் என்னை ஆண்டவன்.'', ''எந்தையாய் எம்பிரான் மற்றுமி யாவர்க்கும் தந்தை.'', ''எந்தை பெருமான் என்பிறவி நாசனே.'', ''ஒப்பில் அப்பனே போற்றி.'',''எந்தை என்னைஆண்டு.'',

''கண்கள் தாரை யாற தாக ஐயனே.'', ''ஐய நின்ன தல்ல தில்லை மற்றொர் பற்று.'', ''எந்தை பாதம் எய்தவே.'', ''எந்தை யாய நின்னை.'',''ஆரமுதே அத்தா.'', ''ஆதியும் அந்தமு மானாய் போற்றி அப்பனே.'', ''அப்பனே எனக் கமுதனே.'', ''எளிவந்த எந்தைபிரான்.'', ''அன்னை யொப் பாய்எனக் கத்தனொப்பாய்.'', ''எந்தாய் விட்டிடுதி கண்டாய்.'', ''கொற்றச் சிலையாம் விலங்கல் எந்தாய்.'', ''அத்தன் ஆனந்தன் அமுதன்.'', ''ஐயா வழியடியோம்.'', ''ஐயாநீ ஆட்கொண் டருளும் விளையாட்டின்.'',''அப்பார் சடையப்பன்.'', ''என்னானை என்அப்பன்.'', ''அத்தன் ஐயாறன்.'', ''ஐயன் அணிதில்லை வாணன்.'', ''அத்தன் கருணையொ டாட ஆட.'', ''ஐயனை ஐயர் பிரானை.'', ''என்னுடைய ஆரமுதெங்கள் அப்பன்.'', ''என்னப்பன் என் னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி.'', ''என் தாதை தாதைக்கும் எம்மனைக்கும் தம்பெருமான்.'', ''ஐயாஎன் ஆருயிரே.'',''பிறப்பறுத்த அத்தன்.'', ''என்னப்பன் எம்பி ரான் எல்லார்க்கும் தானீசன்.'',''செய்தனவே தவமாக்கும் அத்தன்.'', ''என் அத்தன் என்னையும் ஆட்கொண்டான்.'', ''பெருந்துறை அத்தர் ஆனந்தர்.'', ''ஐயன் பெருந்துறை யான்.'',''அடியனேனுடைய அப்பனே.'', ''எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்.'', ''ஐயனே அரசே அருட்பெருங் கடலே அத்தனே.'', ''ஐயனே என்றுன் அருள்வழி இருப் பேன்.'', ''ஆழியப்பா உடையாய்.'', ''அப்பா காண ஆசைப்பட்டேன்.'', ''அத்தா சால ஆசைப்பட்டேன்.'', ''ஐயா என்றன் வாயால் அரற்றி.'', ''ஒண்மலர்த் திருப் பாதத் தப்பன்.'',''அத்தன் ஆண்டு.'', ''பவளத்தின் முழுச் சோதி அத்தன்.'', ''பித்தர்சொற் றெளியாமே அத்தன் ஆண்டு.'', ''தாதாய் மூவே ழுலகுக்கும்.'', ''குருந்தம் மேவிய சீர் அப்பனே.'',''ஐயனே அடியேன் ஆதரித் தழைத் தால் அதெந்து வேயென் றருளாயே.'', ''அத்தனே அடி யேன்.'', ''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே.'',

"அத்தனே அண்டர் அண்டமாய் நின்ற ஆதியே.", "அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய அற்புதம்.", "கழல் காட்டி அச்சன்.", "அத்தன் மாமலர்ச் சேவடி.", "ஞான வாள் ஏந்தும் ஐயர்.", "அத்தன் பெருந்துறையான்.", "அரிய பொருளே அவிநாசி அப்பா.", "சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்.", "ஐயன்எனக் கருளியவா றார்பெறு வார்." என்று மாணிக்கவாசகரும், "எங்கள் அப்பன் இடம் திருவாலங்காடே.", "கண்டெந்தை என்றிறைஞ்சி." என்று காரைக்காலம்மையாரும், "அப்பனை அம்மனை.", "ஐயா இவைநன்கு கற்றாய்." என்று சேரமான் பெருமாள் நாயனாரும், "தாயும் நீயே தந்தையும் நீயே." என்று நக்கீர தேவ நாயனாரும், "முக்கண் அப்பனுக்கு." என்று கல்லாட தேவ நாயனாரும், "எந்தாய் அடித்தொண்டர்" என்று கபில தேவ நாயனாரும், "பிரமன் தனக்குத் தாதை தன் தாதை.", "அயிரா வணத்துறை ஆடும் அப்ப.", "தாய் தந்தையாய் உயிர்காப்போன்." என்று பட்டினத்துப் பிள்ளையாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 48-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'குழைகளை மறந்து விட்டு எழுந்தருளிய காதுகளைப் பெற்ற கிருபாபுரீசனைக் குற்றம் சிறிதும் இல்லாத நம்பி யாரூரர் பார்த்து, "இந்த முதிய அந்தணன் பழைய மன்றாடி போலும்" என்று எண்ணி, நற்குணங்களால் சிறப்பை மிகுதி யாகப் பெற்றதும் அந்த அந்தணனிடம் விருப்பம் உண்டா வதும் ஆகிய திருவுள்ளம் கோபம் பொங்கி எழ, "நீ வெண் ணெய்நல்லூரில் வாழ்பவன் ஆனால் உன்னுடைய தவறான வழியில் உள்ள வழக்கை அந்த ஊரில் எடுத்துச் சொல்ல நீ வருவாயாக." என்று சுந்தர மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**''குழைமறை காதி னானைக் கோதில்ஆ ரூரர் நோக்கிப்**
**'பழையமன் றாடி போலும் இவன்'என்று பண்பின் மிக்க**
**விழைவுறு மனமும் பொங்க, 'வெண்ணெய்நல் லூரா யேல்உன்**
**பிழைநெறி வழக்கை ஆங்கே பேசநீ போதாய்' என்றார்.''**

*குழை—சங்கக் குழைகளை; ஒருமை பன்மை மயக்கம். மறை—மறைத்துக் கொண்டு எழுந்தருளிய. காதினானை—காதுகளைப் பெற்ற கிருபாபுரீசனை; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கோது—ஒரு குற்றமும். இல்—இல்லாத; கடைக்குறை. ஆரூரர்—நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார். நோக்கி—பார்த்து. ப்:சந்தி. இவன்—இந்த முதிய அந்தணன். பழைய மன்றாடி போலும்—நியாய சபையில் பழங்காலம் தொட்டு வழக்காடுபவன் போலும்; இதற்கு வேறு ஒரு பொருளும் தொனிக்கிறது. அது, 'இவன் பழங்கால முதல் தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளுபவன் போலும்' என்பது. என்று—என எண்ணி. பண்பின்—நல்ல குணங்களால்; ஒருமை பன்மை மயக்கம். மிக்க—மிகுதியான சிறப்பைப் பெற்றதும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். விழைவுறு—தம்மை அறியாமலே அந்த அந்தணனிடம் விருப்பத்தை அடையும். மனமும்—திருவுள்ளமும். பொங்க—கோபம் பொங்கி எழ. வெண்ணெய் நல்லூராயேல்—நீ திருவெண்ணெய் நல்லூரில் வாழ்பவன் ஆனால். உன்—உன்னுடைய. பிழை நெறி—தவறான வழியில் கொண்டு வந்த. வழக்கை—நான் உன்னுடைய அடிமை என்று கூறும் வழக்கை. ஆங்கு—அந்தத் திருவெண்ணெய் நல்லூரில் உள்ள நியாய சபையில்; இட ஆகு பெயர். ஏ:அசை நிலை. பேச—எடுத்துச் சொல்ல. நீ போதாய்—நீ வருவாயாக. என்றார்—என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.*

பிறகு வரும் 49-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்த முதிய அந்தணன் சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிய அந்த வார்த்தைகளைக் கேட்டு விட்டு, ''திருவெண்ணெய் நல்லூருக்கு நீ வந்தாலும் நல்லதே; அங்கே உள்ள நியாய சபையில் அமர்ந்திருப்பவர் களும், தூயவர்களும், இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களை யும் முறையாக அத்தியயனம் புரிந்து நிறைவேற்றியவர் களும் ஆகிய வேதியர்களுக்கு முன்னால் முன் காலத்தில் உன்னுடைய பாட்டனார் எனக்கு எழுதிக் கொடுத்த மூல அடிமை ஓலையைக் காண்பித்து, நீ எனக்கு அடிமை ஆக இருப்பதை நிரூபிப்பேன்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டுச் சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முன்னாலே தன்னுடைய தடியைத் தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டு முன்னால் எழுந்தருளிப் போனான்.' பாடல் வருமாறு:

**''வேதியன் அதனைக் கேட்டு**
**'வெண்ணெய்நல் லூரி லேநீ**
**போதினும் நன்று; மற்றப்**
**புனிதநான் மறையோர் முன்னர்**
**ஆதியில் மூல ஓலை**
**காட்டிநீ அடிமை யாதல்**
**சாதிப்பன்' என்று முன்னே**
**தண்டுமுன் தாங்கிச் சென்றான்.''**

வேதியன்-அந்த முதிய அந்தணன். அதனை-சுந்தர மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்த அந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கேட்டு-தன்னுடைய செவிகளில் ஏற்று. வெண்ணெய் நல் லூரில்-திருவெண்ணெய் நல்லூருக்கு; உருபு மயக்கம். நீ போதினும்-நீ வந்தாலும். நன்று-நல்லதே. மற்று:அசை

நிலை. அப் புனித-அந்தத் தூய்மையான. நான் மறை யோர்-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர் வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர்களும், நியாய சபை யில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய வேதியர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முன்னர்-முன்னால். ஆதியில்-முன் காலத்தில் உன்னுடைய பாட்டனார் எனக்கு எழுதி அளித்த; ஆகுபெயர். மூல ஓலை-மூலமாகிய அடிமை ஓலையை, காட்டி-யான் காண்பித்து. நீ அடிமை ஆதல்-நீ எனக்கு அடிமையாக இருத்தலை. சாதிப்பன்-நிரூபிப் பேன்; நிறுவுவேன், என்று-எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு. முன்-சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முன்னால். ஏ:அசைநிலை. தண்டு-தன்னுடைய தடியை. முன்-தன் னுடைய கையில் முன்னால். தாங்கி-எடுத்துக் கொண்டு. ச்:சந்தி. சென்றான்-எழுந்தருளினான்.

பிறகு உள்ள 50—ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு திருவெண்ணெய் நல்லூருக்கு எழுந்தருளு பவனும், இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் படைத் தவனுமான வேதியனுடைய வடிவத்தில் எழுந்தருளிய கிருபா புரீசனுக்குப் பின்னால் திரித்த முகத்தைக் கொண்ட காந்தத் துக்கு முன்னால் அடைந்த வலிமையான இரும்பு போவதைப் போல வள்ளலாகிய சுந்தர மூர்த்தி வேகமாக எழுந் தருளினான்; கணக்கு இல்லாத அவனுடைய உறவினர்களும், "இந்த வழக்கு என்ன ஆகும்?" என எண்ணி அவர்களோடு போக, நல்லவர்களாகிய வேதியர்கள் வாழும் திருவெண் ணெய் நல்லூரை அடைந்து.' பாடல் வருமாறு:

**'செல்லும்நான் மறையோன் தன்பின்**
**திரிமுகக் காந்தம் சேர்ந்த**
**வல்லிரும் பணையு மாபோல்**
**வள்ளலும் கடிது சென்றான்;**

**எல்லையில் சுற்றத் தாரும்**
**'இதுஎன்னாம்?' என்று செல்ல**
**நல்லஅந் தணர்கள் வாழும்**
**வெண்ணெய்நல் லூரை நண்ணி.''**

இந்தப் பாடல் குளகம். செல்லும்-அவ்வாறு திருவெண்ணெய் நல்லூருக்கு எழுந்தருளுபவனும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். நான் மறையோன்-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் படைத்தவனும், வேதியனுடைய வடிவத்தோடு எழுந்தருளியவனும் ஆகிய கிருபாபுரீசனுக்கு. தன்: அசை நிலை. பின்-பின்னால். திரி-திரிந்த. முக-முகத்தைப் பெற்ற. க்: சந்தி. காந்தம்-காந்தத்தை. சேர்ந்த-அடைந்த. வல்-வலிமையாகிய. இரும்பு-இரும்பால் செய்த பொருள்; ஆகுபெயர். அணையுமா-இழுக்கப்பட்டு அடையும் வண்ணத்தை. போல்-போல. வள்ளலும்-வள்ளலாகிய சுந்தரமூர்த்தியும்; இவன் வள்ளல் என்பதைப் புலப்படுத்தும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டு உணர்க. கடிது-வேகமாக. சென்றான்-எழுந்தருளினான். எல்லை-கணக்கு. இல்-இல்லாத; கடைக்குறை. சுற்றத்தாரும்-அவனுடைய உறவினர்களும்; ஒருமை பன்மை மயக்கம். இது-இந்த வழக்கு. என்-என்ன. ஆம்-ஆக முடியும். என்று-என எண்ணி. செல்ல-அவர்களோடு போக. நல்ல-நல்லவர்களாகிய; குறிப்புப் பெயரெச்ச வினையாலணையும் பெயர். அந்தணர்கள்-நியாய சபையில் உள்ள வேதியர்கள். வாழும்-தங்களுடைய வாழ்க்கையை நடத்தும். வெண்ணெய் நல்லூரை-திருவெண்ணெய் நல்லூரை. நண்ணி-அடைந்து.

வேதங்களைப் படைத்தவன்: ''மறை ஓதி.'', ''மறையும் பல பாடி.'', ''வேதம் ஓதி வெண்ணூல் பூண்டும்.'', ''மறையார் பாட லாடலோடு.'', ''மறையும் பல பாடி

மயானத் துறைவாரும்.'', ''அங்கமும் நான்மறையும் அருள்செய்து.'', ''அங்கமொ டருமறை அருள்புரிந்தான்.'', ''நான்மறை ஓதி.'', ''நால்வேதம் ஆவின்கீழ் இருந் தருளி.'', ''மறையார்தரு வாய்மையினாய்.'', ''வேத நாவினர்.'', ''பாடலார் நான்மறையான்.'',''பண்ணினார் மறை பாடினார்.'', ''மறைநின் றிலங்கு மொழியார்.'', ''மறைவளர் நாவன்.'', ''வேதம் ஓதிய நாவுடையான்.'', ''பாடினாய் மறை.'', ''பாடினை அருமறை வரன் முறையால்.'',''வேதமதோதி.'',''மறைபுனை பாடலர்.'', ''மறை மல்கு பாடலன்.'', ''தொகுத்தவன் அருமறை.'', ''விரித்தவன் அருமறை.'', ''பாடினார் அருமறை.'', ''மறையணி நாவினான்.''. ''பண்ணினார் அருமறை பாடினார்.'', ''மறையர் வாயின்மொழி.'', ''வாயிடை மறை ஓதி.'', ''மறைமொழி வாய்மையினான்.'', ''விரித்தார் நான்மறை.'', ''மறைநவின்ற பாடலோடு.'', ''பாடல் மறை.'', ''மறைத்திறமறத் தொகுதி கண்டு.'', ''பாடினர் அருமறை முறைமுறை.'', ''மறையொலி பாடி.'', ''ஓதி வாயதும் மறைகளே.'',''நால்வேதப் பாட்டி னார்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரும், ''விரித்தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்.'', ''நாலு கொலாம்மறை பாடின தாமே.'',''ஓதினார் வேதம் வாயால்.'', ''மறையும் கொப்புளித்த நாவர்.'', ''பாடி னார் மறைகள் நான்கும்,'', ''வேதங்கள் விரும்பி ஓதப் பண்ணினார்.'', ''வேதராய் வேதம் ஓதி.'', ''தூயநன் மறைகள் நான்கும் பாடினார்.'', ''மறையது பாடி.'', ''ஓதிய வேத நாவர்.'', ''மறையணி நாவி னானை.'', ''மறையுறு மொழியர்.'', ''பன்னிய மறையர்.'', ''மறை நவில் நாவி னானை.'', ''மறைநான்குடன் ஓதியை.'', ''அரிய நான்மறை ஓதிய நாவரோ.'', ''வேதம் ஓதும் விரிசடை அண்ணலார்.'', ''மறையும் ஓதுவர்.'', ''அரிய நான்மறை.... புரியன்.'', ''பண்ணினார் மறை,'',

"வேதம் ஓதி.", "மறைகொள் வாய்மொழியார்.", "பாடினார் மறைநான்கினோ டாறங்கம்.", "நல்ல நான் மறை ஓதிய நம்பனை.", "மறைகொள் நாவினன்.", "நான்மறை பாடினார்.", "பண்ணினான் மறை.", "வேத நாவன்.", "மறைகொள் நாவன்." "மறையும் பாடுதிர்.", "வேதங்கள் ஓதி.", "பாடுமே ஒழியாமே நால் வேதம்மும்.", "மறையார்ந்த வாய்மொழியான்.", "வேதங்கள் வேள்வி பயந்தார்.", "வேதத்தை விரிப் பதற்கு முன்னோ பின்னோ.", "மறையுடைய வேதம் விரித்தாய்.", "வேதத்தின் கீதம் பாடும் பண்ணவனை.", "விரித்தானை நான்மறையோ டங்கம் ஆறும்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "பன்னான் மறை பாடுதிர்.", "மாமறை ஓதி.", "மறைநான்கும் கல்லால் நிழற்கீழ்ப் பன்னிய எங்கள் பிரான்.", "மறையன்றிப் பாடுவ தில்லை.", "வேதம் ஓதி வெண்ணீறு பூசி.", "நான் மறை அங்கம் ஓதிய நாவன்.", "திருந்த நான்மறை பாடவல் லானை.", "மறை நான்கினையும் ஓதியன்." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், "வேத மெய்ந்நூல் சொன்ன வனே.", "பேசுவதும் திருவாயால் மறை.", "நன்றாக நால்வர்க்கும் நான்மறையி னுட்பொருளை அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான்.", "அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி.", "வேத மொழியர் வெண் ணீற்றர்." என்று மாணிக்கவாசகரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பின்பு உள்ள 51-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வேதங்கள் நான்கையும் கரைகண்டு மிகுதியான சிறப்பை அடைந்தவர்களாகிய வேதியர்கள் திகழுகின்ற பெருமையைப் பெற்ற நியாய சபைக்கு முன்னால் எழுந் தருளித் தலைவனாகும் வேதியன் பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்வான்; "இந்தத் திருநாவலூரில் வாழும்

நம்பி ஆரூரன் தான் விருப்பத்தைக் கொண்ட என்னுடைய அடிமையானவன் என்பதை அறிவிப்பதற்காக யான் காண் பித்த அடிமை ஓலையைக் கிழித்துவிட்டு, பழுத்த அறிவைப் பெற்ற சான்றோர்களே, அவன் எனக்கு முன்னால் இங்கே வந்தான். இதுவே யான் முறையிடும் வழக்கு'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**''வேதபா ரகரின் மிக்கார் விளங்குபே ரவைமுன் சென்று**
**நாதனாம் மறையோன் சொல்லும்: 'நாவலூர் ஆரு ரன்தான்**
**காதலென் அடியான் என்னக் காட்டிய ஓலை கீறி**
**மூதறி வீர்முன் போந்தான்; இதுமற்றென் முறைப்பா'**
**டென்றான்.''**

மூதறிவீர்—இந்த நியாய சபையில் அமர்ந்து விளங்கும் பழுத்த அறிவைப் பெற்ற வேதியர்களே; ஒருமை பன்மை மயக்கம். வேத—இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களி னுடைய; ஒருமை பன்மை மயக்கம். பாரகரின்—கரையைக் கண்டவர்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். மிக்கார்— மிகுதியான சிறப்பைப் பெற்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். விளங்கும்—தோற்றப் பொலிவோடு திகழும். பேர்—பெருமையைப் பெற்ற. அவை—நியாய சபைக்கு. முன்—முன்னால். சென்று—எழுந்தருளி. நாதனாம்— தலைவனாகிய கிருபாபுரீசனாகும். மறையோன்—வேதியன். சொல்லும்—பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய் வான். நாவலூர்—திருநாவலூரில் வாழும். ஆரூரன்—நம்பி யாரூரனாகிய சுந்தரமூர்த்தி. 'தான்' என்றது சுந்தர மூர்த்தி நாயனாரை. காதல்—விருப்பத்தைக் கொண்ட. என்—என்னுடைய. அடியான்—அடிமையாக உள்ளவன், என்ன—என்பதைத் தெரிவிப்பதற்காக. க்:சந்தி. காட்டிய— யான் இவனுக்குக் காண்பித்த. ஓலை—அடிமை ஓலையை. கீறி—இவன் கிழித்துப்போட்டு விட்டு. முன்—

உங்களுக்கு முன்னால். போந்தான்—வந்தான். இது—இதுவே. மற்று: அசை நிலை. என்—என்னுடைய. முறைப் பாடு—முறையிட்டுக்கொள்ளும் வழக்கு. என்றான்—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

அடுத்து வரும் 52-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் நியாய சபையில் அமர்ந்திருப்பவர்களும், அறிவில் மிக்க சிறப்பைப் பெற்றவர் களும் ஆகிய வேதியர்கள், "வேதியர்கள் ஒருவருக்கு அடிமை யாக ஆவது இந்தப் பெருமையைப் பெற்ற நாட்டில் இல்லையே! ஐயா, நீ என்ன கூறினாய்?" என்று கேட்டார் கள்; அதற்கு அந்த வேதியனுடைய வடிவத்தில் எழுந்தரு ளிய கிருபாபுரீசன், "அவ்வாறு அடிமையாக வந்த வண்ணம் சம்மதமே அல்லவோ? யான் முறையிடும் வழக்கானது; இந்தச் சுந்தரமூர்த்தி கிழித்துப் போட்டுவிட்ட அடிமை ஓலை இவனுடைய தந்தைக்குத் தந்தையாகிய பாட்டன் சம்மதித்து எழுதிக் கொடுத்தது" என்று ஒப்பற்றவனாய் நின்றவனாகிய கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய் தான்.' பாடல் வருமாறு:

**"அந்தணர் அவையில் மிக்கார், 'மறையவர் அடிமை ஆதல்**
**இந்தமா நிலத்தில் இல்லை; என்சொன்னாய் ஐயா?'**
**என்றார்;**
**'வந்தவா றிசைவே அன்றோ? வழக்கிவன் கிழித்த**
**ஓலை**
**தந்தைதன் தந்தை நேர்ந்த' தென்றனன் தனியாய்**
**நின்றான்"**

அவையில்-திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் நியாய சபையில் இருப்பவர்களும்; இட ஆகுபெயர். மிக்கார்-அறிவில் மிகுதியான சிறப்பைப் பெற்றவர்களும் ஆகிய; ஒருமை பன்மை மயக்கம். அந்தணர்-வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மறையவர்—வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அடிமை—வேறு ஒருவருக்கு

அடிமையாக. ஆ த ல் — ஆ வ து. இந்த மா—இந்தப் பெருமையைப் பெற்ற. நி ல த் தி ல் — செ ந் த மி ழ் நாட்டில். இல்லை-இல்லையே. எ ன்—அ ப் ப டி யி ரு க் க நீ என்ன. சொன்னாய்—கூறினாய். ஐயா-ஐயனே, அந்தணனே. என்றார்-என்று நியாய சபையில் அமர்ந்திருக் கும் வேதியர்கள் கேட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வந்தவாறு-இவன் எனக்கு அடிமையாக வந்த வண்ணம். இசைவே-இவனுடைய முந்தையோருக்குச் சம்மதமே. அன்றோ-அல்லவோ. வழக்கு- அது தான் வழக்கம். இவன்-இந்தச் சுந்தரமூர்த்தி. கிழித்த-கிழித்துப் போட்டுவிட்ட. ஓலை-அடிமை ஓலை. தந்தைதன்-இவனுடைய தந்தைக்கு; தன்: அசைநிலை. தந்தை-தந்தையாகிய பாட்டன். நேர்ந்தது-சம்மதித்து எழுதிக் கொடுத்தது. தனியாய்-தனக்கு ஒப்பார் யாரும் இல்லாதவனாகி. நின்றான்-நியாய சபைக்கு முன்னால் நின்று கொண்டிருந்த அந்தண வேடம் கொண்ட கிருபாபுரீசன். என்றனன்-என்று திருவாய் மலர்ந்தருளச் செய்தான்.

தனக்கு ஒப்பார் யாரும் இல்லாதவன்: "மாறிலா மணியே.", "மற்றிணை யில்லா மலைதிரண் டன்ன திண் தோள் உடையீர்.", "ஒப்பரிய பூம்புகவி ஓங்கு கோயில் மேயானை.", "நேரிய னாரும் அல்லன்." என்று திரு ஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், "மற்றொருவர் ஒப் பில்லா மைந்தா போற்றி.", "ஒப்பொருவர் இல்லாத ஒருவன்.", "தன்னொப் பில்லாத் தத்துவன்.", "மற்றாருந் தன்னொப்பார் இல்லான்.", "இணைஒருவர் தாமல் லால் யாரும் இல்லார்.", "ஒப்புடையன் அல்லன் ஒருவன் அல்லன் ஓரூர னல்லன் ஒருவமன் இல்லி." என்று திருநாவுக் கரசு நாயனாரும், "ஒப்பரிய குணத்தானை இணையி லியை." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், "உவமனில் இறந்தன ஒண்மலர்த்தாள்.", "ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி.", "மாறிலாதமாக் கருணை வெள்

ளமே.'', ''கேழில் பரஞ்சோதி,'', ''ஒப்பிலாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த் திருப்பாதத் தப்பன்.'', ''ஒப்பிலா மணியே'', ''ஒப்புனக் கில்லா ஒருவனே.'' என்று மாணிக்க வாசகரும், ''ஏதொக்கும் என்பதனை யார்அறிவார்.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''ஒப்பனஇல்லா ஒளி கிளர் உன்மந்தமும் அமைத்தான்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''தனக்குவமை இல்லாதான்.'' **(திருக்குறள், 7)** என்று திருவள்ளுவரும், ''தன்நேர் பிறர் இல்லானை.'' என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''தனையொப்பாரை இல்லாத் தனியை.'' என்று மாணிக்க வாசகரும், ''தன்னை ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்.'' **(திருமந்திரம், 7)** என்று திருமூலரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 53-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''சம்மதத்தோடு எழுதியிருக்கும் அடிமை ஓலையை இந்த அந்தணன் காண்பித்தான். ஆனால் இன்றைக்கு வேகத்தோடு வலுக்கட்டாயமாக அந்த ஓலையை வாங்கிச் சுந்தரமூர்த்தி கிழித்துப் போடுவது அவனுக்கு வெற்றி ஆகுமா? தன்னுடைய திருமேனியில் உள்ள தசைகள் யாவும் சுருங்கும் வண்ணம் மூப்பை அடைந்த இந்த வேதியன் தன்னுடைய வழக்கை எங்களுக்கு நன்றாகத் தெரிந்து சேருமாறு எடுத்துக் கூறினான்; தளர்ச்சி சிறிதும் இல்லாத நம்பியாரூரர் எண்ணிய எண்ணம் என்ன?'' என்று திருவெண்ணெய் நல்லூரில் உள்ள நியாய சபையில் மிக்க அறிவோடு இருக்கும் வேதியர்கள் கேட்டார்கள்.' பாடல் வருமாறு:

**'' 'இசைவினால் எழுதும் ஓலை காட்டினான் ஆகில் இன்று**
**விசையினால் வலிய வாங்கிக் கிழிப்பது வெற்றி ஆமோ?**
**தசையெலாம் ஒடுங்க மூத்தான் வழக்கினைச் சாரச் சொன்னான்**
**அசைவில்ஆ ரூரர் எண்ணம் என்' என்றார் அவையில் மிக்கார்.''**

இசைவினால்-இந்தச் சுந்தரமூர்த்தியின் பாட்டனார் தம்முடைய சம்மதத்தோடு; உருபுமயக்கம். எழுதும்-வரைந்திருக்கும். ஓலை-அடிமை ஓலையை. காட்டினான்-இந்த அந்தணன் காண்பித்தான். ஆகில் - ஆனால். இன்று-இன்றைக்கு. விசையினால்-வேகத்தோடு; உருபு மயக்கம். வலிய-வலுக்கட்டாயமாக. வாங்கி—அந்த ஓலையை வாங்கிக்கொண்டு. க்:சந்தி. கிழிப்பது-கிழித்துப் போடுவது. வெற்றி-சுந்தரமூர்த்திக்கு வெற்றி. ஆமோ-ஆகுமோ. தசை-தன்னுடைய திருமேனியில் உள்ள தசைகள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம்—யாவும்; இடைக்குறை. ஒடுங்க-சுருங்கும் வண்ணம். மூத்தான்-மூப்பினை அடைந்த இந்த அந்தணன். வழக்கினை-தன்னுடைய வழக்கை. க்:சந்தி. சார-எங்களிடம் கேட்குமாறு அமைய. ச்:சந்தி. சொன்னான்- எடுத்துக் கூறினான். அசைவு-சிறிதேனும் தளர்ச்சி. இல்-இல்லாத; கடைக்குறை. ஆரூரர்-நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார். எண்ணம்—எண்ணியிருக்கும் எண்ணம். என்-என்ன. அவையில்—திருவெண்ணெய் நல்லூரில் உள்ள நியாய சபையில் அமர்ந்திருக்கும். மிக்கார்—மிகுதியான அறிவினால் சிறப்பை அடைந்த வேதியர்கள்;ஒருமை பன்மை மயக்கம். என்றார்—என்று கேட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 54-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''எல்லா நியாய சாத்திரங்களையும் நன்றாகக் கற்றுத் தெரிந்துகொண்டு விளங்கும் வேதியர்களே, அடியேனை ஆதி சைவப் பிராம்மணர் சாதியில் பிறந்தவன் என்பதை நீங்கள் அறிவீர்கள்; அடியேனைத் தனக்கு வேறாக உள்ள அடிமை என்று இந்த வேதியன் விடாப்பிடியாகச் சொன்னால் உள்ளத்தினால் தெரிந்து கொள்வதற்கு எட்டாத மாயமான வார்த்தைகள் இவை; அடியேன் என்ன கூறுவேன்''

அடியேனுக்கு இந்த வழக்குத் தெளிவாக அறிந்து கொள்ள முடியாமல் இருக்கிறது'' என்று எண்ணத்தில் மிக்க சிறப்பைப் பெற்றவனாகிய சுந்தரமூர்த்தி திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**'' 'அனைத்துநூல் உணர்ந்தீர் ஆதி சைவனென் றறிவீர் என்னைத்**
**தனக்குவே றடிமை என்றிவ் வந்தணன் சாதித் தானேல்**
**மனத்தினால் உணர்தற் கெட்டா மாயைஎன் சொல்லு கேன்யான்?**
**எனக்கிது தெளிய ஒண்ணா' தென்றனன் எண்ணம் மிக்கான்.''**

அனைத்து-எல்லா. நூல்-நியாய சாத்திரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். உணர்ந்தீர்-கற்றுத் தெளிவாகத் தெரிந்து கொண்ட வேதியர்களே; ஒருமை பன்மை மயக்கம். ஆதிசைவன்-அடியேன் ஆதிசைவர்களின் சாதியிற் பிறந்தவன். என்று-என. அறிவீர்-நீங்கள் தெரிந்து கொண்டிருப்பீர்கள்; ஒருமை பன்மை மயக்கம். என்னை-அடியேனை. த்:சந்தி. தனக்கு வேறு-தனக்கு வேறாக உள்ள. அடிமை என்று-அடிமை என்று கூறி. இவ்வந்தணன்-இந்த வேதியன். சாதித்தானேல்-விடாப்பிடியாகக் கூறுவானானால். மனத்தினால்-அடியேனுடைய உள்ளத்தால். உணர்தற்கு-தெரிந்து கொள்வதற்கு. எட்டா-எட்டாத. மாயை-இந்த அந்தணன் கூறும் மாயமான வார்த்தைகளைப் பற்றி; ஒருமை பன்மை மயக்கம். என்-என்ன. யான்-அடியேன். சொல்லுகேன்-கூறுவேன். எனக்கு-அடியேனுக்கு. இது-இந்த வழக்கு. தெளிய-தெளிவாகத் தெரிந்து கொள்வதற்கு. ஒண்ணாது-முடியாததாய் இருக்கிறது. எண்ணம்-எண்ணங்களால்; ஒருமை பன்மை மயக்கம். மிக்கான்-மிகுதியான சிறப்பைப் பெற்ற சுந்தரமூர்த்தி. என்றனன்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

பிறகு உள்ள 55-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த வார்த்தைகளை நியாய சபைக்கு முன்னால் நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந் தருளிச் செய்யவே, செம்மையான அறிவைப் பெற்றவர் களும், நியாய சபையில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய வேதியர்கள் தங்களுக்கு முன்னால் நின்று கொண்டிருந்த அழகிய வேதியனாகிய முனிவனைப் பார்த்து, "இந்தப் பூமண்டலத்தில் நீ இன்றைக்கு இந்தச் சுந்தரமூர்த்தி நாய னாரை உன்னுடைய அடிமை என்று கூறிய கொடிய வார்த்தைகளை எங்களுக்கு முன்னால் நிரூபித்துக் காட்ட வேண்டும்'' என்று கூறிவிட்டு மறுபடியும்.' பாடல் வருமாறு:

**''அவ்வுரை அவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்**
**செவ்விய மறையோர் நின்ற திருமறை முனியை நோக்கி**
**'இவ்வுல கின்கண் நீஇன் றிவரை உன் அடிமை என்ற**
**வெவ்வுரை எம்முன் பேற்ற வேண்டும்' என் றுரைத்து**
**மீண்டும்.''**

இந்தப் பாடல் குளகம். அவ்வுரை-அந்த வார்த்தை களை; ஒருமை பன்மை மயக்கம். அவையின்-நியாய சபையின். முன்பு-முன்னால். நம்பியாரூரர்-நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார். சொல்ல-திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. ச்:சந்தி. செவ்விய-செம்மையான அறிவைப் பெற்ற. மறையோர்-நியாய சபையில் அமர்ந்து கொண்டிருந்த வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நின்ற-தங்களுக்கு முன்னால் நின்று கொண்டிருந்த. திரு-அழகிய. மறை-வேதிய னாகிய; திணை மயக்கம். முனியை-முனிவனை. நோக்கி- பார்த்து. இவ்வுலகின்கண்-இந்தப் பூ மண்டலத்தில். நீ-இன்று நீ இன்றைக்கு. இவரை-இந்தச் சுந்தரமூர்த்தி நாயானரை. உன்-உன்னுடைய. அடிமை என்ற-அடிமை என்று கூறிய. வெவ்வுரை-கொடுமையான வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். எம்-எங்களுக்கு. முன்பு-முன்னால்.

ஏற்ற வேண்டும்-நிரூபித்துக் காட்டவேண்டும். என்று-என. உரைத்து-கூறிவிட்டு. மீண்டும்-மறுபடியும்.

அடுத்து வரும் 56-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''ஆட்சியிலாவது ஆவண ஓலையிலாவது அல்லாமல் வேறாக உள்ள அயல் மக்களுடைய காட்சியிலாவது இந்த மூன்று பிரமாணங்களில் ஒன்றை நீ காட்டுவாயாக'' என்று நியாய சபையில் அமர்ந்திருக்கும் வேதியர்கள் கூற, ''என்னுடைய பார்வைக்கு முன்னால் கோபம் மூண்டதனால் இவன் கிழித்துப் போட்டுவிட்ட அடிமை ஓலை பிரதி பண்ணிய ஓலைதான்; மூலமான அடிமை ஓலை மாண்பு பெறும் வண்ணம் உங்களிடம் காண்பிப்பதற்கு நான் வைத்திருக்கிறேன்'' என்று மாயையில் வல்லவனாகிய கிருபாபுரீசனாகிய அந்தணன் திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**'' 'ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார் தங்கள்**
**காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்' என்ன, 'முன்னே**
**மூட்சியில் கிழித்த ஓலை படியோலை, மூல ஓலை**
**மாட்சியிற் காட்ட வைத்தேன்.' என்றனன் மாயை வல்லான்.''**

ஆட்சியில்-அனுபோகத்தில். ஆவணத்தில்-அடிமை ஓலையில். அன்றி-அல்லாமல். மற்று-வேறாக உள்ள. அயலார் தங்கள்-அயல் மனிதர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. காட்சியில்-பிரத்தியட்சப் பிரமாணத்தில். மூன்றில்-இந்த மூன்று பிரமாணங்களுக்குள். ஒன்று-ஒரு பிரமாணத்தை. காட்டுவாய்-நீ எங்களுக்குக் காண்பிப்பாயாக. என்ன-என்று நியாய சபையில் அமர்ந்திருக்கும் வேதியர்கள் கூற. முன்-முன்னால். ஏ: அசை நிலை. மூட்சியில்-இவன் கோபம் மூண்டதனால். கிழித்து-கிழித்து எறிந்து விட்ட. ஓலை-அடிமை ஓலை. படி-பிரதி பண்ணிய. ஓலை-அடிமை ஓலைதான். மூல-மூலமாகிய. Original என்று

ஆங்கிலத்தில் கூறுவர். ஓலை-அடிமை ஓலையை. மாட்சியில்-பெருமையோடு; உருபு மயக்கம். காட்ட-உங்களிடம் காண்பிப்பதற்காக. வைத்தேன்-நான் வைத்திருக்கிறேன். மாயை-மாயையான செயல்களில்; ஒருமை பன்மை மயக்கம். வல்லான்-வல்லமையைப் பெற்றவனாகிய கிருபாபுரீசனாகிய வேதியன். என்றனன்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

பிறகு வரும் 57-ஆம் பாட்டின் உள்ளுறை வருமாறு:

' ''நீ மூல ஓலையைக் காண்பிக்க முடியுமானால் அதை இவ்விடத்தில் எங்களுக்குக் காண்பிப்பாயாக'' என்று நியாய சபையில் அமர்ந்திருக்கும் வேதியர்கள் கூற, அந்த வேதியன் ''இவன் வலிந்து என்னிடமிருந்து பிடுங்கிக் கொள்ளாத வண்ணம் நீங்கள் கூற வல்லமை உடையவர்களானால் நான் அந்த மூல ஓலையை உங்களுக்குக் காட்டுவேன்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, ''செல்வத்தைப் பெற்றவனும், இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவனும் ஆகிய வேதியனே, நாங்கள் அவ்வாறு தீய செயல் நடக்குமாறு விடமாட்டோம்'' என்று நியாய சபையில் வீற்றிருக்கும் வேதியர்கள் கூறினார்கள்; துன்பத்தைப் போக்கிச் சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு நின்ற கிருபாபுரீசராகிய அந்தணர் அடிமை ஓலையை எடுத்துக் கொண்டு நியாய சபைக்கு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**'' 'வல்லையேல் காட்டிங்' கென்ன மறையவன், 'வலிசெய் யாமல்**
**சொல்லநீர் வல்லீ ராகில் காட்டுவேன்' என்று சொல்லச்**
**'செல்வநான் மறையோய், நாங்கள் தீங்குற ஒட்டோம்' என்றார்**
**அல்லல்தீர்த் தாள நின்றார் ஆவணம் கொண்டு சென்றார்.''**

வல்லையேல்-நீ மூல ஓலையைக் காண்பிக்க முடியு மானால். இங்கு-இந்த நியாய சபையில். காட்டு-காண்பிப் பாயாக என்ன—என்று நியாய சபையில் அமர்ந்திருக்கும் வேதியர்கள் கூற. மறையவன்-வேதியனாக வந்தருளிய கிருபாபுரீசன். வலி செய்யாமல்-இந்தச் சுந்தரமூர்த்தி வலிந்து என்னிடமிருந்து அதைப் பிடுங்கிக் கொள்ளாத வண்ணம். சொல்ல-இவனுக்குக் கூற. நீர்-நீங்கள், வல்லி ராகில்-வல்லமையை உடையவர்களானால்; ஒருமை பன்மை மயக்கம். காட்டுவேன்—நான் அந்த மூல ஓலையை உங்களுக்குக் காண்பிப்பேன். என்று—என. சொல்ல— திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. ச்:சந்தி. செல்வ—செல்வத் தைப் படைத்த. நான் மறையோய்—இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய அந்தணனே. மறை: ஒருமை பன்மை மயக்கம். நாங்கள்—இந்தச் சபையில் உள்ள நாங்கள். தீங்கு—அவ்வாறு ஒரு கெடுதலும். உற—உண்டாகும் வண்ணம். ஒட்டோம்—விடமாட்டோம். என்றார்— என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அல்லல்—துன்பங்களை; ஒருமை பன்மை மயக்கம். தீர்த்து— போக்கியருளி. ஆள—சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்து ஆண்டுகொள்வதற்கு. நின்றார்—நின்ற வேதியராக வந்த கிருபாபுரீசர். ஆவணம்—அந்த மூல அடிமை ஓலையை. கொண்டு—எடுத்துக் கொண்டு. சென்றார்—நியாய சபைக்கு எழுந்தருளினார்.

அடுத்து உள்ள 58—ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'இருட்டைப் போன்ற கருமையான ஆலகால விடத்தை மறைத்து விட்டு எழுந்தருளிய கழுத்தைப் பெற்றவனாகிய கிருபாபுரீசனுடைய கையில் வைத்திருந்த மூல அடிமை ஓலையைப் பார்த்து நியாய சபையில் உள்ள வேதியர்கள்

கட்டளை இட, கிருபாபுரீசருடைய திருவருளைப் பெற்ற கணக்குப் பிள்ளையும் அந்த மூல அடிமை ஓலையை வணங்கி விட்டு வாங்கிக் கொண்டு சுருட்டப் பெற்ற துணியை விலக்கி விட்டு விரித்துப் பார்த்து அதனுடைய பழமையைப் பார்த்துத் தெளிவைப் பெற்றவர்களாகிய நியாய சபையில் உள்ள வேதியர்கள் கேட்குமாறு அந்த ஓலையில் உள்ள வார்த்தைகளைப் படித்துக் கூறுகிறான்.' பாடல் வருமாறு:

**''இருள்மறை மிடற்றோன் கையில் ஓலைகண் டவை யோர் ஏவ**
**அருள்பெறு கரணத் தானும் ஆவணம் தொழுது வாங்கிச்**
**சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன் தொன்மை நோக்கித்**
**தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகம் செப்பு கின்றான்.''**

இருள்-இருட்டைப் போன்று கருமையான ஆலகால விடத்தை; உவம ஆகு பெயர். மறை-மறைத்துவிட்டு எழுந்தருளிய. மிடற்றோன்-கழுத்தைப் பெற்றவனாகிய கிருபாபுரீசனுடைய. கையில்-கையில் வைத்திருந்த. ஓலை-மூல அடிமை ஓலையை. கண்டு-பார்த்துவிட்டு. அவை யோர்-அந்த நியாய சபையில் அமர்ந்திருந்த வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஏவ-தனக்குக் கட்டளை இட. அருள்-கிருபாபுரீசர் வழங்கிய திருவருளை. பெறு-பெற்ற. கரணத்தானும்-திருவெண்ணெய் நல்லூர்க் கணக்குப் பிள்ளையும். ஆவணம்-அந்த மூல அடிமை ஓலையை. தொழுது-வணங்கிவிட்டு. வாங்கி-தன்னுடைய கைகளில் வாங்கிக் கொண்டு. ச்:சந்தி. சுருள்-சுருட்டுதலை. பெறு—பெற்ற. மடியை-துணியை; அடிமை ஓலையை வைத்துச் சுருட்டிய துணியை. விரித்தனன்-அவிழ்த்து அதில் இருந்த மூல ஓலையை விரித்தவனாகி; முற்றெச்சம். தொன்மை—அந்த ஓலையின் பழமையை. நோக்கி-சரிபார்த்துவிட்டு, இது பழைய ஓலைதானா என்று

பார்த்து அது பழைய ஓலைதான் என்று அந்தக் கணக்குப் பிள்ளை தெரிந்து கொண்டான். த்:சந்தி. தெருள்-அறிவுத் தெளிவை. பெறு-பெற்ற. சவையோர்-நியாய சபையில் வீற்றிருக்கும் வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கேட்ப-நன்றாகக் கேட்கும் வண்ணம். வாசகம்-அந்த மூல அடிமை ஓலையில் எழுதப்பட்டிருந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். செப்புகின்றான்-படித்துச் சொல்லுகிறான்.

அடுத்து உள்ள 59-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையான இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவனும் திருநாவலூரில் வாழும் ஆதி சைவனும் ஆகிய ஆரூரனாகிய யான் செய்து கொடுக்கும் அடிமை ஓலையாவது; பெருமையைப் பெற்ற முனிவனாகிய திருவெண்ணெய் நல்லூரில் வாழும் பித்தனுக்கு நானும் என்னிடம் பின்னால் வரும் முறைப்படி அமைந்த என்னுடைய பரம்பரையில் பிறப்பவர்களும் வழி வழியாகத் தொண்டுகளைப் புரிவதற்கு இந்தச் சாசன ஓலையை மனம் மொழி என்னும் இரண்டினாலும் சம்மதித்து வரைந்து கொடுத்தேன்; இந்தச் சாசனத்துக்கு இவை என்னுடைய பெயராகிய எழுத்துக்கள்.' பாடல் வருமாறு:

**''அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை**
**பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்**
**வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை**
**இருமையால் எழுதி நேர்ந்தேன்; இதற்கிவை என்எ ழுத்து.''**

அரு-பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம்,

அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறை யாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். நாவல்-திருநாவலூரில் வாழும். ஆதிசைவன்—ஆதிசைவனாகிய. ஆரூரன்-ஆரூரன் என்னும் பெயரைப் பெற்ற யான். செய்கை-செய்து கொடுக்கும் சாசன ஓலை. பெரு-பெருமையைப் பெற்ற. முனி-முனிவனாகிய. வெண்ணெய் நல்லூர்-திருவெண்ணெய் நல்லூர் என்னும் ஊரில் வாழும். ப்:சந்தி. பித்தனுக்கு யானும்-பித்தனுக்கு நானும். இ:குற்றியலிகரம். என்பால்-என்னிடம் எனக்குப் பின்னால் வரும்-பிறக்கும். முறை-தலைமுறையான. மரபு-பரம்பரையில். உளோரும்-இருப்பவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். உளோர் இடைக்குறை. வழி-வழி வழியாக. த்:சந்தி. தொண்டு-அவன் இடும் தொண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். செய்தற்கு-புரிவதற்காக. ஓலை-இந்தச் சாசன ஓலையை. இருமையால்-மனத்தாலும் மொழியாலும் சம்மதித்து. எழுதி-வரைந்து. நேர்ந்தேன்-கொடுத்தேன். இதற்கு-இவ்வாறு சம்மதித்ததற்கு. இவை-இந்த எழுத்துக்கள். என்-என்னுடைய பெயரைக் குறிக்கும். எழுத்து—கையெழுத்துக்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 60-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'கணக்குப் பிள்ளை வாசித்த வார்த்தைகளைக் கேட்ட பிறகு வேறாக மேற்கையொப்பங்களை இட்டவர்களுடைய குற்றம் இல்லாத கையெழுத்துக்களைப் பார்த்து, ''அந்தக் கையெழுத்துக்களும் இந்த ஓலையில் உள்ள கையெழுத்துக்களும் ஒத்திருக்கின்றன'' என்று கூறிய பிறகு குற்றம் இல்லாத நியாய சபையில் வீற்றிருந்த வேதியர்கள், ''ஐயரே, உங்களுடைய பாட்டனாருடைய ஒளியைப் பெற்ற கையெழுத்துக்களே இவை ஆனால் தெளிவாக நோக்கித் தெரிந்து கொள்ளுங்கள்'' என்று கூறினார்கள்.' பாடல் வருமாறு:

**''வாசகம் கேட்ட பின்னர் மற்றுமேல் எழுத்திட் டார்கள்**
**ஆசிலா எழுத்தை நோக்கி, 'அவைஒக்கும்' என்ற பின்னர்**
**மாசிலா மறையோர், 'ஐயா, மற்றுங்கள் பேர னார்தம்**
**தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் தறிமின்'**
**என்றார்.''**

வாசகம்-கணக்குப்பிள்ளை படித்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்ட பின்னர்-கேட்ட பிறகு. மற்று-வேறாக. மேல் எழுத்து-மேலே சாட்சிக் கையெழுத்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இட்டார்கள்-போட்டவர்களுடைய. ஆசு-குற்றம். இலா-இல்லாத; கடைக்குறை. எழுத்தை-கையெழுத்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். நோக்கி-பார்த்துவிட்டு. அவை-அந்தக் கையெழுத்துக்கள். ஒக்கும்—இந்தக் கையெழுத்துக்களோடு ஒத்து இருக்கின்றன; கால மயக்கம். என்ற—என்று கூறிய. பின்னர்—பிறகு. மாசு—ஒரு குற்றமும். இலா-இல்லாத; கடைக்குறை. மறையோர்—நியாய சபையில் வீற்றிருந்த வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஐயா—ஐயரே. மற்று: அசை நிலை. உங்கள்—உங்களுடைய. பேரனார்—பேரைப் பெற்ற பாட்டனாருடைய. தம்: அசை நிலை. தேசு—ஒளியை; 'தேஸஸ்' என்ற வடசொல்லின் திரிபு. உடை—பெற்ற. எழுத்தே—கையெழுத்தே. ஆகில்—ஆனால். தெளிய—தெளிவாக. ப்: சந்தி. பார்த்து—ஒப்பு நோக்கி. அறிமின்—தெரிந்து கொள்ளுங்கள். என்றார்.—என்று நியாய சபையில் அமர்ந்திருந்த வேதியர்கள் கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். பாட்டனாரைப் பேரனார் என்று வழங்கும் வழக்கம் இன்றும் யாழ்ப்பாணத்தில் இருக்கிறது.

பின்பு வரும் 61-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நியாய சபையில் வீற்றிருக்கும் வேதியர்கள் இவ்வாறு சொல்லவே, ''இதற்கு மேலும் ஓர் அடிமை ஓலையை இந்தச் சுந்தரமூர்த்தியே பார்க்கும் பொருட்டு இவனுடைய தந்தையினுடைய தந்தையாகிய பாட்டன் எழுதிய கையொப்

பம் உள்ளது வேறு இருக்குமானால் இந்த அடிமை ஓலையுடனும் அதில் வரைந்திருக்கும் எழுத்துக்களை நீங்கள் ஒப்பிட்டுப் பார்த்துத் தெரிய வந்த செய்தியைக் கூறுங்கள்'' என்று வலிய எழுந்தருளிச் சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்து ஆண்டுகொள்ளும் வள்ளலாகிய கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு:

**'''அந்தணர் கூற, 'இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்**
**தந்தைதன் தந்தை தான்வே றெழுதுகைச்**
**சாத்துண் டாகில்**
**இந்தஆவணத்தி னோடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி**
**வந்தது மொழிமின்' என்றான் வலியஆட் கொள்ளும்**
**வள்ளல்.''**

அந்தணர்—திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் நியாய சபையில் அமர்ந்திருக்கும் வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூற—அவ்வாறு சொல்ல. இன்னும்—இந்த அடிமை ஓலைக்கு மேலும். ஆள் ஓலை—அடிமை ஓலையை. இவனே—இந்தச் சுந்தரமூர்த்தியே. காண்பான்—பார்க்கும் பொருட்டு. தந்தைதன்—இவனுடைய தந்தையினுடைய. தன்: அசை நிலை. தந்தைதான்—தந்தையாகிய பாட்டன் தான். வேறு-இதையல்லாமல் வேறு. எழுது—வரைந்த. கைச்சாத்து—கையொப்பம் இட்ட ஓலைகள்; ஆகு பெயர். உண்டாகில்—இருக்குமானால். இந்த ஆவணத்தினோடும்—இந்த அடிமை ஓலையுடனும். எழுத்து—கையெழுத்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். நீர்-நீங்கள். ஒப்பு நோக்கி—ஒப்பிட்டுப் பார்த்து. வந்தது—உங்களுக்குத் தெரிய வந்த செய்தியை. மொழிமின்—கூறுங்கள். வலிய—தானே வலிய வந்து. ஆட்கொள்ளும்—சுந்தரமூர்த்தி நாயனாரைத் தடுத்து ஆண்டு கொள்ளும். வள்ளல்-வள்ளலாகிய கிருபாபுரீசனாகிய வேதியன். என்றான்—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

சிவபெருமானை வள்ளல் என்று வழங்குதல்:

''வள்ளல் மாமழ பாடியுள் மேய மருந்தினை.'', ''ஆமாத் தூர் அம்மான் எம் வள்ளல்.'', ''வள்ளல் இருந்த மலை.'', ''விடையேறும் வள்ளல்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''காயந் தன்னுள் புண்டரீ கத் திருந்த வள்ளலை.'', ''வள்ளல் மாமயி லாடு துறையுறை வெள்ளம் தாங்கு சடையனை.'', ''ஆறை வடதளி வள்ளலை.'', ''புள்ளிருக்கு வேளூர் வள்ளல்.'', ''வள்ளலா கிய வான்மியூர் ஈசனே.'' ''மணஞ்சேரி எம் வள்ளலார்.'', ''வள்ளலே போற்றி மணாளா போற்றி.'' என்று திருநாவுக் கரசு நாயனாரும், ''வள்ளல் எந்தமக்கே துணை.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''வானோர்க் கமுதம்ஈ வள்ளல் போற்றி.'', ''வள்ளல் வரவர ளந்தொழிந்தான் என் மனத்தே.'', ''பரியின்மேல் வந்த வள்ளல்.'' என்று மாணிக்க வாசகரும், ''வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்.'', ''ஊர்விடை வள்ளலார்.'', ''மலையாளுடன் கூட வீற்றி ருந்த வள்ளலாரை.'', ''அரத்துறை வள்ளலார்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 62-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'கூடியிருந்த நியாய சபையில் வீற்றிருந்தவர்களும், பெருமையைப் பெற்றவர்களும் ஆகிய வேதியர்களும் திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய அரசராகிய சுந்தரமூர்த்தி நாயனார் முன்பு மயக்கத்தை அடைந்திருந்த நிலை தெளிவை அடைய, 'அந்தப் பாட்டனாகிய வேதியன் தன்னுடைய கையினால் எழுதிய எழுத்துக்களால் அமைந்த அடிமை ஓலையைப் பாதுகாக்கப் பெற்ற கருவூலத்திலிருந்து வேறு ஓர் அடிமை ஓலையை வர வழைத்து வேதியர் கொடுத்த ஓலையோடு ஒப்பிட்டுப் பார்த்து, ''இந்த இரண்டு அடிமை ஓலைகளும் சமமாக இருந்தது என்ன ஆச்சரியம்! இனிமேல் செய்து பார்க்க வேண்டிய காரியம் வேறு இல்லை'' என்று கூறினார்கள்.' பாடல் வருமாறு:

**''திரண்டமா மறையோர் தாமும்**
**திருநாவ லூரர் கோமுன்**
**மருண்டது தெளிய மற்ற**
**மறையவன் எழுத்தால் ஓலை**
**அரண்தரு காப்பில் வேறொன்**
**றழைத்துடன் ஒப்பு நோக்கி,**
**'இரண்டும்ஒத் திருந்த தென்னே!**
**இனிச்செயல் இல்லை.' என்றார்.''**

*திரண்ட-கூடியிருந்த. மா-பெருமையைப் பெற்றவர்களும் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த நியாய சபையில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய; திணை மயக்கம். மறையோர் தாமும்-வேதியர்களும்; ஒருமை பன்மை மயக்கம். தாம்: அசைநிலை. திருநாவலூரர்-திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவராகிய சுந்தர மூர்த்தி நாயனார் என்னும். கோ-அரசர். முன்-முன்பு. மருண்டது-மயக்கத்தை அடைந்திருந்த நிலை. தெளிவு-தெளிவை அடைய. மற்ற-வேறான பாட்டனாகிய. மறையவன்-வேதியன். எழுத்தால்-எழுதிய எழுத்துக்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஓலை-அடிமை ஓலையை. அரண் தரு-பாதுகாக்கப் பெற்ற. காப்பில்-கருவூலத்திலிருந்து; உருபு மயக்கம். வேறு-பிறிது. ஒன்று-ஓர் அடிமை ஓலையை. அழைத்து—வர வழைத்து. உடன்-கிருபாபுரீசனாகிய வேதியன் காட்டிய ஓலையோடு. ஒப்பு நோக்கி—ஒப்பிட்டுப் பார்த்து. இரண்டும்-இந்த இரண்டு அடிமை ஓலைகளும். ஒத்திருந்தது-சமானமாக இருந்தது. என்-என்ன ஆச்சரியம்! ஏ:அசை நிலை. இனி-இனிமேல். ச்:சந்தி. செயல்-செய்ய வேண்டிய வேறு காரியம். இல்லை என்றார்-இல்லை என்று நியாய சபையில் அமர்ந்திருந்த வேதியர்கள் கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.*

*அடுத்து வரும் 63-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

' "நம்பியாரூரர் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனாரே, இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம்செய்து நிறைவேற்றிய முனிவராகிய இந்த வேதியரிடம் நீர் தோல்வியை அடைந்து விட்டீர்; உரிய தன்மையோடு நீர் இவருக்குக் குற்றேவல் புரிவது உம்முடைய கடமை" என்று நல்ல குணங்களினால் மிகுதியான சிறப்பைப் பெற்றவர்களும், மேம்பாட்டைப் பெற்றவர்களும், நியாய சபையில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய வேதியர்கள் கூற, அதைக் கேட்டு நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார். "நீங்கள் விதித்த நீதி முறை இதுவே ஆனால் நான் இந்தத் தீர்ப்புக்குச் சம்மதிக்க மாட்டேன்" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, "அது பொருந்துமோ?" என்று கிருபாபுரீசராகிய வேதியர் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு எழுந்து நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

**" 'நான்மறை முனிவ னார்க்கு நம்பியா ரூரர், தோற்றீர்;**
**பான்மையின் ஏவல் செய்தல் கடன்' என்று பண்பில் மிக்க**
**மேன்மையோர் விளம்ப நம்பி, 'விதிமுறை இதுவே ஆகில்**
**யான்இதற்கிசையேன்.' என்ன, 'இசையுமோ?' என்று**
**நின்றார்."**

நம்பிஆரூரர்-நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனாரே; விளி. நான் மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறை வேற்றிய, மறை; ஒருமை பன்மை மயக்கம். முனிவனார்க்கு-முனிவராகிய இந்த வேதியரிடம்; உருபு மயக்கம். தோற்றீர்-நீர் தோல்வியை அடைந்து விட்டீர். பான்மையின்-உரிய தன்மையோடு. ஏவல்-இவருக்குக் குற்றேவல்களை; ஒருமை பன்மை மயக்கம். செய்தல்-புரிவது. கடன்-உம்முடைய கடமை ஆகும். என்று-என. பண்பில்-நல்ல குணங்களால்;

உருபு மயக்கம். மிக்க-மிகுதியான சிறப்பைப் பெற்றவர் களும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். மேன்மை யோர்-மேம்பாட்டைப் பெற்றவர்களும், திருவெண்ணெய் நல்லூரில் இருந்த நியாய சபையில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். விளம்ப-இவ்வாறு தீர்ப்பைக் கூற. நம்பி-நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்திநாயனார். விதி-நீங்கள் விதித்த. முறை-நீதி முறை. இதுவே-இதுதான். ஆகில்-ஆனால். யான்—நான். இதற்கு-இந்தத் தீர்ப்புக்கு. இசையேன்-சம்மதிக்க மாட் டேன். என்ன—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. இசையுமோ-அது பொருந்துமோ. என்று—என்று கிருபாபுரீ சராகிய வேதியர் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. நின்றார்—நியாயசபைக்கு முன்னால் நின்று கொண்டிருந் தார்.

அடுத்துஉள்ள 64—ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'செல்வத்தில் மிகுதியைப் பெற்று விளங்குபவர்களும். திருவெண்ணெய் நல்லூரில் இருக்கும் நியாயசபையில் அமர்ந்திருப்பவர்களும் ஆகிய வேதியர்கள் அவ்வாறு தங்களுக்கு முன்னால் நின்று கொண்டிருந்த செழிப்பைப் பெற்ற வேதியனாகிய முனிவனைப் பார்த்து, ''அருமை யான முனிவனே, நீ முன்னால் காண்பித்த அடிமை ஓலையில் எங்களுடைய பெருமையைச் சேர்ந்துள்ள ஊராகிய திருவெண்ணெய் நல்லூரே உன்னுடைய ஊராக எழுதியி ருப்பதைப் பார்த்தால் உனக்கு இந்தத் திருவெண்ணெய் நல் லூரில் பரம்பரை பரம்பரையாக இருந்து வரும் வீட்டையும் நெடுங்காலமாக வாழும் வாழ்க்கையையும் எங்களுக்குக் காட்டுவாயாக'' என்று கூறினார்கள்.' பாடல் வருமாறு:

**''திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி,**
**'அருமுனி, நீமுன் காட்டும் ஆவண மதனில் எங்கள்**
**பெருமைசேர் பதியே யாகப் பேசிய துமக்கிவ் வூரில்**
**வருமுறை மனையும் நீடுவாழ்க்கையும் காட்டு'கென்றார்.''**

திரு—செல்வத்தில்; 'அழகில்' எனலும் ஆம். மிகு—மிகுதியைப் பெற்று விளங்குபவர்களும் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கும் நியாய சபையில் அமர்ந்திருப்பவர் களும் ஆகிய; பெயரெச்ச வினையாலணையும் பெயர். மறை யோர்—வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நின்ற—தங்களுக்கு முன்னால் நின்று கொண்டிருந்த. செழு-செழிப் பான திருமேனியைப் பெற்ற. மறை—வேதியனாகிய; திணைமயக்கம். முனியை—முனிவனை. நோக்கி—பார்த்து. அரு—அருமையான. முனி—முனிவனே; விளி. நீ முன்—நீ முன்பு. காட்டும்—எங்களுக்குக் காண்பித்த; கால மயக்கம். ஆவணமதனில்—அடிமை ஓலையில். அது: பகுதிப் பொருள் விகுதி. எங்கள்—எங்களுடைய. பெருமை சேர்—பெருமை யைப் பெற்று விளங்கும். பதியே—ஊராகிய திருவெண் ணெய் நல்லூரே. ஆக—உம்முடைய ஊராக. ப்: சந்தி. பேசியது—எழுதப்பட்டிருக்கிறது. 'அப்படியானால்' என் பதை வருவிக்க. உமக்கு—உனக்கு; பன்மை ஒருமை மயக்கம். இவ்வூரில்—இந்தத் திருவெண்ணெய் நல்லூரில். வரு—பரம் பரை பரம்பரையாக இருந்து வரும். மனையும்-வீட்டையும். நீடு-நெடுங்காலமாக இருக்கும். வாழ்க்கையும்—வாழ்க்கை யையும். காட்டுக-எங்களுக்குக் காட்டுவாயாக. என்றார்—என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். காட்டு கென்றார்: தொகுத்தல் விகாரம்.

அடுத்து வரும் 65—ஆம் பாட்டின் உள்ளுறை வருமாறு:

'ஒப்புக் கூறுவதற்கு அருமையாக உள்ள வழக்கில் வெற்றியைப் பெற்ற புண்ணிய மூர்த்தியாரும் முனிவரும் ஆகிய ருபாபுரீசர், ''என்னை உங்களில் ஒருவரேனும் தெரிந்து கொள்ளாதவர் ஆனால் என்னுடன் நீங்கள் வாருங்கள்'' என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்து விட்டு, தம்மைச் சுற்றி இருந்தவர்களும், பெருமையைப் பெற்றவர் களும் ஆகிய வேதியர்களினுடைய கூட்டமும் நம்பி

ஆரூரனாகிய சுந்தரமூர்த்தியும் தமக்குப் பின்னால் வரத் திருவெண்ணெய் நல்லூரில் உள்ள ஆலயமாகிய திருவருட் டுறைக்கு உள்ளே நுழைந்தார்; அவரை யாரும் பார்க்க முடியாதவராகித் திகைப்பை அடைந்து எல்லா வேதியர் களும் நின்று கொண்டிருந்தார்கள்.' பாடல் வருமாறு:

**"பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவர், 'என்னை**
**ஒருவரும் அறியீ ராகில் போதும்' என் றுரைத்துச் சூழ்ந்த**
**பெருமறை யவர்கு ழாமும் நம்பியும் பின்பு செல்லத்**
**திருவருட் டுறையே புக்கார்; கண்டிலர் திகைத்து நின்றார்."**

பொரு—ஒப்பாகக் கூறுவதற்கு. அரும்-அருமையாக உள்ள. வழக்கால்-வழக்கில்; உருபு மயக்கம். வென்ற—வெற்றியைப் பெற்ற. புண்ணிய — புண்ணியமூர்த்தியாகிய. முனிவர்-முனிவராக எழுந்தருளிவந்த கிருபாபுரீசர். என்னை ஒருவரும்—என்னை உங்களுக்குள் ஒருவரேனும். அறியீர்—தெரிந்து கொள்ளாதவர். ஆகில்—ஆனால். போதும்—என்னுடன் வாருங்கள். என்று—என. உரைத்து-திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. ச்:சந்தி. சூழ்ந்த—தம்மைச் சுற்றியிருந்தவர்களும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். பெரு—பெருமையைப் பெற்றவர்களும்; குறிப்பு வினையாலணையும் பெயர். குழாமும்—ஆகிய கூட்டமும். நம்பியும்—நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனாரும். பின்பு—தமக்குப் பின்னால். செல்ல—வர. த்: சந்தி. திருவருட்டுறையே — திருவெண்ணெய் நல்லூரில் உள்ள ஆலயமாகிய திருவருட்டுறைக்கு உள்ளே. புக்கார்—நுழைந் தார். கண்டிலர்—அவரை யாரும் பார்க்க முடியவில்லை. திகைத்து—திகைப்பை அடைந்து. நின்றார்-யாவரும் நின்று கொண்டிருந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

புண்ணிய மூர்த்தி: ''புகலி நிலாவிய புண்ணி யனே.'', ''புண்ணியனைப் புகலி நிலாவு பூங்கொடி யோ டிருந்தானை'', ''புண்ணியர் பூதியர்.'', ''புண்ணிய ரென்றிரு போதும் தொழப்படும் புண்ணியரே.'', ''கொன்றை சேர்முடிப் புண்ணியன்.'', ''புனல் முடித்த புண்ணியன்.'', ''புண்ணியர் உறையும்பதி பூந்தராய்.'', ''புண்ணியர் சிலகதி.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''புண்ணி யன் புகலூரும்.'' ''புண்ணியா உன்னடிக்கே போதுகின் றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''புண்ணியனார் உறை பூவணம் ஈதோ.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''புண்ணிய புராதன.'' என்று பட்டினத்துப் பிள்ளையா ரும், ''புண்ணியனே என்று போற்றி செயாது.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 66-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அடியேங்களுடைய தலைவனாகிய கிருபாபுரீசன் திரு வருட்டுறை என்னும் ஆலயத்துக்குள் எழுந்தருளி மறைய, விளங்குகின்ற மார்பைப் பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார், ''அடியேங்களுடைய நம்பிக்கைக்கு உரியவராகிய கிருபாபுரீ சர் தம்முடைய ஆலயத்துக்குள் நுழைந்தது ஏனோ?'' என்று எண்ணி, நம்பியாரூரராகிய அந்த நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய பெரிய விருப்பத்தோடு தனி யாகப் பின் சென்று அழைக்க, விருப்பம் மருவிய வேற்கண்ணி யம்மையுடன் ஆகாயத்தில் இடபவாகனத்தின்மேல் காட்சி வழங்கியருளி அந்த நாயனாருக்குத் தெரிவித்தருளலா னார்.' பாடல் வருமாறு.

**''எம்பிரான் கோயில் நண்ண**
**இலங்குநூல் மார்பர், 'எங்கள்**
**நம்பர்தம் கோயில் புக்க**
**தென்கொலோ?' என்று நம்பி**

**தம்பெரு விருப்பி னோடு**
**தனித்தொடர்ந் தழைப்ப மாதோ**
**டும்பரின் விடைமேல் தோன்றி**
**அவர்தமக் குணர்த்தல் உற்றார்.''**

எம்பிரான்—அடியேங்களுடைய தலைவனாகிய கிருபா புரீசன். 'அடியேங்கள்' என்றது, சேக்கிழார் தம்மையும் மற்றத் தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. கோயில்—திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் ஆலயமாகிய திருவருட்டுறைக்கு உள்ளே. நண்ண—நுழைந்து மறைய. இலங்கு-விளங்குகின்ற. நூல்-பூணூலை அணிந்த. மார்பர்-மார்பைப் பெற்றவராகிய சுந்தரமூர்த்திநாயனார். எங்கள்-அடியேங்களுடைய; இது சுந்தர மூர்த்தி நாயனார் தம்மையும் வேறு தொண்டர்களையும் சேர்த்துச் சொன்னது. நம்பர்—நம்பிக்கைக்கு உரியவராகிய கிருபாபுரீசர். தம்-தம்முடைய. கோயில்—ஆலயத்துக்கு உள்ளே. புக்கது—நுழைந்தருளியது. வன்கொலோ-ஏனோ? கொல், ஓ; இரண்டும் அசைநிலைகள்.என்று-எனஎண்ணி. நம்பி-நம்பியாரூரராகிய அந்த நாயனார்.தம்-தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய. பெரு—பெரிய. விருப்பினோடு—விருப்பத்தோடு-தனி-தனியாக. த்: சந்தி. தொடர்ந்து-பின்பற்றிச் சென்று. அழைப்ப—அழைக்க, மாதோடு விருப்பம் மருவிய வேற்கண்ணி அம்மையுடன். உம்பரின்-ஆகாயத்தில். விடைமேல்-இடபவாகனத்தின்மேல். தோன்றி-காட்சி கொடுத்தருளி. அவர்தமக்கு—அந்த நாயனாருக்கு. தம்: அசை நிலை. உணர்த்தல் உற்றார்—தெரிவித்தருளவானார்.

நம்பர்: ''நம்பும் பெருமை நன்னா றுடைய நம் பெருமான்.'', ''நம்பனை நல்லடியார்கள் நாமுடை மாடென்றிருக்கும் கொம்பனையாள் பாகன்.'', ''கொடி மாடச் செங்குன்றூர் மேய நம்பன தாள்தொழுவார் வினையாய நாசமே.'', ''கொல்லேறுடை நம்பன்,'',

''நம்பனே நடனே.'','' நம்பா என்ன நல்கும் பெருமான்.'', ''நம்பன் எம் அன்பன்.'', ''செஞ்சடை நம்பன்.'', ''பழங் காவிரித் தென்கரை நம்பன்.'', ''மயேந்திரப் பள்ளியுள் நம்பனாரார்.'','' நம்பன் நாமம் நமச்சி வாயவே.'', ''பெரு வேளூர் நம்பன்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''நம்பனே எங்கள் கோவே.'', ''நம்பனை நகரம் மூன்றும் எரியுண வெருவ நோக்கும் அம்பனை.'', ''நம்பனே நான்மு கத்தாய் நாதனே.'', ''நான்மறை ஓதிய நம்பனை.'', ''பூந்துருத் திந்நகர் நம்பன்.'', ''நம் பனாகிய நன்மணி கண்டனார்.'', ''செஞ்சடை நம்பர்.'', ''கடுவாய்க் கரைத்தென்புத்தூர் நம்பனை.'', ''நாகம் அரைக்கசைத்த நம்பர்.'', ''நம்பனே நான்மறைகள் தொழநின் றானே.'', ''நம்பனே நான்மறைகளா யினானே.'', ''நம்பனை நால்வேதம் கரைகண் டானை.'', ''நம்பன்காண் நணுகாதார் புரமூன்றெய்த வில்லான் காண்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பாண்டிக் கொடுமுடி நம்பனே.'', ''நம்பனை நன்னாறனை.'', ''நம் பனே அன்று வெண்ணெய் நல்லூரில் நாயினேன் தன்னை ஆட்கொண்ட சம்பு வே.'', ''நம்பன் நமை ஆள்வான்.'', ''அரத்துறைவாய் எங்கள் நம்பனே.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 67—ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'முன் காலத்தில் நீ எமக்குத் தொண்டனாக இருந்த வன்; நீ உன்னுடைய உள்ளத்தில் இரண்டு பெண்களிடம் காதல் மிகுதியாகக் கொள்ளப் பிறகு நம்முடைய கட்டளை யினாலே திருநாவலூரில் பிறந்தாய்; மண்ணுலகத்தின்மேல் துன்பங்களை அடையும் வாழ்வு உன்னைத் தொடர்வது நீங்கப் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ச்சியாக வந்த நல்ல அறிவைப் பெற்ற வேதியர்களுக்கு முன்னால் உன்னை

யாம் தடுத்து ஆட்கொண்டோம்'' என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்,' பாடல் வருமாறு:

**'' 'முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்**
**பின்புநம் ஏவ லாலே பிறந்தனை மண்ணின் மீது**
**துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து**
**நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாண்டோம்.' என்றார்.''**

முன்பு—முன்காலத்தில் கயிலாயத்தில் ஆலால சுந்தரனாக. நீ நமக்குத் தொண்டன்—நீ கைலாசபதியாகிய எமக்குத் தொண்டுகளைப் புரிபவனாக இருந்தாய். முன்னிய—உன்னுடைய உள்ளத்தில் எண்ணிய. வேட்கை—இரண்டு பெண்மணிகளிடம் உனக்குக் காதல். கூர—மிகுதியாக உண்டாக. ப்:சந்தி. பின்பு—பிறகு. நம்—எம்முடைய. ஏவலால்—கட்டளையால். ஏ:அசை நிலை. மண்ணின்—மண்ணுலகத்தின். மீது—மேல். பிறந்தனை—சுந்தரமூர்த்தியாகப் பிறந்தாய். துன்பு—துன்பங்களை; ஒருமை பன்மை மயக்கம். உறு—அடையும். வாழ்க்கை—வாழ்வு. நின்னை—உன்னை. தொடர்வு—தொடர்தல். அற—நீங்கும் வண்ணம். த்:சந்தி. தொடர்ந்து—உன்னை நாடித் தொடர்ந்து. வந்து—நாம் ஒரு வேதியனுடைய வடிவத்தில் வந்து. நன்-நல்ல. புல—அறிவைப் பெற்ற. மறையோர்—திருவெண்ணெய் நல்லூரில் இருக்கும் நியாய சபையில் அமர்ந்திருந்த வேதியர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முன்னர்—முன்னால். நாம்—யாம். தடுத்து ஆண்டோம்—உன்னைத் தடுத்து ஆட்கொண்டோம். என்றார்—என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 68-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'என இவ்வாறு எழுந்த வார்த்தைகளின் ஒலியைக் கேட்டு தன்னைப் பெற்ற தாய்ப் பசுமாட்டினுடைய கனைப்

பைக் கேட்ட கன்றுக் குட்டியைப் போலக் கதறிக்கொண்டு நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடைய கைகள், பாதங்கள் முதலிய உறுப்புக்களில் உண்டான மயிர்க்கூச்சு எழும்பத் தம்முடைய கூப்பிக் கும்பிட்ட கைகள் தம்முடைய தலையின்மேல் தாமே இருக்க, "சிதம்பரத்தில் விளங்கும் ஆலயத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் இருக்கும் நடராஜப் பெருமானாரே, அடியேனை வலிய எழுந்தருளி வந்து தடுத்து ஆட்கொண்டது தேவரீருடைய செய்கையோ?'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**'என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக் கேட்ட**
**கன்றுபோல் கதறி நம்பி கரசர ணாதி அங்கம்**
**துன்றிய புளகம் ஆகத் தொழுதகை தலைமேல் ஆக**
**'மன்றுளீர், செயலோ வந்து வலியஆட்கொண்ட'**
**தென்றார்.''**

என்று—என. எழும்—ஆகாயத்தில் எழுந்த. ஓசை—வார்த்தைகளின் ஒலியை. கேளா—கேட்டு. ஈன்ற—தன்னைப் பெற்ற. ஆன்—தாய்ப் பசு மாட்டினுடைய. கனைப்பு-கனைப்பை. க்:சந்தி. கேட்ட கன்று—கேட்ட கன்றுக்குட்டியை. போல்—போல. கதறி-கதறிக்கொண்டு. நம்பி—நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார். கர—தம்முடைய கைகள்; ஒருமை பன்மை மயக்கம். சரணாதி—பாதங்கள் முதலிய; ஒருமை பன்மை மயக்கம். அங்கம்—உறுப்புக்களில்; ஒருமை பன்மை மயக்கம். துன்றிய—அமைந்த. புளகம்—மயிர்க்கூச்சு. ஆக-உண்டாக. த்:சந்தி. தொழுத—கூப்பிக் கும்பிட்ட. கை—தம்முடைய கைகள்; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல்—தம்முடைய தலையின் மேல். ஆக—தாமே ஏற. வந்து—அடியேன் இருக்கும் இடத்துக்கு எழுந்தருளி. வலிய ஆட்கொண்டது-வலிய அடியேனைத் தடுத்து ஆட்கொண்டது. மன்று—சிதம்பரத்தில் விளங்கும் ஆல

யத்தில் இருக்கும் திருச்சிற்றம்பலத்தில். உளீர்—எழுந்தருளி யிருப்பவராகிய நடராஜப் பெருமானாரே. உளீர்: இடைக் குறை. செயலோ-தேவரீருடைய அருட்செயலோ. என்றார்- என்று அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 69-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'எண்ணுவதற்கு உரிய நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்ச தாளங்கள், உடல் என்னும் ஐந்து வாத்தியங்கள் எழுப்பிய இனிய நாதம் ஆகாயத்தில் முழுவதும் நிரம்பி எல்லா இடங்களிலும் தேவலோகத்தில் வாழும் தேவர்கள் சொரிந்த கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களைச் சொரிந்த மழை தரை முழுவதும் நிரம்பி மிகுதியாக விளங்க, இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் மகிழ்ச்சியினால் துள்ளிக் குதிக்க, இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் முழக் கத்தை எழுப்பிப் பேரொலியை உண்டாக்க, தலைவராகிய சுந்தரமூர்த்தி நாயனாரை அடிமை ஓலையைக் காட்டியரு ளித் தடுத்து ஆட்கொண்டவராகிய கிருபாபுரீசர் பின் வரு மாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்வாரானார்.' பாடல் வருமாறு:

**'எண்ணிய ஓசை ஐந்தும் விசும்பிடை நிறைய எங்கும்**
**விண்ணவர் பொழிபூ மாரி மேதினி நிறைந்து விம்ம**
**மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளும் முழங்கி ஆர்ப்ப**
**அண்ணலை ஓலை காட்டி ஆண்டவர் அருளிச்**
**செய்வார்.''**

எண்ணிய-எண்ணுவதற்குரிய. ஓசை ஐந்தும்-நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்ச தாளங்கள், உடல் என்னும் ஐந்து வாத்தியங்களும் எழுப்பும் இனிய ஒலி. விசும்பிடை-ஆகா யத்தில். நிறைய-நிறைந்து முழங்க. எங்கும்-எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். விண்ணவர்-

தேவலோகத்தில் வாழும் தேவர்கள், ஒருமை பன்மை மயக்கம். பொழி-சொரிந்த. பூ-கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களின்; ஒருமை பன்மை மயக்கம். மாரி-மழை. மேதினி- தரை முழுவதும். நிறைந்து-நிரம்பி. விம்ம-மிகுதி யாகத் திகழ. மண்ணவர்-இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்: ஒருமை பன்மை மயக்கம். மகிழ்ச்சி-மகிழ்ச்சியி னால். பொங்க-துள்ளிக் குதிக்க. மறைகளும்-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும். முழங்கி-முழக்கத்தை எழுப்பி. ஆர்ப்ப-பேரொலியை உண்டாக்க. அண்ணலை- தலைவராகிய சுந்தர மூர்த்தி நாயனாரை. 'பெருமை பெற்றவரை' எனலும் ஆம். ஓலை-அடிமை ஓலையை. காட்டி-காண்பித்தருளி. ஆண்டவர்-தடுத்து ஆட்கொண்ட வராகிய கிருபாபுரீசர். அருளிச் செய்வார்-பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்வாரானார்.

அடுத்து வரும் 70-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''நீ வலிமையை உடைய வார்த்தைகளைக் கூறி அத னால் வன்றொண்டன் என்னும் பெயரைப் பெற்றாய்; எமக்கும் பக்தியினால் பெருகி உண்டாகிய சிறப்பில் மிகுதி யான இயல்பைக் கொண்ட அருச்சனை பாடலே ஆகும்; ஆகையால் இந்த மண்ணுலகத்தின்மேல் எம்மை இனிய சுவையைப் பெற்ற சொற்கள் அமைந்த செந்தமிழ் மொழியி னால் திருப்பதிகங்களைப் பாடுவாயாக'' என்று தூயவை ஆகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர் வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் பாடியருளும் திருவாக்கைப் பெற்றவராகிய கிருபாபுரீசர் திருவாய் மலர்ந் தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**'' 'மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்**
**பெற்றனை; நமக்கும் அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க**
**அற்சனை பாட்டே ஆகும்; ஆதலால் மண்மேல் நம்மைச்**
**சொற்றமிழ் பாடு' கென்றார் தூமறை பாடும்வாயார்.''**

மற்று-அசைநிலை. நீ-சுந்தர மூர்த்தியாகிய நீ. வன்மை-வலிமையான வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். பேசி-கூறி. வன்றொண்டன் என்னும் நாமம்—வன்றொண்டன் என்ற பெயரை. பெற்றனை-பெற்று விட்டாய். நமக்கும்-எமக்கும். அன்பால்-பக்தியோடு; உருபு மயக்கம். பெருகிய-பெருகி உள்ள. சிறப்பின்-சிறப்பினால். மிக்க-மிகுதியான இயல்பைக் கொண்ட. அர்ச்சனை-அருச்சனை. பாட்டே-பாடலே ஆகும். ஆதலால்—ஆகையால். மண்மேல்-இந்த மண்ணுலகத்தின்மேல். நம்மை-எம்மை. ச்:சந்தி. சொல்-இனிய சொற்கள் அமைந்த; ஒருமை பன்மை மயக்கம். தமிழ்-செந்தமிழ் மொழியில் திருப்பதிகங்களை; ஆகுபெயர். பாடுக-நீ பாடு வாயாக. தூ-தூயவையான. மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பாடும்-பாடியருளும். வாயார்-திருவாக்கைப் பெற்றவராகிய கிருபா புரீசர். என்றார்-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார். பாடுகென்றார்: தொகுத்தல் விகாரம். சிவபெருமான் வேதங்களை அருளிச் செய்தவர் என்பதைப் புலப்படுத்தும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க.

பின்பு உள்ள 71-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'திருமுடியையும் திருவடிகளையும் அன்னப்பறவையின் வடிவத்தை எடுத்தும், பன்றியின் உருவத்தை எடுத்தும் நிலத்தைத் தோண்டியும் வானத்தில் பறந்தும் தேடியும் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியாதவனும், ந,ம,சி,வா, ய என்ற ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரம் பாடிய பரம்பொருளாக இருப்பவனும் ஆகிய கிருபாபுரீசன், "எம்மை நீ பாடுவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, விரும்பிய திருவுள்ளத்தைப் பெற்றவராகி நம்பியா

ரூரர் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனார் சிதம்பரத்தில் விளங்கும் ஆலயத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளிய நடராஜப் பெருமானாருடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளைத் தம்முடைய கைகளை அஞ்சலியாகக் குவித்துக் கும்பிட்டு நின்று கொண்டு.' பாடல் வருமாறு:

**''தேடிய அயனும் மாலுந் தெளிவுறா ஐந்தெ ழுத்தும்**
**பாடிய பொருளாய் உள்ளான், 'பாடுவாய் நம்மை' என்ன**
**நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர் மன்றுள்**
**ஆடிய செய்ய தாளை அஞ்சலி கூப்பி நின்று.''**

இந்தப் பாடல் குளகம். தேடிய—அன்னப்பறவையின் உருவத்தை எடுத்துத் திருமுடியையும் பன்றியின் வடிவத்தை எடுத்துத் திருவடிகளையும் தேடிப் பார்த்த. அயனும்—பிரம தேவனும். மாலும்—திருமாலும். தெளிவுறா—ஆகாயத்தில் பறந்தும் நிலத்தைத் தோண்டியும் தெளிவாக அறிய முடியாதவரும்; எதிர்மறைப் பெயரெச்ச வினையாலணையும் பெயர். ஐந்து எழுத்தும்—ந, ம, சி, வா, ய என்ற ஐந்து எழுத்துகள் அடங்கிய பஞ்சாட்சரம். எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். பாடிய பொருளாய்—பாடிய பரம்பொருளாகி. உள்ளான்—இருப்பவனாகிய கிருபாபுரீசன். நம்மை—எம்மை. பாடுவாய—நீ பாடுவாயாக. என்ன—என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. நாடிய—அவ்வாறு பாட விரும்பிய. மனத்தராகி—திருவுள்ளத்தைப் பெற்றவராகி. நம்பி ஆரூரர்-நம்பி ஆரூரராகிய சுந்தரமூர்த்தி நாயனார். மன்றுள்—சிதம்பரத்தில் விளங்கும் ஆலயத்தில் இருக்கும் திருச்சிற்றம்பலத்தில். ஆடிய—திரு நடனம் புரிந்தருளிய. செய்ய—செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த. தாளை—நடராஜப்பெருமானாருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். அஞ்சலி—தம்முடைய கைகளை அஞ்சலி

யாக. கூப்பி—குவித்துக் கும்பிட்டு. நின்று—நடராஜப் பெருமானாருடைய சந்நிதியில் நின்றுகொண்டு.

பிறகு வரும் 72-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''அந்தண வேடத்தைப் பூண்டவனாகி அடியேனை வழக்கில் வெல்வதற்காக எழுந்தருளிய இலாபமான திருவருட் செயலைத் தெரிந்துகொள்ளாத அடியேனுக்கு உணர்ச்சியை வழங்கி உஜ்ஜீவனத்தை அடையச்செய்து தடுத்து ஆட்கொண்ட அழுக்கு இல்லாத அமுதத்தைப் போன்ற கிருபாபுரீசனே, இன்றைக்குத் தேவரீருடைய நற் குணங்களாகிய பெரிய சமுத்திரத்தை நாயைப்போன்றவ னாகிய அடியேன் எதைத் தெரிந்து கொண்டு என்ன சொற் களை வைத்துப் பாடுவேன்?'' என்று சுந்தரமூர்த்தி நாய னார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**'' 'வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த**
**ஊதியம் அறியாதேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட**
**கோதிலா அமுதே, இன்றுன் குணப்பெருங் கடலைநாயேன்**
**யாதினை அறிந்தென் சொல்லிப் பாடுகேன்?'**
**எனமொ ழிந்தார்.''**

வேதியன்-அந்தண வேடத்தை; ஆகுபெயர். ஆகி-பூண்டவனாகி. என்னை-அடியேனை. வழக்கினால்—வழக்கில்; உருபு மயக்கம். வெல்ல-வெல்வதற்காக. வந்த—அடியேன் இருக்கும் இடத்திற்கு எழுந்தருளிய. ஊதியம்-அடியேனுக்கு இலாபத்தை வழங்கும் திருவருட் செயலை; அறியாதேனுக்கு-தெரிந்து கொள்ளாத அடியேனுக்கு. உணர்வு- உணர்ச்சியை. தந்து-வழங்கியருளி. உய்ய-உஜ்ஜீவ னத்தை அடையச் செய்து. க்:சந்தி. கொண்ட-தடுத்து ஆட்கொண்ட. கோது-அழுக்கு; 'குற்றம்' எனலும் ஆம். இலா-இல்லாத; இடைக்குறை. அமுத-அமுதத்தைப் போன்ற கிருபாபுரீசனே. இன்று-இன்றைக்கு. உன்-

தேவரீருடைய. குண-நற்குணங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பெரும்-பெருமையைப் பெற்ற. கடலை—சமுத்திரத்தை. நாயேன்-நாயைப் போன்ற அடியேன். நாய் ஒரு முறை வேண்டாமென்று கக்கிய உணவை மீட்டும் உண்ணும். அதைப்போல் அனுபவத்தில் தீயவை என்று விலக்கிய பொருள்களை மீட்டும் அவாவி அனுபவிக்கப் புகும் இயல்பை எண்ணி 'நாயேன்' என்றார். யாதினை- தேவரீருடைய பெருமைகளில் எதை. அறிந்து- தெரிந்து கொண்டு. என்-என்ன. சொல்லி-சொற்களை வைத்து. பாடுகேன்-பாடுவேன். என-என்று; இடைக் குறை. மொழிந்தார்-சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

கோதிலா அமுது; "கோதிலா அமுதே அருள்பெருகு கோருமே." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "குறை விலா நிறைவே கோதிலா அமுதே." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பெரியவர்கள் தம்மை நாயைப் போன்றவன் என்று கூறிக் கொள்ளுதல்: "நாயினும் கடைப்பட் டேனை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "நாயேன்பல நாளும் நினைப்பின்றி மனத்துன்னை.", "பொய்யவன் நாயடி யேன்.", "நாய்தான் போல நடுவே திரிந்து.", "நாயி னேனைப் பொருட்படுத்து." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், "நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு.", "நனவிலும் நாயேற் கருளினையே.", "பிழைப்பு வாய்ப் பொன் றறியா நாயேன்.", "கடைய னாகிய நாயினே னா தலையும்.", "நாயினேன்றன் கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி.", "நாயினேற்கே காட்டா தனஎல்லாம் காட்டி.", "நாயி லாகிய குலத்தினும் கடைப்படும் என்னை.", "நாயினேன் அறிவனாகக் கொண்டோ. எனை ஆண்டது.". "பொல்லா நாயான நீச னேனை.",

''செய்வ தறியாச் சிறுநாயேன்.'', ''நாயான புன்மை யேனை.'',''நாணமில்லாநாயினேன்.'',''பொல்லா நாயான நீசனே.'', ''நாயேற்கருளிட வேண்டும்:'', ''ஏணா ணில்லா நாயினேன்.'', ''கீறி வாத நெஞ்சுடைய நாயினேன்.'', ''நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனை.'', ''நாயிற் கடைப்பட்ட நம்மை இம்மை ஆட் கொண்ட வண்ணங்கள்.'', ''என்னை நாய்சிவிகை ஏற்றுவித்த என் தாதை.'', ''நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணம்.'', ''நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை.'', ''நாய்மேற் றவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த தீமேனியான்.'', ''நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்து.'', ''நாயினேன் உனை நினையவும் மாட்டேன்.'', ''எய்த்தேன் நாயேன்.'', ''நாயேன் றன்னை ஆண்ட பேதாய.'', ''அஞ்சினேன் நாயேன்.'', ''நாயினும் கடையாய வெங்கட்ட னேனையும் ஆட்சி கொள்வான் வந்து காட்டினாய கழுக்குன்றிலே.'', ''அருத்தியினால் நாயடியேன் அணிகொள் தில்லை கண்டேனே.'', ''கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை.'' ''ஆதமிலி நாயேனை.'', ''பால்கி னொடு பரிசொன்றும் அறியாத நாயேனை.'', ''ஒன்றும் போதா நாயேனை.'', ''நாயிற் கடையாம் நாயேனை.'', ''புழுத்தலை நாய்போல இச்சை யாயின ஏழையர்க்கே செய்தங் கிணங்கியே திரிவேனை.'', ''உன் னைப் பிரிந்திங் கொருபொழுதும் தரியேன் நாயேன்.'', ''நாயே அனைய நமைஆண்ட தகவே உடையான்.'', ''சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ.'', ''நாய் சிவிகை ஏற்றுவித்த அம்மை எமக் கருளியவாறார் பெறுவார் அச்சோவே.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பிறகு உள்ள 73-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய பக்தனாகிய சுந்தர மூர்த்தியை அருளோடு பார்த்து அழகிய கண்களைப் பெற்ற கிருபாபுரீசர் பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்வார்; "முன்பு நீ என்னைப் பித்தன் என்றே கூறினாய்; ஆகையால் என்னுடைய பெயரைப் பித்தன் என்றே வைத்துப் பாடுவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார். நின்றுகொண்டிருந்த பெருமையைப் பெற்றவராகிய வன்றொண்டர் தம்மைத் தடுத்து ஆட்கொண்ட வள்ளலாராகிய கிருபாபுரீசரை ஒரு திருப்பதிகத்தால் பாடியருளலானார்.' பாடல் வருமாறு:

**"அன்பனை அருளின் நோக்கி அங்கணர் அருளிச் செய்வார்**
**'முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலாலே**
**என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்.' என்றார்; நின்ற**
**வன்பெருந் தொண்டர் ஆண்ட வள்ளலைப் பாட**
**லுற்றார்."**

அன்பனை-தம்முடைய பக்தனாகிய சுந்தரமூர்த்தியை. அருளின்-அருளோடு. நோக்கி-பார்த்து. அம்-அழகிய. கணர்-கண்களைப் பெற்றவராகிய கிருபாபுரீசர். கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர்:இடைக்குறை. அருளிச் செய்வார்-பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளிச் செய்வார். முன்பு—முன் காலத்தில். எனை-என்னை; இடைக்குறை. ப்:சந்தி. பித்தன்—நீ பித்தன். என்றே மொழிந்தனை—என்றே கூறினாய். ஆதலால்—ஆகையால். ஏ:அசை நிலை. என்—என்னுடைய. பெயர்—பெயரை. பித்தன் என்றே—பித்தன் என்று வைத்தே. பாடுவாய்-பாடுவாயாக. என்றார்—என்று கிருபாபுரீசர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார். நின்ற—திருவருட்டுறை என்னும் ஆலயத்துக்கு முன்னால் நின்றுகொண்டிருந்த. வன்பெரும் தொண்டர்—பெருமையைப் பெற்ற வன்றொண்டராகிய அந்த நாயனார்.

ஆண்ட -தம்மைத் தடுத்து ஆட்கொண்ட. வள்ளலை—வள்ளலாராகிய கிருபாபுரீசரை. ப்: சந்தி. பாடலுற்றார்—ஒரு திருப்பதிகத்தால் பாடலானார்.

அங்கணர்: ''அங்கட் கருணை பெரிதா யவனே.'', ''தேவூர் அங்கணன்றனை அடைந்தனம்.'', ''திரு ஆலவாய் அங்கணா.'', ''அங்கணர் அமரர்கள் அடியிணை தொழுதெழ.'', ''அரவணையானொடு பனிமலரோனும் காணா அங்கணா.'', ''வெங்குருத்திகழ் அங்கணான்.'' என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், ''அங்கணாய் அடைந்தார் வினைதீர்ப்பரே.'', ''அங்கணார் அடியார்க்கருள் நல்குவர்.'', ''அங்கணன் எந்தை.'', ''அங்க ணார்க்கதுலாலவன் தன்மையே.'' ''அங்கணனே அமரர்கள்தம் இறைவா போற்றி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அங்கணனே அருளாய்.'', ''அங்கண் நம்பி.'', ''அங்கணா எனை அஞ்சலென்றருளாய்'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை.'', ''அங்கணனே உடையாய்.''. ''குருந்தம் மேவிய சீர் அங்கணா.'', ''அங்கணன் எங்கள் அமரர் பெம்மான்.'', ''அங்கணன் அந்தணனாய்.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 74-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொத்தில் நிறைந்த மலர்களை அணிந்த கூந்தலைப் பெற்றவளாகிய வேற்கண்ணி அம்மையைத் தன்னுடைய திருமேனியில் ஒரு பாதியில் கொண்டவனாகி, தன்னுடைய அடியவர்களிடம் உண்மையான அன்னையைக் காட்டிலும் இனியவனாக விளங்கும் கிருபாபுரீசனை அந்த இயல் தமிழில் தேர்ச்சி பெற்றவரும், திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவரும், பெருமையைப் பெற்றவரும் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனார், ''பித்தா பிறைசூடீ'' என்ற தொடக்கத்தைக் கொண்ட பெரியதாக விளங்கும்

ஒரு திருப்பதிகத்தை இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்களும், இது முதலாக இருக்கும் வேறு உலகங்களில் வாழ்பவர்கள் யாவரும் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் பாடியருளத் தொடங்கினார்.' பாடல் வருமாறு:

**''கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாய்அடி
யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் வியல்நாவலர்
பெருமான்
'பித்தாபிறை சூடீ'எனப் பெரிதாம் திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல கெல்லாம்உய
எடுத்தார்.'**

கொத்து-கொத்தில். ஆர்-நிறைய உள்ள. மலர்-மலர்களைச் சூடிய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குழலாள்-கூந்தலைப் பெற்ற வேற்கண்ணி அம்மையை. ஒரு கூறாய்-தன்னுடைய திருமேனியில் ஒப்பற்ற பாதியாகக் கொண்டவனாகி; திணை மயக்கம். அடியவர்பால்-தன்னுடைய அடியவர்களிடத்தில்; ஒருமை பன்மை மயக்கம். மெய்-உண்மையான. த்: சந்தி. தாயினும்-ஈன்றெடுத்த அன்னையைக் காட்டிலும். இனியானை-இனியவனாக விளங்கும் கிருபாபுரீசனை. அ-அந்த. வ்: சந்தி. இயல்-இயல் தமிழில் தேர்ச்சி பெற்றவரும்; திணை மயக்கம். நாவலர்-திரு நாவலூரில் திருவவதாரம் செய்தவரும். பெருமான்-பெருமையைப் பெற்றவருமாகிய சுந்தரமூர்த்தி நாயனார். 'பித்தா பிறை சூடீ' என-'பித்தா பிறை சூடீ' என்ற தொடக்கத்தைப் பெற்றதும்; இடைக் குறை. ப்: சந்தி. பெரிது ஆம்-பெரியதாக இருப்பதும் ஆகிய. திருப் பதிகம்-ஒரு திருப்பதிகத்தை. இத் தாரணி-இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்களும்; இட ஆகு பெயர். முதலாம்-முதலாக விளங்கும். உலகு-வேறு உலகங்களில்

வாழபவர்களும்; இட ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம் எல்லாம்-யாவரும். உய-உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம்; இடைக் குறை. எடுத்தார்-பாடியருளத் தொடங்கினார்.

''பித்தா பிறை சூடீ' என்ற தொடக்கத்தைக் கொண்ட பாசுரம் வருமாறு:

**பித்தாபிறை சூடீபெரு மானேஅரு ளாளா**
**எத்தால்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை**
**வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட் டுறையுள்**
**அத்தாஉனக் காளாய்இனி அல்லேனெனல் ஆமே.''**

அம்பிகை ஒரு பாதியாக விளங்குபவன்: ''தேவியோர் கூறினர்.'', ''மலையார் தருதடவாள்ஒரு பாகம்மகிழ் வெய்தி.'', ''பந்தார்விரல் உமையாள்ஒரு பங்கா.'', ''மூரல் முறுவல் வெண்ணகை யாள்ஒரு பாகம் சாரன்.'', ''பெண்தான் பாக மாக.'', மருவார் குழலி மாதோர் பாக மாய்.'', ''வாரார் கொங்கை மாதோர் பாகமாய்.'', ''மாதோர் பாகமாய்.'', ''பெண்ணோர் பாகம் உடை யார்.'', ''வடம்திகழ் மென்முலை யாளைப் பாகமதாக மதித்து.'', ''மேனியின்கண் நேரிழையாள் ஒருபால் கூற டைந்த கொங்கை.'', ''வாரார் கொங்கை மாதோர் பாக மாக.'', ''பெண்ணினைப் பாகம் அமர்ந்து.'', ''மங்கைஒரு பாகம் மகிழ்ந்தான்.'', ''அணியார் மலைமங்கை ஆகம் பாக மாய்.'', ''வீறார் முலையானைப் பாகம் மிகவைத்து.'', ''மங்கையோர் கூறுகந்த மழுவாளன்.'', ''மங்கையோர் கூறுடையான்.'',''தோகை நன்மா மயில்போல் வளர்சாயல் தூமொழியைக் கூடப் பாகமும் வைத்துகந்தான்.'', ''அழ கார்ந்த அஞ்சொல் மங்கைஓர் கூறுடையான்.'', ''பெண்ணி னல் லாளையோர் பாகம் வைத்து.'', ''தனமணி தையல்

தன் பாகன்.'', ''இமயப் பாவை கூறாடு திருவுருவன்.'', ''ஆகம்பெண் ஒரு பாகமாக.'', ''நேரிழை கூறு சேர்வதொர் கோலமாய்.'',''பாதி பெண்ணு ருவாவர்.'',''வார்மலி மென் முலை மாதொரு பாகம தாகுவர்.'', ''மாதொர் கூறுடை நற்றவனை.'', ''சந்த வார்கு ழலாள்உமை தன்னொரு கூறுடை எந்தையான்.'',''அழகமர் மென்முலை யாளை ஓர் கூற்றானை.'', ''உமையோடும் ஒருபாக மதுவாய நிருத் தன்.'', ''மலையர் பாவை பாதியர்.'', ''வாளார் கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை தோளாகம் பாகமாப் புல்கினான்.'', ''தையலாள் ஒரு பாகம்.'',''தைய லோர் கூறுடையான்.'', ''மங்கையோர் கூறுடையான்.'', ''மான்வி ழித்திரு மாதைப் பாகம் வைத்து.'', ''மெல்லிய லோர் பாகம் உடையீர்.'', ''பெண்ணும்ஓர் பாகம் உடை யார்.'', ''பந்தார் விரல்மடவாள் பாகமா.'', ''மங்கை யோர் கூறுடையீர்.'', ''மலையான் மடந்தை மணிபொன் ஆகமோர் பாகமாக.'', ''செப்பிள முலைநன் மங்கை ஒரு பாகமாக.'', ''சூடக முன்கை மங்கையொரு பாகமாக.'', ''கொம்பன்ன மின்னிடையாளோர் கூறன்.'', ''தோகை மாமயி லனைய துடியிடை பாகமும் உடையார்.'', ''இள வனமென் கொங்கை யாள்ஒரு பாகமாக மருவிய.'', ''மானஞ்சும் மடநோக்கி மலைமகள் பாகமும் மருவி.'', ''மங்கை கூறமர் மெய்யான்'', ''ஆயிழைக்கொரு கூறுபட்ட மேனியான்.'', ''மங்கையைப் பாகம துடையவர்.'', ''மாதி லங்கிய பாகத்தன்.'', ''பெண் நிலாவிய பாகனை.'', ''ஒரு பாகம் பெண்ணர்.'',''மாதொர் கூறனை.'',''பெண்ணொர் பாகத்தர்.'', ''ஒருபாகம் மாழையங் கயற்கண்ணி பாலரு ளிய பொருளினர்.'',''பெண்ணொார் கூறினர்.'', ''மாதோர் கூறுகந்து.'', ''மங்கை கூறினன்.'', ''மடந்தை பாகத் தடக்கி.'', ''பொற்றொடி கூறுசேரும் உருவர்.'', ''பெண் ணொார் பாகம் அடைய.'', ''வண்டு வாழும் குழல்

மங்கையோர் கூறுகந்தார்.'', ''உமைபாகம் தோய் பகவா.'', ''அரிமென் குழலாள் தேவியும் திருமேனி ஓர் பாகமாய்.'', ''பூங்குழ லாள்உமை கூறனை.'', ''கல்லினற் பாவையோர் பாகத்தர்.'', ''பந்தமரும் விரல்மங்கை நல்லாள் ஒரு பாகமா.'', ''மையகண் மலைமகள் பாகமாய்.'', ''சந்தமார் முலையாள்தன கூறினார்.'', ''பெண்ணொர் கூறினர்.'', ''பாகமும் பெண்ணினார்.'', ''வார்கொள் மென்முலை யாள்ஒரு பாகமா.'', ''வளைக்கை மங்கை நல்லாளையோர் பாகமா.'', ''பண்ணினேர் மொழியாளை ஒரு பாகனார்'', ''மின்னி னாரிடை யாளொரு பாகமாய் மன்னினான்.'', ''பட்டிசைந்த அல்குலாள் பாவையாள் ஓர் பாகமா.'', ''மலைமலி மங்கை பாகம் மகிழ்ந்தான்.'', ''பெண்ணமர் கூறுடையான்.'', ''பெண்புணர் கூறுடை யான்.'', ''கூறணிந்தார் கொடியிடையை.'', ''இமவான் மகளோர் பாகம் நிலைசெய்து கூறுடைய வேடமொடு.'', ''மைத்தகு மதர்விழி மலைமகள் உருஒரு பாகமா வைத்த வர்.'', ''துடிபடும் இடையுடை மடவிரல் உடனொரு பாகமா.'', ''பண்டலை மழலைசெய் யாழென மொழி உமை பாகமாக் கொண்டு.'', ''காம்பினை வென்ற மென் றோளி ''பாகம் கலந்தான்.'', ''பாதி கொண்டதும் மாதையே.'', ''பாதியோர் மாதர்.'', ''பூங்கொடி மடவாள் உமைஒரு பாகம் புரிதரு சடைமுடி அடிகள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''கொம்பமரும் கொடிமருங்குற் கோல்வளையாள் ஒருபாகா.'', ''பாதி யாம் உமைதன்னோடும் பாகமாய் நின்ற எந்தை.'', ''நங்கையைப் பாகம் வைத்தார்.'', ''உவந்திட்டங் குமை யோர் பாகம் வைத்தவர்.'', ''மங்கையைப் பாகம் வைத் தார்.'', ''மாதை ஓர் பாகம் வைத்தார்.'', ''பாதிப்பெண் உருவம் ஆனார்.'', ''பாதியில் உமையாள் தன்னைப் பாகமா வைத்த பண்பன்.'', ''செல்வியைப் பாகம் கொண்

டார்.'', ''மலையினார் மகளோர் பாக மைந்தனார்.'', ''ஒருத்தியைப் பாகம் வைத்தான்.'', ''பாதியிற் பெண்ணு மாகி.'', ''பெண்ணொரு பாக மாகி.'', ''கன்னியோர் பாக மாகி.'',''அணங்குமை பாக மாக அடக்கிய ஆதி மூர்த்தி.'', ''மடந்தை பாகத்தர்.'', ''பாதிஓர் பெண்ணை வைத் தாய்.'', ''கொம்பனார் பாகர் போலும்.'', ''உமையாளை யும் பாகம் வைத்த ஒன்றரைக் கண்ணன்.'', ''மலையான் மடமங்கை மகிழ்ந்துடனே பாகம் வைத்தாய்.''; ''பண்ணின் இன்மொழி யாளைஓர் பாகமா.'', ''பண் தொத்த மொழியாளையோர் பாகமாய்.'', ''ஒருத்தியை ஒருபாகத் தடக்கியும்.'', ''நங்கை பாகம் வைத்தந் நறுஞ் சோதியை.'', ''பூமென் கோதை உமையொரு பாகனை.'', ''மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்.'',''பாதிப் பெண் ணொரு பாகத்தன்.'', ''மாதினை மதித்தான் ஒரு பாகமா.'', ''அணங்கு பாகத்தர்.'', ''நேரிழை கூற்றி னான்.'', ''வெற்பன் மடந்தைஓர் கூறன்.'', ''வெற்பின் மடப்பாவை ஓர்பாதி ஆனான்.'', ''மாதொர் பாகன்.'', ''மலைமங்கையொர் பாகமாக் கூறினார்.'', ''ஆயிழையா ளொரு கூற்றன் மேனியில்.'', ''பாதிபெண் உருவாய பரமன்.'', ''பாதிப்பெண் உருவாகி.'', ''கூறேறும் உமை பாகமோர் பாலராய்.'', ''வாரேறு வனமுலையாள் பாக மாக.'', ''பந்தணவு மெல்விரலாள் பாக னாமே.'', 'கூறேறுமை யொருபாற் கொண்டாய்.'', ''கூறுடைய மடவாளோர் பாகம் கொண்டு.'', ''காம்பேய் தோளி பற்றாகும் பாகத்தார்.'', ''உமையாளோர் பாகனு மாம்.'', ''கோல்வளையாள் கூறனாம்.'', ''உமையாள் ஓர் பாகனாம்.'', ''வாளார் கண்ணி பயிலும் திருவுருவம் பாகம் மேயார்,'', ''மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்.'', ''அருப்போட்டும் முலைமடவாள் பாகம் தோன்றும்.'', ''மாதிமைய மாதொருகூ றாயினானை.'', ''மையார் மலர்க்கண்ணாள் பாகர்.'', ''மலைவளர்த்த

மடமங்கை பாகத்தான்.'', ''வாய்ந்த வளைக்கையாள் பாக மாக.'', ''பாதித்தன் திருவுருவிற் பெண்கொண் டானை.'', ''மின்னிடையாள் பாகன்.'', ''வாரேறு வன முலையாள் பாகத்தான்.'', ''மின்நலத்த நுண்ணிடை யாள் பாகத்தான்.'', ''கொம்பனைய நுண்ணிடையாள் கூறா போற்றி.'', ''பாதி ஒருபெண்.'', ''பெண்பால் ஒரு பாகம்.'', ''கூறாக உமைபாகம் கொண்டான்.'', ''ஒருபாகத் துமையோடு. ''மலைமங்கை பாகமாக வைத்தவனே.''; ''பாகத்தோர் பொண்ணுடையார்.'', ''பந்தணவு மெல்விர லாள் பாகன்.'', ''மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்.'', ''பண்தங்கு மொழிமடவாள் பாகத்தான்.'', ''பைங்கொடியாள் பாகன்.'', ''உமை பாக மாக.'', ''ஆகத் தோர் பாகத்தே அமர வைத்த மங்கையனை.'', ''மாதினை ஓர் கூறுகந்தாய்.'', ''ஆயிழையாள் உமையாள் பாகம் அமர்ந்தவன்.'', ''உமையவளை ஒருபாகம் சேர்த்தி னான்.'', ''பெண்பாகம் வைத்தான்.'', ''மைம்மேவு கண்ணியாள்ஓர் பாதியனை.'', ''பந்தாடும் மெல்விரலாள் பாகன்.'', ''வாராரும் முலைமங்கை பாகத் தான்.'', ''பாலின் மொழியாள் ஓர்பாகம் கண்டேன்.'', ''மலைமகளைப் பாகம் அமர்ந்தார் தாமே.'', ''உமை யிருந்த பாகத்துள் ஒருவன்.'', ''வண்டாடு பூங்குழலாள் பாகன்.'', ''உமையவளோர் பாகத் தான்காண்.'', ''தெரிவைஒரு பாகத்துச் சேர்த்தி னானை.'', ''உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை.'', ''வார்பொதியும் முலை யாள்ஓர் கூறன்.'', ''நேர்ந்தொருத்தி ஒருபாகத் தடங்கக் கண்டு.'', ''செப்புருவ முலைமலையாள் பாகம் கொண் டார்.'', ''மைவிரவு கண்ணாளைப் பாகம் கொண்டாய்.'', ''மையாடு கண்மடவாள் பாகத் தானே.'', ''அன்னநடை மடவாள் பாகத் தானே.'' என்று திருநாவுக்கரசு நாயனா ரும், ''மழைக்கண் மடவாளை ஓர்பாகம் வைத்தீர்.'', ''மின்னனையாள் திருமேனி விளங்கவோர் தன்னமர் பாகம

தாகிய சங்கரன்.'', ''குழலை வென்றமொழி மடவாளை ஓர் கூறானாம்.'', ''தையலோர் பாகம் அமர்ந்தவன்.'', ''மங்கையோர் பாகர்.'', ''பாதிஓர் பெண்ணை வைத்தாய்.'',''வம்பமரும் குழலாள் ஒருபாகம் அமர்ந்தவனே.'', ''மங்கையொர் கூறுடையான்.'', ''மங்கையொர் கூறமர்ந்தீர்.'', ''வண்டாரும் குழலாள் உமைபாகம் மகிழ்ந்தவனே.'', ''உமையோர் கூறுடையாய்.'', ''பந்தாரும் விரலாள் ஒரு பாகம் அமர்ந்தவனே.'', ''அரவேர் அல்குவாளை ஓர்பாகம் அமர்ந்து.'', ''மலைப்பாவை கூறு தாங்கிய குழகரோ.'', ''நீனெடுங் கண்ணி னாளொடும் கூறராய் வந்து நிற்றிரால்.'', ''தேவியம்பொன் மலைக்கோமான் தன் பாவை ஆகத் தனதுருவம் ஒருபாகம் சேர்த்துவித்த பெருமான்.'',''இமவான் மகள் கூறன்றிக் கூறுவ தில்லையோ.'', ''நிரைவளை மங்கை கூறு தாங்கிய கொள்கையி னானை.'', ''ஒப்பிலா முலையாள் ஒருபாகா.'', ''பாதி மாதொரு கூறுடை யானே.'',''கொம்பனநுண்ணிடையாள் கூறனை.'' ''மங்கை பாகமும்...உடையர்.'',''மின்னிலங்கு ஐண்ணிடையாள் பாகமா.'', ''பஞ்சேரும் மெல்லடியானையோர் பாகமாய்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''கூறுடை மங்கையும் தானும்.'', ''பாகம் பெண்ணோ டாயின பரிசும்.'', ''மாதிற் கூறுடை மாப்பெரும் கருணையன்.'', ''குவளைக் கண்ணி கூறன்.'', ''பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி.'', ''குரவுவார் குழல்மடவாள் கூறுடையாள் ஒரு பாகம்.'', ''மாதாளும் பாகத் தெந்தை.'', ''மானை நோக்கிதன் கூறனை.'', ''கொம்பரார் மருங்குல் மங்கை கூற.'', ''பெண்சுமந்த பாகத்தன்.'', ''பெண்ணாளும் பாகனை.'', ''கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை.'', ''மலைமகளை ஒருபாகம் வைத்தலுமே.'', ''மாதாடு பாகத்தன்.'', ''பாதி மாதொடும் கூடிய பரம் பரன்.'', ''சுரிகுழற் பணைமுலை மடந்தை பாதியே.'', ''கொடியே ரிடையாள் கூறா.'',''பைந்நாப்படவே ரல்குல்

உமை பாகமதாய்.'', ''கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறா.'', ''மட்டு லார்குழல் மங்கை யாளையோர் பாகம் வைத்த அழகன்.'', ''மாதிவர் பாகன்.''. ''மாதொரு கூறுடைய பிரான்.'' என்று மாணிக்கவாசகரும் பாடியவற்றைக் காண்க.

மெய்த்தாயினும் இனியான்: ''தாயினும் நல்ல தலைவர்.''என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''தாயினும் நல்ல சங்கரன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''தாயிற் சிறந்த தயாவான தத்துவனே.'', ''தாயிற் பெரிதும் தயாவுடைய தம்பெருமான்.'',''பால் நினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து.'' என்று மாணிக்கவாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 75-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'முறைப்படி உண்டாகும் சுவர விந்நியாச விசேடங்களால் உண்டாகும் இனிமையோடு தாம்பாடிய இந்தளப்பண் அமைந்த திருப்பதிகத்தில் முதலில் துரிதம், விளம்பிதம், மத்திமம் என்னும் மூன்று இசை வேறுபாடுகளும் குறையாத வண்ணம் சேர்ந்திருக்கும் உரிமையினால் ஓசை நிறைந்த தாளத்தோடும் சங்கீதத்தின் கொள்கையோடும் பொருந்தியதும், நெடுங்காலம் புகழ்பெறும் வகையோடு விளங்குவதும் ஆகிய அந்தத் திருப்பதிகத்தை, இறைவனாகிய கிருபாபுரீசன் மகிழ்ச்சியை அடையும் இசைப் பாடல்களை எல்லா மக்களும் தனக்கு ஒப்பு இல்லாதவனாகிய சுந்தரமூர்த்தி பாடியருளினான்.' பாடல் வருமாறு:

**'முறையால்வரு மதுரத்துடன் மொழி இந்தளம் முதலில்**
**குறையாநிலை மும்மைப்படி கூடும் கிழ மையினால்**
**நிறைபாணியின் இசைகோன்புணர் நீடும்புகழ் வகையால்**
**இறையான் மகிழ் இசைபாடினன் எல்லாம்நிகர்**
**இல்லான்.''**

முறையால்—முறைப்படி. வரு—உண்டாகும். மதுரத்துடன்-சுவர விந்நியாச விசேடங்களால் உண்டாகும் இனிமையோடு. மொழி—தாம் பாடியருளிய. இந்தளம்-இந்தளப் பண் அமைந்த திருப்பதிகத்தில்; ஆகுபெயர். முதலில்—முதற் பகுதியில் குறையா நிலை—குறையாத நிலையைப் பெற்ற. மும்மைப்படி—துரிதம், விளம்பிதம், மத்திமம் என்னும் மூன்று இசை வேறுபாடுகளும்; படி: ஒருமை பன்மை மயக்கம். கூடும்—குறையாத வண்ணம் சேர்ந்திருக்கும். கிழமையினால்—உரிமையால். நிறை—ஓசை நிறைந்த. பாணியின்—தாளத்தோடும். இசைகோள்—சங்கீதத்துக்குரிய கொள்கையோடும். புணர்—பொருந்தியதும்; வினையாலணையும் பெயர். நீடும்—நெடுங்காலமாக விளங்கும். புகழ் வகையால்—புகழ்பெறும் வகைகளோடு; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். இறையான்—இறைவனாகிய கிருபாபுரீசன். மகிழ்—மகிழ்ச்சியை அடையும். இசை—அந்த இந்தளப்பண் அமைந்த திருப்பதிகத்தை; ஆகுபெயர். எல்லாம்—இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள் யாவரும். நிகர்—தனக்கு ஒப்பு. இலான்—இல்லாதவனாகிய சுந்தரமூர்த்தி; இடைக் குறை பாடினன்—பாடி அருளினான்.

அடுத்து உள்ள 76-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'இனிய சுவைபெற்ற சொற்கள் நிறைந்த செந்தமிழ் மொழியால் இந்தளப் பண் அமைந்த திருப்பதிகத்தைப் பாடியருளிய வன்றொண்டனாகிய சுந்தரமூர்த்தியைப் பார்த்து, "இதற்கு மேலும் பல வகைகளில் இந்தப் பூ மண்டலத்தில் நம்முடைய புகழை நீ பாடுவாயாக" என்று தனக்கு உண்டான அன்போடு நல்லவர்கள் வாழும் திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் ஆலயமாகிய திருவருட்டுறையில் விரும்பி எழுந்தருளியிருப்பவனும், தன்னுடைய அடியவர்களுக்குப் பல வகையான நம்பிக்கைகளை உண்டாக்

குபவனும், எல்லா உலகங்களிலும் வாழ்பவர்கள் உஜ்ஜீ வனத்தை அடையும் வண்ணம் தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களையும் திருமாலாகிய அம்பினால் எய்து அழித்தவனும் ஆகிய கிருபாபுரீசன் திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.' பாடல் வருமாறு.

**"சொல்ல ார்தமிழ் இசைபாடிய தொண்டன்றனை, 'இன்னும்**
**பல்லாறுல கினில்நம்புகழ் பா' டென்றுறு பரிவில்**
**நல்லார்வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்**
**எல்லாவுல குய்யப்புரம் எய்தான்அருள் செய்தான்."**

சொல்—இனிய சுவை பெற்ற சொற்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்—நிறைந்த. தமிழ்—செந்தமிழ் மொழியில். இசை—இந்தளப்பண் அமைந்த 'பித்தா பிறை சூடீ' என்று தொடங்கும் திருப்பதிகத்தை; ஆகு பெயர். பாடிய—பாடியருளிய. தொண்டன்றனை—வன் றொண்டனாகிய சுந்தரமூர்த்தியை; தன்: அசை நிலை. இன்னும்—இந்தத் திருப்பதிகத்துக்கு மேலும். பல்லாறு— பல வகைகளில்; ஒருமை பன்மை மயக்கம். உலகினில்— இந்தப் பூமண்டலத்தில். நம்—எம்முடைய. புகழ்—புகழை வைத்து. பாடு—திருப்பதிகங்களைப் பாடுவாயாக. என்று —என. பரிவில்—தனக்கு உண்டான அன்பினால்; உருபு மயக்கம். நல்லார்—நல்ல சான்றோர்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். வெண்ணெய் நல்லூர்—திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும். அருட்டுறை—திருவருட்டுறை என் னும் பெயரைப் பெற்ற திருக்கோயிலில். மேவிய—விரும்பி எழுந்தருளியவனும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். நம்பன்—தன்னுடைய அடியவர்களுக்கு, 'இவரை வணங்கி னால் நமக்கு நிறையச் செல்வம் சேரும்; நல்ல விளைநிலங் கள் கிடைக்கும்; நல்ல திருமாளிகையைப் பெறலாம்; நல்ல மக்கட்பேறு உண்டாகும்; நல்ல உறவினர்களும் நண்பர்

களும் கிடைப்பார்கள்; நம்முடைய புதல்விக்கு நல்ல கணவன் வருவான்; நம்முடைய புதல்வனுக்கு அழகுள்ள கன்னிகை திருமணம் செய்யக் கிடைப்பாள்' என்பவற்றைப் போன்ற நம்பிக்கைகளை உண்டாக்குபவனும். எல்லா—அகில. உலகு—உலகங்களில் வாழ்பவர்களும்; உலகு: ஒருமை பன்மை மயக்கம்; இட ஆகு பெயர். உய்ய—உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். ப்:சந்தி. புரம்—தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை; ஒருமை பன்மை மயக்கம். எய்தான்—திருமாலாகிய அம்பை எய்து அழித்தவனும் ஆகிய கிருபாபுரீசன். அருள் செய்தான்—திருவாய் மலர்ந்தருளிச் செய்தான்.

திருமாலாகிய அம்பு: "குன்ற வார்சிலை நாண்அரா அரி வாளி...மும்மதில் வென்ற" என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியதைக் காண்க.

அடுத்து வரும் 77-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அயலாக உள்ள மக்கள் ஆகிய பிறர் தவத்தை இடைவிடாது முயற்சிசெய்து சிவகதியைப் பெறுவார்கள் அல்லவா? ஆனால் திருமணம் நடைபெறாமல் தடை பட்ட அன்றைக்கே தன்னுடைய உள்ளம் வருந்தும் செய்கையோடு இருந்தவளும், புத்தூரில் பிறந்த ஆதி சைவ அந்தணனாகிய சடங்கவி சிவாசாரியாருடைய புதல்வியும் ஆகிய கன்னிகை உயர்ச்சியைக் கொண்ட திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய ஒப்பற்ற தலைவனாகிய சுந்தரமூர்த்தியை இடைவிடாமல் தியானம் செய்த வழியினால், நீங்காமல் வானுலகத்திற்கு மேலே உயர்ந்த சிவலோக பதவியையும் எளியதாக இருக்கும் விதத்தால் பெற்றாள்.' பாடல் வருமாறு:

**"அயலோர்தவம் முயல்வார்பிறர் அன்றேமணம் அழியும்**
**செயலால்நிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்**
**உயர்நாவலர் தனிநாதனை ஒழியாதுணர் வழியில்**
**பெயராதுயர் சிவலோகமும் எளிதாம்வகை பெற்றாள்."**

அயலோர்—அயலாக உள்ள மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். தவம்—தவத்தை. முயல்வார்—இடைவிடாது முயற்சி செய்து புரிந்து சிவ கதியைப் பெறுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். பிறர் அன்றே—அவ்வாறு புரிபவர்கள் மற்றவர்கள் அல்லவா? பிறர்: ஒருமை பன்மை மயக்கம். 'ஆனால்' என்ற சொல்லை இங்கே வருவிக்க. மணம்—தனக்காக நிச்சயித்த திருமணம். அழியும்—தடைப்பட்ட; கால மயக்கம். செயலால்—செய்கையால். நிகழ்—வருத்தத்தோடு இருந்த. புத்தூர் வரு—புத்தூரில் பிறந்த. சிவவேதியன்—ஆதிசைவ அந்தணனாகிய சடங்கவி சிவாசாரியனுடைய. மகளும்—புதல்வியாகிய கன்னிகையும். உயர்—உயர்ந்த புகழைப் பெற்ற. நாவலர்—திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தரமூர்த்தி நாயனாராகிய. தனி—ஒப்பற்ற. நாதனை—தலைவனாகிய சுந்தரமூர்த்தியை. ஒழியாது—இடைவிடாமல். உணர்—தியானம் செய்யும். வழியில்—வழியினால்; உருபு மயக்கம். பெயராது—எந்தக் காலத்திலும் மாறாமல். உயர்-தேவலோகத்துக்கு மேல் உயரமாக விளங்கும். சிவலோகமும்-சிவலோகபதவியையும். எளிதாம்-எளியதாக இருக்கும். வகை—முறையில். பெற்றாள்—அடையும் பாக்கியத்தைப் பெற்றாள். மற்றவர்கள் பெரு முயற்சி செய்து தவத்தைப் புரிந்து பெறும் சிவலோக பதவியை இந்தக் கன்னிகை சுந்தரமூர்த்தி நாயனாரைத் தியானம் செய்ததனாலே எளிதில் பெற்றாள் என்பது கருத்து

பின்பு உள்ள 78-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய அரசனும், நம்பியாரூரனும் ஆகிய சுந்தரமூர்த்தியைத் திருவெண்ணெய்

நல்லூரில் மேவி விளங்கும் ஆலயமாகிய திருவருட்டுறையில் விரும்பி எழுந்தருளியுள்ள கிருபாபுரீசராகிய அந்தணர் தன்னைத் தடுத்து ஆட்கொண்டதற்குப் பிறகு செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், குமுத மலர், நீலோற்பல மலர் முதலிய நீர்ப்பூக்கள் மலர்ந்த தடாகமும் பொய்கையும் விளங்கும் திருநாவலூருக்குள் நுழைந்து தேவர்களின் தலைவனான திருநாவலேசுவரனை வணங்கிவிட்டு அந்த நாயனார் ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

**''நாவலர்கோன் ஆரூரன் தனைவெண்ணெய் நல்லூரில்**
**மேவும்அருட் டுறையமர்ந்த வேதியர்ஆட் கொண்டதற்பின்**
**பூவலரும் தடம்பொய்கைத் திருநாவ லூர்புகுந்து**
**தேவர்பிரான் தனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார்.''**

நாவலர்—திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவனாகிய. கோன்—அரசனும். ஆரூரன் தனை-நம்பியாரூரனும் ஆகிய சுந்தரமூர்த்தியை. தன்: அசை நிலை. வெண்ணெய் நல்லூரில்—திருவெண்ணெய் நல்லூரில். மேவும்—மேவி விளங்கும். அருட்டுறை—ஆலயமாகிய திருவருட்டுறையில். அமர்ந்த—விரும்பி எழுந்தருளியுள்ள. வேதியர்—அந்தணராக எழுந்தருளி வந்த கிருபாபுரீசர். ஆட்கொண்டதற்பின்—தடுத்து ஆட்கொண்டதற்குப் பிறகு. பூ—செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், குமுத மலர், நீலோற்பல மலர், செங்கழுநீர்ப் பூ முதலிய நீர்ப்பூக்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலரும்—மலர்ந்திருக்கும். தடம்—தடாகத்தையும். பொய்கை—மனிதர் ஆக்காத நீர் நிலையையும் பெற்ற. த்: சந்தி. திருநாவலூர்—திருநாவலூருக்குள். புகுந்து—நுழைந்து. தேவர்—தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் தனை—தலைவனாகிய திருநாவலேசுவ்ரனை. தன்: அசை நிலை. ப்: சந்தி. பணிந்து-சுந்தரமூர்த்தி நாயனார் வணங்கிவிட்டு.

திருப்பதிகம்—ஒரு திருப்பதிகத்தை. பாடினார்—பாடியருளி னார்.

திருநாவலூரைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய திருப்பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

**''கோவலன் நான்முகன் வானவர்**
**கோனும் குற்றேவல் செய்ய**
**மேவலர் முப்புரம் தீஎழு**
**வித்தவன் ஓரம்பினால்**
**ஏவல னார்வெண்ணெய் நல்லூரில்**
**வைத்தெனை ஆளும்கொண்ட**
**நாவல னார்க்கிடம் ஆவது**
**நம்திரு நாவலூரே.''**

திருநாவலூர்: இது நடு நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் திரு நாவலேசுவரர். அம்பிகை சுந்தரநாயகி அம்மை. இந்தத் தலம் இக்காலத்தில் திருநாம நல்லூர் என வழங்கும். இது பண்ணுருட்டியிலி ருந்து மேற்கில் பதினொரு மைல் தூரத்தில் இருக்கிறது. சுந்தரமூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய தலம் இது; சுக்கிரன் வழிபட்டது. இதைப்பற்றிய மற்றொரு பாசுரம் வருமாறு:

**''வாயாடி மாமறை ஓதிஓர் வேதியன் ஆகிவந்து**
**தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்றோர் வேடுவனாய்**
**வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளும்கொண்ட**
**நாயாடி யார்க்கிடம் ஆவது நம்திரு நாவலூரே.''**

அடுத்து வரும் 79-ஆம் பாடலின் கருத்து வருமாறு :

'சுந்தரமூர்த்தி நாயனார் சிவபெருமானாகிய பசுபதீசு வரன் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருத்

துறையூர் என்னும் சிவத்தலத்திற்கு எழுந்தருளி அந்தத் தலத்தை அடைந்து, "அடியேன் செய்த பாவங்களால் வீணான வழியில் போகாமல் அடியேனைத் தடுத்து ஆட்கொண்டாய்; அடியேனுக்குத் தவம் புரியும் வழியை வழங்கி அருள்வாயாக" என்று விண்ணப்பித்துத் தம்முடைய தலைவனாகிய பசுபதீசுவரனுடைய சந்நிதியில் நின்று கொண்டு பிறப்பு என்னும் வழிக்குப் பரிகாரமாக இருக்கும் ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

**"சிவனுறையும் திருத்துறையூர் சென்றணைந்து, 'தீவினை யால்**
**அவநெறியிற் செல்லாமே தடுத்தாண்டாய்; அடியேற்குத்**
**தவநெறிதந் தருள்' என்று தம்பிரான் முன்னின்று**
**பவநெறிக்கு விலக்காகும் திருப்பதிகம் பாடினார்."**

சிவன்-சிவபெருமானாகிய பசுபதீசுவரன். உறையும்-திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். திருத் துறையூர்-திருத்துறையூர் என்னும் சிவத்தலத்திற்கு. சென்று-சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளி. அணைந்து-அந்தத் தலத்தை அடைந்து. தீவினையால்-அடியேன் அறியாமையினால் செய்த பாவச் செயல்களால்; ஒருமை பன்மை மயக்கம். அவநெறியில்-வீணான வழிகளில்; ஒருமை பன்மை மயக்கம். செல்லாமே-அடியேன் போகாமல். தடுத்து ஆண்டாய்-நீ அடியேனைத் தடுத்து ஆட்கொண் டாய். அடியேற்கு-அடியேனுக்கு. த்:சந்தி. தவநெறி-தவத்தைப் புரியும் வழியை. தந்தருள்-வழங்கியருள்வாயாக. என்று-என்று விண்ணப்பித்துக்கொண்டு. தம்பிரான்-தம் முடைய தலைவனாகிய பசுபதீசுவரனுடைய. முன்-சந்நிதி யில். நின்று-நின்றுகொண்டு. பவ-பிறப்பாகிய. நெறிக்கு-வழிக்கு. விலக்காகும்—பரிகாரமாக இருக்கும். திருப்பதிகம்-ஒரு திருப்பதிகத்தை. பாடினார்-அந்த நாயனார் பாடியரு ளினார்.

திருத்துறையூர்: இது நடு நாட்டில் பெண்ணை யாற்றின் கரையில் விளங்கும் சிவத்தலம். இங்கே கோயில்கொண்டிருப் பவர் பசுபதீசுவரர். அம்பிகை பூங்கோதை நாயகி. இந்தத் தலம் இக்காலத்தில் திருத்தளூர் என்று வழங்கும். இது பண்ணுருட்டியிலிருந்து வடமேற்கில் ஐந்து மைல் தூரத்தில் உள்ளது. சிவஞான சித்தியார் என்னும் சைவ சித்தாந்த நூலைப் பாடியருளிய சகலாகம பண்டிதர் என்னும் காரணத் திருநாமத்தைப் பெற்ற அருணந்தி சிவாசாரியர் என்ற திருநாமத்தைக் கொண்ட சந்தானாசிரியர் திருவவ தாரம் செய்தருளிய தலம் இது. இதைப்பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

**''விண்ணார்ந்தன மேகங்கள் நின்று பொழிய**
**மண்ணாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபாற்**
**புண்ணார் மொழிப் பாவையர் ஆடும் துறையூர்**
**அண்ணாஉனை வேண்டிக் சொள்வேன் தவநெறியே.''**

பசுபதீசுவரரைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

**''சாம்பலைப் பூசித் தரையிற் புரண்டுநின் தாள்பரவி**
**ஏம்பலிப் பார்கட் கிரங்குகண் டாயிருங் கங்கைஎன்னும்**
**காம்பலைக் கும்பணைத் தோளி கதிர்ப்பூண் வனமுலைமேல்**
**பாம்பலைக் கும்சடை யாய்எம்மை ஆளும் பசுபதியே.''**

அடுத்து உள்ள 80-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தரமூர்த்திநாயனார் விண்ணப்பித்துக் கொண்ட வண்ணமே, மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்து இந்திரியங்களும் ஒன்றாகப் பொருந் தியிருக்குமாறு தவத்தோடு தாம் விரும்பிய வழியை வழங்கி யருளப் பலவகையான மலர்களைக் கொண்ட மரங்கள் வளர்ந்து நிற்கும் நறுமணம் கமழும் பொழில் சூழ்ந்த திருத்

துறையூரில் விரும்பி வீற்றிருந்தருளுபவரும், பிறைச்சந்திர னும் குளிர்ச்சியைப் பெற்ற கங்கையாற்றின் நீரும் விளங்கும் நீளமான சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் கொண்டவருமாகிய பசுபதீசுவரருடைய திருவடிகளைப் பல வகையான மலர்களைக் கொண்டு அருச்சனை செய்து வாழ்த்துக்களைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து வன் றொண்டராகிய அந்த நாயனார் வணங்கினார்.'

பாடல் வருமாறு :

**'புலனொன்றும் படிதவத்திற் புரிந்தநெறி கொடுத்தருள**
**அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூர் அமர்ந் தருளும்**
**நிலவும்தண் புனலும்ஒளிர் நீள்சடையோன் திருப்பாதம்**
**மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்றொண்டர்.'**

புலன்-சுந்தரமூர்த்தி நாயனார் விண்ணப்பித்துக் கொண்ட வண்ணமே, மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்து இந்திரியங்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஒன்றும்படி-ஒன்றாகப் பொருந்தியிருக்குமாறு. தவத்தில்-தவத்தோடு; உருபு மயக்கம். புரிந்த-தாம் விரும்பிய. நெறி-வழியை. கொடுத்தருள-வழங்கியருள. அலர்கொண்ட—பல வகையான மலர்களைக் கொண்ட மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மரங்களாவன: மா மரம், மகிழ மரம்; பவள மல்லிகை மரம், வாகை மரம், வேங்கை மரம், பூவரச மரம், வில்வ மரம், புளிய மரம், விளாமரம், வேப்ப மரம் முதலியவை. நறும்-நறுமணம் கமழும். சோலை-பூம் பொழில் சூழ்ந்த. த்:சந்தி. திருத்துறையூர்-திருத்துறையூரில். அமர்ந்தருளும்-வீற்றிருந்தருளும். நிலவும்-பிறைச்சந்திர னும். தண்-குளிர்ச்சியைப் பெற்ற. புனலும்-கங்கையாற்றின் நீரும். ஒளிர்-தங்கி விளங்கும். நீள்-நீளமான. சடையோன்-

சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் கொண்ட பசுபதீசுவரனுடைய. திருப்பாதம்-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். மலர்-பல வகையான மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன; செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், சாதிமல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், மகிழ மலர், பவள மல்லிகை மலர், ஊசி மல்லிகை மலர், மஞ்சள் செவ்வந்தி மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், தும்பை மலர், கரந்தை மலர், குமுத மலர், அரளி மலர், நீலோற்பலமலர் முதலியவை. கொண்டு-கொண்டு அருச்சனை புரிந்து. போற்று-வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இசைத்து-திருவாய் மலர்ந்தருளிச் செய்து. வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார். வந்தித்தார்—பசுபதீசுவரரை வணங்கினார்.

புலன்களை வெல்லுதல்; ''வென்றிலேன் புலன்கள் ஐந்தும்.'' என்று வருவதைக் காண்க.

பிறகு வரும் 81-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு :

'திருத்துறையூரில் சுந்தரமூர்த்தி நாயனார் பசுபதீசுவரரை வணங்கிவிட்டுச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் தாம் வணங்குவதற்குப் பொருத்தமாக இருக்கும் சிவத்தலங்கள் பலவற்றிலும் நுழைந்து அந்தத் தலங்களில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு, தங்கத்தால் வேய்ந்த விமானத்தோடு விளங்கும் ஆலயம் திகழும் பெரும்பற்றப்புலியூராகிய சிதம்பரத்துக்கு எழுந்தருளி, அந்த ஆலயத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் விளங்கும் நடராஜப் பெருமானாருடைய அழகிய திருநடனத்தை வணங்குவதற்கு எண்ணத்தைப் பெற்று, வருத்தம் இல்லாத விருப்பத்தால்அந்தத் தலத்துக்கு உரிய வழியில் எழுந்தருளுவதற்குத் திருவுள்ளம் அந்த நாயனார் கொண்டார்.' பாடல் வருமாறு:

**''திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமான் அமர்ந்தருளும்**
**பொருத்தமாம் இடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்**
**நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று**
**வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனம்கொண்டார்.''**

திருத்துறையூர் தனை-திருத்துறையூரை அடைந்து. தன்: அசை நிலை. ப்:சந்தி. பணிந்து—அந்தத் தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பசுபதீசுவரரை வணங்கி விட்டு. சிவபெருமான் அமர்ந்தருளும்—சிவபெருமான் எழுந்தருளியிருக்கும். பொருத்தமாம்—தமக்குப் பொருத்த மாக இருக்கும். இடம்—சிவத்தலங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பலவும் — பலவற்றிலும். புக்கு — நுழைந்து. இறைஞ்சி—அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு. ப்:சந்தி. பொன்—தங்கத்தால் வேய்ந்த விமானத்தைப் பெற்ற. புலியூர்—பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்தில் விளங்கும் ஆலயத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில்; இட ஆகு பெயர். நிருத்தனார்—திரு நடனம் புரிந்தருளும் நடராஜப் பெருமானாருடைய. திரு—அழகிய. க்:சந்தி. கூத்து—திருநடனத்தை. த்:சந்தி. தொழுவதற்கு — வணங்குவதற்கு. நினைவுற்று—எண்ணத்தை அடைந்து. வருத்தம்—வருந்துதல். இகு—நீங்கிய. காதலினால்—விருப் பத்தால். வழிக்கொள்வான்—சிதம்பரத்திற்குச் செல்லும் வழியில் எழுந்தருளுவதற்கு. மனம் கொண்டார்—அந்த நாயனார் திருவுள்ளம் கொண்டார்.

அழகிய திருநடனம்: ''ஆடிய அழகன்'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியதைக் காண்க.

அடுத்து உள்ள 82-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'மலையில் வளர்ந்து நிற்கும் சந்தன மரம், அகில் மரம், அங்கே நடனமிடும் மயில்களினுடைய தோகைகள், அங்கே வளரும் மரங்களில் மலர்ந்த மலர்கள் ஆகியவற்றைத் தான் பாயும் இடங்கள் எல்லாவற்றிலும் பரவச்செய்து மாணிக்கங் களைக் கொழிக்கும் அலைகளை உண்டாக்கும் குளிர்ச்சியான நீர் ஓடுகின்ற பெண்ணை யாற்றைச் சுந்தரமூர்த்தி நாயனார் கடந்து அந்த ஆற்றின் கரையின்மேல் ஏறிய பிறகு, பூட்டி யிருக்கும் ஏழு பச்சைக் குதிரைகளைக் கொண்ட உயரமான தேரில் சூரியன் மேற்குச் சமுத்திரத்திற்குப் போவதற்காக அடையும் மாலை நேரம் வர, அந்த நாயனார் திருவதிகை வீரட்டானத்திற்கு வெளியில் போய்ச் சேர்ந்தருளினார்.' பாடல் வருமாறு:

**''மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்**
**அலைதருதண் புனற்பெண்ணை ஆறுகடந் தேறியபின்**
**நிலவுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்**
**செலஅணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்த**
**ணைந்தார்.''**

மலை—மலையின்மேல். வளர்—வளர்ந்து நிற்கும். சந்து—சந்தன மரம். அகில்—அகில் மரம். பீலி—அங்கே ஆடும் மயில்கள் உதிர்த்த தோகைகள்; ஒருமை பன்மை மயக்கம். மலர்—அந்த மலையில் வளரும் பல வகை மரங் களில் மலர்ந்த மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: வேங்கை மலர், வாகை மலர், தாழம்பூ, மகிழ மலர், வில்வ மலர், விளா மலர், மா மலர், பவள மல்லிகை மலர், வேப்ப மலர், பூவரச மலர், வாத நாரா யண மலர், புலிநகக் கொன்றை மலர், சரக்கொன்றை மலர், தேக்க மலர், புளியம் பூ முதலியவை. பரப்பி—தான் பாயும் இடங்களில் பரவச் செய்து. மணி—மாணிக்கங்களை; ஒருமை பன்மை மயக்கம். கொழிக்கும்—கொழித்து வீசும். அலை—அலைகளை; ஒருமை பன்மை மயக்கம். தரு—

உண்டாக்கும். தண்—குளிர்ச்சியைக்கொண்ட. புனல்—நீர் ஓடும். பெண்ணை ஆறு—பெண்ணை நதியை. கடந்து—கடந்து சென்று. ஏறிய—அந்த ஆற்றின் கரைமேல் ஏறிய. பின்—பிறகு. நிலவு—பூட்டியுள்ள. பசும்—பச்சை நிறத்தைப் பெற்ற. புரவி—ஏழு குதிரைகளைக்கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். நெடும்—உயரமான. தேர்—இரதத்தில். இரவி—சூரியன். மேல்—மேற்குத் திசையில் இருக்கும். கடலில்—சமுத்திரத்திற்கு; உருபு மயக்கம். செல—போவதற்காக; இடைக்குறை. அணையும்—அடையும். பொழுது—மாலை நேரம். அணைய—வர. த்:சந்தி. திருவதிகை—திருவதிகை வீரட்டானத்தின். ப்:சந்தி. புறத்து—வெளிப் பக்கத்தை. அணைந்தார்—சுந்தரமூர்த்தி நாயனார் அடைந்தார்.

சூரியன் பச்சைக்குதிரைகளைப் பூட்டிய தேரில் வருதல்: ''விசையாடற் பசும்புரவிக் குரம்மிதிப்ப உதயகிரி விரிந்த தூளி....அணைந்து வெய்யோன்.'' (**கம்ப ராமாயணம்,** மிதிலைக் காட்சிப் படலம், 121) என வருதல் காண்க.

அடுத்து வரும் 83-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

' ''ஆளுடைய அரசும் இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் துதிப்பவரும், உழவாரம் என்னும் கருவியை ஆள்பவரும் ஆகிய திருநாவுக்கரசு நாயனார் இடப வாகனத்தை ஓட்டுபவராகிய திருவதிகை வீரட்டானனேசுவரருக்குத் தம்முடைய கைகளால் திருத்தொண்டுகளைப் புரிய விரும்பும் பெருமையைப் பெற்ற சிவத்தலமாகிய திருவதிகை வீரட்டானத்தை அடியேனுடைய பாதங்களால் மிதித்துக் கொண்டு சேரும் அந்தச் செயலுக்குப் பயப்படுவேன்'' என்று எண்ணிச் சுந்தரமூர்த்தி நாயனார் அந்தப் பெரிய தலத்துக்குள் நுழையாமல் மடைகள் வளரும் குளிர்ச்சியைப் பெற்ற வெளிப்பக்கத்தில் இருக்கும் சித்தவட மடம் என்னும் ஊருக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

**" 'உடையஅர சுலகேத்தும் உழவாரப் படையாளி**
**விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்**
**தடையுமதற் கஞ்சுவன்' என் றந்நகரிற் புகுதாதே**
**மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார்."**

உடைய அரசு—ஆளுடைய அரசும். உலகு—இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். ஏத்தும்-துதிக்கப்படுபவரும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். உழவாரப் படை-உழவாரம் என்னும் புற்களைச் செதுக்கும் கருவியை. ஆளி—கையாளுபவரும் ஆகிய திருநாவுக்கரசு நாயனார். விடையவர்க்கு—இடபவாகனத்தை ஓட்டும் திருவதிகை வீரட்டானேசுவரருக்கு. க்:சந்தி. கை—தம் முடைய திருக்கரங்களால்; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி. தொண்டு—தொண்டுகளைப் புரிய; ஒருமை பன்மை மயக்கம். விரும்பு—விருப்பத்தை அடையும். பெரும்—பெருமையைப் பெற்றிருக்கும். பதியை—அந்தத் திருவதிகை வீரட்டானத்தை. மிதித்து—அடியேனுடைய பாதங்களால் மிதித்துக்கொண்டு. அடையும்—அந்தத் தலத்தைச் சேரும். அதற்கு—அந்தச் செயலைச் செய்வதற்கு. அஞ்சுவன்—அடியேன் அச்சத்தை அடைவேன். என்று—எனச் சுந்தரமூர்த்தி நாயனார் எண்ணி. அந்நகரில்—அந்தப் பெரிய ஊருக்குள். புகுதாது—நுழையாமல். ஏ:அசை நிலை. மடை—வயல்களுக்கு நீர் பாயும் மடைகள்; ஒருமை பன்மை மயக்கம். மடை—சிறு வாய்க்கால். வளர்—வளரும். தண்-குளிர்ச்சியைக் கொண்ட. புறம்பணையில்—அந்தத் தலத்துக்கு வெளியில் உள்ள இடத்தில் இருக்கும். சித்தவட மடம்—சித்தவட மடம் என்னும் ஊருக்குள். புகுந்தார்—அந்த நாயனார் நுழைந்தார்.

உழவாரப் படையாளி: "உழவாரத் தனிப்படையும் தாமு மாகி.", "எம்பெருமான் வாகீசர் உழவாரத் தினில்

ஏந்தி.'' என்று சேக்கிழாரும், ''உழவாரப் படைகையில் உடையான்.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளிய வற்றைக் காண்க.

அடுத்து வரும் 84-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அழகு வளரும் மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும் பொழில் சூழ்ந்த சித்தவட மடத்தில் வன்றொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார் விரிவான அலைகள் வீசும் நீர் ஓடும் கெடில நதிக்கு வடகரையில் விளங்கும் திருவதிகை வீரட்டானத்தில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனாகிய வீரட்டானேசுவரனுடைய திருவடிகளை விரும்புவதைக்கொண்ட திருவுள்ளத்தைப் பெற்றவராய்ப் பக்கத்தில் எந்த இடங்களிலும் நெருங்கியிருக்கின்ற தம்முடைய பரிவார மக்களும் உறக்கத்தை மேற்கொள்ளத் தாமும் பள்ளிகொண்டருளினார்.' பாடல் வருமாறு:

**''வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்**
**விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதான்**
**புரிவுடைய மனத்தினராய்ப் புடைஎங்கும் மிடைகின்ற**
**பரிசனமும் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார்.''**

வரி—அழகு; ''வரிவளர்'' (**புறப்பொருள் வெண்பா மாலை**); வண்டுகளும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். வளர்—வளரும். பூம்—மலர்கள் மலரும் மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஆகு பெயர். சோலை—பொழில். சூழ்—சுற்றி விளங்கும். மடத்தின்கண்—சித்தவட மடத்தில். வன்றொண்டர்—வன்றொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனார். விரி—விரிவாக உள்ள. திரை—அலைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நீர்—புனல் ஓடும். க்: சந்தி. கெடில—கெடில நதியினுடைய. வட—வடகரையில் விளங்கும். வீரட்டானத்து—திருவதிகை வீரட்டானத்தில். இறை—திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனாகிய

வீரட்டானேசுவரனுடைய. தாள்—திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். புரிவு—விரும்பும் விருப்பத்தை. உடைய —பெற்ற. மனத்தினராய்—திருவுள்ளத்தைக் கொண்டவ ராகி. ப்:சந்தி. புடை—தம்முடைய பக்கத்தில். எங்கும்- எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மிடை கின்ற—நெருங்கியிருக்கின்ற. பரிசனமும்—தம்முடன் வந்த பரிவார மக்களும். துயில்—உறக்கத்தை. கொள்ள—மேற் கொள்ள. ப்:சந்தி. பள்ளியமர்ந்தருளினார்—தாமும் பள்ளி கொண்டருளினார்.

பின்பு உள்ள 85-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு சுந்தரமூர்த்தி நாயனாரும் அவருடைய பரிவார மக்களும் உறங்குவதைப் பார்த்துத் திருவதிகை வீரட்டானத்தில் விரும்பிக் கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும், அழகிய கண்களைப் பெற்றவரும் ஆகிய வீரட்டானேசுவரர் முதுமையை அடைந்த திருவுரு வத்தைப் பெற்ற ஒரு வேதியராகித் தாம் வருவதை முன்னால் உள்ள ஒருவரும் தெரிந்து கொள்ளாமலேயே பொதுவான சித்த வட மடத்தில் உள்ள மடத்துக்குள் நுழைந்து மலர்மாலையை அணிந்தவராகிய சுந்தர மூர்த்தி நாயனாருடைய அழகிய தலையின்மேல் செந்தாமரை மலர்களைப் போன்ற தம்முடைய திருவடிகளை வைத்துக் கொண்டு பள்ளிகொண்டருள்பவரைப் போலப் படுத்திருந் தார்.' பாடல் வருமாறு :

**''அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளும் அங்கணரும்**
**முதுவடிவின் மறையவராய் முன்னொருவர் அறியாமே**
**பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் திருமுடிமேல்**
**பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார்**
**போற்பயின்றார்.''**

அது-அவ்வாறு சுந்தரமூர்த்தி நாயனாரும் அவருடைய பரிவார மக்களும் உறங்கும் அந்தச் செயலை. கண்டு-

பார்த்து. வீரட்டத்து-திருவதிகை வீரட்டானத்தில். அமர்ந் தருளும்-விரும்பிக் கோயில் கொண்டருளும். அம்-அழகிய. கணரும்-கண்களைப் பெற்ற வீரட்டானேசுவரரும். கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர் - இடைக்குறை. முது-முதுமையை அடைந்த. வடிவின்-திருவடிவத்தைக்கொண்ட. மறையவராய்-ஒரு வேதியராய். முன்-தம்முடைய முன்னால் படுத்து உறங்கும். ஒருவர்-ஒருவரும். அறியாமே-தெரிந்து கொள்ளாமலேயே. பொது-பொதுவான. மடத் தினுள்-சித்தவடமடத்தில் உள்ள மடத்துக்குள். புகுந்து-நுழைந்து. பூந்தாரான் - மலர்மாலையை அணிந்த சுந்தர மூர்த்தியினுடைய. திரு-அழகிய. முடிமேல்-தலையின்மேல். பதும மலர்-செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாள் - தம்முடைய திருவடி களை. ஒருமை பன்மை மயக்கம். வைத்து - வைத்துக் கொண்டு, பள்ளி கொள்வார்-பள்ளி கொண்டருள்பவரை. போல்-போல. பயின்றார்-படுத்துக்கொண்டிருந்தார்.

பின்பு உள்ள 86-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு வீரட்டானே சுவரராகிய வேதியர் தம்முடைய தலையின்மேல் திருவடிகளை வைத்துப் படுத் திருந்த அந்த நிலையை நம்பியாரூரனாகிய சுந்தர மூர்த்தி தெரிந்து கொண்டு, "அருமையான அந்தணனே, உன்னு டைய திருவடிகளை என்னுடைய தலையின் மேல் வைத்துக் கொண்டு படுத்திருக்கிறாயே" என்று திருவாய்மலர்ந்த ருளிச் செய்ய, "இன்ன திக்கு என்று தெரியாத விதத்தி னால் அவ்வாறு நான் புரிந்ததற்குக் காரணம் என்னுடைய முதுமைப் பருவம்; பார்" என்று வீரட்டானேசுவரர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, அதை ஒப்புக்கொண்டு தன்னுடைய தலையை வேறு ஓரிடத்தில் வைத்துக் கொண்டே செந்தமிழ் மொழியின் தலைவனான சுந்தர

மூர்த்தி பள்ளி கொண்டு உறங்கலானான்.' பாடல் வருமாறு:

**''அந்நிலைஆ ரூரன்உணர்ந், 'தருமறையோய், உன்னடிஎன்**
**சென்னியில்வைத் தனை' என்னத் 'திசையறியா வகைசெய்த.**
**தென்னுடைய மூப்புக்காண்' என்றருள அதற்கிசைந்து**
**தன்முடிஅப் பால்வைத்தே துயிலமர்ந் தான் தமிழ்நாதன்.''**

அந்நிலை-அவ்வாறு வீரட்டானேசுவரராகிய வேதியர் தம்முடைய தலையின்மேல் அவருடைய திருவடிகளை வைத்துக்கொண்டு படுத்திருந்த அந்த நிலையை. ஆரூரன்-நம்பியாரூரனாகிய சுந்தரமூர்த்தி. உணர்ந்து-தெரிந்து கொண்டு. அரு-அருமையான. மறையோய்-அந்தணனே. உன்-உன்னுடைய. அடி-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். என்-என்னுடைய. சென்னியில்-தலையின்மேல்; உருபு மயக்கம். வைத்தனை-நீவைத்துக்கொண்டிருக்கிறாய். என்ன—என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந் தருளிச் செய்ய. த்:சந்தி. திசை-இன்ன திக்கு என்று. அறியா-தெரிந்து கொள்ளாத. வகை-விதத்தில். செய்தது-செய்ததற்குக்காரணம்; ஆகுபெயர். என்னுடைய மூப்பு-என் னுடைய முதுமைப்பருவமே. காண்-இதைத் தெரிந்துகொள் வாயாக. என்று-என. அருள-வீரட்டானேசுவரர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. அதற்கு-அவர் காரணமாகக் கூறிய அந்த வார்த்தைகளை; அது: ஒருமை பன்மை மயக்கம். அதற்கு: உருபு மயக்கம். இசைந்து-ஒப்புக்கொண்டு. தன்-தன்னுடைய. முடி-தலையை. அப்பால்-வேறு ஒரு பக்கத் தில். வைத்தே-வைத்துக் கொண்டே. தமிழ்நாதன்-செந் தமிழ் மொழியின் தலைவனாகிய சுந்தர மூர்த்தி. துயில்-உறக்கத்தில். அமர்ந்தான் - ஆழ்ந்தான்.

அடுத்து வரும் 87-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தப் பக்கத்திலும் அந்தச் சுந்தரமூர்த்தியினுடைய அழகிய தலையின் மேல் மறுபடியும் அந்த வீரட்டானே சுவரர் தம்முடைய திருவடிகளை நீட்டிப் படுக்கச் சிவந்த கயல் மீன்கள் துள்ளிப் பாயும் தடாகம் பக்கத்தைச் சூழ்ந் துள்ள திருநாவலூரை ஆட்சி புரியும் சுந்தரமூர்த்தி, ''இந்த மடத்தில் என்னை நீ பல தடவைகளும் உன்னுடைய திருவடிகளால் மிதித்தாய்; நீ யார்?'' என்று கேட்கக் கங்கையாற்றைத் தன்னுடைய தலையில் உள்ள சடாபாரத்தில் மறைத்துவிட்டு வந்த தலைவனாகிய வீரட்டானேசுவரன், ''நீ என்னைத் தெரிந்து கொள்ள வில்லையோ?'' என்று கேட்டுவிட்டு மறைந்தருளினான். பாடல் வருமாறு:

**''அங்கும்அவன் திருமுடிமேல் மீட்டும்அவர் தாள்நீட்டச்**
**செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி**
**இங்கென்னைப் பலகாலும் மிதித்தனைநீ யார்?' என்னக்**
**கங்கைசடைக் கரந்தபிரான்; 'அறிந்திலையோ? எனக்**
**கரந்தான்.'**

அங்கும்-அந்தப் பக்கத்திலும். அவன்-அந்தச் சுந்தர மூர்த்தியினுடைய. திரு-அழகிய. முடிமேல்-தலையின்மேல். அவர்-அந்த வீரட்டானேசுவரராகிய அந்தணர். தாள்-தம்முடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். நீட்ட-நீட்டிப் படுக்க. செம்-சிவந்த. கயல்-கயல்மீன்கள்; ஒருமை பன்மை மயக்கம். பாய்-துள்ளிப் பாயும். தடம்-தடாகம். புடை-பக்கத்தில். சூழ் - சூழ்ந்திருக்கும். திரு நாவலூர்-திருநாவலூரை. ஆளி-ஆட்சிபுரியும் அரசனாகிய சுந்தரமூர்த்தி. இங்கு-இந்த மடத்தில். என்னை-படுத்துக் கொண்டிருக்கும் என்னை. ப்:சந்தி. பல காலும்-பல தடவைகளும்; ஒருமை பன்மை மயக்கம். மிதித்தனை-நீ மிதித்தாய். நீ யார்-நீஆர். என்ன-என்று சுந்தரமூர்த்தி நாயனார். கேட்க. க்:சந்தி. கங்கை-கங்கையாற்றை. சடை-

தன்னுடைய தலையில் உள்ள சடாபாரத்தில். கரந்த-மறைத்துவிட்டு எழுந்தருளிய. பிரான்-தலைவனாகிய வீரட்டானேசுவரன். அறிந்திலையோ-நீ என்னைத் தெரிந்து கொள்ளவில்லையோ. என-என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்துவிட்டு; இடைக்குறை. ச்:சந்தி. கரந்தான்-அந்த மடத்தை விட்டு மறைந்தருளினான்.

பிறகு உள்ள 88-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

''அடியேன் இறுமாப்பை அடைந்து இந்த மடத்தில் இவரைத் தெரிந்து கொள்ளாமல் என்ன அடாத காரியத்தைச் செய்துவிட்டேன்'' என்று எண்ணித் தெளிவை அடைந்து; ''தம்மானை அறியாத சாதியார் உளரே'' என்று தொடங்கித் தலைவனும், திருவதிகை வீரட்டானத்தில் விரும்பிக் கோயில் கொண்டிருப்பவனும், துதிக்கையைப் பெற்றதும் தாருகா வனத்து முனிவர்கள் தன்னைக் கொல்லும் பொருட்டு அனுப்பியதும் ஆகிய ஆண் யானையை உரித்துப் போர்வையாகப் போர்த்துக் கொண்டவனும் ஆகிய வீரட்டானேசுரவனுடைய வீரக்கழலைப் பூண்ட திருவடிகளை வணங்கி ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளினார்.'' பாடல் வருமாறு:

**''செம்மாந்திங் கியானறியா தென்செய்தேன்!' எனத் தெளிந்து**
**தம்மானை அறியாத சாதியார் உளரே? என்**
**றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த**
**கைம்மாவின் உரியானைக் கழல்பணிந்து பாடினார்.''**

செம்மாந்து - இறுமாப்பை அடைந்து. இங்கு - இந்த மடத்தில். இ:குற்றியல் இகரம். யான்-அடியேன். அறியாது-இவரைத் தெரிந்து கொள்ளாமல். என்-என்ன அடாத செயலை. செய்தேன்-செய்து விட்டேன். என-என்று எண்ணி; இடை குறை: தெளிந்து-தெளிவை

அடைந்து, 'தம்மானை அறியாத சாதியார் உளரே?' என்று - 'தம்மானை அறியாத சாதியார் உளரே.' எனத் தொடங்கி. அம்மானை-தலைவனும்: த்:சந்தி. திருவதிகை வீரட்டானத்து-திருவதிகை வீரட்டானத்தில். அமர்ந்த- விரும்பிக் கோயில்கொண்டு எழுந்தருளியிருப்பனும்: பெயரெச்ச வினையாலணையும் பெயர். கை-துதிக்கையைப் பெற்ற. மாவின்-தாருகா வனத்து முனிவர்கள் தன்னைக் கொல்லும் பொருட்டு அனுப்பிய ஆண்யானையினுடைய, உரியானை-தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்துக் கொண்டவனும் ஆகிய வீரட்டானேசுவரனுடைய; உருபு மயக்கம். க்:சந்தி. கழல்-வீரக் கழலை பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். 'கழல்' இன்ன தென்பதை வேறோரிடத்தில் கூறினோம்: ஆண்டுக் கண்டுணர்க. பணிந்து-வணங்கிவிட்டு. பாடினார்-அந்த நாயனார் ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளினார். அப்போது அந்த நாயனார் சொல்லிக் கௌவாணப் பண்ணில் பாடியருளிய திருப்பதிகத்தில் வருவதும் மேலே குறிப்பிட்டதும் ஆகிய பாசுரம் வருமாறு:

'' தம்மானை அறியாத சாதியார் உளரே?
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில் ஆடல்
உடையானை விடையானைக் கறைக்கொண்ட கண்டத்
தெம்மான்றன் அடிக்கொண்டென் முடிமேல்வைத்
திடும்என்னும் ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
எம்மானை எறிகெடில் வீரட்டானத் துறைவானை
இறைபோதும் இகழ்வன்போ லியானே.''

அடுத்து உள்ள 89-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தங்கத்தின் தொகுதியையும், மாணிக்கத்தின் தொகுதியையும், போர் புரியும் யானைகளினுடைய வெண்மையான

தந்தங்களையும், மின்னல்கள் சேர்ந்து ஒளி வீசினாற்போல ஒளியை வீசும் வெண்மையான முத்துக்களையும், நறுமணம் கமழும் பல வகையான மலர்களையும், வாசனை கமழும் அகிற்கட்டை, சந்தனக்கட்டை என்பவற்றையும் வலிமையைப் பெற்ற அலைகளினால் கொண்டு வந்து திருவதிகை வீரட்டானத்தின் வழியே ஓடுவதால் தெற்குத் திக்கில் உள்ள செந்தமிழ் நாட்டில் ஓடும் கங்கையாறு என்று பாராட்டப் பெறும் அழகிய கெடில நதியில் சுந்தரமூர்த்தி நாயனார் படிந்து நீராடி,' பாடல் வருமாறு:

**''பொன்திரளும் மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளும்**
**மின்திரண்ட வெண்முத்தும் விரைமலரும் நறுங்குறடும்**
**வன்திரைக ளாற்கொணர்ந்து திருவதிகை வழிபடலால்**
**தென்திசையிற் கங்கையெனும் திருக்கெடிலம் திளைத்தாடி.''**

இந்தப் பாடல் குளகம். பொன்-தங்கத்தின். திரளும்-தொகுதியையும். மணி-மாணிக்கங்களின்; ஒருமை பன்மை மயக்கம். திரளும்-தொகுதியையும். பொரு-ஒன்றனோடு ஒன்று மோதும். கரி-யானைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். வெண்-வெண்மை நிறத்தைப் பெற்ற. கோடு களும்-தந்தங்களையும். மின்-மின்னல்கள்; ஒருமை பன்மை மயக்கம். திரண்ட-கூடி ஒளியை வீசுவதைப் போல ஒளியை வீசும். வெண் - வெள்ளை நிறத்தை உடைய. முத்தும்-முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். விரை-நறு மணம் கமழும். மலரும்-பல வகையான மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன:செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், சாதிமல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், பவளமல்லிகை மலர், அல்லி மலர், ஆம்பல் மலர், தாழம்பூ, புளிய மலர், மாமலர்,

வாழைப்பூ, மகிழ மலர், வெட்சி மலர், சரக் கொன்றை மலர், புலிநகக்கொன்றை மலர், நீலோற்பல மலர், குமுத மலர், பூவரச மலர், மஞ்சட் செவ் வந்தி மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், அரளி மலர், வாகைமலர், வேங்கைமலர், சண்பகமலர், குருக்கத்திமலர், ஆத்திமலர் முதலியவை. நறும்-நறுமணம் கமழும். குறடும்-அகிற்கட்டையையும், சந்தனக்கட்டையையும்; ஒருமை பன்மை மயக்கம். வன்-வலிமையான. திரைகளால்-அலை களால். கொணர்ந்து-கொண்டு வந்து. திருவதிகை-திரு வதிகை வீரட்டானத்தில். வழிபடலால்-வழியே ஓடுவதால்; 'வணங்குவதால்' என்று ஒரு பொருள் தொனிக்கிறது. தென்திசையில்-பாரத நாட்டின் தெற்குத் திசையில் உள்ள செந்தமிழ் நாட்டினுடைய; ஆகுபெயர். கங்கை-கங்கையாறு. எனும்-என்று பாராட்டப் பெறும்; இடைக்குறை. திரு-அழகிய. க்:சந்தி. கெடிலம்-கெடில நதியில். திளைத்து-படிந்து. ஆடி-நீராடி.

அடுத்துவரும் 90-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'சுந்தரமூர்த்தி நாயனார் அழகிய கண்களைப் பெற்றவ ராகிய வீரட்டானேசுவரருடைய திருவடிகளை வாழ்த்தி வணங்கிவிட்டு, அந்தத் திருவதிகை வீரட்டானத்திலிருந்து புறப்பட்டு அப்பால் எழுந்தருளி, நீர் பொங்கி ஓடும் அந்தக் கெடில நதியின் தெற்குக்கரை வழியாக எழுந்தருளி, போர் செய்யும் வலிமையைப் பெற்ற தோள்களைக் கொண்ட மகா பலிச் சக்கரவர்த்தி செய்த மங்கலமான யாகத்தில் பழைய காலத்தில் வாமன அவதாரத்தை எடுத்தவனாய் மூன்று அடிகள் நிலத்தை அந்தச் சக்கரவர்த்தியிடம் யாசகம் செய் தருளிய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த கண் களைப் பெற்ற திருமால் வணங்கி நலம்பெற்றதும், மாணிக்க வரதேசுவரர் திருக்கோயில் விளங்குவதும் ஆகிய திருமாணி குழி என்னும் சிவத்தலத்தை அந்த நாயனார் அடைந்தார்.

பாடல் வருமாறு:

**''அங்கணரை அடிபோற்றி அங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோள் மாவலிதன்
மங்களவேள் வியிற்பண்டு வாமனனாய் மண்இரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணி குழிஅணைந்தார்''**

அங்கணரை-அழகிய கண்களைப் பெற்றவராகிய வீரட்டானேசுவரருடைய; கண்:ஒருமை பன்மை மயக்கம். கணரை: இடைக்குறை. அங்கணரை:உருபு மயக்கம். அடி-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். போற்றி-சுந்தர மூர்த்தி நாயனார் வாழ்த்தி வணங்கிவிட்டு. அங்கு-அந்தத் திருவதிகை வீரட்டானத்தை. அகன்று-விட்டு அப்பால் எழுந்தருளி. மற்று:அசைநிலை. அந்தப் பொங்கு-அந்த நீர் பொங்கி ஓடும். நதி-கெடில நதியினுடைய. தென் கரை-தெற்குக் கரையின் வழியாக. போய்-எழுந்தருளி. ப்:சந்தி. போர்-யுத்தம் செய்யும். வலி-வலிமையைக் கொண்ட. த்:சந்தி. தோள்-தோள்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மாவலிதன்-மகாபலிச் சக்ரவர்த்தியினுடைய. தன்:அசைநிலை. மங்கள-மங்களமான. வேள்வியில்-யாகத்தில். பண்டு-பழங்காலத்தில். வாமனனாய்-வாமனாவதாரத்தை எடுத்தவனாய். மண்-மூன்று அடிகள் நிலத்தை. இரந்த-அந்தச் சக்கரவர்த்தியிடம் யாசகம் செய்த. செங்கணவன்-செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த கண்களைப் பெற்றவனாகிய திருமால். கண்:ஒருமை பன்மை மயக்கம். கணவன்:இடைக்குறை. வழிபட்ட-வணங்கி நலம்பெற்றதாகிய. திருமாணிகுழி-திருமாணிகுழி என்னும் சிவத்தலத்தை. அணைந்தார்-அந்த நாயனார் அடைந்தார்.

திருமாணிகுழி: இது நடுநாட்டில் பெண்ணையாற்றின் கரையில் உள்ளது. இங்கே கோயில் கொண்டிருப்பவர் மாணிக்க வரதேசுவரர். அம்பிகை மாணிக்கவல்லியம்மை.

இது திருவஹீந்திரபுரத்திலிருந்து தெற்கில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. திருமால் வாமனாவதாரம் எடுத்த காலத்தில் வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது. இதைப் பற்றிய பாசுரம் ஒன்று வருமாறு:

''நித்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறலின
னாகிமிகவும்
சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ
லோகனிடமாம்
கொத்தவர்ம லர்ப்பொழிலின் நீடுகுல மஞ்ஞைநட
மாடஅதுகண்
டொத்தவரி வண்டுகள வாவிஇசை பாடுதவி
மாணிகுழியே.''

இந்தப் பாசுரம் சாதாரிப் பண்ணில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பாடியருளியது. அவர் பாடிய மற்றொரு பாசுரம் வருமாறு:

'பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு
பங்கர்புனல் தங்குசடைமேல்
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல்
வித்தகர்ம கிழ்ந்துறைவிடம்
கன்னியிள வாளைகுதி கொள்ளஇள
வள்ளைபடர் அள்ளல் வயல்வாய்
மன்னியிள மேதிகள் படிந்துமனை
சேருதவி மாணிகுழியே,''

பிறகு உள்ள 91-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'சுந்தரமூர்த்தி நாயனார் பரம்பொருளாகிய மாணிக்கவரதேசுவரருடைய திருவடிகளை வணங்கி வாழ்த்திவிட்டு அப்பால் எழுந்தருளித் தன்னை வணங்கிய பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை வழங்கியருள்பவனாகிய சிவக்கொழுந்தீசனுடைய திருக்கோயில் இருக்கும் திருத்தினை நகரில் அந்த ஈசனைப் பணிந்து விட்டுச் சொற்சுவை பொருட்சுவை,

என்னும் வளப்பங்களைக் கொண்ட செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி, நரம்புகளைப் பெற்ற யாழின் இனிய நாதமும், ஓசை செய்கின்ற மத்தளத் தைக்கொட்டும் நாதமாகிய ஓசையும், இருக்குவேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களை வேதியர்கள் ஓதும் இனிய கானமும், தெய்வ லோகத்துப் பெண்களுடைய இசைப் பாடல்களின் இனிய ஒலியும், இடைவிடாத தில்லையாகிய சிதம்பரத்தின் பக் கத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

**''பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப்**
**பணிந்தவர்க்கு**
**வரம்தருவான் தினைநகரை வணங்கினர்**
**வண் டமிழ்பாடி**
**நரம்புடையாழ் ஒலிமுழவின் நாதஒலி வேதஒலி**
**அரம்பையர்தம் கீதஒலி அறாத்தில்லை**
**மருங்கணைந்தார்.''**

பரம்பொருளை-பரம்பொருளாகிய மாணிக்க வரதேசு வரருடைய; உருபு மயக்கம். ப்:சந்தி. தாள்-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பணிந்து-வணங்கிவிட்டு. பரவி- சுந்தரமூர்த்தி நாயனார் வாழ்த்திவிட்டு. ப்:சந்தி. பணிந் தவர்க்கு-தன்னை வணங்கிய பக்தர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். வரம்-வரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தருவான்-வழங்கியருள்பவனாகிய சிவக்கொழுந்தீசனுடைய ஆலயம் விளங்கும்; ஆகுபெயர். தினைநகரை-திருத்தினை நகரில்; உருபு மயக்கம். வணங்கினர்-அந்த ஈசனைப் பணிந் தவராகி; முற்றெச்சம். வண்-சொற்சுவை பொருட்சுவை என்னும் வளப்பங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். தமிழ்-செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை; ஆகுபெயர். பாடி-பாடியருளி. நரம்பு-நரம்புகளை: ஒருமை பன்மை மயக்கம். உடைய-பெற்ற. யாழ்-யாழை வாசிக்

கும். ஒலி-இனிய கானமும். முழவின்-மத்தளத்தைக் கொட்டும். நாத ஒலி-ஓசையாகிய சத்தம். வேத-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய வேதியர்கள் அந்த வேதங்களை ஓதும்; ஒருமை பன்மை மயக்கம்; திணை மயக்கம். ஒலி-இனிய கானமும். அரம்பையர் தம்-தேவலோகப்பெண் மணிகளுடைய; தம்: அசைநிலை. கீத-இசைப்பாடல்களின்; ஒருமை பன்மை மயக்கம். ஒலி-இனிய ஓசையும். அறா-இடைவிடாமல் கேட்கும். த்: சந்தி. தில்லை-தில்லையாகிய சிதம்பரத்தின். மருங்கு-பக்கத்தை. அணைந்தார்-அந்த நாயனார் அடைந்தார்.

திருத்தினை நகர்: இது நடுநாட்டில் உள்ள சிவத் தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் திருந்தீசுவரர், சிவக்கொழுந்தீசுவரர் என்பவை. அம்பிகை ஒப்பிலா நாயகி. தலவிருட்சம் கொன்றை மரம். இந்தத் தலம் இக்காலத்தில் தீர்த்தனகிரி என வழங்கும். இது தாஹனூர் என்னும் சிற்றூருக்கு மேற்கில் ஒரு மைல் தூரத்தில் உள்ளது. பெரியான் என்னும் பெயரைக் கொண்ட ஒரு பள்ளன் நிலத்தை உழுது கொண்டிருக்கும் போது சிவக்கொழுந்தீசுவரர் ஒரு ஜங்கமரைப்போல அவனிடம் எழுந்தருளிச் சோறு கேட்டார்; அவன் தான் வாழும் ஊருக்குப் போய்க் கொண்டு வருவதாகக் கூறிச் சென்றான்; அவன் திரும்பி வருவதற்குள் சிவக்கொழுந்தீசுவரர் அவன் உழுது வைத்திருந்த வயலில் தினைப் பயிர்கள் விளைந்து பழுத்திருக்குமாறு செய்தருளி மறைந்தருளினார்; பள்ளனும் அவனுடைய மனைவியும் திரும்பி வந்து தினைப் பயிர்கள் நன்றாக விளைந்திருப்பதைப் பார்த்து வியப்பை அடைந்து ஜங்கமரைக் காணாமல் திகைப்பை அடைந்து நின்று கொண்டிருந்தார்கள். சிவக்கொழுந்தீசுவரர் இடப வாகனத்தின்மேல்

எழுந்தருளி வந்து அவர்களுக்குத் தம்முடைய காட்சியை வழங்கியருளி அவர்களைச் சிவலோக பதவியை அடையச் செய்தருளினார்; வியப்பு உண்டாகுமாறு தினைப் பயிர்கள் விளைந்த காரணத்தால் இந்தத் தலத்திற்குத் திருத்தினை நகர் என்னும் திருநாமம் உண்டாயிற்று; ஆலயத்திற்கு வடக்கில் சாம்புவ தடாகம் என்ற திருக்குளம் இருக்கிறது; இந்தத் தலத்தைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

''வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயல துற்றுவஞ் சனைக்கிட மாகி
முடியு மாகரு தேல்எரு தேறும்
மூர்த்தி யைமுத லாய பிரானை
அடிக ளென்றடி யார்தொழு தேத்தும்
அப்பன் ஒப்பிலா முலைஉமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே.'

இந்தப் பாசுரம் தக்கேசிப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளியது. அவர் பாடியருளிய மற்றொரு பாசுரம் வருமாறு:

''நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்றம் இல்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரிவரால் உகளும்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே.'

பின்பு உள்ள 92-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தேன் நிரம்பிய மலர்களைக் கட்டிய மாலையை அணிந்த பெருமையை உடைய அழகிய மார்பைப் பெற்ற

தலைவராகிய சுந்தரமூர்த்தி நாயனாருடைய அழகிய கயல் மீன்கள் குளிர்ச்சியைப் பெற்ற செந்தாமரை மலர்கள் சிதையும் வண்ணம் அவற்றின் எதிரில் துள்ளிப் பாய்ந்து கொண்டிருக்கும்; அவற்றின் பக்கத்தில் பறவைகள் ஒலியை எழுப்புகின்ற அலைகள் வெண்மை நிறத்தைப் பெற்ற சங்குப் பூச்சிகள் உள்ள வாவியும், தாவும் மலங்கு என்னும் நீர்வாழ் பிராணிகள் தடாகத்திலும், வயல்களிலும் சுற்றி வரும் குளிர்ச்சியைக் கொண்ட பக்கத்தில் வந்து வணங்கும் பக்தர்களுடைய பெரிய ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் அற்றுப் போக முக்தியை வழங்கியருளும் நடராஜப் பெருமான் திருநடனம் புரிந்தருளும் திருச்சிற்றம்பலம் விளங்கும் ஆலயத்தைப் பெற்ற தில்லையாகிய சிதம்பரம் என்னும் வளப்பத்தைக் கொண்ட அழகிய சிவத் தலத்தினுடைய எல்லலையைச் சுந்தரமூர்த்தி நாயனார் பணிந்து.' பாடல் வருமாறு:

**தேம லங்கலணி மாமணி மார்பிற்**
**செம்மல் அங்கயல்கள் செங்கம லத்தண்**
**பூம லங்களதிர் பாய்வன மாடே**
**புள்ள லம்புதிரை வெள்வளை வாவித்**
**தாம லங்குகள் தடம்பணை சூழும்**
**தண்ம ருங்குதொழு வார்கள்தம் மும்மை**
**மாம லங்களற வீடருள் தில்லை**
**மல்லல் அம்பதியின் எல்லை வணங்கி.''**

இந்தப் பாடல் குளகம். தேம்-தேன் நிரம்பிய. அலங்கல்-மலர்களைக் கட்டிய மாலையை. அணி-அணிந்த. மா-பெருமையைப் பெற்ற. மணி-உருத்திராக்க மணிகளைக் கட்டிய மாலையை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். மார்பின்-திருமார்பைப் பெற்ற. செம்மல்-தலைவராகிய சுந்தரமூர்த்தி நாயனார். அம்-அழகிய. கயல்கள்-கயல் மீன்கள். செம் கமல-செந்தாமரைகளாகிய; ஒருமை

பன்மை மயக்கம். த்:சந்தி. தண்-குளிர்ச்சியைக்கொண்ட. பூ-மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மலங்க-சிதையும் வண்ணம். எதிர்-அவற்றுக்கு எதிரில். பாய்வன-துள்ளிப் பாய்பவைகளாக இருக்கும். மாடு-பக்கத்தில். ஏ:அசை நிலை. புள்-மீன் கொத்திப் பறவை முதலிய நீர்ப்பறவை கள்; ஒருமை பன்மை மயக்கம். அலம்பு-கூவுகின்றவையாக இருக்கும். திரை-அலைகள் வீசும்; ஒருமை பன்மை மயக்கம். வெள்-வெண்மை நிறத்தை உடைய. வளை—சங்குப் பூச்சிகள்; ஒருமை பன்மை மயக்கம். வாவி-உள்ள வாவியில். வாவி:வாபி என்னும் வட சொல்லின் திரிபு. த்:சந்தி. தாம்-பாயும். மலங்குகள்-மலங்கு மீன்கள் வாழும். தடம்-தடாகமும். பணை-வயல்களும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த வயல்களாவன: சம்பா நெற்பயிர் கள் விளையும் வயல், குறுவை நெற்பயிர்கள் வளரும் வயல், கரும்புத் தோட்டம், வெற்றிலைக் கொடிக்கால் முதலியவை. சூழும்-சுற்றி விளங்கும். தண்-குளிர்ச்சியைக் கொண்ட. மருங்கு-பக்கத்தில் வந்து. தொழுவார்கள்தம்-வணங்குபவர் களுடைய. தம்:அசைநிலை. மா-பெரிய. மும்மை மலங் கள்-ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களை யும். அற-போகும் வண்ணம். வீடு-செய்து பிறகு முத்தியை. அருள்-வழங்கியருளும் நடராஜப் பெருமா னுடைய ஆலயம் விளங்கும்; திணை மயக்கம். தில்லை-தில்லை என்னும் சிதம்பரமாகிய. மல்லல்-நீர்வளம், நில வளம், செல்வ வளம், நன்மக்கள் வளம், தெருக்களின் வளம், ஆலய வளம் முதலிய வளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அம்-அழகிய. பதியின்-சிவத்தலத்தி னுடைய. எல்லை-எல்லையை. வணங்கி-சுந்தரமூர்த்தி நாயனார் பணிந்துவிட்டு.

அடுத்து வரும் 93-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'புன்னை மரம், மா மரம், மகிழ மரம், சரளதேவதார

மரம், சுற்றி வளர்ந்து நிற்கும் தென்ன மரம், கிராம்புகள் விளையும் மரம், நாரத்த மரம், கமுக மரம், குங்குமப் பூ மரம், குளிர்ச்சியைக் கொண்ட வாழை மர வகைகள், இருப்பை மரம், தழைகள் செறிந்த வஞ்சி மரம் ஆகிய பல வகை மரங்கள் எவ்விடங்களிலும் செறிந்து மேகங்களின் கூட்டம் மிகுதியாகத் தவழும் பூம்பொழில்களாக விளங்கி, அவற்றில் உள்ள மரங்களின்மேல் குயில்கள் நெருங்கி அமர்ந்து கொண்டு கூவும்; இவற்றால் போக பூமியாகிய சுவர்க்க லோகத்தைக் காட்டிலும் மிகுதியான சிறப்பைப் பெற்றுத் திகழும் மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்கள் வளர்ந்து தோன்றும் வெளியில் உள்ள இடத்தைத் தாண்டிச் சிதம்பரத்துக்குள் சுந்தரமூர்த்தி நாயனார் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

**''நாக சூதவகு ளம்சர ளம்சூழ்**
**நாளி கேரம்இல வங்கம் நரந்தம்**
**பூகம் ஞாழல்குளிர் வாழை மதூகம்**
**பொதுளும் வஞ்சிபல எங்கும் நெருங்கி**
**மேக சாலம்மலி சோலைக ளாகி**
**மீது கோகிலம் மிடைந்து மிழற்றப்**
**போக பூமியினும் மிக்கு விளங்கும்**
**பூம்பு றம்பணை கடந்து புகுந்தார்.''**

நாக-புன்னை மரம். சூத-மா மரம். வகுளம்-மகிழ மரம். சரளம்-சரளதேவதார மரம். சூழ்-சுற்றி வளர்ந்து நிற்கும். நாளிகேரம்-தென்ன மரம். இலவங்கம்-கிராம்புகள் விளையும் மரம். நரந்தம்-நாரத்த மரம். பூகம்-கமுக மரம். ஞாழல்-குங்குமப் பூ மரம். குளிர்-குளிர்ச்சியைக் கொண்ட. வாழை-செவ்வாழை மரம், பூவன் வாழை மரம், ரஸ்தாளி வாழை மரம், மொந்தன் வாழை மரம், பேயன் வாழைமரம், பச்சைநாடன் வாழைமரம், கூனி வாழைமரம், தேன் கதலி வாழை மரம் முதலிய வாழை மரங்கள்; ஒருமை

பன்மை மயக்கம். மதூகம்-இருப்பை மரம். பொதுளும்-தழைகள் அடர்ந்திருக்கும். வஞ்சி-வஞ்சி மரம். பல-ஆகிய பல மரங்களும். எங்கும்-எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கி-நெருக்கமாக வளர்ந்து. மேக-மேகங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். சாலம்—கூட்டம். மலி-மிகுதியாக உள்ள. சோலைகளாகி-பூம் பொழில்களே ஆகி. மீது-அந்தச் சோலைகளில் வளர்ந்து நிற்கும் மரங்களின் கிளைகளின்மேல். கோகிலம்-குயில்கள்; ஒருமை பன்மை மயக்கம். மிடைந்து-நெருங்கி அமர்ந்து கொண்டு. மிழற்ற-கூவ. ப்:சந்தி. போக பூமியினும்-போக பூமியாகிய சுவர்க்கலோகத்தைக் காட்டிலும். மிக்கு-மிகுதியான சிறப்பைப் பெற்று. விளங்கும்-திகழும். பூம்—மலர்கள் மலர்ந்த மரங்கள் வளரும்; ஒருமை பன்மை மயக்கம். புறம்பணை-வெளி இடத்தை. கடந்து-தாண்டி. புகுந்தார்-சுந்தரமூர்த்தி நாயனார் சிதம்பரத்துக்குள் நுழைந்தார்.

பிறகு உள்ள 94-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வன்னி மரம், கொன்றை மரம், சுரபுன்னை மரம், சண்பக மரம், சந்தன மரம், மலர்கள் மலர்ந்த புரச மரத்தோடு செருந்தி மரம், மந்தார மரம், கோங்கிலவ மரம், குரா மரம், நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்த புன்னை மரம், கற்பைக் குறிக்கும் முல்லைக் கொடி, பாதிரி மரம், வில்வ மரம், ஓங்கி வளர்ந்திருக்கும் சிறு சண்பக மரம், மருக்கொழுந்துச் செடி, ஊசி முல்லைக்கொடி, மல்லிகைக்கொடி, நெருங்கி வளர்ந்திருக்கும் நந்தியாவட்டைச் செடி, அரளிச் செடி ஆகியவை செறிந்து வளர்ந்திருக்கும் தூய்மையைப் பெற்ற நந்தன வனங்களை வணங்கிவிட்டு நறுமணம் கமழும் மலர் மாலையை அணிந்த சுந்தரமூர்த்தி எழுந்தருளினான்.' பாடல் வருமாறு:

**''வன்னி கொன்றைவழை சண்பகம் ஆரம்**
**மலர்ப்ப லாசொடு செருந்திமந் தாரம்**
**கன்னி காரம்குர வம்கமழ் புன்னை**
**கற்பு பாடலம் கூவிளம் ஓங்கித்**
**துன்னு சாதிமரு மாலதி மௌவல்**
**துதைந்த நந்திகரவீரம் மிடைந்த**
**பன்ம லர்ப்புனித நந்த வனங்கள்**
**பணிந்து சென்றனன் மணம்கமழ் தாரான்.''**

வன்னி-வன்னி மரம். கொன்றை-கொன்றை மரம். வழை-சுரபுன்னை மரம். சண்பகம்-சண்பக மரம். ஆரம்—சந்தன மரம். மலர்-மலர்கள் மலர்ந்த; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பலாசொடு-புரச மரத்தோடு. செருந்தி-பொன்னைப் போன்ற மலர்கள் மலரும் செருந்தி மரம். மந்தாரம்-மந்தார மரம். கன்னிகாரம்—கோங்கிலவ மரம். குரவம்—குரா மரம். கமழ்-நறுமணம் கமழும் மலர்கள் மலர்ந்து. புன்னை-புன்னை மரம். கற்பு-கற்பைக் குறிக்கும் முல்லைக் கொடி. பாடலம்-பாதிரி மரம். கூவிளம்-வில்வ மரம். ஓங்கித் துன்னு-ஓங்கி வளர்ந்து விளங்கும். சாதி-சிறு சண்பக மரம். மரு-மருக்கொழுந்துச் செடி. மாலதி-ஊசி முல்லைக் கொடி. மௌவல்-மல்லிகைக் கொடி. துதைந்த-நெருங்கி வளர்ந்திருக்கும். நந்தி-நந்தியாவட்டைச் செடி. கரவீரம்-அரளிச் செடி. மிடைந்த-ஆகியவை செறிந்து வளர்ந்து விளங்கும். பல்-பல வகையான. மலர்-மலர்கள் மலர்ந்த செடிகள் வளர்ந்துள்ள; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. புனித-தூய்மையான. நந்தவனங்கள்-இறைவனுக்கு அருச்சனை செய்வதற்குரிய மலர்ச்செடிகள் வளரும் நந்தனவனங்களை. பணிந்து-வணங்கிவிட்டு. மணம்—நறுமணம். கமழ்-கமழும். தாரான்-மலர் மாலையை அணிந்த சுந்தர மூர்த்தி. சென்றனன்-சிதம்பரத்தின் வீதியில் எழுந்தருளினான்.

பின்பு உள்ள 95-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தன்னுடைய வாம பாகத்தில் எழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற தன்னுடைய தேவியாகிய சிவகாமவல்லி பார்த்து மகிழும் வண்ணமும், பெரிய ஏழு உலகங்களிலும் வாழ்பவர்கள் உஜ்ஜீவனத்தை அடையுமாறும் மேலே ஒரு திருவடியைத் தூக்கித் திருநடனத்தைப் புரிந்தருளும் நடராஜப் பெருமான் தன்னுடைய திருவடிகளில் அணிந்திருக்கும் சிலம்புகளின் இனிய நாதத்தை வாழ்த்தும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்கள் வாழும் சிவத்தலமாகிய சிதம்பரத்தில் தங்கியிருந்து, ஒவ்வொரு நாளும் நடராஜப் பெருமானைச் சுந்தரமூர்த்தி நாயனார் பணிந்து கொண்டிருக்க, சமுத்திரம் வலமாக வருவது போலப் பக்கத்தில் பக்தர்கள் சுற்றி வரும் தோற்றம் பொருந்தி மிகுதியாக ஆகாயத்தை அளாவ உயர்ந்திருப்பதும், தடாகத்தின் பக்கத்தில் வளரும் மேகங்கள் ஏறித் தவழ்வதும் ஆகிய திருமதிலையும் குளிர்ச்சியைப் பெற்ற நீர் நிரம்பிய அகழியையும் சுந்தரமூர்த்தி நாயனார் தமக்கு எதிரில் பார்த்து மகிழ்ச்சியை அடைந்தார்.. பாடல் வருமாறு:

**''இடம ருங்குதனி நாயகி காண**
**ஏழ்பெ ரும்புவனம் உய்ய எடுத்து**
**நடம்ந வின்றருள் சிலம்பொலி போற்றும்**
**நான்ம றைப்பதியை நாளும் வணங்கக்**
**கடல்வ லங்கொள்வது போற்புடை சூழும்**
**காட்சி மேவிமிகு சேட்செல ஓங்கும்**
**தடம ருங்குவளர் மஞ்சிவர் இஞ்சித்**
**தண்கி டங்கைஎதிர் கண்டு மகிழ்ந்தார்.''**

இடமருங்கு-தன்னுடைய வாமபாகத்தில் எழுந்தருளி

யிருக்கும். தனி-ஒப்பற்ற. நாயகி-தன்னுடைய தேவியாகிய சிவகாமவல்லி. காண-பார்த்து மகிழும் வண்ணமும். பெரும்-பெரிய. ஏழ்-ஏழு. புவனம்-உலகங்களில் வாழ்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம்; இடஆகுபெயர். உய்ய-உஜ்ஜீவனத்தை அடையுமாறும். எடுத்து-தம்முடைய இடத் திருவடியைத் தூக்கி. நடம்-திருநடனத்தை. நவின்றருள்-புரிந்தருளும். சிலம்பு-நடராஜப் பெருமான் தன்னுடைய திருவடிகளில் அணிந்த சிலம்புகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஒலி-இனிய நாதத்தை. போற்றும்-வாழ்த்தும். நான்மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்கள் வாழும்; திணைமயக்கம்; மறை:ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பதியை- சிதம்பரமாகிய தலத்தில் தங்கியிருந்து. பதியை:உருபு மயக்கம். நாளும்-ஒவ்வொரு நாளும். வணங்க-நடராஜப் பெருமானைச் சுந்தரமூர்த்தி நாயனார் பணிந்து கொண்டிருக்க. க்:சந்தி. கடல்-சமுத்திரம். வலம் கொள்வது—வலமாக வருவதை. போல்-போல. புடை-பக்கத்தில். சூழும்-பக்தர்கள் சுற்றி வரும். காட்சி-தோற்றம் மேவி-பொருந்தி; 'அமைந்து' எனலும் ஆம். மிகு-மிகுதியாக நின்று. சேண்-ஆகாயத்தை. செல-அளாவ; இடைக்குறை. ஓங்கும்-உயர்ந்திருப்பதும்; வினையாலணையும் பெயர். தடம்-தடாகத்தின்; சிவகங்கைத் தீர்த்தத்தின். மருங்கு-பக்கத்தில். வளர்-நீர் தங்கும். மஞ்சு-மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். இவர்-ஏறித் தவழும். இஞ்சி—திருமதிலையும். த்:சந்தி. தண்-குளிர்ச்சியைப்பெற்ற நீர் நிரம்பிய; ஆகுபெயர். கிடங்கை-அகழியையும். எதிர்—தமக்கு எதிரில். கண்டு-சுந்தரமூர்த்தி நாயனார் பார்த்து. மகிழ்ந்தார்-மகிழ்ச்சியை அடைந்தார்.

நாயகி காண நடம் புரிபவன்: "மங்கை காண நின் றாடுவான்." என வருதலைக் காண்க.

நடராஜப் பெருமான் சிலம்புகளை அணிந்திருத்தல்: "சிலம்பின் ஒலிஓசை கலிக்க... குனித்தார்.", "கழலும் சிலம்பார்க்கும் எழிலார் மருதரே.", "நாகேச் சரநகருள் சிலம்பா.", "பாதத் தாரொலி பல் சிலம்பினன்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாய னாரும், "சிலம்பும் செறிபாடகமும்... அலம்பும் திருவடி யான்.", "சிலம்பலம் பாவரு சேவடியான்." என்று திரு நாவுக்கரசு நாயனாரும், "அம்பலத் தாடுவான் மலர்சிலம் படி.", "சிலம்பலம்பு சேவடியவர்.", "ஆடற் சிலம்பின் ஒலி கேளா." என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 96-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'சிதம்பரத்தில் உள்ள திருக்கோயிலில் விளங்கும் திருச் சிற்றம்பலத்தில் திரு நடனம் புரிந்தருளும் தேனைப் போன்ற நடராஜப் பெருமானிடம் கொண்ட விருப்பத்தால் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய வண்டுகள் ரீங்காரம் செய்யும் வெளியிடத்தின் பக்கத்தில் மலையைப் போல விளங்கும் மாணிக்கங்களைப் பதித்த உயரமான திருமதில் சுற்றியிருக்கும் ஆழமான அகழியில் தாமரை மலரில் வண்டு கள் பரவி மொய்க்கும் தாழம்பூவில் பொருந்திய விபூதியைப் போன்ற மகரந்தப் பொடியை அணிந்த உடம்புகளைப் பெற்றவையாகிப் பரிசுத்தமான விபூதியைப் போன்ற மகரந்தப் பொடியைப் பூசிக் கொண்ட சிவபெருமானுடைய தொண்டர்கள் என்று சொல்லும் வண்ணம் பறந்து போய்ப் போய் முரல்கின்ற அந்த வண்டுகளைப் பார்த்துச் சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத் தில் பக்தியோடு ஆனந்த சாகரத்தில் முழுகி அவற்றுக்கு எதிரில் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**"மன்றுள் ஆடும்மது வின்நசை யாலே**
**மறைச்சு ரும்பறை புறத்தின் மருங்கே**
**குன்று போலுமணி மாமதில் சூழும்**
**குண்ட கழ்க்கமல வண்டலர் கைதைத்**
**துன்று நீறுபுனை மேனிய வாகித்**
**தூய நீறுபுனை தொண்டர்கள் என்னச்**
**சென்று சென்று முரல் கின்றன கண்டு**
**சிந்தை அன்பொடு திளைத்தெதிர் சென்றார்."**

மன்றுள்-சிதம்பரத்தில் உள்ள திருக்கோயிலில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில். ஆடும்-திருநடனம் புரிந்தருளும். மதுவின்-தேனைப் போன்ற நடராஜப் பெருமானிடம். நசையால்-கொண்ட விருப்பத்தால். ஏ:அசை நிலை. மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ச்:சந்தி. சுரும்பு-வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அறை-ரீங்காரம் செய்யும். புறத்தின்—வெளியிடத்தின். மருங்கு-பக்கத்தில். ஏ:அசைநிலை. குன்று-மலையை. போலும்-போல விளங்கும். மா-உயரமான. மணி-மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். மதில் - திருமதில். சூழும்-சுற்றியிருக்கும். குண்டு-ஆழமான. அகழி-அகழியில். க்:சந்தி. கமல-தாமரை மலரில். வண்டு-வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அலர்-பரவி மொய்க்கும். கைதை-தாழம்பூவில். த்:சந்தி. துன்று-பொருந்தியிருக்கும். நீறு-விபூதியைப் போன்ற மகரந்தப் பொடியை. புனை-பூசிக்கொண்ட. மேனியவாகி-உடம்புகளை உடையவை ஆகி. தூய-பரிசுத்தமாகிய. நீறு-விபூதியை. புனை-தங்கள் திருமேனிகளில் பூசிக் கொண்ட. தொண்டர்கள்-சிவபெருமானுடைய தொண்டர்கள். என்ன-என்று சொல்லும் வண்ணம். ச்:சந்தி. சென்று-பறந்து போய். சென்று-போய். முரல்கின்ற-முரல்கின்ற அந்த வண்டுகளை. கண்டு-பார்த்து.

சிந்தை-சுந்தரமூர்த்திநாயனார் தம்முடைய திருவுள்ளத்தில். அன்பொடு-பக்தியோடு. திளைத்து-ஆனந்த சாகரத்தில் முழுகி. எதிர்-அந்த வண்டுகளுக்கு எதிரில். சென்றார்-எழுந்தருளினார்.

தேனைப் போன்றவர்: ''தேனொத் தினியான்.'', ''தேனுமாய் அமுதுமாய்த் தெய்வமும் தானாய்.'' ''தேனினும் இனியர்.'' ''தேனுமாய் அமுதாகி நின்றான்.'' என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''தேனும் இன்னமுதும் ஆனார்.'', ''தேனொத் தெனக்கினியான்.'', ''தேனைத் திரு அண்ணா மலையனை.'', ''அண்ணிக்கும் தேனர் போல் திருநாகேச்சரவரே.'', ''அடியேன துள்ளே நின்ற தேனமுதை.'', ''திருமணியைத் தித்திக்கும் தேனை.'', ''தேனாய் அமுதானாய் நீயே.'', ''தேனவனே திருச் சோற்றுத் துறையு ளானே.'', ''திருவேஎன் செல்வமே தேனே.'', ''தேனவன்காண் திருவவன்காண்.'', ''கலந்தார்க்கென்றும் தேனவனை.'', ''தேனத்தை வார்த்த தெளிவே போற்றி.'', ''வணங்கும் அடியார் மனத்துள் மருவிப் புக்க தேனவனை.'', ''தேனகத்தி லின் சுவையை.'', ''தேனொத்தடியார்க் கினியார்.'', ''உணர்ந்தார்க் கென்றும் தேனவன்காண்.'', ''கருதுவார் இதயத்தூறும் தேனவன்காண்.'', ''ஏத்துவார்க்குத் தேனவனை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''தேனே இன்னமுதே திருமேற் றளிஉறையும் கோனே.'', ''அடியார்கள்தம் உள்ளத்தேன்.'', ''தேவதேவனைத் தித்திக்கும் தேனை.'', ''தேனிடை இன்னமுதை மற்றதனில் தெளிவை.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''தேனை ஆனெயைக் கரும்பினின் தேறலைச் சிவனை.'', ''ஆட்கொண்ட தேனே அமுதே கரும்பின் தெளிவே சிவனே.'', ''தேனைப் பாலைக் கன்னலின் தெளிவை.'', ''தேனே அமுதே சிந்தைக் கரியாய்.'', ''தேனே அமுதே கரும்பின் தெளிவே.'', ''அகம்நெக அள்ளூறு தேன் ஒப்பனே.'',

''வினையேன் மனத்தே ஊறு மட்டே.'', ''தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து.'', ''தேனாய் அமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்.'', ''தெளிவந்த தேறலை.'', ''தேனைப் பழச்சுவை ஆயி னானை.'', ''அடியோம் கண்ணகத்தே நின்று கனிதரு தேனே.'', ''தேறலின் தெளிவே சிவபெரு மானே.'', ''நெல்லிக் கனியைத் தேனைப் பாலை.'', ''கோற்றே னென்கோ குரைகடல்வாய் அமுதென்கோ.'', ''தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்.'', ''அந்த இடைமருதில் ஆனந்தத் தேன்இருந்த பொந்தை.'' என்று மாணிக்க வாசகரும், ''அம்பலத்தே நின்று கூத்துகந்த தேனே.'', ''மாமருதிற் பெருந்தேன்.'' என்று பட்டினத் துப் பிள்ளையாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 97-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இந்த உலகத்தில் வாழும் மக்கள் விளக்கத்தை அடை யும் வண்ணம் வளருகின்றன இருக்கு வேதம், யஜுர்வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங் களை முறையாக அத்தியயனம் செய்து நிறை வேற்றிய வேதியர்கள் ஓதும் இனிய கானத்தைக் கேட்டுப் பழகிய நல்ல குணம் மிகுதியாக அமைய, வெண்மையான துவசம் காற்றில் அசைந்து ஆடிக் கொண்டிருக்கும்; கீர்த்தி விளங்குகின்ற அடிக்கும் மணியின் நாக்கைக் கோயிலுக்கு வருகிற பக்தர்கள் அடித்து உண்டாக்கும் ஓசையாலும், கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசை களும் வெளியில் அமைந்திருத்தலாலும் மாலை விளங்குகின்ற மலையைப் போன்ற மார்பைப் பெற்ற பிரமதேவனுடைய தங்க நிறத்தைக் கொண்ட நான்கு முகங்கள் என்று கூறும் வண்ணம் அமைந்த தில்லையாகிய சிதம்பரம் என்னும் சிவத் தலத்தில் திகழும் அழகிய வாசல்கள் நான்கினுக்குள் ஒன் றாகிய வடக்குத் திக்கில் உள்ள வாசலுக்கு முன்பு சுந்தர மூர்த்தி நாயனார் போய் அடைந்து.' பாடல் வருமாறு:

''பார்வி ளங்கவளர் நான்மறை நாதம்
பயின்ற பண்புமிக வெண்கொடி ஆடும்
சீர்வி ளங்குமணி நாஒலி யாலும்
திசைகள் நான்கெதிர் புறப்பட லாலும்
தார்வி ளங்குவரை மார்பின் அயன்பொன்
சதுர்மு கங்களென ஆயின தில்லை
ஊர்வி ளங்கு திருவாயில்கள் நான்கின்
உத்த ரத்திசை வாயில்முன் எய்தி.''

இந்தப் பாடல் குளகம். சிதம்பரத்திற்கும் பிரமதேவனுக்கும் சிலேடை இது. சிதம்பரத்திற்கு ஏற்ற பொருள் வருமாறு: பார்— உலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். விளங்க-விளக்கத்தை அடையும் வண்ணம். வளர்-வளரும். நான் மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் அந்த வேதங்களை ஓதும்; திணை மயக்கம். மறை: ஒருமை பன்மை மயக்கம். நாதம்-இனிய காரனத்தை. பயின்ற-பக்தர்கள் கேட்டுப் பழகிய. பண்பு— நல்ல இயல்பு. மிக-மிகுதியாக அமைய. வெண் கொடி— சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தினுடைய கோபுரத்தின்மேல் கட்டியிருக்கும் வெண்மையான துவசம். ஆடும்-காற்றில் அசையும். சீர்-சீர்த்தி. விளங்கு-திகழும். மணி-கோயில் மணியினுடைய. நா-நாக்கை. ஒலியாலும்-தரிசனத்துக்கு வரும் பக்தர்கள் அடித்து எழுப்பும் ஓசையினாலும், திசைகள் நான்கு-கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசைகளும். எதிர் -எதிர் எதிரே. புறப்படலாலும்- வெளியே தோன்றுவதாலும்.

இனி, பிரமதேவனுக்கு ஏற்றபடி அமையும் பொருள் வருமாறு: பார்-உலகம். விளங்க- விளங்கும் வண்ணம். நான்மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம்,

அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும். மறை:ஒருமை பன்மை மயக்கம். நாதம்- ஓதும் இனிய கானம். பயின்ற-பழகிய. பண்பு-இயல்பு. மிக-மிகுதியாக அமைய.

பிரம தேவன் நான்கு வேதங்களையும் ஓதிக் கொண்டிருத்தல்: ''மறையும்அவை உடையான்.'', ''நன்றாம் நான்மறையோன்.'', ''நான்மறை யோன்.'', ''வேதம் நான்கும் ஓதும் அயன்.'', ''மறையான்.'', ''அருமறை ஈந்த உரவோனும்.'', ''மனருல மறையவனும்.'', ''அருமாமறை வல்ல முனிவனும்.'', ''மறைமங்கு நான்முகனும்.'', ''பொய்யா மறையோனும்.'', ''மருவும் நான்மறையோனும்.'', ''வேத நாவன் அயன்.'', ''வேத முதல்வன்.'', ''மறைவல்ல நான்முகனும்.'', ''அருமறை நான்முகத்தோனும்.'', ''வேத முதலோன்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''ஓவாத மறைவல்லானும்.'', ''மறையினான்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''நான்மறையவன்.'', ''நான்மறையோனும்.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க. வெண்கொடி— வெண்மை நிறத்தைப் பெற்ற திருமேனியை உடையவளும் பூங்கொடியைப் போன்றவளுமாகிய கலைமகள். கலைமகள் வெள்ளை நிறத்தை உடையவள்: ''ஆய கலைகள் அறுபத்து நான்கினையும், ஏய உணர்விக்கும் என் அன்னை-தூய, உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தி னுள்ளே, இருப்பள் இங்கு வாராதிடர்.'' என்று வருதலைக் காண்க. ஆடும்— தங்கி விளையாடும். சீர்-சீர்த்தி. விளங்கும்-திகழும். மணி-அழகிய. நா-நாக்கின். ஒலியாலும்-வேதத்தை ஓதும் இனிய கானத்தாலும். கலைமகள், பிரமதேவனுடைய நாவில் அமர்ந்திருப்பவள்; ''வெண்டாமரையில்.... பதுமத்தோன் நாவை மறந்தனள்.'' என்று சேக்கிழார் புராணத்தில் வருவதைக் காண்க. திசைகள் நான்கு-கிழக்கு,

மேற்கு, வடக்கு, தெற்கு என்ற நான்கு திசைகளிலும். எதிர்-எதிரில். புறப்படலாலும்-நான்கு முகங்கள் வெளிப் படுவதாலும். இதனால் பிரம தேவனுக்குத் திசைமுகன் என்ற பெயர் அமைந்தது; "திசைமுகனும்.", "திசை முகம் உடையானும்.", "திசைநான் முகன்.", "திக்கமர் நான்முகன்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனா ரும், "திசைமுகனாய்." என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க. தார்-பூமாலை. விளங்கு-பொலியும். வரை-மலையைப் போன்ற. மார்பின்—மார்பைப் பெற்ற. அயன்-பிரமதேவனுடைய. பொன்—தங்க நிறத்தைப் பெற்ற. பிரமதேவன் தங்க நிறத்தைப் பெற்ற திருமேனியை உடையவன்; இதனை, "கனகம் அனையானும்.", "செம்பொனின் மேனியனாம் பிரமன்.", பொன்னொப்பவனும்.", "பொன்னிற நான்முகன்." என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், "பொன் ஒத்த நிறத்தானும்." என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றால் உணரலாம். சதுர்-நான்கு. முகங் கள் என-முகங்கள் என்று கூறும் வண்ணம். என: இடைக் குறை. ஆயின-அமைந்தனவாகிய. தில்லை-தில்லையாகிய சிதம்பரம் என்னும். ஊர்-சிவத்தலத்தில். விளங்கு-திகழும். திரு-அழகிய. வாயில்கள்-வாசல்களாகிய. நான்கு திக்குகள்; கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசைகளிலும் உள்ள வாசல்கள். உத்தரத்திசை—வடக்குத் திக்கில் உள்ள. வாயில்-வாசலுக்கு. முன்-முன் னால். எய்தி-சுந்தரமூர்த்திநாயனார் போய்ச்சேர்ந்து. மார் புக்கு மலை உவமை: "பூண்டவ் வரைமார்பிற் புரிநூலன்." என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பாடி யருளியதைக் காண்க.

பிறகு உள்ள 98-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அன்போடு வந்து சுந்தரமூர்த்தி நாயனாரை எதிர் கொண்டு வரவேற்ற சிவனடியார்களோ அன்றி நம்பி ஆரூரர்

தாமோ முன்னால் வணங்கினவர் யார் என்று தெரிந்து கொள்ள முடியாத விதத்தோடு ஒருவரை ஒருவர் எதிரில் பணிந்து மகிழ்ச்சியை அடைந்து, பிறகு தம்முடைய கைகளைக் குவித்து நடராஜப் பெருமானைக் கும்பிட வேண்டுமென்று நிரம்பிப் பெருகிய விருப்பத்தோடு திருநாவலூர் என்னும் நகரத்தில் திருவவதாரம் செய்தருளிய பெருமகனாராகிய அந்த நாயனாரும் தங்கத்தைப் பதிக்கப்பெற்று விளங்கும் அழகிய திருமாளிகைகள் உயரமாக நின்று விளங்கும் ஒப்பைக் கடந்த அழகிய சிதம்பரத்தில் உள்ள வடக்குத் தெருவில் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

''அன்பின் வந்தெதிர் கொண்டசீர்அடியார்
அவர்க ளோநம்பி ஆரூரர் தாமோ
முன்பி றைஞ்சின ரியாவ ரென்றறியா
முறைமை யால்எதிர் வணங்கி மகிழ்ந்து
பின்பு கும்பிடும் விருப்பில் நிறைந்து
பெருகு நாவல்நக ரார்பெரு மானும்
பொன்பி றங்குமணி மாளிகை நீடும்
பொருவி றந்ததிரு வீதி புகுந்தார்.''

அன்பின்—அன்போடு. வந்து—சுந்தரமூர்த்தி நாயனார் எழுந்தருளியிருந்த திருவீதிக்கு வந்து. எதிர் கொண்ட—அந்த நாயனாரை எதிர்கொண்டு வரவேற்ற. சீர்—சீர்த்தியைப் பெற்ற. அடியார் அவர்களோ— நடராஜப்பெருமானுடைய அடியார்களாகிய அவர்களோ; அடியார்: ஒருமை பன்மை மயக்கம். நம்பி ஆரூரர் தாமோ—நம்பி ஆரூரராகிய அந்த நாயனார்தாமோ. முன்பு—முன்னால். இறைஞ்சினர்—வணங்கியவர். இ: குற்றியலிகரம். யாவர்—யார். என்று—என. அறியா— தெரிந்து கொள்ள முடியாத. முறைமையால்—விதத் தோடு; உருபு மயக்கம். எதிர் வணங்கி—ஒருவரை ஒருவர் எதிரில் பணிந்து. மகிழ்ந்து—மகிழ்ச்சியை அடைந்து.

பின்பு—பிறகு. கும்பிடும்—நடராஜப் பெருமானைக் கும்பிட்டு வணங்கும். விருப்பில்—விருப்பத்தில். நிறைந்து-நிரம்பி. பெருகு—அந்த விருப்பம் பெருகி உள்ள. நாவல்—திருநாவலூராகிய. நகரார்—நகரத்தில் வாழ்பவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். 'திருநாவலூரில் அவதாரம் செய்தருளிய' எனலும் ஆம். பெருமானும்—பெருமகனாராகிய அந்த நாயனாரும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்—தங்கத்தைப் பதித்து. பிறங்கு—விளங்கும். மணி—அழகிய. மாளிகை—திருமாளிகைகள்; ஒருமை பன்மை மயக்கம். நீடும்—உயரமாக நின்று விளங்கும். பொரு—ஒப்பை. இறந்த—கடந்த. திரு—அழகிய; 'செல்வம் படைத்தவர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். வீதி—வடக்குத் தெருவுக்குள். புகுந்தார்—நுழைந்தார்.

அடுத்து வரும் 99-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருவீதியில் ஒரு பக்கத்தில் பெருமையைப் பெற்ற இருக்கு வேதம், யஜுர்வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்கள் ஓதும் அந்த வேதங்களின் கானம் முழங்கும்; வேறு பக்கத்தில் நடனம் ஆடும் அரம்பையைப் போன்ற அழகைப் பெற்ற பெண்மணிகள் நடனசபையில் நடனம் புரியும்போது வாசிக்கப்படும் வாத்தியங்களும் பாடும் பாடல்களும் நடனமாடும் பெண் மணிகள் தங்கள் கால்களில் அணிந்திருந்த சிலம்புகள் முதலியவற்றின் ஓசையும் முழங்கும்; மேகங்கள் தவழும் ஆகாயத்தின்மேல் துந்துபி வாத்தியங்கள் ஐந்தும் பேரொலியை எழுப்பும்; நறுமணம் கமழும் மலர் மாலைகளில் வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்யும்; பொங்கி வருகின்ற பக்தியினால் அருவியைப் போலக் கண்கள் நீர் சொரியும் தொண்டர்கள் நடராஜப் பெருமானை வாழ்த்தும் வாழ்த்துக்களின் ஓசை எவ்விடத்திலும் ஆர

வாரத்தை உண்டாக்கும்; இவ்வாறு பிறைச் சந்திரன் தங்குகின்ற சடாபாரத்தில் கங்கையாறு அலைகளை வீசி ஒலிக்கும் தலையைப் பெற்ற தேவர்களுக்குத் தேவராகிய நடராஜப் பெருமானார் விரும்பி எழுந்தருளியதாகிய சிதம்பரத்தில் உள்ள தெருவில்.' பாடல் வருமாறு :

''அங்கண் மாமறை முழங்கும்; மருங்கே
ஆட ரம்பையர் அரங்கு முழங்கும்;
மங்குல் வானின்மிசை ஐந்தும் முழங்கும்;
வாச மாலைகளில் வண்டு முழங்கும்;
பொங்கும் அன்பருவி கண்பொழி தொண்டர்
போற்றி சைக்கும்ஒலி எங்கும் முழங்கும்;
திங்கள் தங்குசடை கங்கை முழங்கும்
தேவ தேவர் புரியும் திருவீதி.''

அங்கண்—சிதம்பரத்தில் உள்ள அந்தத் திருவீதியில் ஒரு பக்கத்தில். மா—பெருமையைப் பெற்றவையாகிய; வினையாலணையும் பெயர். மறை—இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய தில்லை வாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் ஓதும் அந்த வேதங்களின் கானம். மறை: ஒருமை பன்மை மயக்கம்; திணைமயக்கம். முழங்கும்—முழக்கத்தைச் செய்யும். ஆடு—நடனம் ஆடும். அரம்பையர்—அரம்பையைப் போன்ற அழகைப் பெற்ற பெண் மணிகள்; உவம ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம். அரங்கு — நடன சபையில் நடனம் புரியும் போது வாசிக்கப்படும் வாத்தியங்களும், பாடும் பாடல்களும், நடனமாடும் பெண்மணிகள் தங்களுடைய கால்களில் அணிந்திருந்த சிலம்புகள் முதலியவற்றின்; ஆகுபெயர். முழங்கும்—ஓசையும் முழங்கும். மங்குல்—மேகங்கள் தவழும்;ஒருமை பன்மை மயக்கம். வானின்மிசை—ஆகாயத்தின்மேல். ஐந்தும்—நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்ச

தாளங்கள், உடல் என்னும் ஐந்து வாத்தியங்களும். முழங்கும்—பேரொலியை எழுப்பும். பொங்கும்—பொங்கிவரும். அன்பு—பக்தியினால். அருவி—மலையிலிருந்து குதிக்கும் அருவியைப் போல. கண்—பக்தர்களுடைய கண்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொழி—நீர்சொரியும். தொண்டர்—நடராஜப் பெருமானுடைய தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்று—வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இசைக்கும்-பாடும். ஒலி-இனிய நாதம். எங்கும்—எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். முழங்கும்—முழக்கத்தை எழுப்பும். திங்கள்—பிறைச் சந்திரன். தங்கு—தங்கியிருக்கும். சடை—சடாபாரத்தை உடைய தலையில்; ஆகுபெயர். கங்கை—கங்கையாறு. முழங்கும்—அலைகளை வீசி ஒலிக்கும். தேவ தேவர்—தேவர்கள் யாவருக்கும் முதல் தேவராகிய நடராஜப் பெருமானார். புரியும்—விரும்பி எழுந்தருளும். திருவீதி—அழகிய தெருவில் இத்தகைய நிகழ்ச்சிகள் நிகழும்.

தேவதேவர்: "தேவர்கள் தேவர் எம்பெரு மானார்.", "தேவர்கள் தேவரோ.", "தேவ தேவன் மன்னும் ஊர் திருந்து காழி." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''தேவாதி தேவர் என்னும் திருச்செம்பொன் பள்ளியாரே.", "தேவர்கள் தேவர் போலும்திருப்பயற் றூரனாரே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், "வானவர்க்கமுதைத் தேவ தேவனை.", "தேவ தேவனைத் தித்திக்கும் தேனை.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''தேவர்கோ அறியாத தேவ தேவன்.'', ''மெய்த் தேவர் தேவர்க்கே சென்றூ தாய் கோத்தும்பீ.", ''சேட்டைத் தேவர்தம் தேவர் பிரானே.'', ''தேவர்தம் தேவே சிவபுரத் தரசே.'', ''தேவ தேவன்மெய்ச் சேவகன்.'', "தேவதேவன் திருப்பெய ராகவும்.'' என்று மாணிக்க வாசகரும், ''தேவ தேவேசனே.'', ''தரித்திலர் தேவ தேவர்.'', ''தேவ தேவனுமது திருவுள்ளம் செய்து.'', ''ஆதி தேவர்தம் திருவருட் பெருமை.'', ''ஆதி தேவர் தம்

அஞ்செழுத் தாமவை.'', ''தேவர்கள்தம் பெருந்தேவர்.", ''ஆதி தேவரங் கமர்ந்த வீரட்டானம்.'', ''தேவர் தேவனைத் திருக்கபா லீச்சரத் தமுதை.", ''ஆதி தேவர் முன்னின்று.'', ''தேவாதி தேவர்பிரான் திருத்தில்லை.'', "தேவர்க்கு முதற்றேவர் சீரடியார்." என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 100-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

"இன்பத்தை நுகரும் நுகர்ச்சி நெடுங்காலமாக இருக்கும் நிதிக்கு அரசனாகிய குபேரன் நிலைபெற்று வாழும் அளகாபுரி என்னும் நகரத்தை ஒத்து விளங்குபவை, சிதம்பரத்தின் எல்லையில் உயர்ந்து நின்று ஆகாயத்தை முன்னால் விழுங்குபவை போலத் தோற்றப் பொலிவோடு இருக்கும் திருமாளிகைகளின் தொகுதியில் நெருங்கிப் பறக்கும் பெரிய துவசங்கள் யோகம் புரியும் திருவுள்ளங்களைக் கொண்ட தில்லை வாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் வளர்க்கின்ற ஹோமங்களிலிருந்து எழும் புகை உயரமாக உள்ள ஆகாயத்தைச் சேர, மேகங்களினுடைய வரிசைகளின் மேலும் நடுவிலும் ஆகிய எல்லா இடங்களிலும் மின்னல்கள் அசைவது என்று சொல்லுமாறு திகழும்.' பாடல் வருமாறு :

''போகம் நீடுநிதி மன்னவன் மன்னும்
புரங்கள் ஒப்பன வரம்பில ஓங்கி
மாகம் முன்பருகு கின்றன போலும்
மாளி கைக்குலம் மிடைந்த பதாகை
யோக சிந்தைமறை யோர்கள் வளர்க்கும்
ஓம தூமம்உயர் வானில் அடுப்ப
மேக பந்திகளின் மீதிடை எங்கும்
மின்னு டங்குவன என்ன விளங்கும்.''

போகம்—செல்வத்தினால் நுகரும் நுகர்ச்சி. நீடு—நெடுங்காலமாக அமைந்திருக்கும். நிதி—நிதிக்கு. மன்னவன்—

அரசனாகிய குபேரன். மன்னும்—நிலைபெற்று வாழும். புரங்கள்—அளகாபுரி என்னும் நகரத்தையும் தேவலோகத் தில் இருக்கும் வேறு நகரங்களையும். ஒப்பன—ஒத்து விளங்குபவையாகிய. வரம்பில—எல்லை இல்லாத; இல— இடைக்குறை. ஓங்கி—உயரமாக நின்று மாகம்—ஆகா யத்தை. முன்—முன்னால். பருகுகின்றன—விழுங்கு கின்றவை. போலும்—போல விளங்கும். மாளிகை—திரு மாளிகைகளின்; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. குலம்—கூட்டத்தில். மிடைந்த—நெருங்கிப் பறக்கின்ற. பதாகை—பெரிய துவசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். யோக—யோகத்தைப் புரியும். சிந்தை — உள்ளங்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். மறையோர்கள்— தில்லை வாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும். வளர்க்கும் — வளர்த்து வரும். ஓம — ஹோமங்களில் எழும்; ஒருமை பன்மை மயக்கம் தூமம்—புகை. உயர் —உயரமாக விளங்கும் வானில்—ஆகாயத்தில் சென்று. அடுப்ப—சேர. மேக—மேகங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பந்திகளின் — வரிசைகளினுடைய. மீது—மேலும். இடை — நடுவிலும். எங்கும் — மற்ற இடங்கள் எல்லாவற்றிலும்; ஒருமை பன்மை மயக்கம். மின்—மின்னல்கள்; ஒருமை பன்மை மயக்கம். நுடங்குவன—அசைகின்றன; கால மயக்கம். என்ன— என்று கூறுமாறு. விளங்கும்—விளங்கிக் காட்சியை அளிக்கும்.

பிறகு உள்ள 101-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நடனம் ஆடுகின்ற மயில்கள் தங்களுடைய கலாபங் களை அடிக்கும் கோபுர வாசல் ஒவ்வொன்றிலும் ஆடிக் கொண்டிருக்கும்; தீக்கடைகோலினால் உண்டான நெருப்பு, தில்லை மூவாயிரம் அந்தணர்கள் புரியும் வேள் விகளில் கொடுக்கும் ஆகுதி ஒவ்வொன்றினாலும் எழும்; பக்கத்தில் அழகிய திருமாளிகைகளினுடைய வாசல் ஒவ்

வொன்றிலும் மாலைகள் தொங்கும்; வீடுகளில் உள்ள ஒவ்வொரு திண்ணையிலும் மங்கலமான பூரண கும்பத்தை வைத்திருப்பார்கள்; பெருமையைப் பெற்ற பிரகாசம் தேர்களின் வரிசை ஒவ்வொன்றிலும் வீசும்; அன்ன சாலை ஒவ்வொன்றிலும் சம்பா நெற்களைக் குத்திய அரிசிகளைச் சமைத்த சோறு மலையைப்போலக் காட்சியை அளிக்கும்; தண்ணீர்ப் பந்தல் ஒவ்வொன்றிலும் நெடு நாட்களாகச் சேமித்து வைத்திருக்கும் குளிர்ச்சியான நீரை நிரப்பி வைத்திருக்கும் பாத்திரங்களைக் காணலாம்; நீண்ட வீதிகளின் இடம் ஒவ்வொன்றிலும் வந்து கூடி நிரம்பிய தேவர்களின் கூட்டம் காணப்படும்.' பாடல் வருமாறு:

''ஆடு தோகைபுடை நாசிகள் தோறும்;
அரணி தந்த சுடர் ஆகுதி தோறும்;
மாடு தாமமணி வாயில்கள் தோறும்;
மங்க லக்கலசம் வேதிகை தோறும்;
சேடு கொண்டஒளி தேர்நிரை தோறும்;
செந்நெல் அன்னமலை சாலைகள் தோறும்;
நீடு தண்புனல்கள் பந்தர்கள் தோறும்;
நிறைந்த தேவர்கணம் நீளிடை தோறும்.''

ஆடு—நடனம் ஆடுகின்ற. தோகை— மயில்கள் தங்களுடைய கலாபங்களை; ஒருமை பன்மை மயக்கம். புடை— அடிக்கும். நாசிகள்—கோபுர வாசல்கள். தோறும்—ஒவ்வொன்றிலும் ஆடிக்கொண்டிருக்கும். அரணி—தீக்கடை கோல். தந்த—உண்டாக்கிய. சுடர்—நெருப்பு. ஆகுதி— தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரம் பேர்களும் புரியும் வேள்விகளில் கொடுக்கும் ஆகுதி. தோறும்—ஒவ்வொன்றிலும் எழும். மாடு—பக்கத்தில். மணி—அழகிய. வாயில்கள்—திருமாளிகைகளின் வாசல்கள். தோறும்—ஒவ்வொன்றிலும். தாமம்—மாலைகள் தொங்கும்; ஒருமை பன்மை மயக்கம். வேதிகை—திருமாளிகைகளில் உள்ள திண்ணை.

தோறும்—ஒவ்வொன்றிலும். மங்கல—மங்கலமாகிய. க்; சந்தி. கலசம்—பூரண கும்பத்தை வைத்திருப்பார்கள். சேடு—பெருமையை. கொண்ட—பெற்ற. ஒளி—பிரகாசம். தேர்—தேர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரை—வரிசை. தோறும்—ஒவ்வொன்றிலும் வீசும். சாலைகள்–வருகிறவர்களுக்கு விருந்துணவைப் படைக்கும் அறச் சாலைகள். தோறும்—ஒவ்வொன்றிலும். செந் நெல்—சம்பா நெற்களைக் குத்தி எடுத்த அரிசிகளைச் சமைத்த. அன்னம்—சோறு மலை—மலையைப் போலக் காட்சி அளிக்கும். பந்தர்கள்—தண்ணீர்ப் பந்தர்கள். தோறும்—ஒவ்வொன்றிலும். நீடு—நீண்டதினங்களாகச் சேமித்து வைத்திருக்கும். தண்—குளிர்ச்சியைப் பெற்ற. புனல்கள்—நீரை நிரப்பி வைத்திருக்கும் பாத்திரங்களை; ஆகுபெயர். 'காணலாம்' என்பதை வருவிக்க. நீள்—நீள மாக உள்ள. இடை—வீதிகளின் இடம். தோறும்—ஒவ் வொன்றிலும். நிறைந்த—தேவலோகத்திலிருந்து நட ராஜப் பெருமானைத் தரிசிப்பதற்காக வந்து நிரம்பிய. தேவர்—தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம் கணம்—கூட்டம் காணப்படும்.

பிறகு உள்ள 102-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'கணக்கு இல்லாத பெரிய உலகங்கள் எல்லா வற்றிலும் இருக்கின்ற வரம்பு இல்லாத அழகுடைய பொருள்கள் என்று கூறப்பட்ட யாவும் மண்ணுலகத்தில் உள்ள இந்தச் சிவத்தலமாகிய சிதம்பரத்தில் வந்து சேர்ந்திருக்கின்றன என்று கூறும் வண்ணம் மங்கல காரியங்கள் விளங்குகின்ற வளத்தைப் பெற்றவையாக விளங்கிப் புண்ணியச் செயல்களைப் புரிந்தவர்களும் தூய பக்தர்களுமாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாய னார், திருநாவுக்கரசு நாயனார், மாணிக்க வாசகர் முதலியவர்கள் தன்னைப் புகழ்ந்து பாசுரங்களை விரும்பிப் பாடியருளிய சிறப்போடு விளங் கும் தலைவனாகிய நடராஜப்பெருமான் திரு நடனம்

புரிந்தருளும் திருச்சிற்றம்பலத்தைச் சுற்றி விளங்கும் அழகிய தங்கத்தைப் பதித்த திருமாளிகைகள் உயர்ந்து நிற்கும் தெருவை ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார் பணிந்து.' பாடல் வருமாறு:

**''எண்ணில் பேர்உல கனைத்திலும் உள்ள**
**எல்லை யில்அழகு சொல்லிய எல்லாம்**
**மண்ணில் இப்பதியில் வந்தன என்ன**
**மங்க லம்பொலி வளத்தன ஆகிப்**
**புண்ணி யப்புனித அன்பர்கள் முன்பு**
**புகழ்ந்து பாடல்புரி பொற்பின் விளங்கும்**
**அண்ணல் ஆடுதிரு அம்பலம் சூழ்ந்த**
**அம்பொன் வீதியினை நம்பி வணங்கி.''**

இந்தப் பாடல் குளகம். எண்—கணக்கு. இல்—இல்லாத; கடைக்குறை. பேர்—பெரிய. உலகு—உலகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அனைத்திலும்—எல்லாவற்றிலும். அழகு—அழகைப் பெற்றவை; ஆகுபெயர். சொல்லிய—என்று பாராட்டிக் கூறப்பெற்ற பொருள்கள். எல்லாம்—யாவும். மண்ணில்—இந்த மண்ணுலகத்தில். இப் பதியில்—இந்தச் சிவத்தலமாகிய சிதம்பரத்தில். வந்தன—வந்து சேர்ந்தன. என்ன—என்று கூறுமாறு. மங்கலம்—திருமணம், உபநயனம், சீமந்தம், வளைகாப்பு, அட்சராப்பியாசம், குடுமி வைத்தல், அன்னப் பிராசனம், ருது சாந்தி முகூர்த்தம் முதலிய மங்கல காரியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொலி—விளங்கும். வளத்தன ஆகி—வளப்பத்தைப் பெற்றவையாகி. ப்:சந்தி. புண்ணிய—புண்ணியச் செயல்களைப் புரிந்த; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. புனித—தூய்மையான. அன்பர்கள்—பக்தர்களாகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், மாணிக்கவாசகர் முதலியவர்கள். முன்பு—பழங்காலத்தில். புகழ்ந்து—புகழ்களைக்கூறி. பாடல் — பாசுரங்களை;

ஒருமை பன்மை மயக்கம். புரி—விரும்பிப் பாடியருளிய. பொற்பின்—சிறப்போடு. விளங்கும்—பொலியும். அண்ணல்—தலைவனாகிய நடராஜப் பெருமான். ஆடு—திரு நடனம் புரிந்தருளும். திரு—அழகிய. அம்பலம்—திருச் சிற்றம்பலத்தை. சூழ்ந்த—சுற்றியுள்ள. அம்—அழகிய. பொன்—தங்கத்தைப் பதித்த திருமாளிகைகள் உயரமாக நிற்கும்; ஆகு பெயர். வீதியினை—தெருவை. நம்பி—ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார். வணங்கி—பணிந்து விட்டு.

சிதம்பரத்தைப் பற்றி, நட்டபாடை, காந்தார பஞ்சமம் என்னும் பண்களில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருப்பதிகங்களைப் பாடியருளியுள்ளார். அவற்றுள் நட்டபாடைப் பண்ணில் அமைந்த பாசுரம் ஒன்று வருமாறு:

"கற்றாங் கெரிஓம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே."

காந்தார பஞ்சமப் பண்ணில் அமைந்த ஒரு பாசுரம் வருமாறு:

"ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்
அந்த ணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடி னாய் இட மாகநறுங் கொன்றை நயந்தவனே
பாடி னாய்மறை யோடுபல் கீதமும்
பல்ச டைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடி னாய்அருளாய் சுருங்கஎம் தொல்வினையே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் கொல்லி என்னும் பண் அமைந்த ஒரு திருப்பதிகத்தை யும், திருவிருத்தம், திருக்குறுந்தொகை, பெரிய திருத்

தாண்டகம், புக்க திருத்தாண்டகம் என்பவை அடங்கிய திருப்பதிகங்களையும் பாடியருளியுள்ளார். அவற்றுள் பெரிய திருத்தாண்டகம் ஒன்று வருமாறு:

''அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தம் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.''

இந்தத் தலத்தைப் பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''பேராது காமத்திற் சென்றார்போல் அன்றியே
பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன் அடிவீழும்
திருவி னாரை
ஓராது தருமனார் தமர்செக்கில் இடும்போது
தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப்
பெற்றா மன்றே.''

இந்தத் தலத்தைப்பற்றி மாணிக்கவாசகர் பாடியருளி யவை வருமாறு:

''தில்லை மூதூர் ஆடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றனன் ஆகி.''

''தென்றில்லை மன்றினுள் ஆடி போற்றி.

''மாடு நகைவாள் நிலாஎறிப்ப
வாய்திறந் தம்பவ ளம்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை ஆண்ட வாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப் பாடித்
தேடுமின் எம்பெரு மானைத் தேடிச்
சித்தம் களிப்பத் திகைத்துத் தேறி
ஆடுமின் அம்பலத் தாடி னானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.''

''வட்ட மலர்க்கொன்றை மாலை பாடி
மத்தமும் பாடி மதியும் பாடிச்
சிட்டர்கள் வாழும்தென் தில்லை பாடிச்
சிற்றம்ப லத்தெங்கள் செல்வம் பாடிக்
கட்டிய மாசுணக் கச்சை பாடிக்
கங்கணம் பாடிக் கவித்த கைம்மேல்
இட்டுநின் றாடும் அரவம் பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்தும் நாமே.''

''நானார்என் உள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார்
வானோர் பிரான்என்னை ஆண்டிலனேல் மதிமயங்கி
ஊனார் உடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ.''

''தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.''

''வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கன்னெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டு கொண்ட
அன்னம் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ."

''பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட்கொண்ட
ஐயாஎன் ஆருயிரே அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.''

"புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணம் கொட்டாமோ."

"குலம்பாடிக் கொக்கிறகும் பாடிக்கோல் வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாடோறும்
அலம்பார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.''

''தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடி
பெண்பால் உகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ."

"தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடி
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாம்காண் சாழலோ.''

''அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையும் தேவனென்று நண்ணுமது என்னேடி
நம்பனையும் ஆமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாஎன் றேத்தினகாண் சாழலோ."

"இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும் துறந்தொழிந்தேன்
அணையார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ."

"பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கன்எச்சன் இந்துஅனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ."

"தேனாடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனாடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே
நானாடி யாடிநின் றோலமிட நடம்பயிலும்
வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ."

"வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
திணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூறப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ."

"படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவைஅளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்பம் மேயபிரான்
தடமார் மதிற்றில்லை அம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ."

'பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுணம் ஆகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை அம்பலத்தே திருநடம்செய்
கூத்தாஉன் சேவடி கூடும்வண்ணம் தோணோக்கம்."

"என்றும் பிறந்திறந் தாழாமே ஆண்டுகொண்டான்
கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்றாத சீர்த்தில்லை அம்பலவன் குணம்பரவித்
துன்றார் குழலினீர் தோணோக்கம் ஆடாமோ."

''மானம் அழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்
வானம் தொழும்தென்னன் வார்கழலே நினைந்தடி
யோம்
ஆனந்தக் கூத்தன் அருள்பெறினாம் அவ்வணமே
ஆனந்த மாகிநின் றாடாமோ தோணோக்கம்."

''உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீஇருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேன்உன்
அடியார் நடுவுள் இருக்கும்அரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே.''

"முன்னின் றாண்டாய் எனைமுன்ன
மியானே அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன்
பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வரநின்று
போந்தி டென்னா விடில்அடியார்
உன்னின் றிவனார் என்னாரோ
பொன்னம் பலக்கூத் துகந்தானே.''

"உகந்தா னேஅன் புடையடிமைக்
குருகா உள்ளத் துணர்விலியேன்
சகந்தான் அறிய முறையிட்டால்
தக்க வாறன் றென்னாரோ

மகந்தான் செய்து வழிவந்தார்
வாழ வாழ்ந்தாய் அடியேற்குன்
முகந்தான் தாரா விடின்முடிவேன்
பொன்னம் பலத்தெம் முழுமுதலே."

"முழுமுத லேஐம் புலனுக்கும்
மூவர்க் கும்என் றனக்கும்
வழிமுத லேநின் பழவடியார்
திரள்வான் குழுமிக்
கெழு முத லேஅருள் தந்திருக்க
இரங்குங் கொல்லோஎன்
றழுமது வேயன் றிமற்றென்
செய்கேன் பொன்னம் பலத்தரைசே."

"அரைசே பொன்னம் பலத்தாடும்
அமுதே என்றுன் அருள்நோக்கி
இரைதேர் கொக் கொத் திரவுபகல்
ஏசற் றிருந்தே வேசற்றேன்
கரைசேர் அடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் அடியேன்பாற்
பிரைசேர் பாலின் நெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ."

"ஏசா நிற்பர் என்னைஉனக்
கடியான் என்று பிறரெல்லாம்
பேசா நிற்ப ரியான்றானும்
பேணா நிற்பேன் நின்அருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்கும்
திருவோ லக்கம் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும்
எந்தாய் இனித்தான் இரங்காயே."

" அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பார் ஆரிங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட
பொன்னே பொன்னம் பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து
வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டம் காட்டாயேல்
செத்தே போனாற் சிரியாரோ."

" சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வே றிருந்துன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும்
தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ
நம்பி இனித்தான் நல்காயே."

" நல்கா தொழியான் நமக்கென்றுன்
நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா
வணங்கா மனத்தான் நினைந்துருகிப்
பல்கால் உன்னைப் பாவித்துப்
பரவிப் பொன்னம் பலம்என்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி
அருளாய் என்னை உடையானே."

வல்லைவாள் அரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே.'

" சிந்தைதனைத் தெளிவித்துச்
சிவமாக்கி எனையாண்ட
அந்தமிலா ஆனந்தம்
அணிகொள்தில்லை கண்டேனே."

" எனைப்பெரிதும் ஆட்கொண்டென்
பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகும் தொழும்தில்லை
அம்பலத்தே கண்டேனே." 2

" தித்திக்கும் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன்
அணிகொள்தில்லை கண்டேனே."

" பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சு தில்லை
அம்பலத்தே கண்டேனே."

" கோதில முதானானைக் குலாவுதில்லை
கண்டேனே."

" ஒரு முதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம்
பலம் மன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான்
கண்டேனே."

" வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே
கண்டேனே."

" கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை
கண்டேனே."

" அம்பலத் தாடுகின்ற, என்பொலா மணியை."

" அம்பலத் தாடும், முகைநகைக் கொன்றை
மாலை முன்னவன்."

" குனித்தடியேன், ஆடும் குலாத்தில்லை
ஆண்டானைக் கண்டன்றே."

" தேவே தில்லை நடமாடி, திகைத்தேன்
இனித்தான் தேற்றாயே."

" குறியொன்றும் இல்லாத கூத்தன்."

இவற்றையன்றி,

" அறிந்தாடும் ஆற்றா தரங்கு"

என்று காரைக்கால் அம்மையாரும்,

" நல்லச்சிற் றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர்."

என்று ஐயடிகள் காடவர்கோன் நாயனாரும்,

" புரம் மூன்றெரித்த, தேவனைத் தில்லைச்
சிவனை."

என்று சேரமான் பெருமாள் நாயனாரும்,

" பொன்னம் பலத்துள் ஆடுவதும்."

என்று பரண தேவ நாயனாரும்,

" தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே,
கூத்துகந்தான்."

" கொன்றைத் தொடைகொண்ட வார்சடை
அம்பலத்தான்."

" நடமும் காட்டும் உடையான் உயர்தில்லை
அம்பலம்."

" நினைப்பவர், செம்மை மனத்தினும் தில்லை
மன்றிலும் நடம், ஆடும் அம்பல வாண."

" தில்லை யாகிய தொல்பெரும் பதியும்."

" தென்புலியூர் அம்பலத்தான் செம்பொன் அடி."

" தில்லைச்சிற் றம்பலத்தான்றன் திருநடமே."

" தில்லைக் கோயில் கொண்ட செல்வரே."

" தில்லை மூதூர் ஆடும் அம்பலக் கூத்தனை."

" ஆடகம்சேர் அம்பலத்தே ஆளுடையார்
நின்றாடும், நாடகம்கண் டன்பான நாள்."

' தில்லை அம்பலத்தே நின்று கூத்துகந்த தேனே.'

"தில்லைநகர் அம்பொன் அணியும் அரங்கின்
நடம்நவில் அங்கண் அரசை"

"மறையவர் தில்லை மன்றுகிழவோனே."

"மன்றில் நடமாடும் நாயனார்."

"திருத்தில்லை சேர்வதொர் செந்நெறியே."

"செறிபொழில் நிலவு தில்லைஎன்கிலர்
திருநடம் நவிலும் இறை என்கிலர்."

"தொல்லெயில் உடுத்த தில்லை காவல."

"வம்பலர் தும்பை அம்பல வாண."

"செய்ய திருமேனிச் சிற்றம் பலவருக்கு."

"தில்லை அம்பலக் கூத்தற்கு."

"ஒன்ன வார்கள்புரம் முன்னொர்நாள்
விழுந்தெரிந்து துகளாக வென்றிசெய்த
வில்லி தில்லைநகர்."

"தில்லை மூதூர், ஆடகப் பொதுவில் நாடகம்
நவிற்றும் கடவுட் கண்ணுதல்."

"ஒற்றைக்கை, மாமறுகச் சீறிய சிற்றம்பலத்
தான்."

"தண்புலிசைப் பிரான்."

"செம்பொற் றில்லை மூதூர்
அம்பலத் தாடும் உம்பர்நா யகனே."

"தில்லை மன்றுளே ஆடும் மணி."

"அம்மன்றுக் கெல்லாம்
அணியாய் அருள்நடம் ஆடும் பிரானை."

"பொழில்சூழ் தில்லையுள் அரனார்."

"அற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்றுள் ஆடும் இறையவன்."

"வியன் தில்லையான் அருள்."

"தில்லை ஆளுடையான் செம்பொன்
அம்பலத்தே."

"அம்பலவர் அங்கணர்."

'இம்பர் உய்ய அம்பலம் பொலியத்
திருவளர் தில்லை மூதூர் அருநடம் குயிற்றும்
ஆதிவா னவனே.'

"மால்நாகம், பந்திப்பார் நின்றாடும் பைம்
பொன்னின் அம்பலத்தே."

"ஆள்வாய் திருத்தில்லை அம்பலத்தாய்."

"சடைஆட நடம்ஆடும் பித்தர்."

"தில்லை மூதூர்
ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும்
இமையர் நாட்டத் தொருபெருங் கடவுள்."

"தெய்வக் கூத்தும்நின் செய்ய பாதமும்."

"வாமாண் பொழில் தில்லை மன்றைப்பொலிவித்த
கோமானை."

"அம்பலக் கூத்தனுக் கன்புசெய்யா மிண்டர்."

"திலைநகரிற் செம்பொன் அம்பலம் மேவிய
சிவனை."

"தில்லை மாநகர் போற்றி தில்லையுட்
செம்பொன் அம்பலம் போற்றி அம்பலத்
தாடும் நாடகம் போற்றி."
என்று பட்டினத்துப் பிள்ளையாரும்,

"தக்கனார் தலையும் காதிய தில்லைச் சிற்றம்பலத
தான்."

"சிற்றம்பலத்துள் நின்றாடும் கழல்."

"தில்லை அம்பலத்தே குழல்படு சொல்வழி ஆடுவர்
யாவர்க்கும் கூத்தினையே."

"கூத்தனென்றும் தில்லை வாணனென்றும்."

"தண்ணார் புனல்தில்லைச் சிற்றம்
பலந்தன்னில் மன்னிநின்ற விண்ணாளனை."

"தில்லையுள் நாடகம் ஆடுகின்ற
துறவியல் சோதியைச் சுந்தரக் கூத்தனை."

" வண்டேன் மலர்த்தில்லை அம்பலத்
தாடும் மணியினையே. 2

" தில்லை அம்பலத் தான்றன் திருந்தடியே."

" தில்லை அம்பலத்து
முடியிட்ட கொன்றைநன் முக்கட்பிரான்.

" தென்தில்லைப் பரம்பர."

" தில்லை தன்னுள் நகவு
குலாம் மதிக்கண்ணியற் கங்கணன்."

" எங்கோன் எழில்தில்லைக் கூத்தன்."

" தில்லை அம்பலத்து மேவுசெம் மேனிப் பிரான்.

" தில்லை அம்பலத் தாடுகின்ற சேடன்."

" தில்லை அம்பலத்துள்
அந்திக்கமர் திருமேனி எம்மான்."

" அருள்தரு சீர்த்தில்லை அம்பலத் தான்."

" தில்லைச் சிற்றம்பலத்துப் பிறைப்பிளவார்
சடையோன்.

" தில்லை அம்பலக் கூத்த."

" புலியூர்ப் பொலிசெம்பொன் அம்பலத்து
வேந்தன்.

" தில்லைப் பிரான்."

" மூவுலகத்தவர் ஏத்தித் தொழுதில்லை முக்கட்
பிராற்கு.

" தில்லை அம்பலத்து மேதகக் கோயில்
கொண்டோன்."

" தில்லை அம்பலத்துள் இறையே."

" தில்லை அம்பலத்துள் அறையும் புனற்
சென்னியோன்.

" தில்லை அம்பலத்து
வில்வழி தானவர் ஊரெரித்தோன்."

" வளர்தில்லை அம்பலத்தாய்."

“ தில்லை நாத.”

“ நம்தில்லைப் பிரான்.”

“ நரசிங்கனைச் சிம்புள தாய்நரல
இடுக்கிய பாதன்றன் தில்லை.”

“ தில்லை அம்பலத்துப்
போழிளந் திங்கள் சடைமுடி மேல்வைத்த
புண்ணியனே.”

“ அண்ணியனே தில்லை அம்பலவா.”

“ சிந்தா மணியே தில்லையாய்.”

“ இகழான் தில்லையான்.”

“ தில்லை தன்னுட், புரந்தரன் மால்தொழ
நின்ற பிரான்.”

“தில்லை மூதூர்க் கொடிமேல் விடை
உடையோன்.”

“ கொன்றையன் தண்புலியூரது.”

“ தவநெறிகள்
தெரித்தவன் தில்லையுட் சிற்றம்பலவன்.”

“ தென்றில்லை மாநடம் ஆடும் பிரான்.”

“ புரிசைத் தில்லை ஆடல் புரிந்தவனே.”

“ எங்கோன் தண்திரையார் புனல்வயற்
சேண்தில்லையே.”

“ சேண்தில்லை மாநகர்த் திப்பியக் கூத்தன்ன.”

“ தண்புலியூர்க் களவிற் கனிபுரையும் கண்ட
வார்சடைக் கங்கையனே.”

“ அம்பலவன் வலம்காண் இடம்அணங்கே.”

“ தில்லை எல்லை மிதித்தலும் என்புருகா.”

“ அம்பலக் கூத்தன் அடியார்.”

“ கைம்மலைப்போர்வை மதிற்றில்லை
மன்னனை.”

“ பொன்னம் பலத்துறை புண்ணியன்.”

“ பொன்னார் திருசிற்றம்பலம் நிலவும் ஈசன்.”

"தில்லை விண்ணோர் இனம்தலைவன்."
"தில்லையுட் சிற்றம்பலத்து நடம்பயிலும்
சிவநிதி."
"வண்தில்லை மன்னை."
"தில்லைச் சிற்றம்பலத்துத் திருநடனே."
"நடஞ்செய் சிற்றம்பலத்தான்."
"அம்பலத் தெம்பரன்."
"அம்பலத் தாடிதன் மொய்கழலே.'
"கழலும் தமருகமும் பிடித்தாடி சிற்றம்பலத்தை
"வான்றலை நாதனைக் காண்பதென்
றோதில்லை மன்றிடையே."
"மன்றங் கமர்திருச் சிற்றம்பலவ."
"தில்லை தன்னுட் செற்றரு மாமணிக் கோயிலில்
நின்றது.'
"பூம்புலி யூருள் நின்ற
கல்லெறி மாமதிக் கண்ணியனை.'
"சிற்றம்பலத்துப் பெருநடனை."
"தில்லை அம்பலத்துள் இச்செல்வன்."
"செப்பத்தரு புகழ்த் தில்லைப்பதி."

என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 103-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'திருமால், பிரம தேவன், இந்திரன், பெருமையைப பெற்ற வேறு தேவர்கள், இவர்களை அல்லாமல் வேறாக உள்ளவர்கள்ஆகியவர்கள் யாவரும் நெருங்கி வந்து சீலத்தை உடையவர்களும் பெருமையைப் பெற்றவர்களும் ஆகிய முனிவர்களும் போய் நடராஜப் பெருமானுடைய ஆலயத் துக்கு முன்னால் அடைந்து நந்தி தேவருடைய அழகிய பிரம்பின் அடிகளைப் பெற்றுக்கொண்டு இன்பத்தில் முழுகித் தரிசனத்துக்கு உரிய காலம் வருவதை எதிர்பார்த்துக் கொண்டு பக்கத்தில் நின்றுகொண்டிருக்க, தரிசனம் செய்யும்

விருப்பத்தை உடைய பக்தர்களும் சிவகண நாதர்களும் நுழையும் தங்கத்தைப் பதித்த வடிவம் நெடுங்காலமாக விளங்கும் கோபுர வாசலில் வணங்கிவிட்டுக் கூப்பிய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த தங்களுடைய கைகளைத் தங்களுடைய தலைகளின்மேல் வைத்துக் கொண்டு வருகிறவர்களோடு சுந்தர மூர்த்தி நாயனார் ஆலயத்துக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

**"மால்அ யன்சத மகன்பெருந் தேவர்**
**மற்றும் உள்ளவர்கள் முற்றும் நெருங்கிச்**
**சீல மாமுனிவர் சென்றுமுன் துன்னித்**
**திருப்பி ரம்பின் அடிகொண்டு திளைத்துக்**
**காலம் நேர்படுதல் பார்த்தயல் நிற்பக்**
**காதல் அன்பர்கண நாதர் புகும்பொற்**
**கோலம் நீடுதிரு வாயில் இறைஞ்சிக்**
**குவித்த செங்கைதலை மேற்கொடு புக்கார்."**

மால்-திருமால். அயன்-பிரமதேவன். சதமகன்-நூறு யாகங்களைச் செய்து தன்னுடைய பதவியைப் பெற்ற இந்திரன். பெரும்-வேறாக உள்ள பெருமையைப் பெற்ற. தேவர்-தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மற்றும் உள்ளவர்கள்-வேறாக இருக்கிறவர்கள். முற்றும்-ஆகிய யாவரும். நெருங்கி-நெருக்கமாக நின்று கொண்டு. ச்: சந்தி. சீல-சீலத்தையும். மா-பெருமையையும் பெற்ற. முனிவர்-முனிவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். சென்று-போய். முன்-நடராஜப் பெருமானுடைய ஆலயத்திற்கு முன்னால். துன்னி-சேர்ந்து நின்றுகொண்டு. த்: சந்தி. திரு-அழகிய. ப்: சந்தி. பிரம்பின்-நந்திதேவர் தம்முடைய கையில் வைத்துக் கொண்டிருக்கும் பிரம்பினால். அடி-அடிகளை; ஒருமை பன்மை மயக்கம். கொண்டு-பெற்றுக்கொண்டு. திளைத்து-ஆனந்தசாகரத்தில் முழுகி இன்புற்று. க்: சந்தி. காலம்-நடராஜப் பெருமானைத் தரிசித்து வணங்குவதற்கு உரிய நேரம். நேர்படுதல்-கிடைத்தலை. பார்த்து - எதிர்

பார்த்துக்கொண்டு. அயல்-ஒருவருக்கு ஒருவர் பக்கத்தில் பக்கத்தில். நிற்ப-நின்றுகொண்டிருக்க. க்: சந்தி. காதல்-நடராஜப் பெருமானை வணங்கும் விருப்பத்தைப் பெற்ற. அன்பர்-பக்தர்களும்; ஒருமை பன்மை மயக்கம். கணநாதர்-சிவ கணநாதர்களும்; ஒருமை பன்மை மயக்கம். புகும்-நுழையும். பொன்-தங்கத்தைப் பதித்த, கோலம்-வடிவம். நீடு-நெடுங்காலமாக விளங்கும். வாயில்-கோபுர வாசலில். இறைஞ்சி-நின்றவாறே நடராஜப் பெருமானை வணங்கி விட்டு. க்: சந்தி. குவித்த-கூப்பிய. செங்கை. தங்களுடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல்-தங்களுடைய தலைகளின்மேல்; ஒருமை பன்மை மயக்கம். புக்கார்-நுழைந்த வர்களோடு சுந்தரமூர்த்தி நாயனாரும் ஆலயத்துக்குள் நுழைந்தார்.

பின்பு உள்ள 104-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'பெரிய திருமதில் சிறந்து விளங்கும் சிவந்த தங்கத்தால் வேயப்பெற்ற சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தையும், விளங்குகின்ற பேரம்பலம் ஆகிய மேருமலையைச் சுந்தரமூர்த்தி நாயனார் வலமாக வர வேண்டிய முறைப்படி வலமாக வந்து நடராஜப் பெருமானை வணங்கிய பிறகு அவ்வாறு வணங்கிய மகிழ்ச்சியோடு, பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையான இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய முதலிலும் நடுவிலும் முடிவிலும் தம்முடைய பக்தர்களுடைய திருவுள்ளங்களிலும் மலர்ச்சியைப் பெற்று விளங்கிய, அழகு வளரும் சோதி சூழ்ந்து விளங்கிய, திருச்சிற்றம்பலத்திற்கு முன்னால் உள்ள திரு அணுக்கன் திரு வாசலை.' பாடல் வருமாறு:

**" பெருமதில் சிறந்த செம்பொன்மா ளிகையின்**
**பிறங்குபே ரம்பலம் மேரு**
**வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர்**
**வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார்**

**அருமறை முதலில் நடுவினில் கடையில்**
**அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த**
**திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம் பலம்முன்**
**திருஅணுக் கன்திரு வாயில்.''**

இந்தப் பாடல் குளகம். பெரு-பெரிய. மதில்-திருமதில். சிறந்த-சிறப்போடு விளங்கிய. செம்பொன்-சிவந்த தங்கத் தால் வேயப் பெற்ற. மாளிகையின்-சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தையும். பிறங்கு-விளங்கும். பேரம்பலம் - பேரம்பலமாகிய. மேரு - மேரு மலையை. வரு-வலமாக வரும். முறை-முறைப்படி. வலம் கொண்டு - சுந்தரமூர்த்தி நாயனார் வலமாக வந்து. இறைஞ்சிய - நடராஜப் பெருமானை வணங்கிய. பின்னர்-பிறகு. வணங்கிய - அவ்வாறு வணங்கிய. மகிழ்வொடும்-மகிழ்ச்சியோடும். அரு-பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையான. மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். முதலில்-முதலிலும். நடுவினில்-இடையிலும். கடைசியில்-இறுதியிலும். அன்பர்தம்-தம்முடைய பக்தர்களின்; ஒருமை பன்மை மயக்கம். சிந்தையில்-திருவுள்ளங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். அலர்ந்த-மலர்ச்சியைப் பெற்று விளங்கிய. திரு-அழகு. வளர்-வளரும். ஒளி-ஜோதி. சூழ்-சுற்றி வீசும். திருச் சிற்றம்பலம்-திருச்சிற்றம்பலத்திற்கு. முன்-முன்னால் உள்ள. திரு-அழகிய. அணுக்கன்-நடராஜப் பெருமானுடைய சந்நிதிக்குச் சமீபத்தில் விளங்கும். திரு-அழகிய. வாயில்-வாசலுக்குள். புகுந்தார் - சுந்தர மூர்த்தி நாயனார் நுழைந்தார்.

திருச்சிற்றம்பலத்தைப் பொன்னால் வேய்ந்தவன் முதற் பராந்தகச் சோழமன்னன். இது, ''கோதிலாத் தேறல் குளிக்கும் திருமன்றம், காதலாற் பொன்வேய்ந்த காவலனும்'' (16) என்று **விக்கிரம சோழன் உலா**வில் வருவதைக் காண்க. இரண்டாம் குலோத்துங்க சோழமன்னனும் திருச் சிற்றம்பலத்தைப் பொன்னால் வேய்ந்தான். இது,

" தில்லைத் திருமன்ற முன்றில்

...

தசும்பு வளர்கனித் தண்பெரு நாவல்
அசும்பு பசும்பொன் அடுக்கி—பசும்பொன்
அலகை இகந்த அசலகுல வச்ரப்
பலகை ததும்பப் பதித்து...

......

—சூலத்தான்

ஆடும் திருப்பெரும்பே ரம்பலமும் கோபுர
மாடம் பரந்தோங்கு மாளிகையும்—கூடிப்
பொலங்கோட்டு மாமேருப் பூதரமும் போய
வலங்கோட் டிகிரியும் மானத்—தலங்கொள்
நிலைஏழு கோபுரங்கள் நேரே நெருங்க
மலைஏழும் என்ன வகுத்து."

**(குலோத்துங்க சோழன் உலா.)**

" சிற்றம் பலமும் திருப்பெரும்பே ரம்பலமும்
மற்றும் பலபல மண்டபமும்—சுற்றிய
மாளிகையும் பீடிகையும் மாடமும் கோபுரமும்
சூளிகையும் எத்தெருவும் தோரணமும்

—ஆளுடையான்

கோயில் திருக்காமக் கோட்டமும் அக்கோயில்
வாயிற் றிருச்சுற்று மாளிகையும்—தூயசெம்
பொன்னிற் குயிற்றி." **(இராச ராச சோழனுலா)**

என்று வருவனவற்றால் விளங்கும்.

அன்பர் சிந்தையில் விளங்குபவர்; "புடைபடுவார் தம் மனத்தார்.", "எண்ஒன்றி நினைந்தவர் தம்பால் உண்ணின்று மகிழ்ந்தவன்.", "மெய்யராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து செய்யரானார் சிந்தையானே", "நம் தலை மேலான் மனத்துளான்.", "நினைப்பவர் மனத் துளான்.", "ஞானம் புகலுடையோர் தம்முள்ளப் புண்டரி கத் துள்ளிருக்கும் புராணர்.", "என்றன்னுளம் மேவி இருந்தபிரான்.", "சிந்தையிடையார்.", "உண்ணின்றுருக

உவகை தருவார்.'', ''இறைஞ்சுவார் சிந்தையுள்ளே கோயிலாகத் திகழ்வானை.'', ''சித்தம் நைந்து சிவனே என்பார் சிந்தையார்.'', ''உள்ளம் ஒன்றி உள்குவார் உளத்துளான்.'', ''உருகுவார் உள்ளத் தொண்சுடர்.'', ''சிந்தனை புகுந்தெனக்கருள் நல்கி.'', ''சிந்தையே புகுந்தான்.'', ''சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்.'', ''தொண்டர்கள்தம் எண்ணமர் சிந்தையினான்.'', ''எந்தமது சிந்தை பிரியாத பெருமான்.'' என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''பத்தியால் ஏத்தி நின்று பணிபவர் நெஞ்சத் துள்ளார்.'', ''சிந்தையுட் சிவம தானார்.'', ''உள்குவார் உள்ளத் தென்றும் சிந்தையும் சிவமு மாவார்.'', ''சிந்தையார் சிந்தை உள்ளார்.'', ''சிந்திப்பார் சிந்தை யுள்ளார்.'', ''சிந்தையுள் தேறல்.'', ''உள்ளத்துள் ஒளியு மாகும் ஒற்றியூ ருடைய கோவே.'', ''உன்னுவார் உள்ளத் துள்ளார்.'', ''உள்குவார் உள்ளத் துள்ளார்.'', ''நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னானே.'', ''நினைப்பவர் மனத்து ளானை.'', ''உள்குவார் உள்ளத் தானை.'', ''என் உள்ளமே புகுந்து நின்றார்க்கு.'', ''விடையான் விரும்பிஎன் உள்ளத் திருந்தான்.'', ''தொழுதேற் கவன்றான் நெஞ்சிடை நின்றகலான்.'', ''நினைப்ப வர்மனம் கோயிலாக் கொண்டவன்.'', ''சிந்தையார் சிவனார்.'', ''மனத்துள் மாயனை.'', ''சிந்தை வாய்தலுளான்.'', ''உள்ளவாறெனை உள்புகும் ஆனையார்.'', ''சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மையொடு.'', ''தெளிந்து சிந்திப்பதோர் உள்ளத் தேறல்.'', ''வந்தென் உள்ளம் கொண்டானை.'', ''நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை.'', ''என்னுள்ளத்துள தெந்தை பிரானிரே.'', ''சிந்திப்பார் மனத்தான் சிவன்.'', ''அந்தணர் தம் சிந்தை யானை.'', ''மனத்தகத்தான் தலைமேலான்.'', ''என் உள்ளத் திருந்தார்.'', ''மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை.'', ''உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி.'', ''உள்ளூறும் அன்பர் மனத்தார்.'', ''நெஞ்சுணர உள்புக்கிருந்த போது நிறையும்அமுதமே.'',''பக்தர்கள் சித்தத்தேபாவித்தானை.'',

''உள்ளத்தின் உள்ளே நின்ற கருவே.'', ''என் சிந்தை நீங்கா இறைவா.'', ''நினைத்தவர்கள் நெஞ்சுளாய்.'', ''நெஞ்சுண் டென் நினைவாகி நின்றான்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும்,''நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய்.'', ''நெஞ்சம் கொண்டார்.'', ''சரண்அடைந்தார் நெஞ்சம் கொண்டார்.'', ''மனமே புகுந்து நின்ற சிந்தாய்.'', ''சிந்தித் தென்றும் நினைந்தெழுவார் தம் சிந்தையில் திகழும் சிவன்.'', ''அடியார் தம்மனத்தே உற ஞானமூர்த்தி நட்ட மாடி.'', ''என்மனமே வைகி.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''சிவனவன்என் சிந்தையுள் நின்ற அதனால்.'', ''உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற மெய்யா.'', ''சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்.'', ''என் சிந்தனையுள் ஊற்றான உண்ணா ரமுதே.'',''அடியா ருள்ளத் தன்பு மீதூரக் குடியாக் கொண்ட கொள்கையும்.'',''ஊற்றிருந் துள்ளம் களிப்போன் போற்றி'', ''அளிபவர் உள்ளத் தமுதே போற்றி.'', ''அன்பர் உள்ளம் கரந்து நில்லாக் கள்வனே.'', ''ஆட்கொண் டுள்ளே புகுந்த விச்சை மாலமுதப் பெருங்கடலே.'', ''இருகை யானையை ஒத்திருந் தென்னுளக் கருவை.'', ''முந்தி என்னுள் புகுந் தனன்.'', ''வினையேன் மனத்தே ஊறு மட்டே.'',''விரும்பும் மடியார் உள்ளத் துள்ளாய்.'', ''சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்.'', ''ஓயாதே உள்குவார் உள்ளிருக் கும் உள்ளானை.'', ''வார்கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத் தார் உள்ளிருக்கும் அப்பாலைக் கப்பாலை'', ''என்னுட் கலந்து தேனாய்.'', ''என் உள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ அளி வந்த அந்தணனை.'', ''சித்தம் புகுந்து தித்திக்க வல்ல கோனை.'', ''என் உளம் புகுந்த திரு.'', ''அம்பலவன் அருட் கழல்கள் சித்தம் புகுந்தவா.'', ''அடியவர்கள் நெஞ்சுளே நின்றமுதம் ஊறிக் கருணை செய்து துஞ்சல் பிறப்பறுப் பான்.'', ''கருணைக் கடலினர் உண்ணின்றுருக்குவர்.'', ''நிரம்ப அழகியர் சித்தத் திருப்பரால்.'', ''உத்தரமங்கையர் மன்னுவ தென் நெஞ்சில்.'', ''விரும்படியார் எண்ணகத் தாய்.'', ''என்மனத்திடை மன்னிய மன்னே.'', ''உள்ளத்

தெழுகின்ற ஞாயிறே போன்று நின்றநின் தன்மை.'', ''சீருறு சிந்தை எழுந்ததோர் தேனே.'', ''சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்.'', ''பொய்யனேன் அகம்நெகப் புகுந்து.'', ''என் மனத்தி னுள்ளே வரும் பெருமான்.'', ''உள்குவார் மனத்தின் உறுசுவை அளிக்கும் ஆரமுதே.'', ''உள்புகுந்தென் உளம் மன்னி.'', ''உயிர் கலந்தான் உளம்பிரியான்.'', ''அடியேன் உள்ளத்துள் ஒளிர்கின்ற ஒளியே.'', ''அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண் டளவிலா ஆனந்தம் அருளி.'', ''என் சிந்தையுட் புகுந்து பூங்கழல் காட்டிய பொருளே.'', ''அன்பால்நீ அகம் நெகவே புகுந்தருளி யாட் கொண்டது.'', ''மலர்ப்பாதம் மனத்தில் வளர்ந் துள்ளுருக.'', ''செறியும் கருத்தில் உருத்தமுதாம் சிவபதத்தை.'', ''சித்தமே புகுந் தெம்மை ஆட்கொண்டு.'', ''சித்த மார்தரு சேவடி.'', ''சிறியோமை ஓவாதுள்ளம் கலந்துணர்வாய் உருக்கும்.'', ''துண்ணென என்னுளம் மன்னிய சோதி.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 105-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் தோற்றப் பொலிவை அடையவும், இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் தம்முடைய திருவடிகளில் சிலம்புகளாக அமைந்து முழங்கவும், சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத் தில் நின்றுகொண்டு திருமாலும் பிரம தேவனும் தேட, தந்தையாரைப் போன்ற நடராஜப் பெருமானார் சிதாகாசத் தில் திருநடனம் புரிந்தருளுகின்ற அந்தப் பெருமானாரை அஞ்சலியாக மலரச் செய்து அந்தப் பெருமானாருடைய சந்நிதியில் கூப்பிய திருக்கரங்களோ, ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்ற விழிகளோ, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களோ, தன்னுடைய உள்ளத்தில் சேர்ந்திருந்த பக்தி பிடர் பிடித்து உந்தத் தவம் புரிந்த பெரியவனாகிய சுந்தரமூர்த்தி போய்த் தரையில்

விழுந்து நடராஜப் பெருமானை வணங்கி விட்டுத் திருக் களிற்றுப் படியின் பக்கத்தில் எழுந்து வந்து நின்றான்,' பாடல் வருமாறு:

**"வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப**
**மன்றுளே மாலயன் தேட**
**ஐயர்தாம் வெளியே ஆடுகின் றாரை**
**அஞ்சலி மலர்த்திமுன் குவித்த**
**கைகளோ திளைத்த கண்களோ அந்தக்**
**கரணமோ கலந்தஅன் புந்தச்**
**செய்தவப் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான்**
**திருக்களிற் றுப்படி மருங்கு."**

வையகம்-இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். பொலிய-தோற்றப் பொலிவை அடையவும். மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம்: ச்: சந்தி. சிலம்பு- சிலம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்ப்ப - தம்முடைய திருவடிகளில் முழங்கவும். மன்றுள்-சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் நின்று கொண்டு. ஏ: அசை நிலை. மால்-திருமாலும். அயன்-பிரம தேவனும். தேட-தம்முடைய திருவடிகளையும் திருமுடியையும் தேட. ஐயர் தாம்-தந்தையாரைப் போன்ற நடராஜப் பெருமானார். தாம்: அசை நிலை. 'ஐயர்-அழகைப் பெற்றவர்' எனலும் ஆம். வெளி-சிதாகாசத்தில். ஏ:அசை நிலை. ஆடுகின்றாரை-திரு நடனம் புரிந்தருளும் அந்தப் பெருமானாரை. அஞ்சலி-அஞ்சலியாக. மலர்த்தி-மலரச் செய்து. முன்-அந்தப் பெரு மானாருடைய சந்நிதியில். குவித்த-கூப்பிக் கும்பிட்ட. கைகளோ-சுந்தர மூர்த்தியின் திருக்கரங்களோ. திளைத்த-ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்ற. கண்களோ-விழி களோ. அந்தக் கரணமோ-மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களோ; ஒருமை பன்மை மயக்கம்.

ஓகாரங்கள் உம்மைப்பொருளில் வந்தன. கலந்த-தன்னுடைய திருவுள்ளத்தில் சேர்ந்திருந்த. அன்பு-பக்தி. உந்த-பிடர் பிடித்துத் தள்ள. ச்: சந்தி. செய்தவ-தவத்தைப் புரிந்த. பெரி யோன் - பெரியவனாகிய சுந்தர மூர்த்தி. திரு - அழகிய. களிற்று-ஆண் யானைகளின் உருவங்கள் அமைந்த; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. படி-நடராஜப்பெருமானாருடைய சந்நிதியில் விளங்கும் படிகளின்; ஒருமை பன்மை மயக்கம். மருங்கு - பக்கத்தில். சென்று-போய். தாழ்ந்து - தரையில் விழுந்து நடராஜப் பெருமானாரை வணங்கிவிட்டு எழுந்தான் - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்தான்.

அடுத்து வரும் 106-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடைய மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்ற ஐந்து பெருமையைப் பெற்ற இந்திரியங்களின் செயல்களையும் தம்முடைய கண்களே பெற்று அமைய, அளத்தற்கு அருமையான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக் கரணங்களிலும் சித்தம் ஒன்றே தொழிற்பட்டு நிற்க, ஒப்பற்ற சத்துவம், ராஜசம், தாமதம் என்னும் மூன்று குணங்களிலும் திருத்த மாக அமைந்த சத்துவம் ஒன்றே சிறந்து அமைய, பிறைச் சந்திரன் தங்கும் சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் பெற்றவனாகிய நடராஜப் பெருமான் திரு நடனம் புரிந்தருளும் வரம்பில்லாததும் ஒப்பற்றதும் ஆகிய ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்து அதனால் உண்டான பேரானந்த வெள்ளத்தில் முழுகி இன்புற்று ஒப்பு இல்லாத மகிழ்ச்சியில் மலர்ச்சியைப் பெற்றார்.' பாடல் வருமாறு:

**"ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள**
**அளப்பரும் கரணங்கள் நான்கும்**
**சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்**
**திருந்து சாத் துவிகமே ஆக**

இந்துவாழ் சடையான் ஆடும்ஆ னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.''

ஐந்து பேரறிவும்-மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்ற ஐந்து பெருமையைப் பெற்ற இந்திரியங்களால் பெறும் உணர்ச்சியை. கண்களே-சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய இரண்டு கண்களே. கொள்ள-அடைந்து தரிசிக்க. அளப்பரும்-அளத்தற்கு அருமையாக உள்ள. கரணங்கள் நான்கும்-மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தக்கரணங்களும் நுகரும் நுகர்ச்சியை; ஆகுபெயர். சிந்தையே-தம்முடைய சித்தம் ஒன்றே. ஆக-தொழிற்பட்டு ஈடுபட. க்: சந்தி. குணம் ஒரு மூன்றும்-ஒப்பற்ற குணங்களாகிய சத்துவம், இராஜசம், தாமதம் என்ற மூன்றும். குணம்: ஒருமை பன்மை மயக்கம். திருந்து-திருத்தமாக அமைந்த. சாத்துவிகமே-சத்துவ குணமே. ஆக-தொழிற்பட்டு விளங்க. இந்து-பிறைச் சந்திரன். வாழ்-தங்கியிருக்கும். சடையான்-சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் பெற்ற நடராஜப் பெருமான். ஆடும்-திரு நடனம் புரிந்தருளும். எல்லை-கால வரம்பு. இல்-இல்லாததும்; கடைக் குறை; வினையாலணையும் பெயர். தனி-ஒப்பற்றதும். ப்: சந்தி. பெரும்-பெருமையைப் பெற்றதும் ஆகிய; வினை யாலணையும் பெயர். ஆனந்தக் கூத்தின்-ஆனந்தத் தாண்ட வத்தைத் தரிசித்ததால்; ஆகு பெயர். வந்த-உண்டான. பேரின்ப வெள்ளத்துள்-பேரானந்தமாகிய ஆற்று வெள்ளத் திற்குள். திளைத்து - மூழ்கி இன்புற்று. மாறு-ஒப்பு. இலா; இல்லாத - கடைக்குறை. மகிழ்ச்சியின்-ஆனந்தக் களிப்பில். மலர்ந்தார்-மலர்ச்சியைப் பெற்றார்.

இந்தப் பாட்டில் கூறப்பட்ட அநுபவ நிலையை ஓர் உவமையினால் தெளிவாக உணரலாம். அது வருமாறு:

ஒரு திருமாளிகையில் வெளியில் உள்ள சுவரில் ஐந்து வாயில்கள் உள்ளன. அப்பால் அந்தப் புறச்சுவருக்கு உள்ளே

இடைச்சுவர் ஒன்று இருக்கிறது. அந்தச் சுவரில் நான்கு வாயில்கள் உள்ளன. அந்தச் சுவருக்கு அப்பால் கடைசியாக ஒரு சுவர் இருக்கிறது. அதில் மூன்று வாயில்கள் அமைந்துள்ளன. அந்தச் சுவருக்கு அப்பால் பள்ளியறை இருக்கிறது. அதில் ஓர் அழகிய ஆடவன் படுத்திருக்கிறான். அவனோடு கூடி இன்புற விரும்பிய மங்கை ஒருத்தி வெளியிலே உள்ள சுவரில் இருக்கும் ஐந்து வாயில்களில் ஒன்றின் வழியாக உள்ளே நுழைந்து பிறகு எல்லா வாயில்களையும் மூடி விடுகிறாள். பின்பு இடைச்சுவரில் உள்ள வாயில்கள் நான்கினுள் ஒன்றின் வழியாக உள்ளே புகுந்து அந்த நான்கு வாயில்களையும் அடைத்து விடுகிறாள். பிறகு உள்ள கடைச்சுவரில் உள்ள மூன்று வாசல்களுக்குள் ஒன்றின் வழியே புகுந்து எல்லா வாயில்களையும் மூடிவிடுகிறாள். அப்பால் நடுவில் உள்ள அறையில் படுத்திருக்கும் அழகனோடு கூடிக் குலாவி எல்லை இல்லாத இன்பத்தை அடைகிறாள். இந்த வரலாற்றோடு சுந்தரமூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானைத் தரிசித்த முறையை ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்ற ஐந்து இந்திரியங்களும் தத்தமக் குரிய செயல்களைச் செய்யச் சுந்தரமூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானுடைய சந்நிதிக்கு எழுந்தருளினார். அப்போது கண்களை அல்லாத வேறு இந்திரியங்கள் உணர்ச்சியற்று நின்றன. கண்களே ஏனைய இந்திரியங்களின் ஆற்றலையும் பெற்று இயங்கின. நாயனார் தம்முடைய கண்களால் நடராஜப் பெருமானைத் தரிசனம் செய்தார். பிறகு கண்களை மூடிக்கொண்டார்; புறத்திலே தரிசித்த நடராஜப் பெருமானை அகத்திலே தரிசிக்கலானார். அப்போது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு அந்தக் கரணங்களில், ஒன்றைப் பற்றிக்கொண்டு லயிக்கும் சித்தமே தொழிற்பட்டது. அப்போது அவருடைய சித்தமே திருச்சிற்றம்பலமாக, ''நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன்'' ஆகிய நடராஜப் பெருமானுடைய திருவுருவக் காட்சியில் நிலைத்து

நின்றது. அப்போது சத்துவம், இராஜசம், தாமதம் என்ற மூன்று குணங்களில் ஏனைய இரண்டும் ஒடுங்கி நிற்கச் சத்துவம் ஒன்றே இயங்கியது. உண் முகத்தில் கண்ட காட்சியில் நாயனார் ஈடுபட்டபோது காண்பான், காணப் படுபவன், காட்சி என்ற மூன்று புடிகளும் அடங்கிவிட்டன. சத்துவ குணமும் நழுவியது. நடராஜப் பெருமானுடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்ததனால் உண்டான பேரானந்த சாகரத்தில் முழுகித் தம்முடைய உணர்வையே இழந்து அந்த ஆனந்த அநுபவத்தில் இரண்டறக் கலந்து விளங்கினார். அதற்குப் பிறகே அவரிடம் முழு மலர்ச்சி உண்டாயிற்று.

பின்பு வரும் 107-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'"தெளிவான நிலாவை வீசும் பிறைச் சந்திரன் மலர்ச்சியை அடைந்த சடாபாரத்தைத் தலையில் பெற்ற நடராஜப் பெருமானே, அடியேன் தேவரீருடைய திரு நடனத்தைக் கும்பிட்டு வணங்கும் பாக்கியத்தை அடைந்து, அடியேன் இந்த மண்ணுலகத்தில் பிறந்த பிறப்பே அடியேனுக்குத் தூயதாக விளங்கும் பேரானந்தம் ஆகும்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து தம்முடைய கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பம் மலையிலிருந்து குதிக்கும் அருவியைப் போலச் சொரியத் தம்முடைய கைகளாகிய செந்தாமரை மலர்களைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கும்பிட்டு விட்டு, உரிய பண்ணோடு அமைந்து பொருளை அறிவதற்கு அருமை யாக உள்ள ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி நடராஜப் பெருமானை வாழ்த்தி வணங்கினார்.' பாடல் வருமாறு:

**" 'தெண்ணிலா மலர்ந்த வேணியாய், உன்றன்**
**திருநடம் கும்பிடப் பெற்று**
**மண்ணிலே வந்த பிறவியே எனக்கு**
**வாவிதாம் இன்பம்ஆம்'. என்று**

**கண்ணில்ஆ னந்த அருவிநீர் சொரியக்**
**கைம்மலர் உச்சிமேற் குவித்துப்**
**பண்ணினால் நீடி அறிவரும் பதிகம்**
**பாடினார் பரவினார் பணிந்தார்.''**

தெண்-தெளிவான. நிலா-நிலாவை வீசும் பிறைச் சந்திரன்; ஆகுபெயர். மலர்ந்த-மலர்ச்சியை அடைந்த. வேணியாய்-சடாபாரத்தைத் தலையிற் பெற்ற நடராஜப் பெருமானே. உன்றன்-தேவரீருடைய. திருநடம்-அழகிய ஆனந்தத் தாண்டவத்தை. கும்பிட-அடியேன் கும்பிட்டு வணங்கும். ப்: சந்தி. பெற்று-பாக்கியத்தை அடைந்து. மண்ணில்-இந்த மண்ணுலகத்தில். ஏ: அசை நிலை வந்த-அடியேன் பிறந்த. பிறவியே-மனிதப் பிறப்பே. எனக்கு-அடியேனுக்கு. வாவிதாம் - தூயதாக விளங்கும். இன்பம்-பேரானந்தம். ஆம்-ஆகும். என்று-எனச் சுந்தரமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து. கண்ணில்-தம் முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். ஆனந்த-ஆனந்த பாஷ்பம். அருவி-மலையிலிருந்து குதிக்கும் அருவியில் உள்ள. நீர்-நீரைப் போல. சொரிய-பொழிய. க்: சந்தி. கை-தம்முடைய கைகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். ம்: சந்தி. மலர்-செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். உச்சிமேல்-தம்முடைய தலையின் மேல். குவித்து-வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு. ப்: சந்தி. பண்ணினால்-உரிய பண்ணோடு; உருபு மயக்கம். நீடி-நெடுங் காலம் விளங்கி. அறிவரும்-பொருள் முழுவதும் தெரிந்து கொள்வதற்கு அருமையாக இருக்கும். பதிகம்-ஒரு திருப்பதிகத்தை. பாடினார்-அந்த நாயனார் பாடியருளி; முற்றெச்சம். பரவினார்-நடராஜப் பெருமானை வாழ்த்தி; முற்றெச்சம். பணிந்தார்-தரையில் விழுந்து வணங்கினார்.

சிதம்பரத்தைப் பற்றிக் குறிஞ்சிப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய திருப்பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு :

" மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே
மனனேநீ வாழும் நாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்தில் தமருகமும்
எரிஅகலும் கரிய பாம்பும்
பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குறிஞ்சி, காந்தார பஞ்சமம் என்னும் பண்களில் திருப்பதிகங்களைப் பாடியருளியிருக்கிறார்; அவற்றுள் காந்தார பஞ்சமத்தில் அமைந்த பாசுரம் ஒன்று வருமாறு:

" ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடினாயிட மாநறுங் கொன்றை நயந்தவனே
பாடினாய் மறையோடுபல் கீதமும்
பல்ச டைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடி னாயருளாய் சுருங்கஎம் தொல்வினையே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் கொல்லிப்பண்ணில் ஒரு திருப்பதிகத்தையும், திருவிருத்தம், திருக்குறுந்தொகை, பெரிய திருத்தாண்டகம், புக்க திருத்தாண்டகம் என்பவை அடங்கிய திருப்பதிகங்களையும் பாடியருளியிருக்கிறார்; அவற்றுள் பெரிய திருத்தாண்டகம் ஒன்று வருமாறு:

" அரியானை அந்தணர்தம் சிந்தை யானை
அருமறையின் அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கள்தம் கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருவாசகத்தில் வரும் பகுதிகள் வருமாறு:

''தில்லையுட் கூத்தனே.'', ''தில்லை மூதூர் ஆடிய திருவடி.'', ''அம்பொற் பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்.'', ''தென்றில்லை மன்றினுள் ஆடி போற்றி.'', ''அம்பலத்தெம் பெரியானே.'', ''சிவனே தென்றில்லைக் கோனே.'', ''தில்லை நிருத்தனே போற்றி.'', ''தில்லைத் திருச்சிற்றம் பலவபோற்றி.'',''தேசன் சிவலோகன் தில்லைச் சிற்றம்பலத்துள் ஈசனார்.'', ''எம்கோன் எம்கூத்தன்.'', ''தென்றில்லை பாடிச் சிற்றம் பலத்தெங்கள் செல்வம் பாடி.'', ''அம்பலவன் தேனார் கமலமே.'', ''ஆனந்தத் தேன்சொரியும் குனிப்புடை யானுக்கே.'', ''அணிதில்லை அம்பலவன்.'', ''ஐயாஎன் ஆருயிரே அம்பலவா.'', ''பிறப் பறுத்த அத்தன் அணிதில்லை அம்பலவன் அருட்கழல்கள்.'', ''தில்லை அம்பலத்தே ஆடுகின்ற சிலம்பாடல் பாடி.'', ''தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்.'', ''தேன்புக்க தண்பணை சூழ்தில்லைச் சிற்றம்பலவன்.'', ''அம்பலத்தே கூத்தாடி.'', ''அம்பலத்தே ஆடுகின்ற புணையாளன்.'', ''பண்பட்ட தில்லைப் பதிக்கரசை.'', ''நடம்பயிலும் வானாடர்கோ.'', ''எம்பெருமான் அண்ணல் கொடணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற குணம் கூரப் பாடி.'' ''தில்லை அம்பலமே தானிடமாநட மாடு மாபாடி.'', ''திருநடம்செய் பேரானந்தம் பாடி.'', ''தில்லை அம்பலத்தே திருநடம்செய் கூத்தா.'', ''குன்றாத சீர்த் தில்லை அம்பலவன்.'', ''ஆனந்தக் கூத்தன்.'', ''கோணார் பிறைச்சென்னிக் கூத்தன்.'', ''அரைசேர் பொன்னம் பலத்தாடும் அமுதே.'', ''ஈசா பொன்னம்பலத் தாடும் எந்தாய்.'', ''பொன்னே பொன்னம்பலக் கூத்தா.'', ''பொன்னம்பலத் தாடும் தலைவா.'', ''பொன்னம்பலம் என்றே ஒல்கா நிற்கும் உயிர்க்கு.'', ''தில்லைவாழ் கூத்தா.'', ''அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே.'', ''பிறப்பறுத்த இணையிலியை அனைத்துலகும் தொழும் தில்லை அம்பலத்தே கண்டேனே.'', ''தித்திக்கும் சிவ

பூதத்தை அருத்தியினால் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே.'', ''பசுபாசம் அறுத்தானை எல்லோரும் இறைஞ்சுதில்லை அம்பலத்தே கண்டேனே.'', ''கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே.'', ''உலகுடைய ஒருமுதலைச் செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலம் மன்னி மறையவரும் வானவரும் வணங்கிட நான் கண்டேனே.'', ''வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே.''; ''ஆண்டானைக் களவிலா வானவரும் தொழும்தில்லை கண்டேனே.'', ''கருணை தந்தானை நான்குமறை பயில்தில்லை அம்பலத்தே கண்டேனே.'', ''மரகதத்தை வேதங்கள் தொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே.'', ''அம்பலத் தாடுகின்ற என்பொலா மணியை.'', ''அம்பலத்துள் ஆடும் முகைநகைக் கொன்றை மாலை முன்னவன்.'', ''ஆடும் குலாத்தில்லை ஆண்டானை.'', ''தில்லை மூதூர் நடம்செய்வான்.'', ''தேவே தில்லை நடமாட.'', ''குறி ஒன்றும் இல்லாத கூத்தன்.'' இவற்றை யன்றி, ''நல்லச் சிற்றம்பலமே நண்ணாமுன் நன்னெஞ்சே, தில்லைச்சிற் றம்பலமே சேர்.'' என்று ஐயடிகள் காடவர்கோன் நாயனாரும், ''தில்லைக் கண்ணுதலான்.'', ''புரம் மூன்றெரித்த தேவனைத் தில்லைச் சிவனை.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''அடுத்த பொன் அம்பலமே சார்வும் அதனுள் அடுத்த திருநட்டம் அஃதே.'' என்று பரண தேவ நாயனாரும், ''தில்லை இடத்து கந்தான் அம்பலத்தே கூத்துகந்தான்.'',''பைம்பொற் கொன் றைத் தொடைகொண் டவார்சடை அம்பலத்தான்.'', ''உடையான் உயர்தில்லை அம்பலம்.'', ''தில்லை மன்றினும் நடம் ஆடும் அம்பல வாண.'', ''செய்வயல் தில்லையாகிய தொல் பெரும் பதியும்.'', ''தென்புலியூர் அம்பலத்தான் செம்பொன் அடி.'', ''தில்லைச் சிற்றம்பலத் தான்றன் திருநடமே.'', ''நடமாடி ஏழுலகம் உய்யக் கொண்ட நாயகரே நான்மறையோர் தங்களோடும், திடமாட மதில் தில்லைக் கோயில் கொண்ட செல்வரே.'', ''தில்லை மூதூர் ஆடும் அம்பலக் கூத்தனை.'', ''ஆடகம்சேர் அம்பலத்தே

ஆளுடையார் நின்றாடும் நாடகம்.'', ''தில்லை அம்பலத்தே நின்று கூத்துகந்த, தேனே.'', ''தில்நகர் அம்பொ னணியும் அரங்கின் நடம்நவில் அங்கண் அரசை.'',''சிறிய பொதுவில் மறுவின்றி விளங்கி, ஏவரும் காண ஆடுதி.'', ''மறையவர் தில்லை மன்றுகிழ வோனே.'', ''மன்றில் நடமாடும் நாயனார்.'', ''திருத்தில்லை சேர்வதொர் செந்நெறியே.'', ''செறிபொழில் நிலவு திலை என் கிலர் திருநடம் நவிலும் இறை என் கிலர்.'', ''தொல்லெயில் உடுத்த தில்லை காவல, வம்பலர் தும்பை அம்பல வாண.'', ''தில்லை அம்பலக் கூத்தர் அவிர்சடைமேற், கொங்கிடத் தார்மலர்க்கொன்றை யென்றாய்.'', ''புரம் முன்னொர்நாள், விழுந்தெரிந்து துகளாக வென்றிசெய்த வில்லி தில்லைநகர்.'', ''தெய்வ வேதியர் தில்லை மூதூர், ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும், கடவுட் கண்ணுதல் நடம்முயன் றெடுத்த, பாதப் போதும்.'', ''ஒற்றைக்கை மாமறுகச் சீறிய சிற்றம்பலத் தான்.'', ''தண்புலிசைப்பிரான்.'', ''புலிசை யலர்செய் போதணி பொழிலின் நிழலின் வாழ்வதோர் கலவ மயிலனார்.'', ''செம்பொற் றில்லை மூதூர், அம்பலத் தாடும் உம்பர்நா யகனே.'', ''தில்லை மன்றுளே ஆடும் மணி.'', ''மணிவாய் முகிழ்ப்பத் திருமுகம் வேர்ப்ப அம் மன்றுக்கெல்லாம், அணியாய் அருள்நடம் ஆடும் பிரானை.'', ''பொழில்சூழ் தில்லையுள் அரனார்.'', ''அற்புதக் கூத்தனை,மறையவர் தில்லை மன்றுள் ஆடும், இறையவன்.'', ''வியன்தில்லை யான்அருள்.''. ''இடுக்கண் எல்லாம், அறுகின்றன தில்லை ஆளுடை யான்செம் பொன் அம்பலத்தே.'', ''அம்பலவர் அங்கணர் அடைந்தவர் தமக்கே அன்புடையர்.'',''இம்பர் உய்ய அம்பலம் பொலியத் திருவளர் தில்லை மூதூர், அருநடம் குயிற்றும் ஆதிவா னவனே.'', ''மால்நாகம், பந்திப்பார் நின்றாடும் பைம் பொன்னின் அம்பலத்தே, வந்திப்பார்.'', ''மறையோர் வணங்க, ஆள்வாய் திருத்தில்லை அம்பலத்தாய்.'', ''நடம் ஆடும் பித்தர்.'', ''தில்லை மூதூர், ஆடகப் பொதுவில் நாடகம் நவிற்றும், இமையா நாட்டத் தொருபெரும்

கடவுள்.'', ''தெய்வக் கூத்தும்நின் செய்ய பாதமும்.'', ''தில்லை மன்றைப் பொலிவித்த, கோமானை.'', ''அண்டர்மிண் டித்தொழும் அம்பலக் கூத்தனுக்கு.'', ''திலைநகரிற் செம்பொன் அம்பலம் மேவிய சிவனை.'', ''தில்லை மாநகர் போற்றி தில்லையுட், செம்பொன் அம்பலம் போற்றி அம்பலத், தாடும் நாடகம் போற்றி.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''தில்லை நின்ற அஞ்செம் பவள வண்ணா.'', ''தில்லை தன்னுள், மின்புன் மிளிர்சடை வீசிநின் றாடிய விண்ணவனே.'', ''பவமறுத் தாள்வதற் கோதில்லை நட்டம் பயில்கின்றதே.'', ''தில்லை இயல்கின்ற நாடகச் சிற்றம் பலத்துள் எந்தாய்.'', ''தில்லை மேயசுடரினுக்கே.'', ''அணிகொள் தில்லை விடலைக்கு.'', ''வேத முதல்வன் தலையும் தலையாய வேள்வி தன்னுள் நாதனவன் எச்சன் நற்றலையும் தக்க னார்தலையும், காதிய தில்லைச்சிற் றம்பலத்தான்.'', ''தில்லை மேய சுடரினுக்கே.'', ''செழுத்திரள் நீர்த்திருச் சிற்றம்பலத் தான்.'', ''சிற்றம்பலத்துள் நின்றாடும் கழல்.'', ''தில்லை அம்பலத்தே குழல்படு சொல்வழி ஆடுவர் யாவர்க்கும் கூத்தினையே.'', ''கூத்தனென்றும் தில்லை வாண னென்றும்.'', ''தண்ணார் புனல்தில்லைச் சிற்றம்பலந் தன்னில், மன்னிநின்ற, விண்ணாளனை.'', ''தில்லையுள் நாடகம் ஆடுகின்ற, துறவியல் சோதியைச் சுந்தரக் கூத்தனை.'', ''ஒளிநகையும், வண்டேன் மலர்த்தில்லை அம்பலத்தாடும் மணியினையே.'', ''மணிஒப்பன திருமால் மகுடத்து மலர்க்கமலத், தணியொப்பன அவன் றன்முடி மேல் அடி யேன் இடர்க்குத், துணியச் சமைத்தநல் வீர்வாள் அனையன சூழ்பொழில்கள், திணியத் திகழ்தில்லை அம்பலத் தான்றன் திருந்தடியே.'', ''தில்லை அம்பலத்து, முடியிட்ட கொன்றைநன் முக்கட் பிரான்.'', ''தென்தில்லைப் பரம்பர.'', ''தில்லை தன்னுள் நகவு குலாமதிக் கண்ணியற் கங்கணன்.'', ''எம்கோன் எழில்தில்லைக் கூத்தன்.'', ''தில்லை அம்பலத்து, மேவுசெய் மேனிப் பிரான்.'', ''தில்லை அம்பலத் தாடுகின்ற, சேடன்.'', ''தண்ணார்

தில்லை அம்பலத்துள் அந்திக் கமர்திருமேனி எம்மான்.'', ''அருள்தரு சீர்த்தில்லை அம்பலத்தான்.'', ''தில்லை அம்பலக் கூத்த.'', ''பூந்தண் பொழில்சூழ் புலியூர்ப் பொலி செம்பொன் அம்பலத்து, வேந்தன்.'', ''அருளாய் எனத் தில்லைப் பிரான்.'', ''மூவுல கத்தவர் ஏத்தித் தொழு தில்லை முக்கட் பிராற்கு.'', ''தில்லை அம்பலத்து, மேதகக் கோயில் கொண்டோன்.'', ''காண்டற் கருந்தில்லை அம்பலத் துள்ளிறையே.'', ''எழிற்றில்லை அம்பலத்துள், அறையும் புனற்சென்னியோன்.'', ''தில்லை அம்பலத்து, வில்வழி தானவர் ஊர்எரித்தோன்.'', ''வளர்தில்லை அம்பலத்தாய்.'', ''புழையார் கரியுரித் தோன்தில்லை நாத.'', ''நம் தில்லைப்பிரான்.'', ''நரசிங்கனைச் சிம்புள தாய்நரல, இடுக்கிய பாதன் தன்தில்லை.'', ''தில்லை அல்பலத்துப், போழிளம் திங்கள் சடைமுடி மேல்வைத்த புண்ணியனே.'', ''தில்லை அம்பலவா அவர்திங்கள் வைத்த, கண்ணியனே.'', ''சிந்தா மணியே தில்லையாய்.'', ''இகழான் தில்லையான்.'', ''தில்லை தன்னுட், புரந்தரன் மால்தொழ நின்ற பிரான்.'', ''தில்லை மூதூர்க் கொடி மேல் விடைஉடையோன்.'', ''கொன்றையன் தண்புலியூர தென்றேன்.'', ''தில்லையுட் சிற்றம்பலவன் திருப்புருவம், நெரித்தலும்.'', ''தென்தில்லை மாநடம் ஆடும் பிரான்.''. ''பொருப்புரு வப்புரி சைத்தில்லை ஆடல் புரிந்தவனே.'', ''பதிமூன்றெரிய அம்பு, தெரிந்த எம்கோன்றன் திரையார் புனல்வயற் சேண்தில்லையே.'', ''தில்லைநகர்த் திப்பியக் கூத்தனை.'', ''தண்புலியூர்க் களவிற் கனிபுரை யுங்கண்ட வார்சடைக் கங்கையனே.'', ''அங்கம்சரி அம்பலவன் வலங்காண் இடம் அணங்கே.'', ''தில்லை எல்லை மிதித்ததும் என்புருகா, வணங்கா வழுத்தா விழா எழும்.'', ''கூடுவ தம்பலக் கூத்தன் அடியார் குழுவுதொறும்.'', ''மத் தகக் கைம்மலைப் போர்வை மதிற்றில்லை மன்னனை.'', ''பொன்னம் பலத்துறை புண்ணியன்.'', ''பொன்னார் திருச் சிற்றம் பலம்நிலவும், ஈசன்.'', ''தில்லை விண்ணோர் இனம் தலைவன்.'', ''தில்லையுட் சிற்றம் பலத்து நடம்பயிலும்,

சிவநிதிக்கே.'', ''தில்லை மன்னை.'', ''தில்லைச் சிற்றம் பலத்துத் திருநடனே.'', ''நடம் செய்சிற் றம்பலத்தான்.'', ''அம்பலத் தெம்பரன்.'', ''வரகுணன்றன் முடியே தருகழல் அம்பலத் தாடிதன் மொய்கழலே.'', ''தமருகமும் பிடித்தாடி சிற்றம்பலத்தை.'', ''வான்றலை நாதனைக் காண்பதென் றோதில்லை மன்றிடையே.'', ''மன்றங் கமர்திருச் சிற்றம் பலவ.'', ''தில்லைதன்னுட், செற்றரு மாமணிக் கோயிலில் நின்றது.'', ''பூம்புலி யூருள் நின்ற, அவ்வெறி மாமதிக் கண்ணியனை.'', ''சிற்றம் பலத்துப் பெருநடனை.'', ''தில்லை அம்பலத்துள், இச்செல்வன்.'', ''உம்பரின் ஊர் எரித்த, அப்பர்க் கமுதத் திருநடர்க்கு.'', ''நாவார் புகழ்த் தில்லை அம்பலத்தான்.'', ''பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சுரத்து, மன்னவ ராய அரர்க்கு.'', ''சிற்றம்பல முகடு, கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன்.'', ''விண் தோயும்நெற்றி, வகுத்த மதில்தில்லை அம்பலத்தான்.'', ''செம்பொன் அணிந்து சிற்றம் பலத்தைச் சிவலோகம் எய்தி.'', ''தேறும் புனற்றில்லைச் சிற்றம்பலத்துள், ஊறும் அமிர்தை.'' என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளிய வற்றைக் காண்க.

பிறகு வரும் 108-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

' ''திருவெண்ணெய் நல்லூரில் விளங்கும் ஆலயமாகிய திருவருட்டுறையில் எழுந்தருளியிருக்கும் கிருபாபுரீசர் முன்னால் தடுத்து ஆட்கொண்ட தொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாருக்கு முன்னால் ஒப்பற்றதும் பெருமையைப் பெற்றதும் ஆகிய ஆனந்தத் தாண்டவத்தைப் புரிவதற் காகத் தூக்கிய செந்தாமரை மலரைப் போன்ற இடத் திருவடியை உடைய நடராஜப் பெருமானாருடைய திரு வருளினால், ''முத்துக்களை வீசும் நீர் புரளும் அலைகளைப் பெற்றதும் பொன்னைக் கொழிப்பதும் ஆகிய காவிரி ஆற்றின் நீர் ஓடிப் பாயும் நீளமான அழகைப் பெற்ற வயல்கள் சூழ்ந்த திருவாரூரில் உள்ள எம்மிடம் நீ வருவாயாக'' என்று ஆகாயத்தில் அந்த நாயனார்

சிதம்பரத்தை அடைந்திருந்த காலத்தில் வந்து ஓர் அசரீரி வாக்கு எழுந்தது; அந்த வாக்கைக் கேட்டவுடன் நடராஜப் பெருமானைத் தரையில் விழுந்து பணிந்த அந்த நாயனார் அந்தக் கட்டளையைத் தெரிந்து கொண்டு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

**' '' தடுத்துமுன் ஆண்ட தொண்ட னார்முன்பு**
**தனிப்பெரும் தாண்டவம் புரிய**
**எடுத்தசே வடியார் அருளினால்,' தரளம்**
**எறிபுனல் மறிதிரைப் பொன்னி**
**மடுத்தநீள் வண்ணப் பண்ணைஆ ரூரில்**
**வருகநம் பால்.' என வானில்**
**அடுத்தபோ தினில்வந் தெழுந்ததோர் நாதம்**
**கேட்டலும் அதுவுணர்ந் தெழுந்தார்.''**

தடுத்து-திருவெண்ணெய் நல்லூரில் உள்ள ஆலயமாகிய திருவருட்டுறையில் எழுந்தருளியிருக்கும் கிருபாபுரீசர் தடுத்து. முன்-முன்பு ஒரு நாள். ஆண்ட-ஆட்கொண்ட. தொண்டனார்-தொண்டராகிய சுந்தரமூர்த்தி நாயனாருக்கு. முன்பு-முன்னால்; இடமுன். தனி-ஒப்பற்ற. ப்: சந்தி. பெரும்-பெருமையை உடைய. தாண்டவம்-ஆனந்தத் தாண்டவத்தை. புரிய - செய்தருளுவதற்காக. எடுத்த-தூக்கிய. சேவடியார்-செந்தாமரை மலரைப் போலச் சிவந்த இடத்திருவடியைப் பெற்றவராகிய நடராஜப் பெருமானாருடைய. அருளினால் - திருவருளால். தரளம்-முத்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். எறி-எடுத்து வீசும். புனல்-நீர். மறி-சுருண்டு வரும். திரை-அலைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொன்னி-பொன்னைக் கொழிக்கும் காவிரி ஆற்றில் ஓடும் நீர்; ஆகுபெயர். ''பொன்னி பொன்கொழிக்கும் அலையார்.'', என வருதலைக் காண்க. மடுத்த-பாய்ந்த. நீள்-நீளமான. வண்ண-பச்சை நிறத்தைப் பெற்ற பயிர்கள் வளர்ந்து நிற்கும்; ஆகுபெயர். பண்ணை-வயல்கள் சூழ்ந்த; ஒருமை பன்மை மயக்கம்.

ஆரூரில்-திருவாரூருக்கு; உருபு மயக்கம். நம்பால்-எம்மிடம். வருக-நீ வருவாயாக. என-என்று; இடைக்குறை. வானில்-ஆகாயத்தில். அடுத்த-சுந்தர மூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானுடைய சந்நிதியில் இருந்த. போதினில்-சமயத்தில். வந்து-வன்மீக நாதருடைய ஆணையால் வந்து. ஓர் நாதம்-ஓர் அசரீரி வாக்கு. எழுந்தது-எழுந்து கேட்டது. கேட்டலும்-கேட்டவுடன். அது-அந்த அசரீரி வாக்கை. உணர்ந்து-தெரிந்து கொண்டு. எழுந்தார்-நடராஜப் பெருமானைத் தரையில் விழுந்து வணங்கிக் கொண்டிருந்த அந்த நாயனார் தரையிலிருந்து எழுந்து நின்றார்.

அடுத்து வரும் 109-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச் சிற்றம்பலத்தில் நின்றுகொண்டு ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளும் நடராஜப் பெருமானாருடைய பெருமையைப் பெற்ற திருவருளால் அசரீரி வாக்கில் கேட்டவாறு அமைந்த அந்தக் கட்டளையைத் தம்முடைய தலையின்மேல் தாங்கிக் கொண்டு கூடிய தம்முடைய கைகளால் அஞ்சலியைச் செய்துகொண்டு, பிறகு தரையில் விழுந்து வணங்கும் ஒவ்வொரு தடவையிலும் திருவாரூருக்குப் புறப்படுவதற்கு விடையை அந்தப் பெருமானாரிடம் பெற்றுக் கொண்டு, பக்கத்தில் மிக்க பிரகாசத்தோடு வளர்ந்து விளங்கும் திருச் சிற்றம்பலத்தை வலமாக வந்து, மீண்டும் ஆனந்தத் தாண்டவ மூர்த்தியைப் பணிந்துவிட்டு வந்து, உயரமான ஆகாயம் தாழுமாறு உயரமாக உள்ள தங்க மலையாகிய மேருவைப் போல ஏழு தளங்களைப் பெற்ற கோபுரத்தின் வாசலைத் தாண்டி.' பாடல் வருமாறு:

**" ஆடு கின்றவர் பேர்அருளி னால்நிகழ்ந்த**
**அப்பணி சென்னிமேற் கொண்டு**
**சூடுதம் கரங்கள் அஞ்சலி கொண்டு**
**தொழுந்தொறும் புறவிடை கொண்டு**

**மாடுபே ரொளியின் வளரும்அம் பலத்தை**
**வலங்கொண்டு வணங்கினர் போந்து**
**நீடுவான் பணிய உயர்ந்தபொன் வரைபோல்**
**நிலைஎழு கோபுரம் கடந்து. "**

இந்தப் பாடல் குளகம். ஆடுகின்றவர்-சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் நின்று கொண்டு ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளும் நடராஜப் பெருமானாருடைய. பேர்-பெருமையைப் பெற்ற. அருளினால்-திருவருளால். நிகழ்ந்த-அசரீரி வாக்கில் தாம் கேட்டவாறு அமைந்த. அப்பணி-அந்தக் கட்டளையை. சென்னி மேல்-தம்முடைய தலையின்மேல். கொண்டு-தாங்கிக் கொண்டு. சூடு-சூடிய. தம்-தம்முடைய. கரங்கள்-திருக்கரங்களால். அஞ்சலி-அஞ்சலியை. கொண்டு-செய்து கொண்டு. அஞ்சலி-கைகளைக் கூப்பிக் கும்பிடுதல். தொழுந்தொறும்-பிறகு தரையில் விழுந்து நடராஜப் பெருமானை வணங்கும் ஒவ்வொரு தட்வையிலும். புற-திருவாரூருக்குப் புறப்படுவதற்கு. விடை-அந்தப் பெருமானாரிடம் விடையை. கொண்டு-பெற்றுக் கொண்டு. மாடு-பக்கத்தில். பேரொளியின்-மிகுதியான பிரகாசத்தோடு. வளரும்-வளர்ந்து விளங்கும். அம்பலத்தை - திருச்சிற்றம்பலத்தை. வலம் கொண்டு-வலமாக வந்து. வணங்கினர்-மீண்டும் ஆனந்தத் தாண்டவ மூர்த்தியைப் பணிந்து விட்டு; முற்றெச்சம். போந்து-வந்து. நீடு-உயரமான. வான்-ஆகாயம். பணிய-தாழுமாறு. உயர்ந்த-உயரமாக இருந்த. பொன்வரை தங்கமலையாகிய மேருவை. போல்-போல. நிலை எழு-ஏழு தளங்களைப் பெற்ற, நிலை: ஒருமை பன்மை மயக்கம். கோபுரம்-கோபுரம் உள்ள வாசலை. கடந்து-தாண்டி.

அடுத்து உள்ள 110-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் கோபுர வாசலைத் தாண்டி வந்து நின்று கொண்டு கோபுரத்தைத் தரையில் படிய விழுந்து வணங்கிவிட்டு, நீளமான அழகிய தெருவில் நின்று

நடராஜப் பெருமானைப் பணிந்து விட்டு, திருமணம் நிகழும் செல்வ வளத்தைப் பெற்ற வீதியின் வழியே எழுந்தருளி, நிலை பெற்று விளங்கிய அழகிய சிவத்தலமாகிய அந்தச் சிதம்பரத்தினுடைய தெற்குத் திக்கில் உள்ள வாசலைத் தாண்டி அப்பால் எழுந்தருளி, தூரத்தில் இருக்கும் அழகிய சிதம்பரத்தின் எல்லையில் மீண்டும் நடராஜப் பெருமானை வணங்கிவிட்டுக் கொன்றை மலர் மாலையை அணிந்த நீண்ட சடாபாரத்தைத் தன்னுடைய தலையில் பெற்ற நடராஜப் பெருமானுடைய திருவருளையே தியானம் புரிபவராகி அழகிய கொள்ளிட ஆற்றைத் தாண்டி எழுந்தருளினார்." பாடல் வருமாறு:

**"நின்றுகோ புரத்தை நிலமுறப் பணிந்து**
**நெடுந்திரு வீதியை வணங்கி**
**மன்றலார் செல்வ மறுகினூ டேகி**
**மன்னிய திருப்பதி அதனில்**
**தென்றிசை வாயில் கடந்துமுன் போந்து**
**சேட்படும் திருவெல்லை இறைஞ்சிக்**
**கொன்றைவார் சடையான் அருளையே நினைவார்**
**கொள்ளிடத் திருநதி கடந்தார்."**

நின்று-சுந்தரமூர்த்தி நாயனார் நடராஜப் பெருமானுடைய ஆலயத்தின் முன் உயரமாக நிற்கும் கோரத்தின்கீழ் உள்ள வாசலைத் தாண்டி வந்து நின்றுகொண்டு. கோபுரத்தை-அந்தக் கோபுரத்தை. நிலமுற-தரையில் படிய விழுந்து. ப்: சந்தி. பணிந்து-வணங்கிவிட்டு. நெடும்-நீளமாக இருக்கும். திரு-அழகிய; செல்வர்கள் வாழும் எனலும் ஆம்; திணை மயக்கம். வீதியை-தெருவில் நின்று கொண்டு. வணங்கி-தரையில் விழுந்து நடராஜப் பெருமானைப்பணிந்து விட்டு. மன்றல்-திருமணம். ஆர்-நிகழ்ந்து நிறைந்த. செல்வ-வளத்தைப் பெற்ற. மறுகினூடு-ஒரு தெருவின் வழியே. ஏகி-எழுந்தருளி. மன்னிய-நிலைபெற்று விளங்கிய. திரு-அழகிய. ப்: சந்தி. பதி-சிவத்தலமாகிய. அதனில்-அந்தச் சிதம்பரத்தில் உள்ள. தென்-தெற்கு. திசை-திக்கில் உள்ள. வாயில்-

சிதம்பர மாநகரத்துக்குள் புகும் வாசலை. கடந்து-தாண்டி. முன்-அப்பால். போந்து-எழுந்தருளி. சேட்படும்-தூரத்தில் இருக்கும். திரு-அழகிய. எல்லை-சிதம்பரத்தின் எல்லையில். இறைஞ்சி-மீண்டும் ஒரு முறை நடராஜப் பெருமானை வணங்கிவிட்டு. க்: சந்தி. கொன்றை-கொன்றை மலர் மாலையை அணிந்த; ஆகுபெயர். வார் - நீளமான. சடையான்-சடாபாரத்தைத் தன்னுடைய தலையில் பெற்றவனாகிய நடராஜப் பெருமானுடைய. அருளையே-திருவருளையே. நினைவார்-தியானம் செய்பவராகி; முற்றெச்சம். திரு-அழகிய. கொள்ளிட நதி-கொள்ளிட ஆற்றை. த்: சந்தி. கடந்தார்-தாண்டி எழுந்தருளினார்.

கொன்றை வார் சடையான்: "கொங்கு செருந்தி கொன்றைமலர் கூடக் கங்கை புனைந்த சடையார்.", "மாடார் மலர்க்கொன்றை வளர்சடை வைத்து.", "மதியொன்றிய கொன்றை வடத்தன்.", "பண்ணுறு வண்டறை கொன்றை யலங்கல்.", "தாரிடு கொன்றையொர் வெண்மதி கங்கை தாழ்சடை மேலவை சூடி.", "கனமலர்க் கொன்றை யலங்கல் இலங்க.", "கொன்றையொ டெருக் கணி சடையர்.", "பன்மலர் கொன்றை...பூண்டு.", "செய்பூங்கொன்றை கூவிள மாலை சென்னியுட் சேர்புனல் சேர்த்தி.", "கந்தம் கமழ்கொன்றைக் கண்ணி சூடி.", "கொன்றை மாலை மதியோடுடன் சூடி.", "வன்னி கொன்றை மத்தம் சூடும் வலிவலம் மேயவனை.", "நாற்றம் மிக்க கொன்றை துன்று செஞ்சடை.", "நல்லிதழி சழிந்த சென்னி.", "தாதார் கொன்றை தயங்கு முடியுடை நாதா.", "காரார் கொன்றை கலந்த முடியினர்.", "பொன்திகழ் கொன்றை புனைமுடி நாதர்.", "அலங்கல் இலங்கு கொன்றை பிணையும் பெருமான்.", "நிழலால் மடிந்த கொன்றை சூடி.", "கடியா ரலங்கள் கொன்றை சூடி.", "தாரார் கொன்றை பொன்தயங்கச் சாத்தி.", "கடியார் கொன்றைச் சுரும்பின் மாலை கமழ்புன் சடையார்.", "தாதார் கொன்றை தயங்கும் முடியார்.",

"நிரையார் கொன்றை அரவோடும் ஆறார் சடையார்.", "நீண்ட சடையர் திரைகொள் கொன்றை விரைகொள் மலர்மாலை.", "தார்கொள் கொன்றைக் கண்ணியோடும் தண்மதியம் சூடி.", "நறவம்நிறை வண்டறை தார்க் கொன்றை நயந்து.", "கொன்றை...கொண்டணி சடையர்.", "கார்கொண்ட கடிகமழ் வரிமலர்க் கொன்றைக் கண்ணியர்.", "தேங்கமழ் கொன்றையந் திருமலர் புனைவார் திகழ்தரு சடைமிசை.", "கொன்றைச் சடை தாழ.", "பொன்னியல் கொன்றை பொறிவிளர் நாகம் புரிசடைத் துன்னிய சோதி.", "விரிசடை மேலோர் விரிகொன்றை கொள்ள வல்லான்.", "சூடு மதிச்சடை மேற் சுரும்பார் மலர்க்கொன்றை துன்ற நட்டம் ஆடும் அமரர் பிரான்.", "நீடலர் கொன்றையொடு நிமிர்புன் சடை தாழ.", "கொன்றையுடன் துன்று தொத்தலர் செஞ்சடை மேல் துதையவுடன் சூடி.", "மின்னியல் செஞ்சடைமேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல பொன்னியல் கொன்றை யினான்.", "நீடவர் கொன்றையொடு நிரம்பாமதிசூடி.", "கமழ் கொன்றைச்சடை தன்மேல் நின்றும்.", "வண்டலர் கொன்றை நகுமதி புல்குவார் சடையான்.", "பனிமலர்க் கொன்றையம் படர் சடையான்.", "கொன்றைத் தொங் கலன் குளிர்சடையான்.", "நிறைந்த கொன்றைத் தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த தத்துவனார்.", "தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடை.", "காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்.", "கொன்றை பொன்னியன்ற சடையிற் பொலிவித்த புராணனார்.", "கொன்றைமதி கூவிளம் உச்சியே புனைதல்.", "பூங்கொன்றையினோடு இளமத்தம் வெறியாரும் செஞ்சடை யார மிலைத்தானை.", "காரினார் கொன்றைக் கண்ணியார்.", "வண்டணைசெய் கொன்றையது வார் சடைகள் மேலே கொண்டணைசெய் கோலம்.", "ஏழு மலி கொன்றை...செஞ்சடை யெம்மைந்தன்.", "கவினார்ந்த பூங்கொன்றை...உள்ளார்ந்த சடை முடி எம்பெருமானார்.", "போதுலவு கொன்றை புனைந்தான் திருமுடிமேல்.",

"கார்மருவு பூங்கொன்றை சூடி.", "சடைமேற் பொலிவெய்தக் கொங்கார் கொன்றை சூடி.", "சடையமர் கொன்றையினாரும்.", "பொன்தொத்த கொன்றையும் பிள்ளை மதியமும் புனலும் சூடி.","விரையினார் கொன்றை சூடியும்.", "நீர்கொண்ட சடைமுடி மேல் ஏர்கொண்ட கொன்றையினோ டெழில்மத்தம் இலங்கவே.", "கொன்றை மாலை முடிமேல் அணிந்து.", "கொன்றை மலர் துன்றுசெஞ் சடையினான்.", "கொன்றை துன்று சென்னியான்.", "கொன்றை...கொண்ட செஞ்சடை முடிச்சிவன்.", "கொன்றையும் கதிர்விரி மதியமும் கடிகமழ் சடைக்கேற்றி.", "கடிபடு கொன்றை நன்மலர் திகழும் கண்ணியர்.", "கட்டிணை புதுமலர்க் கமழ் கொன்றைக் கண்ணியர்.", "கொய்யணிம் மலர்க்கொன்றை சூடிய ஐயன்.", "கொன்றை மாலை...தங்கும் குருள் குஞ்சியன்.", "தாரினார் விரிகொன்றை யாய்மதி தாங்குநீள் சடையாய்.", "கொன்றைசேர் சடையான்.", "சடைமிசை ...பொன்னினார் கொன்றையும் பொறிகிள ரரவமும் துன்னினார்.", "கொன்றை சூடி நின்ற தேவை.", "கொன்றை மதியொடு கூவிளம் சென்னிவைத்த பிரான்.", "கொன்றையம் முடியினாய்.", "திருமலர்க் கொன்றை மாலை...சென்னிவைத்தீர்.", "கார்மலி கொன்றையொடும் சடைமேல் நிரம்பா மதிசூடி.", "வண்டிரைக்கும் மலர்க் கொன்றை விரிசடை.", "செஞ்சடை யாங்கவெழில் கொன்றை யொடணிந் தழகராம் எந்த மடிகள்.", "கொன்றை...குலவு செஞ்சடை வரத்திறைவன்.", "கொன்றைமலர் துன்றுசடை.", "இதழி...முடியின் சடைத்தலை மிலைச்சிய தபோதனன்.", "கொன்றை வளர் வார்சடையில் வைத்தபரன்.", "வண்டரவு கொன்றை வளர் புன்சடை.", "சடைதன்மேல் தாரணி கொன்றை யும்.", "மடல்மலி கொன்றை...சடைமேல்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வண்டுலவு கொன்றை வளர்புன் சடையானே.", "கொன்றை துன்று... தலையர்.", "காருடைக் கொன்றை மாலை கதிர்மதி

அரவி னோடும் நீருடைச் சடையுள் வைத்த நீதியார்.'', ''பொன்திகழ் கொன்றை மாலை...திகழ்சடையில் வைத்து.'', ''பூத்தபொற் கொன்றை மாலை புரிசடைக் கணிந்த செல்வர்.'', ''அளிமலர்க் கொன்றை துன்றும் அவிர் சடை உடையர்.'', ''வண்டணை கொன்றையும்.... கொண்டணைந் தேறும் முடிஉடையான்.'', ''கொய்ம் மலர்க் கொன்றை...வேய்ந்த விரிசடைக் கற்றை விண்ணோர் பெருமான்.'', ''பூந்தார் நறுங்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து.'', ''கொன்றை துன்னிய செஞ்சடை.'', ''திருக்கொன்றை சென்னி வைத்தீர்.'', ''பொன்னன வார்சடைக் கொன்றையினாய்.'', ''படர்சடைக் கொன்றையும்.'', ''பொன்னங் கொன்றையும் பூவணி மாலையும் பின்னும் செஞ்சடை.'', ''கொன்றை மாலையும் கூவிள மத்தமும் சென்று சேரத் திகழ்சடை வைத்தவன்.'', ''வன்னியும் கொன்றையும் கொண்டணிந்த சடைமுடிக் கூத்தனார்.'', ''புனலும் கொன்றையும் சூடும் புரிசடை.'', ''நாறு கொன்றையும் நாகமும் திங்களும் ஆறும் செஞ்சடை வைத்த அழகனார்.'', ''வண்டார் கொன்றையும் மத்தம் வளர்சடைக் கொண்டான்.'', ''கொன்றை சூடியை.'', ''கொன்றையும்...செஞ்சடை.'', ''கொன்றையும் ...துடும்பல் செய்சடை தூமணிச் சோதியான்.'', ''காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடி.'', ''பொன் நலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்.'', ''தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார்.'', ''காரார் கமழ்கொன்றைக் கண்ணி.'', ''பூவிரியும் மலர்க் கொன்றைச் சடையி னானை.'', ''பொற்றாது மலர்க் கொன்றை சூடினான்.'', ''பொன் நலத்த நறுங்கொன்றைச் சடையினான்.'', ''வம்புலவு கொன்றைச் சடையாய்.'', ''வெறியார் மலர்க்கொன்றை சூடி ன்னானை.'', ''மட்டிலங்கு கொன்றையந்தார் மாலை சூடி.'', ''பொன்னி லங்கு கொன்றையந்தார் மாலை சூடி.'', ''வெறிவிரவு மலர்க்கொன்றை...விரிசடை மேல் மிலைச்சினான்.'', ''நாறு பூங் கொன்றை முடியார்.'', ''கடிமலிந்த மலர்க்கொன்றைச்

சடையான்.'', ''செஞ்சடைமேல் அரவம் கொன்றை... சூடி.'', ''கந்தமலர்க் கொன்றையணி சடையான்.'', ''கொன்றை மாலை சூடி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''வண்டறை கொன்றையும்...சூடு சடை.'', ''ஏடுலா மலர்க்கொன்றை சூடுதிர்.'', ''கொன்றை...சடைய தாம்.'', ''கொன்றையொடு புரிசடையி னானை.'', ''மருவார் கொன்றை மதிசூடி.'', ''கொத்தார் கொன்றை மதிசூடி.'', ''செழுமலர்க் கொன்றையும் கூவிள மலரும் விரவிய சடைமுடி அடிகளை.'', ''கொன்றை அஞ்சடைக் குழகனை.'', ''கொன்றையும்...முடித்த...செஞ்சடை யானை.'', ''கார்க்கொன்றை சடைமேல் ஒன்றுடையாய்.'', ''பிறங்கு கொன்றைச் சடையன்.'', ''பொன்னிலங்கு நறுங் கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க.'', ''தொடைமலி கொன்றை துன்றும் சடையன்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''தேனாம் கொன்றை சடைக்கணிந்த சிவ பெருமான்.'', ''கொன்றை...துன்றிய சென்னியர்.'' என்று மாணிக்கவாசகரும், ''சடைமேல் அக்கொன்றை.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''முடிமேல் மதியும் முருகலர் கொன்றையும்.'', ''சடைமேலது கொன்றை எம்மா முனிக்கே.'', ''கொன்றைக் கடிக்கண்ணியாய்.'', ''விரிசடை மேல் உறைக்கொன்றையோ.'', ''கடிமலர்க் கொன்றையும்... முடிமலர் ஆக்கிய முக்கண் நக்கன்.'', ''தேந்தண் கமழ்கொன் றைச் செஞ்சடையான்.'' என்று சேரமான் பெருமாள் நாய னாரும், ''செஞ்சடைமேல் கார்க்கொன்றை ஏன்றான்.'' என்று நக்கீர தேவ நாயனாரும், ''பாரணிந்த கொன்றை மலர் சூடி வாரணிந்த செஞ்சடையாய்.'' என்று பரண தேவ நாயனாரும், ''நெறிவிரவு கொன்றை...சடை.'' என்று இளம்பெருமான் அடிகளும், ''பைம்பொற் கொன்றைத் தொடைகொண்ட வார்சடை அம்பலத்தான்.'', ''தில்லை அம்பலக் கூத்தற் கவிர்சடைமேற் கொங்கிடத் தார்மலர்க் கொன்றை என்றாய்.'', ''கொன்றைப் போதும்...சூடி.'', ''கற்றைப் பவளச் சடைவலம் பூக்கமழ் கொன்றையந்தார்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''முடியிட்ட கொன்றை

நன் முக்கட் பிரான்.'' என்று நம்பியாண்டார் நம்பியும், "தொடுத்த இதழிசூழ் சடையார்.'', ''துண்ட மதிசேர் சடைக்கொன்றை மாலை.'', ''கொன்றை நறுஞ் சடையார்.'', ''கொன்றை மலர்ச்சடையார்.'', ''கொன்றை வார் சடையினார்.'', ''பொன்னிதழ்க் கொன்றைவன்னி புனவிள மதியம் நீடு சென்னியார்.'', ''கொன்றை வார் சடை முடியரை.'', ''கொன்றை நறுஞ்சடை முடியார்.'', "தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார்.'', "கொன்றை முடியார்.'', ''கொந்தவிழ் கொன்றை முடிக் கூத்தனார்.'', ''வெறியுறு கொன்றை வேணி விமலரும்.'', "நறைஇதழித் திருமுடியார்.'', ''கொன்றை வேணியார்.'', ''வேரியார் மலர்க்கொன்றை வேணியார்.'', ''கொன்றை வார் சடையார் தொண்டர்.'' என்று சேக்கிழாரும், "கண்ணிகார்நறுங் கொன்றை.'' என்று பாரதம் பாடிய பெருந்தேவனாரும், ''கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்.'' (அகநானூறு கடவுள் வாழ்த்து) என்று அதே புலவரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 111-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்மைச் சூழ்ந்துவரும் அடியவர்கள் வாழ்த்துக்களைக் கூற, மூன்று புரிகளைப் பெற்ற பூணூலை அணிந்த மார்பைப் பெற்றவராகிய சுந்தரமூர்த்தி நாயனார் முப்பத்திரண்டு தருமங்களைப் புரிந்தருளுபவளாகிய பெரிய நாயகி தன்னுடைய அழகிய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற்கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து அளித்த பாலைக் குடித்தருளி வளர்ந்தவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளும் பெரிய பாக்கியத்தைப் பெற்றதென்று எண்ணி இந்தப் பூமண்டலம் முழுவதும் புகழும் சிறந்த புகழைப் பெற்றதும், கழுமலம் என்ற பெயரைக் கொண்டதும் ஆகிய சீகாழியாகும் அழகிய சிவத்தலத்திற்குப் போய்ச் சேர்ந்தார்'- பாடல் வருமாறு:

"புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூல் அணி
மார்பர்
அறம்பயந்தாள் திருமுலைப்பால் அமுதுண்டு
வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதென முற்றுலகில்
சிறந்தபுகழ்க் கழுமலமாம் திருப்பதியைச்
சென்றணைந்தார்."

புறந்தருவார்—தம்மைச் சூழ்ந்து வரும் அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்று—வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இசைப்ப-கூறிப் பாராட்ட. ப்: சந்தி. புரி முந்நூல்-மூன்றுப் புரிகளைக் கொண்ட பூணூலை; புரி: ஒருமை பன்மை மயக்கம். அணி-அணிந்த. மார்பர்—மார்பை உடையவராகிய சுந்தர மூர்த்தி நாயனார். அறம்-முப்பத்திரண்டு தருமங்களை; ஒருமை பன்மை மயக்கம். அவை இன்ன என்பதை வேறோர் இடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. பயந்தாள்-புரிந்தருளியவளாகிய பெரிய நாயகி அம்மை. திரு-அழகிய. முலைப்பால்-தன்னுடைய கொங்கைகளிலிருந்து கறந்து ஒரு பொற் கிண்ணத்தில் வைத்துச் சிவஞானத்தைக் குழைத்து வழங்கியருளிய பாலை. முலை: ஒருமை பன்மை மயக்கம். அமுது உண்டு. அமுதத்தைப் போலக் குடித்து. வளர்ந்தவர்தாம்-வளர்ந்தவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். தாம்: அசை நிலை. பிறந்தருளும்-திருவவதாரம் புரிந்தருளும். பெரும்-பெரிய. பேறு-பாக்கியத்தை. பெற்றது என-பெற்று விளங்குவது என்று எண்ணி. என: இடைக்குறை. முற்றுலகில் -இந்த உலகம் முழுவதும். சிறந்த—சிறப்பாக அமைந்த. புகழ்-புகழைப் பெற்ற. க்: சந்தி. கழுமலம் ஆம்-கழுமலமாகும் சீகாழி என்னும். திரு-அழகிய; செல்வங்கள் வாழும் எனலும் ஆம்; திணை மயக்கம். ப்: சந்தி. பதியை-சிவத்தலத்திற்கு; உருபு மயக்கம். ச்: சந்தி. சென்று-எழுந்தருளி. அணைந்தார்-அந்த நாயனார் போய்ச் சேர்ந்தார்.

அறம் பயந்தாள் திரு முலைப்பால் உண்டவர் "அம்பிகை செம்பொற் கிண்ணத் தமுத ஞானம் கொடுப்ப அழுகை தீர்ந்த, செம்பவள வாய்ப்பிள்ளை.", "மலையாள் திருமுலையிற் கறந்த ஞானம் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியரை.", "எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி, உண்ணடிசில் எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும், கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித், தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணனார் அருள் புரிந்தார்.", "ஞானம் உண்டார்.", "இழைத்தடங் கொங்கை இமயமா மலைக்கொடி இன்னமு தெனஞானம், குழைத்தளித்திட அமுதுசெய் தருளிய குருளையார்.", "ஞாலம் உய்ந்திட ஞானம் உண்டவர்.", "பொங்கு கொங் கையிற் கறந்தமெய்ஞ் ஞானமாம் போனகம் பொற்குன்ற, மங்கை செங்கையால் ஊட்டஉண்ட ருளிய மதலையார்.", "ஞான போனகர்.", "முற்று மானவள் ஞான மேமுலை சுரந்தூட்டப், பெற்ற பாலறா வாயன்.", "அள்வில் ஞானத் தமுதுண்டார்.", "அருள்ஞானம் உண்ட சிரபுர வேந்தரும்." "உமையாள் முலையின் ஞானப் பாலறா வாயர்." "உலகுய்ய ஞானம் உண்டார்.", "தனிப்பொருப்பின், மங்கை திருமுலைப்பால் உண்டருளும் வள்ளலார்.", "திரு ஞானம் உண்ட செல்வர்.", "ஞான போனகருக்கு.", "பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார்.", "யாழின் மொழியாள் உமைஞானம் ஊட்ட உண்ட எம் பெருமான்.", "ஞானம் உண்டார்." என்று பெரிய புராணத் தில் வருவனவற்றைக் காண்க. "கிளிவந்த சொல்லிபொற் கிண்ணத்தின் ஞான அமிர்தளிக்க, அளிவந்த பூங்குஞ்சியின் சொற்சிறுக்கன்.", "சிலம்பரையன் பெறு பூங்குழல் மாதிடு போனகம் உண்டே.", "ஞானம் திரளையிலே உண்டனை.", "ஆதிச் சிவனருளால் அம்பொன்செய் வட்டிவிற் கோதில் அமிர்தம்நுகர் குஞ்சரத்தை.", "செஞ்சடைவெண் மதி அணிந்த சிவன்எந்தை திருவருளால், வஞ்சியன நுண்ணிடை யாள் மலையரையன் மடப்பாவை, நற்கண்ணி அளவிறந்த ஞானத்தை அமிர்தாக்கிப், பொற்கிண்ணத் தருள்புரிந்த

போனகம்முன் நுகர்ந்தனையே.'', ''பண்டமுது செய்ததுமை நங்கைஅருள் மேவுசிவ ஞானம்.'', ''முப்பத் திரண்டறமும் செய்தாள் முதிராத, செப்பொத்த கொங்கைத் திருநுதலி-அப்பன், அருளாலே ஊட்டுதலும் அப்பொழுதே ஞானத், திரளாகி முன்னின்ற செம்மல்.'' என்று நம்பியாண்டார் நம்பி பாடியருளியவற்றையும் காண்க.

பின்பு உள்ள 112-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருவவதாரம் செய்தருளிய பெருமையைப் பெற்ற புகலியாகிய சீகாழியை உள்ளுக்குள்ளும் அடியேன் அடியேனுடைய கால்களால் மிதிக்க மாட்டேன் என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணிச் சீகாழியின் எல்லைப் புறத்தில் நின்றவாறே தரையில் விழுந்து பிரமபுரீசரைப் பணிந்து வள்ளலாராகிய அந்த நாயனார் வலமாக வரும் சமயத்தில் மங்கையாகிய திருநிலை நாயகியைத் தன்னுடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்தவனும், திருமாலாகிய இடபவாகனத்தை ஓட்டுபவனுமாகிய பிரமபுரீசன் அந்த நாயனாருக்கு எதிரில் தன்னுடைய காட்சியை வழங்கியருளா: பாடல் வருமாறு:

''பிள்ளையார் திருஅவதா ரம்செய்த பெரும்புகலி,
உள்ளும்நான் மிதியேன் என் றூரெல்லைப்
புறம்வணங்கி
வள்ளலார் வலமாக வரும்பொழுதின் மங்கைஇடம்
கொள்ளுமால் விடையானும் எதிர்காட்சி
கொடுத்தருளா:''

இந்தப் பாடல் குளகம். பிள்ளையார்-ஆளுடைய பிள்ளையாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். திரு அவதாரம் செய்த-திருவவதாரம் செய்தருளிய. பெரும்-பெருமையைப் பெற்ற. புகலி-புகலியாகிய சீகாழிக்கு. உள்ளும்-உட்புறத்திலும். நான்-அடியேன். மிதியேன்-அடியேனுடைய அடிகளால் மிதிக்க மாட்டேன். என்று

-என எண்ணி. ஊர்-அந்தச் சீகாழியினுடைய. எல்லை-எல்லையின். புறம்-வெளியில் இருந்தவாறே. வணங்கி-பிரம புரீசரைப் பணிந்துவிட்டு. வள்ளலார்-வள்ளலாராகிய சுந்தர மூர்த்தி நாயனார். வலமாக வரும்-சீகாழியை வலங் கொண்டு வரும். பொழுதின்-சமயத்தில். மங்கை-திருநிலை நாயகியாகிய மங்கையை. இடம்-தன்னுடைய வாம பாகத்தில் கொள்ளும்-வைத்துக் கொள்ளும். மால்-திரு மாலாகிய. விடையானும் - இடபவாகனத்தை ஓட்டு பவனாகிய தோணியப்பனும். எதிர்-அந்த நாயனாருக்கு எதிரில். காட்சி-தன்னுடைய காட்சியை. கொடுத்தருள-வழங்கியருள.

திருமாலாகிய இடப வாகனம்: "ஏறுமால்.", "பாயும் மால்விடை மேலொரு பாகனே", என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "செங்கண்மால் விடை ஏறிய செல்வனார்.", "போரரவ மால்விடை யொன்றூர்தி யானை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "தடம் மதில்கள் அவைமூன்றும் தழலெரித்த அந்நாளில், இடப மதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோர்." என்று மாணிக்கவாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 113-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தோணியப்பர் தம்முடைய காட்சியை வழங்கியருள, மிகுதியாக உண்டாகிய பெரிய பக்தியோடு வன்றொண்ட ராகிய சுந்தர மூர்த்தி நாயனார் நின்று கொண்டிருந்தவர் தரையில் விழுந்து அந்தத் தோணியப்பரை வணங்கிவிட்டு, "தெளிவான அலைகளை வீசும் சமுத்திரத்தின்மேல் பிரளய காலத்தில் ஆழ்ந்துவிடாமல் மிதந்த திருத்தோணிபுரத்தில் எழுந்தருளியுள்ள தோணியப்பரை அடியேன் கயிலாச மலையில் எழுந்தருளியுள்ள வண்ணம் தரிசித்து மகிழ்ச்சியைக் கொண்டேன்" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு, உரிய பண்ணும் இனிய சங்கீதமும் அமைந்த திருப்பதிகம் ஒன்றை அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"மண்டியபே ரன்பினால் வன்றொண்டர் நின்றி
றைஞ்சி
'தெண்டிரைவே லையில்மிதந்த திருத்தோணி
புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில்வீற்றிருந்த
படி' என்று
பண்டரும்இன் னிசைபயின்ற திருப்பதிகம்
பாடினார்."

மண்டிய-தோணியப்பர் தம்முடைய காட்சியை வழங்கி யருள மிகுதியாக உண்டாகிய. பேர்-பெரிய. அன்பினால்-பக்தியோடு; உருபு மயக்கம். வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார். நின்று-நின்று கொண்டிருந்தவர்; வினையாலணையும் பெயர். இறைஞ்சி-அந்தத் தோணியப்பரை வணங்கிவிட்டு. தெண்-தெளிவான. திரை-அலைகளை வீசும்; ஒருமை பன்மை மயக்கம். வேலையில்-சமுத்திரத்தின்மேல்; உருபு மயக்கம். மிதந்த-பிரளய காலத்தில் ஆழ்ந்து விடாமல் மிதந்த. திரு-அழகிய. த்: சந்தி. தோணிபுரத்தாரை-சீகாழியில் உள்ள கட்டுமலையில் ஒரு தோணியில் எழுந்தருளியிருக்கும் தோணியப்பரை. க்: சந்தி. கயிலையினில்-கயிலாச மலையில். வீற்றிருந்த-அமர்ந்தருளியிருந்த. படி-வண்ணம். கண்டு-அடியேன் தரிசித்து. கொண்டேன்-ஆனந்தத்தைப் பெற்றேன். என்று-என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. பண்-உரிய பண். தரும்-அமைந்திருக்கும். இன்-இனிய சொற்சுவை, பொருட்சுவை பொருந்திய. இசை-சங்கீதம். பயின்ற-அமைந்த. திருப்பதிகம்-ஒரு திருப்பதிகத்தை. பாடினார்-அந்த நாயனார் பாடியருளினார்.

அவ்வாறு அவர் பாடியருளிய திருப்பதிகம் தக்கேசிப் பண் அமைந்தது. அதில் வரும் ஒரு பாசுரம் வருமாறு:

"சாதலும் பிறத்தலும் தவிர்த்தெனை வகுத்துத்
தன்அருள் தந்தஎம் தலைவனை மலையின்

மாதினை மதித்தங் கோர்பால்கொண்ட
மணியை வருபுனல் சடையிடை வைத்தஎம் மானை
ஏதிலேன் மனத்துக்கோர் இரும்புண்ட நீரை
எண்வகை ஒருவனை எங்கள் பிரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.''

சீகாழி கடலில் மிதந்த சிவத்தலம்: ''கருமை பெற்ற கடல்கொள்ள மிதந்ததோர் காலம் இதுவென்னப், பெருமை பெற்ற பிரமாபுரம்.'', ''உலகிற்பல ஊழிகள் தோன்றும் பொழுதெல்லாம், பெயரிலங்கு பிரமாபுரம்.'', ''அணிநீர் உலகமாகி எங்கும் ஆழ் கடலால் அழுங்கத், துணிநீர் பணியத் தான்மிதந்த தோணி புரத்தானே.'', ''மண்ணினை மூடி வான்முகடேறி மறிதிரை கடல்முகந் தெடுப்பமற் றுயர்ந்து, விண்ணளவோங்கி வந்திழி கோயில் வெங்குரு.'', ''பாணிமூவுலகம் புதையமேல் மிதந்த தோணி புரத்துறைந் தனை.'', ''ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி ஒலிபுனல் கொள உடன் மிதந்த, காருறு செம்மை நன்மையால் மிக்க கழுமலநகர்.'', ''ஒருவர் இவ்வுலகில் வாழ்வில்லா வண்ணம் ஒலிபுனல் வெள்ளம்முன் பரப்பக், கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்கும் கழுமல நகர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பார்கொண்டு மூடிக் கடல் கொண்ட ஞான்றுநின் பாதமெல்லாம், நாலஞ்சு புள்ளினம் ஏந்தின என்பர் நளிர்மதியம், கால் கொண்ட வண்கைச் சடைவிரித் தாடும் கழுமலவர்க்கு.'', ''முற்றிக் கிடந்த முந்நீரின் மிதந்துடன் மொய்த்தமரர், சுற்றிக் கிடந்து தொழப்படுகின்றது சூழரவம், தெற்றிக் கிடந்து வெங் கோன்றளந் துன்றிவெண் திங்கள் சூடும், சற்றைச் சடை முடியார்க்கிடம் ஆய கழுமலமே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

திருக் கழுமலத்தைப் பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய மற்றொரு பாசுரம் வருமாறு:

'' மற்றொரு துணைஇனி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்

சுற்றிய சுற்றமும் துணைஎன்று கருதேன்
 துணைஎன்று நான்தொழப் பட்டஒண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவர் அறியா
 முறைமுறை பலபல நெறிகளும் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை அடியேன்
 கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.''

அடுத்து வரும் 114-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும் ஓலமிடும் சிவபெருமானாராகிய தோணியப்பர் தம்முடைய எதிரிலிருந்தும் எழுந்தருளி மறையச் சுந்தர மூர்த்தி நாயனார் அச்சத்தைக் கொண்டவராகி, அது பிறகு அகலவே, திருவாரூருக்கு எழுந்தருள விருப்பத்தை அடைந்து, பெருகி எழும் அலைகள் சுற்றி வீசும் முல்லை நிலத்தில் உள்ளதும் பெருமையைப் பெற்றதும் ஆகிய சீகாழி என்னும் சிவத்தலத்தில் தோணியப்பரைப் பணிந்துவிட்டு அப்பால் எழுந்தருளித் திருக்கோலக்காவை அடைந்து சத்தபுரீசரைப் பணிந்துவிட்டுச் செந்தமிழ் மொழியில் அமைந்த மாலைகளாகிய பல திருப்பதிகங்களை அந்த நாயனார் பாடியருளி.'' பாடல் வருமாறு:

**'' இருக்கோலம் இடும்பெருமான் எதிர்நின்றும் எழுந்தருள**
**வெருக்கோளுற் றதுநீங்க ஆரூர்மேற் செல விரும்பிப்**
**பெருக்கோதம் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்**
**திருக்கோலக் காவணங்கிச் செந்தமிழ்மா லைகள்பாடி.''**

இந்தப் பாடல் குளகம். இருக்கு-இருக்குவேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஓலம் இடும்-ஐயா

என்று ஓலமிட்டு அழைக்கும். பெருமான்-சிவபெருமானா ராகிய தோணியப்பர்; ஒருமை பன்மை மயக்கம். எதிர் நின்றும்-தம்முடைய எதிரிலிருந்தும். எழுந்தருள-எழுந்தருளி மறைந்து போக. வெருக்கோள்-அச்சத்தைக் கொள்வதை. உற்று-அடைந்து. அது-பிறகு அந்த அச்சம். நீங்க-தம்மை விட்டு அகல. ஆரூர்மேல்-திருவாரூருக்கு; உருபு மயக்கம். செல-எழுந்தருள; இடைக்குறை. விரும்பி-சுந்தர மூர்த்தி நாயனார் விருப்பத்தை அடைந்து. ப்: சந்தி. பெருக்கு-பெருகி எழும். ஓதம்-அலைகள்; ஒருமை பன்மை மயக்கம். சூழ்-நீர் நிலைகளில் சுற்றி வீசும். புறவு-முல்லை நிலத்தில் விளங்கும். ப்: சந்தி. பெரும்-பெருமையைப் பெற்ற. பதியை-சிவத்தலமாகிய சீகாழியில்; உருபு மயக்கம். வணங்கி-தோணியப்பரைப் பணிந்துவிட்டு. தோணியப்பர்-சீகாழியில் உள்ள ஆலயத்தில் விளங்கும் கட்டுமலையில் ஒரு தோணியில் பெரிய நாயகியாரோடு எழுந்தருளியிருப்பவர். ப்: சந்தி. போய்-அப்பால் எழுந்தருளி. த்: சந்தி. திருக்கோலக்கா-திருக்கோலக்கா என்னும் சிவத்தலத்தில். வணங்கி-சத்தபுரீசுவரரைப் பணிந்து விட்டு. ச்: சந்தி. செந்தமிழ்-செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலைகள்-மாலைகளாகிய பல திருப்பதிகங்களை. பாடி-அந்த நாயனார் பாடியருளி.

திருக்கோலக்கா: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் சத்தபுரீசுவரர். அம்பிகை ஓசை கொடுத்த நாயகி. இது இக்காலத்தில் திருத்தாளம் உடையார் கோயில் என வழங்கும். இது சீகாழிக்கு அரை மைல் தூரத்தில் உள்ளது. சீகாழிக்கும் திருக்கோலக்காவுக் கும் இடையில் கழுமல வாய்க்கால் என்னும் கால்வாய் ஓடுகிறது. இது திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பொற்றாளம் பெற்ற திருத்தலம்.

இதைப் பற்றிச் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்

தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை எண்கணம் இறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலுள் ளானைக்
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே.

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சும்கீழ்
உடையும் கொண்ட உருவம் என்கொலோ."

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய மற்றொரு பாசுரம் வருமாறு:

" பாட்ட கத்திசை ஆகிநின் றானைப்
பத்தர் சித்தம் பரிவினி யானை
நாட்டகத் தேவர் செய்கையு ளானை
நட்டம் ஆடியை நம்பெரு மானைக்
காட்ட கத்துறு புலியுரி யானைக்
கண்ணொர் மூன்றுடை அண்ணலை அடியேன்
கோட்ட கப்புன லார்செழுங் கழனிக்
கோலக் காவினிற் கண்டுகொண்டேனே."

இவற்றையல்லாமல் நம்பியாண்டார் நம்பி பாடியருளிய பின் வருவன வற்றையும் காண்க:

" கண்ணார் திருநுத லோன்கோலக்
காவிற் கரநொடியாற்
பண்ணார் தரப்பாடு சண்பையர்
கோன்பாணி நொந்திடுமென்
றெண்ணா எழுத்தஞ்சும் இட்டபொற்

நாளங்கள் ஈயக்கண்டும்
மண்ணார் சிலர்சண்பை நாதனை
ஏத்தார் வருந்துவதே.''

''...பெற்றது
குழகனைப் பாடிக் கோலக் காப்புக்
கழகுடைச் செம்பொற் றாளம் அவையே.''

'' கைப்பாணி ஒத்திக்கா ழிக்கோலக் காவிற் பொற்
சப்பாணி கொண்டு.''

'' கோலக்கா விற்றாளம் பெற்றிக் குவலயத்தில்
மாலக்கா லத்தே...மாற்றினான்.''

பிறகு உள்ள 115-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'வண்டுகள் ரீங்காரம் செய்து மொய்க்கும் மலர்கள் மலர்ந்திருக்கும் பல வகை மரங்கள் வளர்ந்து நிற்கும் பொழில் சூழ்ந்த திருப்புன்கூர் என்னும் சிவத்தலத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் நம்பராகிய சிவலோக நாதரிடம் குறையாத பெரிய பக்தி மிகுதியாகச் சுந்தர மூர்த்தி நாயனாருக்கு உண்டாக, அந்தச் சிவலோக நாதருடைய திருவடிகளை வணங்கிவிட்டுச் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி, மான் குட்டியை ஏந்தும் திருக்கரத்தைப் பெற்ற சிவ பெருமானார் மகிழ்ச்சியை அடைந்து திருக்கோயில் கொண்டிருக்கும் பல தலங்களுக்கும் எழுந்தருளி அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைப் பணிந்துவிட்டுக் காடு மிகுதியாக வளர்ந்திருப்பதும், செந்தாமரை மலர், வெண்டாமரைமலர், ஆம்பல்மலர், அல்லிமலர், நீலோற்பல மலர், குமுதமலர், முதலிய நீர்பூக்கள் மலர்ந்து விளங்கும் தடாகம் சுற்றியிருக்கும் காவிரியாற்றின் கரையை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"தேனார்க்கும் மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பே ரன்புமிக அடிபணிந்து தமிழ்பாடி
மானார்க்கும் கரதலத்தார் மகிழ்ந்தஇடம் பல வணங்கிக்
கானார்க்கும் மலர்த்தடம்சூழ் காவிரியின் கரையணைந்தார்."

தேன்-வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்க்கும்-ரீங்காரம் செய்து மொய்க்கும். மலர்-மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சோலை-பல வகையான மரங்கள் வளர்ந்து நிற்கும் பொழில் சூழ்ந்த. அந்த மரங்களாவன; மகிழ மரம், மாமரம், வேங்கை மரம், வாகை மரம், பூவரசமரம், சண்பக மரம், புளிய மரம், வேப்பமரம், வாதநாராயண மரம், மருதமரம், பாலைமரம் முதலியவை. த்: சந்தி. திருப்புன்கூர்-திருப்புன்கூர் என்னும் சிவத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும்; ஆகுபெயர். நம்பர்பால்-தம்முடைய அடியவர்களுக்கு, 'இவரை வணங்கினால் நமக்குச் செல்வம் சேரும், நல்ல திருமாளிகை கிடைக்கும், நல்ல நண்பர்களை அடையலாம், நம்முடைய புதல்விக்கு அறிவுடைய கணவன் கிடைப்பான், நம்முடைய புதல்வனுக்கு அழகுடைய கன்னிகை திருமணம் புரிந்து கொள்ளக் கிடைப்பாள், நமக்குப் பல வகையான வயல்கள் கிடைக்கும்' என்பவற்றைப் போன்ற நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய சிவலோக நாதரிடத்தில். ஆனா-ஒரு காலும் குறையாத. ப்: சந்தி. பேர்-பெரிய. அன்பு-பக்தி. மிக-சுந்தர மூர்த்தி நாயனாருக்கு மிகுதியாக உண்டாக. அடி-சிவலோக நாதருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பணிந்து- வணங்கிவிட்டு. தமிழ்-செந்தமிழ் மொழியில் அமைந்த. பாடி-ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி. மான்-மான் குட்டியை. ஆர்க்கும்-பிடித்திருக்கும். கரதலத்தார்-திருக்கரத்தைப் பெற்ற சிவபெருமானார். மகிழ்ந்த-மகிழ்ச்சியை அடைந்து திருக்கோயில் கொண்டுள்ள.

இடம்-சிவத்தலங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பல-பலவற்றிற்கும் அந்த நாயனார் எழுந்தருளி. வணங்கி-அந்தத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களைப் பணிந்துவிட்டு. ச்: சந்தி. கான்-காடு; நறுமணமும் ஆம். ஆர்க்கும்-வீசும். மலர்-செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லிமலர், நீலோற்பல மலர், குமுதமலர், பொற்றாமரை மலர் முதலிய மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தடம்-தடாகம். சூழ்-சுற்றியிருக்கும். காவிரியின்-காவிரி ஆற்றினுடைய. கரை-கரையை. அணைந்தார்-அந்த நாயனார் அடைந்தார்.

திருப்புன்கூர்: இது சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் சிவலோக நாதர். அம்பிகை சொக்க நாய்கி அம்மை. இது வைத்தீசுவரன் கோயிலிலிருந்து மேற்கில் இரண்டு மைல் தூரத்தில் உள்ளது. திருநாளைப் போவார் நாயனார் தம்மை நேராகத் தரிசனம் செய்து வணங்கும் பொருட்டுச் சிவலோக நாதர் தமக்கு முன்னால் அமர்ந்திருந்த நந்திதேவரைச் சிறிது விலகியிருக்குமாறு செய்தருளிய தலம் இது. "சற்றே விலகியிரும்பிள்ளாய், சந்நிதானம் மறைக்குதாம்; நற்றலம்புரி நம்முடையதிரு நாளைப் போவான் வந்திருக்கிறான்." என்று நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் கோபாலகிருஷ்ண பாரதியார் பாடியதைக் காண்க.

சுந்தர மூர்த்தி நாயனாரும் ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் நண்பர்கள் ஆன பிறகு இருவருமாக வந்து வழிபட்ட தலம் இது. கலிக்காம நாயனார் இந்தத் தலத்தில் பல திருப்பணிகளைச் செய்திருக்கிறார். ஏயர்கோன் கலிக்காம நாயனாரின் பொருட்டுச் சிவலோக நாதர் பன்னிரண்டு வேலிப்பரப்புள்ள நிலங்களை இரண்டு முறைகள் பெற்றுக்கொண்டு மழையில்லாமல் யாவரும் வருந்திய காலத்தில் மழை பெய்யச் செய்தருளிய தலம் இது. இந்தச் செய்தி;

" வையகம் முற்றும் மாமழை மறந்து
வயலில் நீர்இலை மாநிலம் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை என்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யும் மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே."

என்று சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய பாசுரத்தால் விளங்கும். அந்த நாயனார் தக்கேசிப் பண்ணில் பாடியருளிய பின்வரும் பாசுரத்தாலும் இந்தச் செய்தியை அறியலாகும்.

" ஏத நன்னிலம் ஈரறு வேலி
ஏயர் கோன்உற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாள்அற எறிந்தசண் டிக்குன்
சடைமி சைமலர் அருள்செயக் கண்டு
பூத ஆளிநின் பொன்னடி அடைந்தேன்
பூம்பொ ழில்திருப் புன்கூர்உ ளானே."

கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில்,

"பொன்னம் பலத்துறை புண்ணியன் என்பர் புயல் மறந்த
கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்று புன்கூர்
மன்னு மழைபொழிந் தீரறு வேலிகொண் டாங்கவற்கே
பின்னும் பிழைதவிர்த் தீரறு வேலிகொள் பிஞ்ஞகனே."

என்று நம்பியாண்டார் நம்பி பாடியருளியதைக் காண்க. ஏயர்கோன் கலிக்காம நாயனார் வாழ்ந்த திருத்தல

மாகிய திருப்பெருமங்கலம் திருப்புன்கூருக்கு அருகில் இருக்கிறது. இந்தத் தலத்தைப் பற்றித் தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

பவள வண்ணப் பரிசார் திருமேனி
திகழும் வண்ணம் உறையும் திருப்புன்கூர்
அழகர் என்னும் அடிக ளவர்போலும்
புகழ நின்ற புரிபுன் சடையாரே. ''

திருப்புன்கூரையும் திருநீடுரையும் சேர்த்துத் திரு நாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

'' பிறவாதே தோன்றிய பெம்மான் தன்னைப்
பேணாதார் அவர்தம்மைப் பேணா தானைத்
துறவாதே கட்டறுத்த சோதி யானைத்
தூநெறிக்கும் தூநெறியாய் நின்றான் தன்னைத்
திறமாய எத்திசையும் தானே ஆகித்
திருப்புன்கூர் மேவிய சிவலோகனை
நிறமாம் ஒளியானை நீடு ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே. ''

மானார்க்கும் கரதலத்தார்: ''மானா ரரவுடையான்.'', ''கான்மானிகைக் கொண்ட காழியார்.'', ''மறிவளர் அங்கையர்.'', ''மான் இடமார் தருகையர்.'', ''கையடைந்த மானினோடு.'', ''மான்மறியும்...பற்றியகை.'', ''மறி கொள்கையன்.'', ''கானமர் மான்மறிக் கைக்கடவுள்.'', ''மறிகையோன்.'', ''கலைமலி விரலினர்.'', ''நாற்கால் மான்மறி...ஏந்தினை.'', ''கையி லங்குமறி ஏந்துவர்.'', ''மான்மறி ஏந்திய கையானை.'', ''மறியாரும் கையுடை யானை.'', ''மறிஏந்து கையாய்.'', ''கலைமான் மறியும்...

நிலையாகிய கையினன்.'', ''கலைவாழும் அங்கையீர்.'', ''மறியாரும் கைத்தலத்தீர்.'', ''மான்மறி பிடித்தான்.'', ''மான்மழு ஏந்திய கையினார்.'', ''மறிதரு கரத்தினான்.'', ''மறியுலாம் கையினான்.'', ''மான் இடம்முடையார்.'', ''கைகொள் மான்மறியார்.'', ''மறியுலாம் கையினர்.'', ''மறிகிளர் மான்மழுப் புல்குகை எம்மணாளர்.'', ''கலை மான்மறி ஏந்தி.'', ''மறியார் கரத்தெந்தை.'' என்று திரு ஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும்; ''மறிபடக் கிடந் தகையர்.'', ''மறியொரு கையர் போலும்.'', ''மறியுடை யான்.'', ''கைத்தலை மான்மறி ஏந்திய கையன்.'', ''மறித் திகழ் கையினன்.'', ''மறியிலங்கு கையர்.'', ''மான்மறியும் மாமழுவும் அனலும் ஏந்தும் கையானே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மறிசேர் கையினனே.'', ''மான்மறி ஏந்தும் மைகொள் கண்டனை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மழுவுடையகரன்.'', என்று பட்டினத்துப் பிள்ளையாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 116-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் நறுமணம் கமழும் பல வகை யான மலர்கள் தன்னுடைய அலைகளின்மேல் மிதந்துவர முத்துக்களைக் கொண்டு ஓடிவந்து பள்ளமான இடத்தில் இறங்கும் பசுமையான தங்கத்தை வீசி எறியும் கரையைப் பெற்றதும் பொன்னைக் கொழிப்பதும் ஆகிய காவிரி ஆற்றின் புனித நீரில் படிந்து முழுகித் தலைவனாகிய மாயூரநாதேசுவரன் திருக்கோயில் விளங்கும் மயிலாடு துறைக்கு எழுந்தருளி, மாயூர நாதேசுவரனைப் பணிந்து விட்டுக் கெடுதல் இல்லாத சீர்த்தியைப் பெற்ற திரு அம்பர் மாகாளம் என்னும் சிவத்தலத்திற்கும் சென்றருளி அந்தத் தலத்தில் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும் தலைவனாகிய காளகண்டேசுவரனுடைய திருவடிகளை அந்த நாயனார் வணங்கினார்.' பாடல் வருமாறு:

"வம்புலாம் மலர்அலைய மணிகொழித்து
வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயில்தீர்த்தம்
படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீர்
அம்பர்மா காளத்தின் அமர்ந்தபிரான் அடி
பணிந்தார்."

வம்பு-சுந்தர மூர்த்தி நாயனார் நறுமணம் கமழும். மலர்—பலவகையான மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லிமலர், தாழம்பூ, மகிழ மலர், மஞ்சட் செவ்வந்தி மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், நீலோற்பல மலர், குமுதமலர், பூவரச மலர், புளியம்பூ, மாமலர், வேப்ப மலர், சண்பக மலர், ஆத்தி மலர், பவள மல்லிகை மலர், வாகை மலர், வேங்கை மலர், ஆவாரை மலர் முதலியவை. அலைய-தன்னுடைய அலைகளின் மேல் மிதந்துவர. மணி-முத்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். கொழித்து-தாங்கிக் கொண்டு. வந்து-ஓடிவந்து. இழியும்-பள்ளமான இடத்தில் இறங்கும். பைம்-பசுமையான. பொன்-தங்கத்தை. வார்-அலைகளால் வீசி எறியும். கரை-கரையைப் பெற்றதும்; ஆகுபெயர். ப்: சந்தி. பொன்னி-பொன்னைக் கொழிப்பதும் ஆகிய காவிரி ஆற்றில். "பொன்னி பொன்கொழிக்கும் அலையார்." என வருதலைக் காண்க. பயில்-ஓடும். தீர்த்தம்-புனிதமான நீரில். படிந்து-இறங்கி. ஆடி-முழுகி. த்: சந்தி. தம்பிரான்-தலைவனாகிய மாயூர நாதேசுவரனுடைய ஆலயம் விளங்கும். மயிலாடு துறை-மயிலாடுதுறைக்கு எழுந்தருளி. வணங்கி-மாயூர நாதேசுவரரை அந்த நாயனார் பணிந்து விட்டு. த்: சந்தி. தா-கெடுதல். இல்-இல்லாத; கடைக்குறை. சீர்-சீர்த்தியைப் பெற்ற. அம்பர் மாகாளத்தின்-திரு அம்பர் மாகாளம் என்னும் சிவத்தலத்திற்கும் எழுந்தருளி. அமர்ந்த-அந்தத் தலத்தில் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும்.

பிரான்-தலைவனாகிய காளகண்டேசுவரனுடைய. அடி-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பணிந்தார்-சுந்தர மூர்த்தி நாயனார் வணங்கினார்.

மயிலாடுதுறை: இது இக்காலத்தில் மாயூரம் என்று வழங்கும். இங்கே கோயில் கொண்டிருப்பவர் மாயூர நாதேசுவரர். இது காவிரியாற்றின் தென்கரையில் உள்ளது. அம்பிகையின் திருநாமங்கள் அபயாம்பிகை, அஞ்சல் நாயகி என்பவை. அபயாம்பிகை மயிலாக வடிவம் எடுத்து மாயூர நாதேசுவரரை வழிபட்ட தலம் இது. இந்தத் தலத்தில் ஐப்பசி மாதத்தில் காவிரியாற்றில் நீராடுவதால் சிறந்த பயனைப் பெறலாம். இதைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

" வெஞ்சி னக்கடும் காலன் விரைகிலான்
அஞ்சி றப்பும் பிறப்பும் அறுக்கலாம்
மஞ்சன் மாமயி லாடு துறைஉறை
அஞ்ச வாள்உமை பங்கன் அருளிலே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தக்கராகம், சாதாரி என்னும் பண்களில் திருப் பதிகங்களைப் பாடியுள்ளார். அவற்றுள் சாதாரிப் பண்ணில் அமைந்த ஒரு பாசுரம் வருமாறு:

" கடந்திகழ் கருங்களிறுரித்து மையும்
அஞ்சமிக நோக்கரியராய்
விடந்திகழும் மூவிலைநல் வேலுடைய
வேதியர் விரும்புமிடமாம்
தொடர்ந்தொளிர் கிடந்ததொரு
சோதிமிகு தொண்டைஎழில் கொண்ட துவர்வாய்
மடந்தையர் குடைந்தபுனல் வாசமிக
நாறுமயி லாடுதுறையே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"கொள்ளும் காதன்மை பெய்துறும் கோல்வளை
உள்ளம் உள்கி உரைக்கும் திருப் பெயர்
வள்ளல் மாமயி லாடு துறையுறை
வெள்ளம் தாங்கு சடையனை வேண்டியே."

திரு அம்பர் மாகாளம்: இந்தத் தலம் இந்தக் காலத்தில் கோயில் திருமாகாளம் என வழங்கும். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் காளகண்டேசுவரர், மாகாள நாதர் என்பவை. அம்பிகையின் திருநாமங்கள் பட்சநாயகி, பய க்ஷய நாயகி என்பவை. தீர்த்தம் மாகாள தீர்த்தம். இது அம்பர் என்னும் சிவத்தலத்துக்கு மேற்கில் முக்கால் மைல் தூரத்தில் உள்ளது. அம்பரிலிருந்து அம்பர் மாகாளத்துக்கு வரும் வழியில் சோமாசி மாற நாயனார் வேள்வி புரிந்த மண்டபம் உள்ளது. வேள்வித் திருவிழா வைகாசி மாதத்தில் ஒவ்வோராண்டும் நடை பெறு கிறது. அம்பன், அம்பாசுரன் என்னும் அரக்கர்களைச் சங்காரம் செய்ததனால் உண்டாகிய பாவம் போகும் பொருட்டுக் காளி வழிபட்ட தலம் இது. காளி கோயில் ஆலயத்துக்கு வெளிப் பிராகாரத்தில் தென் பக்கத்தில் விளங்குகிறது. மகா காள முனிவரும் வழிபட்ட தலம் இது. இதைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"பழகமா மலர்பறித் திண்டைகொண்
டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனார் குணம்புகழ்ந் தேத்துவார்
அவர்பலர் கூடநின்ற
கழகனார் கரியுரித் தாடுகங்
காளர்நம் காளி ஏத்தும்
அழகனார் அரிவையோ டிருப்பிடம்
அம்பர்மா காளந் தானே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் குறிஞ்சி, நட்டராகம், சாதாரி என்னும் பண்களில் திருப்பதிகங்களைப் பாடியருளி யிருக்கிறார். அவற்றுள் சாதாரிப் பண்ணில் அமைந்த மற்றொரு பாசுரம் வருமாறு:

"படியுளார் விடையினர் பாய்புலித்
தோல்னர் பாவ நாசர்
பொடிகொள்மா மேனியர் பூதமார்
படையினர் பூண நூலார்
கடிகொள்மா மலரிடும் அடியினர்
பிடிநடை மங்கை யோடும்
அடிகளார் அருள்புரிந் திருப்பிடம்
அம்பர்மா காளந் தானே."

பிறகு வரும் 117-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மின்னலைப் போல ஒளி வீசும் சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் பெற்றவராகிய தலைவர் அக்கினீசுவரர் விரும்பிக் கோயில் கொண்டிருக்கும் திருப்புகலூருக்குச் சுந்தர மூர்த்தி நாயனார் எழுந்தருளி முன்பாக அந்த அக்கினீசுவரரை வணங்கித் துதித்து எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அக்கினீசுவரருடைய திருவருளைச் சிந்தித்துத் தங்கத்தால் செய்யப் பெற்ற அங்க வஸ்திரம். மூன்று புரிகளைக் கொண்ட பூணூல் ஆகியவற்றை அணிந்த மார்பைப் பெற்றவரும், செந்தமிழ் நாட்டில் தெற்கில் விளங்கும் திருநாவலூரை ஆட்சிபுரிபவரும் ஆகிய சுந்தர மூர்த்தி நாயனார் வன்மீக நாதருடைய திருக்கோயில் விளங்கும் திருவாரூருக்குப் போய்ச் சேர்ந்தார்.' பாட்டு வருமாறு:

"மின்னார்செஞ் சடைஅண்ணல் விரும்பு திருப்புகலூரை
முன்னாகப் பணிந்தேத்தி முதல்வன்றன் அருள் நினைந்து
பொன்னாரும் உத்தரியம் புரிமுந்நூல் அணி மார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் சென்றணைந்தார்."

மின்-மின்னலைப் போல. ஆர்-ஒளியை நிரம்ப வீசும். செஞ்சடை-சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற்பெற்ற. அண்ணல்-தலைவராகிய அக்கினீசுவரர். விரும்பு-விரும்பிக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். திருப்புகலூரை-திருப்புகலூருக்கு; உருபு மயக்கம். முன் ஆக-சுந்தர மூர்த்தி நாயனார் எழுந்தருளி முன்பு விருப்பம் உண்டாக. பணிந்து-அக்கினீசுவரரை வணங்கி. ஏத்தி-துதித்து. முதல்வன்தன்-எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவனாகிய அக்கினீசுவரனுடைய; தன்: அசைநிலை. அருள்-திருவருளை. நினைந்து-தியானம் செய்து. பொன்-தங்கத்தால். ஆரும்-அமைந்திருக்கும். உத்தரியம்-மேலாடையையும்; அங்க வஸ்திரத்தையும். புரி-மூன்று புரிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். முந்நூல்-பூணூலையும். அணி-அணிந்து கொண்டிருந்த. மார்பர்-மார்பைப் பெற்றவரும். தென்-செந்தமிழ் நாட்டில் தெற்கில் விளங்கும். நாவலூர்-திருநாவலூரை. ஆளி-ஆட்சி புரிபவரும் ஆகிய சுந்தர மூர்த்தி நாயனார். திருவாரூர்-வன்மீக நாதருடைய ஆலயம் புகழ்பெற்று விளங்கும் திருவாரூருக்கு; சென்று-எழுந்தருளி. அணைந்தார்-அந்தத் தலத்தை அடைந்தார்.

மின்னார் செஞ்சடை: ''மின்னிலங்கு சடையான்.'', ''மின்னிற் பொலிசடையான்.'', ''மின்னலிலும் செஞ்சடையான்.'', ''மின்னார் சடை.'', ''மின்திகழ் செஞ்சடையான்.'', ''மின்னியல் செஞ்சடை.'', ''மின்நேர் சடையாய்.'', ''மின்னேர் சடைகள் உடையான்.'', ''மின்தாங்கு செஞ்சடைஎம் விகிர்தர்.'' ''மின்னுலாவிய சடையினர்.'', ''மின்னை யன்னசடை.'', ''மின்னியல் செஞ்சடை வெண் பிறையன்.'', ''மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்.'', ''மின்னை விரிபுன் சடை.'', ''மின்னியலும் சடை தாழ.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மின்திகழ் சடை.'', ''மின்புரிந்த சடை.'', ''மின்னும் ஒப்பர் விரி சடை.'', ''மின்னியலும் வார்சடை எம்பெருமான்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

திருப்புகலூர்; இது சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள்-அக்கினீசுவரர், கோணப் பிரான் என்பவை. அம்பிகை கருந்தாழ் குழலியம்மை. தீர்த்தம் அக்கினி தீர்த்தம். தல விருட்சம் புன்னைமரம். இது நன்னிலத்திலிருந்து கிழக்கில் நான்கு மைல் தூரத்தில் உள்ளது. அக்கினி வழிபட்ட தலம் இது. ஆலயத்துக்குத் தென்பக்கத்தைத் தவிர் மற்றப் பக்கங்களில் கருங்கல்லினால் கட்டப் பெற்ற அகழி இருக்கிறது. கோணப் பிரானாகிய சிவலிங்கத்தின் திருவுருவம் சற்றுச் சாய்ந்திருக்கிறது, சந்திர சேகரரின் சந்நிதிக்கு முன்னால் அக்கினி பகவானுடைய திருவுருவம் இருக்கிறது. திருநாவுக்கரசு நாயனார் வழிபட்டு முக்தியை அடைந்த தலம் இது. ஆலயத்தில் வாதாபி கணபதியின் திருவுருவம் உள்ளது. அதற்குப் பக்கத்தில் திருநாவுக்கரசு நாயனாருடைய திருவுருவம் உள்ளது. திருப்புகலூர் வர்த்தமானீச்சரம் என்ற சந்நிதி இந்த ஆலயத்துக்குள் இருக்கிறது. அக்கினீசுவரருக்குப் பல வகையான மலர் மாலைகளைக் கட்டிக் கொடுக்கும் திருத்தொண்டைப் புரிந்து வந்த முருக நாயனாருடைய திருவவதாரத் தலம் இது. சுந்தர மூர்த்தி நாயனார் பள்ளி கொண்டிருந்த போது தம்முடைய தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டிருந்த செங்கற்கள் யாவும் பொற் கற்களாக மாறியிருப்பதைப் பார்த்து ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளினார். கொல்லிப் பண்ணில் அமைந்த அந்தத் திருப்பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

"தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி னுமதொண்டர்த் தருகிலாம்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே."

இந்தத் தலத்தைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"அங்கமே பூண்டாய் அனலாடினாய் ஆதிரையாய்
ஆனிழலாய் ஆனே றூர்ந்தாய்
பங்கமொன் றில்லாத படர்சடையினாய்
பாம்போடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்
சங்கையொன் றின்றியே தேவர் வேண்டச்
சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே உன்னடிக்கே போது கின்றேன்
திருப்புகலூர் மேவிய தேவ தேவே."

இது திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய திருத் தாண்டகம்.

இந்தத் தலத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் செவ்வழிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"வாழ்ந்த நாளும்மினி வாழும் நாளும்மிவை
அறிதிரேல்
வீழ்ந்த நாளெம் பெருமானை ஏத்தாவிதி
யில்லிர்காள்
போழ்ந்த திங்கட் புரிசடையி னான்றன்
புகலூரையே
சூழ்ந்த உள்ளம் உடையீர்கள் உங்கள் துயர்
தீருமே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"நீருமாய்த் தீயும் ஆகி நிலனுமாய் விசும்பும் ஆகி
ஏருடைக் கதிர்கள் ஆகி இமையவர் இறைஞ்ச
நின்று
ஆய்வதற் கரிய ராகி அங்கங்கே ஆடு கின்ற
தேவர்க்கும் தேவர் ஆவார் திருப்புக
லூர னாரே."

பிறகு வரும் 118-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தேர் நிற்கும் நீண்ட தெருவைப் பெற்ற திருவாரூரில் வாழும் மக்களுக்கு, "திருப்தியை அடையாத விருப்பத்தோடு நம்முடைய தொண்டனும் நம்பி ஆரூரனும் ஆகிய சுந்தர மூர்த்தி யாம் இந்தத் தலத்துக்கு வருமாறு அழைக்க வருகின்றான்; அவனை மகிழ்ச்சியை அடைந்து நீங்கள் எதிர் கொண்டு வரவேற்பீர்களாக" என்று கங்கையாற்றின் நீர் தங்கும் சடாபாரத்தைப் பெற்ற தம்முடைய தலையின்மேல் நிலவை வீசும் பிறைச் சந்திரனை அணிந்தவராகிய வன்மீக நாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**"தேராரும் நெடுவீதித் திருவாரூர் வாழ்வார்க்**
**'காராத காதலின்நம் ஆரூரன் நாம்அழைக்க**
**வாராநின் றான்அவனை மகிழ்ந்தெதிர்கொள்**
**வீர்.' என்று**
**நீராரும் சடைமுடிமேல் நிலவணிந்தார் அருள்**
**செய்தார்."**

தேர்-ஆழித்தேர், "ஆழித்தேர் வித்தகனை யான்கண்ட தாரூரே." என வருதல் காண்க. ஆரும்-நிற்கும், 'ஓடும்' எனலும் ஆம். நெடு-நீளமான. வீதி-தெருவைப் பெற்ற. திருவாரூர்-திருவாரூரில். வாழ்வார்க்கு-வாழும் மக்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். ஆராத-திருப்தியை அடையாத. காதலின்-விருப்பத்தோடு. நம்-நம்முடைய தொண்டனாகிய. ஆரூரன்-நம்பியாரூரன் ஆகிய சுந்தர மூர்த்தி. நாம்-யாம். அழைக்க-நீ திருவாரூருக்குவா என்று அழைக்க. வாரா நின்றான்-வருகின்றான். அவனை-அந்தச் சுந்தர மூர்த்தியை. மகிழ்ந்து-மகிழ்ச்சியை அடைந்து. எதிர்கொள்வீர்-எதிர் கொண்டு வரவேற்பீர்களாக; ஒருமை பன்மை மயக்கம். என்று-என. நீர்-கங்கை யாற்றின் புனல். ஆரும்-தங்கியிருக்கும். சடை-சடாபாரத் தைக் கொண்ட. முடிமேல்-தம்முடைய தலையின்மேல். நிலவு-நிலாவை வீசும் பிறைச்

சந்திரனை; ஆகுபெயர். அணிந்தார் - அணிந்தவராகிய வன்மீகநாதர். அருள் செய்தார்-திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

சடை முடிமேல் நிலவணிந்தார்: "ஓர் தூவெண்மதி சூடி.", "நீர்பரந்த நிமிர் புன்சடை மேலோர் நிலா வெண் மதி சூடி.", "வெள்ளம் ஆர்ந்து மிளிர்செஞ் சடை தன்மேல் விளங்கும் மதி சூடி.", "திங்களும் போதும் செழும்புனலும் செஞ்சடை மாட்டயல் வைத்துகந்து.", "இந்தணையும் சடையார்.", "விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்.", பிறை சடைமேல் மிக உடையான்.", "பிறையும் புனலரவும்படு சடை எம்பெருமான்.", "முடியார் தருசடை மேல்முளை இளவெண்மதி சூடி.", "பாலம்மதி பவளச் சடை முடிமேலது.", "பிறையணி படர்சடை முடியிடை பெருகிய புனல்உடையவன்.", "தலைமதி புனல்விட அரவினை தலைமையதொரு சடையிடையுடன்; நிலை மருவவொரிடம் அருளினன்.", "முதிருறு கதிர்வளர் இளமதி சடையனை.", "வானார் திங்கள் வளர்புன் சடைவைத்து,", "பிறையும் அரவும் புனலும் சடைவைத்து.", "மதி செஞ்சடை வைத்த மணாளன்.", "சடையார் பிறையான்.", "கலையார் மதியோடுற நீரும் நிலையார் சடையார்.", "அரவச் சடைமேல் மதிமத்தம் விரவிப் பொலிகின்றவன்.", "செஞ்சடையதன்மேல் மலரும் பிறையொன்றுடையான்.", "தணியார் மதிசெஞ் சடையான்.", "வெண்மதி கங்கை தாழ்சடை மேலவை சூடி.", "மாலை நாண்மதி சடை மிசை அணிந்து.", "துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச் சுடர்ச்சடை சுற்றி முடித்து.", "சடைமேல் வளரும் பிறை யுடையாய்.", "மதிசூடிய நீள்சடை.", "தணிநீர் மதியம் சூடிநீடு தாங்கிய தாழ்சடையன்.", "பங்கமேறு மதிசேர் சடையார்.", "சடைமேற் பிறையும் உடையார்.", "பிறை கொள் சடையர்.", "நீடிருஞ் சடைமேல் இளம்பிறை துளங்க.", "சடைமுடிமிசை வளர்மதி சூடி.", "திகழ்தரு சடைமிசைத் திங்களும் சூடி.", "மதி செஞ்சடை" வைத்த

ஈசன்.'', ''வெள்ளைப் பிறை சூடும் சடையான்.'', ''அந்தி மதியோடும் அரவச் சடைதாழ.'', ''குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ.'', ''சூடும் இளந்திங்கட் சுடர் பொற் சடைதாழ.'', ''சூடும் இளந்திங்கட் சுடர்பொற் சடை.'', ''சடையின்னிடை விம்மு...திங்கட் சிந்து கதிர்.'', ''வாணிலாச் சடை.'', ''பிறையார் சடை அண்ணல்.'', ''வற்றா நதியும் மதியும் பொதியும் சடை.'', ''மின்னார் சடைமேல் அரவும் மதியும் விளையாட.'', ''சூடு மதிச் சடை.'', ''மதிசூடி நீண்ட ஆறணி வார்சடையான்.''. ''மின்னியல் செஞ்சடை மேல்விளங்கும் மதி.'', ''வான் மதியும் மல்கு செஞ்சடையான்.'', ''பிறைபெற்ற சடை யண்ணல்.'', ''வானமர் மதிபுல்கு சடை.'', ''முதிர்சடை இளமதி புனல்.'', ''ஒளிவிடு திங்களொடு...சேர் செஞ்சடை யான்.'', ''நிலா மதியும்...சடைக்கணிந்த தத்துவனார்.'', ''வாணிலா மதிபுல்கு செஞ்சடை.'', ''நிலவும் புனலுந் நிறை வாளரவும் இலகும் சடையார்.'', ''ஒளிரும் பிறையும்... சடைமேல் உடையான்.'', ''பிறைதான் சடைசேர்த்திய எந்தை.'', ''பிறையார் சடையாய்.'', ''முதிரும் சடையின் முடிமேல் விளங்கும் கதிர்வெண் பிறையாய்.'', ''நகுவான் மதியோ டரவும் புனலும் தருவார் சடையின் முடியாய்.'', ''மதிச்சடை மிசைலைத்த புனல்சூடி.'', ''சடையிலார் வெண் பிறையான்.'', ''குறைநிரம்பா வெண்மதியம் சூடிக் குளிர் புன் சடைதாழ.'', ''அலைவார்ழும் செஞ்சடையில் அரவும் பிறையும் அமர்வித்தீர்.'', ''சடைமேல் விளங்கும் பிறை.'', ''சடைகொள் முடிமேற் கோலமார் கொன்றை ஒளிரும்பிறை யொன்னுடையான்.'', ''மின்னும் சடைமேல் இள வெண்டிங்கள் விளங்கவே.'', ''வானமர் திங்களும் நீரும் மருவிய வார்சடையானை.'', ''நீர்கொண்ட சடைமுடி மேல் நீள்மதியம்...இலங்கவே.'', ''சடையிடை புக்கொடு யுளதங்கு வெள்ளம் வளர்திங்கள்.'', ''குளிர்தரு கங்கை தங்கு சடை மாடிலங்கு...ஒளிர்தரு திங்கள் சூடி.'', ''மண்டு கங்கையும் அரவும் மல்கிய வளர்சடை யதன்மேல் துண்ட வெண்பிறை அணிவர்.'', ''ஈர வார்சடை தன்மேல்

இளம்பிறை அணிந்த எம்பெருமான்.'', ''புன்சடை மேற் பிறையணி சிவன்.'', ''பால்நிற மதியம் படர்சடைச் சுடர் விடும்.'', ''சடையில் வெண்பிறை சூடி.'', ''நீரு லாவிய சடையிடை அரவொடு மதி.'', ''துன்று வார்சடைச் சுடர் மதி.'', ''பிறைநிலா வியசடை.'', ''கோணல் வெண்பிறைச் சடையனை.'', ''மதியமொடெழில் நுதன்மேல்...விரிகிளர் சடையினர்.'', ''வானிளம் மதிமல்கு வார்சடை,'', ''கங்கை சடையிற் கரந்தும் மதிசூடி.'', ''கங்கை திங்கள்...விரிசடையில் வைத்த விகிர்தன்.'', ''பிறையுறு செஞ்சடையார்.'', ''செஞ்சடை வெண்பிறையன்.'', ''இளமதி அணிசடை எந்தை.'', ''நிறைபுனல் பிறையொடு நிலவு நீள்சடை இறையவர்.'', ''படர்சடைப் பாற்படப் பாய்ந்த நீர் வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்.'', ''பனிமதி சடைமிசைச் சூடினார்.'', ''சடைமிசை விரிகதிர் மதியமும்.'', ''பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன்.'', ''கங்கையார் சடையிடைக் கதிர்மதி அணிந்தவன்.'', ''நீள் சடை மதியொடு பாம்பணி கருத்தனார்.'', ''மதிபொதி சடையினன்.'', ''நீள்சடைக் குறைவெண் டிங்கள் சூடி.'', ''திங்களும் கங்கையும் விம்மவே...சூழ்சடையர்.'', ''வெண் மதி மல்குபுல்கு வார்சடை.'', ''வானார் மாமதிசேர் சடையாய்.'', ''சடைமேல் நளிர்திங்களும் ஒன்ற வைத்து.'', ''நீர்மலியும் சடைமேல் நிரம்பா மதிசூடி.'', ''சடைமுடிமேல் பிறைக்கொண்ட பெருமானார்.'', ''பிறைநவின்ற செஞ்சடைகள் பின்தாழ.'', ''அங்கண்மதி கங்கை நதி... தங்குசடை.''. ''அந்தண்மதி செஞ்சடை.'', ''போழுமதி தாழுநதி பொங்கரவு தங்குபுரிபுன் சடையினன்.'', ''மாலை மதி...துன்றுசடை.'', ''வளர்புன் சடையின்மேல் மதியம் வைத்து.'', ''தேயுமதி செஞ்சடை இலங்கிட.'', ''இளமதி மலரொடு தலைபுல்கு சடைமேல் சடைவளர் புனல்புகக் கண்ட.'', ''மதியமும்...சடையிடை வைத்தஎம் கண்ணுதற் கபாலியார்.'', ''போழிள மதியமும் கங்கை என்னும் நெறிபடு குழலியைச் சடைமிசைச் சுலவி.'', ''கூனல் வெண்பிறை தவழ் சடையினர்.'', ''சடை ஒண்மதி அணிஉடையீரே.'',

"நீரினார் புன்சடை பின்தாழ நெடுவெண் மதிசூடி.", "தூமதி சூடிநீடு விரிபுன் சடைதாழ.", "நீர்மல்கு புன்சடை நின்றிலங்க நெடுவெண் மதிசூடி.", "பிறைவளர் செஞ்சடை பின்தயங்க.", "வெள்ளை மதியம் சூடிக் கமழ் புன்சடை தன்மேல்.", "வெண்ணில வஞ்சடை சேர வைத்து.", "பனித் திளந்திங்கட் பைந்தலை நாகம் படர் சடை முடியிடை வைத்தார்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வானுலாம் திங்கள் வளர்புன் சடையானே.", "முளைக்கதிர் இளம்பிறை மூழ்க வெள்ள நீர் வளைத்தெழு சடையினர்.", "சடையிடையே கமழும் தண்மதியானே.", "பெருந்தாழ் சடைமுடிமேற் பிறை சூடி.", "செஞ்சடைக் கற்றை முற்றத் திளநிலா எறிக்கும் சென்னி.", "சடையை மூழ்க முகிழ்நிலா எறிக்கும் சென்னி.", "சடையும் கொப்புளித்த திங்கள்.", "வெண்ணிலா மதியந் தன்னை விரிசடை மேவ வைத்து.", "கதிர்மதி யரவி னோடும் நீருடைச் சடையுள் வைத்த நீதி யார்.", "திங்களைக் கங்கை யோடு திகழ்தரு சடையுள் வைத்தார்.", "படரொளி சடையுள்ளாற் பாய்புனல் அரவி னோடு சுடரொளி மதியம் வைத்து.", "கமழ்தரு சடையி னுள்ளாற் கடும்புனல் அரவி னோடு தவழ்தரு மதியம் வைத்து.", "பிறைதரு சடையின் மேலே பெய்புனற் கங்கை தன்னை உறைதர வைத்த எங்கள் உத்தமன்.", "வார்சடை மதியம் வைத்து.", "பிறையுறு சடையர் போலும்.", "சந்திரற் சடையில் வைத்த சங்கரன்.", "வான மதியும் வாளரவும் புனலோடு சடைத் தானம் இதுவென வைத்துழல் வான்.", "படர்பொற் சடையும் பகுவாய் அரவும் பனி மதியும்.", "மாலைப் பிறைஒதுங்கும் சடையும்.", "விரி சடைமேல் வெள்ளித் தகடனை வெண்பிறை சூடி." "படலைச் சடைப் பரவைத் திரைக் கங்கைப் பனிப்பிறை.", "தேய்ந்த திங்கள் கமழ்சடையன்.", "பின்னும் செஞ்சடை மேற்பிறை சூடிற்று.", "நீண்ட சூழ்சடை மேலொர் நிலா மதி.", "வெண் திங்களார் கண்ணித் தொத்த சடையர்.", "திங்கள் தங்கிய செஞ்சடை.". "தண்மதி வளரும் பொற்

சடையார்.'', ''தண்மதி யோடுடன் புனலும் கொன்றையும் சூடும் புரிசடை.'', ''திங்களும் ஆறும் செஞ்சடை வைத்த அழகனார்.'', ''வெண்பிறை பற்றி யாடர வோடும் படைப் பெய்தான்.'', ''வளர் பிறை சூடியோர் சந்தமாகத் திருச் சடை சாத்துவான்.'', ''திங்களும் நுரைக்கும் கங்கையும் நுண்ணிய செஞ்சடை.'', ''தரித்த வன்கங்கை பாம்பு மதி யுடன் புரித்தபுன் சடையான்.'', ''பிறைக் கணிச்சடை எம் பெருமான்.'', ''நிமிர்சடை மேற்பிறை ஆறு சூடும் அடிகள்.'', ''கற்றைச் செஞ்சடைக் காய்கதிர் வெண்டிங்கள் பற்றிப் பாம்புடன் வைத்த பராபரன்.'', ''மதியும் வளர் செஞ்சடை முத்தர்.'', ''பனியாய் வெங்கதிர் பாய்படர் புன்சடை முனியாய்.'', ''கங்கை தங்கிய செஞ்சடை மேல் இளந்திங்கள் சூடிய தீநிற வண்ணனார்.'', ''வளர்மதியம் சடைக் கணிந்து.'', ''சந்திரனைமா கங்கைத் திரையால் மோதச் சடாமகுடத் திருத்துமே.'', ''படர்சடை மேல்ஒளி திகழப் பனிவெண் திங்கள் சூடுமே.'', ''திகழ்புன் சடை முடிமேல் திங்கள் சூடி.'', ''பிறை சூடும்சடை மேலோர் புனலும் சூடி.'', ''விரிசடைமேல் வெண் திங்கட் கண்ணிசூடி.'', ''நீருவாம் சடைமுடிமேல் திங்கள் ஏற்றார்.''; ''முற்றா மதிச் சடையார்.'', ''பிறையார்ந்த சடைமுடிமேற் பாம்பு கங்கை பிணக்கம்தீர்த்துடன் வைத்தார்.'', ''சுடர்த் திங்கட் சடையானை.''; ''பிறையரவக் குறுங்கண்ணிச் சடையினான்.'', ''சோமனையும் செஞ்சடைமேல் வைத்தார்.'', ''பொற்சடைகளவை தாழப் புரிவெண்ணூலர் நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி.'', ''எறிநீர்த் திங்கள் இருஞ் சடைமேல் வைத்துகந்தான்.'', ''வெள்ளத்தைச் செஞ்சடை மேல் விரும்பி வைத்தீர் வெண்மதியும் பாம்பும் உடனே வைத்தீர்.'', ''நற்பிறைதவழ் செஞ்சடை யினானை.'', ''பையாடரவம் மதியுடனே வைத்த சடையானை.'', ''பின்னு சடைமேற் பிறைசூடினான்.'', ''செஞ்சடை மேல் வெண்மதியம் சேர்த்தினான்.'', ''மின்னொத்த செஞ்சடை வெண்பிறையார்.'', ''செஞ்சடைக்கண் வெண்பிறை கொண்டணிந்தார்.'', ''படரும் சடைமேல் மதியாய்

போற்றி.'', ''முடியார் சடையின் மதியாய் போற்றி.'', ''செஞ்சடைக்கோர் வெண் திங்கள் சூடி னாரும்.'', ''வார்சடை மாசுண மணிந்து வளரும் பிள்ளைப் பிறையவன்.'',''பனிமதியஞ் சடையானை.'', ''வெண் திங்கள் சூடும் சென்னிச் சடையானை.'', ''செஞ்சடை மேல் திங்கள் சூடும்...கொற்றவனை.'', ''இளம்பிறையை முதிர்சடை மேல் வைத்தான்.'', ''மதிசடைமேல் வைத்தான்,''. ''நிலா அலைத்த பாம்பினொடு நிறைநீர்க் கங்கை ஆறலைத்த சடை முடியும்.'', ''விளங்கு திங்கள் வன்னியொடு விரிசடைமேல் மிலைச்சினான்.'', ''முடியார் சடைமேல் அரவம் மூழ்க மூரிப் பிறைபோய் மறையக் கண்டேன்.'', ''நிலா நிலவு செஞ்சடைமேல் நிறைநீர்க் கங்கை தரித்தானை.'', ''வானத் திளமதியும் பாம்பும் தன்னில் வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார்.'', ''நீரரவச் செஞ்சடைமேல் நிலாவெண் திங்கள் நீங்காமை வைத்தானை.'', ''ஏராரும் மதிபொதியும் சடையி னானை.'', ''இளமதியம் எருக்குவான் இழிந்த கங்கை சேடெறிந்த சடையானை.'', ''படர்சடைமேல்... பனிமதியும் வைத்த செல்வர்.'', ''நீரடங்கு சடைமுடிமேல் நிலாவும் கொண்டார்.'', ''நிலாமாலை செஞ்சடைமேல் வைத்த துண்டோ.'', ''நீரேறு செஞ்சடைமேல் நிலாவெண் திங்கள் நீங்காமை வைத்துகந்த நீதி யானே.'', ''தண்மதி யும் பாம்பும் நீரும் சடை முடிமேல் வைத்துகந்த தன்மை யானே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பிறங்கும் சடை மேற்பிறை சூடிற்றென்னே.'', ''திங்கள் தங்குடை.'' ''மதியம்...கங்கை நாகம் விரவுகின்ற சடையுடையீர்.'', ''பிறைக்கொள் சடைதாழ.'', ''புனற்சடை....பிறைத் துண்டம் முடி.'', ''மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த மணியே.'', ''தண்புனலும் வெண்மதியும் தாங்கிய செஞ் சடையன்.'', ''சடைமேற் பிறைதாங்கி.'', ''மதிசேர் சடை மாமுது குன்றுடையாய்.'', ''பிறையாரும் சடைஎம் பெருமான்.'', ''பிறையாரும் சடையாய்.'', ''மதிமிளிரும் வளர்சடையி னானை.'', ''படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்.'', ''துன்னுவார் சடைத்தூ மதியானை.'', ''பிறை

யுடைச் சடையனை", "மதிசேர் சடையானை.", "திங்கள் தங்கிய சடைஉடை யானை.", "வெண்மலைப் பிறை... முடித்த...செஞ்சடை யானை.", "திங்கள்...தங்கிய செஞ் சடை எந்தை.", "செஞ்சடைமேல் மதியும் அரவும் உடனே புல்கிய ஆரணன்.", "குளிர்தரு திங்கள் கங்கை...மிளிர்தரு புன்சடைமேல் உடையான்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "திருச்சடைமேல் வாகை மாமதிப் பிள்ளை பாடி." என்று மாணிக்கவாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 119-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தலைவனாகிய வன்மீக நாதன் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, திருத்தொண்டர்கள் அந்த வார்த்தை களைக் கூறி, "அடியேங்களுடைய தலைவனாராகிய வன்மீக நாதருடைய திருவருள் அடியேனுக்குத் திருவாய் மலர்ந் தருளிச் செய்திருந்த இயல்பு இதுவாகுமானால் நம்முடைய தலைவனாராக விளங்குபவர் அந்த வன்மீக நாதரே அல்லவா?" என்று எண்ணும் நல்ல எண்ணத்தால், தேவர்கள் வாழும் நாடாகிய சொர்க்கம் இறங்கி வந்தது என்று சொல்லும் வண்ணம் தொண்டர்கள் தம்மை எதிர்கொண்டு வரவேற்க, அவர்களோடு சுந்தர மூர்த்தி நாயனார் எழுந்து புறப்பட்டார்.' பாடல் வருமாறு:

**"தம்பிரான் அருள்செய்யத் திருத்தொண்டர் அதுசாற்றி**
**'எம்பிரானார் அருள்தான் இருந்தபரி சிது வானால்**
**நம்பிரா னார்ஆவார் அவரன்றே?' எனும் நலத்தால்**
**உம்பர்நா டிழிந்ததென எதிர்கொள்ள உடன் எழுந்தார்."**

தம்பிரான்-தலைவனாகிய வன்மீக நாதன். அருள் செய்ய-சுந்தர மூர்த்தி நாயனாரை நீங்கள் சென்று வரவேற்பீர்

களாக என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. த்: சந்தி. திருத்தொண்டர்-திருவாரூரில் வாழும் திருத்தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அது-அந்தச் செய்தியை. சாற்றி-தம்மிடம் கூற; எச்சத்திரிபு. எம்பிரானார்-அடியேங்களுடைய தலைவனாராகிய வன்மீக நாதருடைய. அருள்தான்-திருவருள்; தான்: அசை நிலை. இருந்த-அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்திருந்த. பரிசு-இயல்பு. இது ஆனால்-இது ஆக இருக்குமானால். நம்-நம்முடைய. பிரானார் ஆவார்-தலைவராக விளங்குபவர். அவர்-அந்த வன்மீக நாதர். அன்றே-அல்லரோ; திணை மயக்கம். எனும்-என்று எண்ணும்; இடைக்குறை. நலத்தால்-நல்ல எண்ணத் தால். உம்பர்-தேவர்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். நாடு-உலகமாகிய சுவர்க்க லோகமே. இழிந்தது-இறங்கி வந்தது. என-என்று விளக்கும் வண்ணம்; இடைக்குறை. எதிர்கொள்ள-தொண்டர்கள் தம்மை எதிர்கொண்டு வரவேற்க. உடன்-அந்தத் திருத்தொண்டர்களோடு. எழுந் தார்-சுந்தர மூர்த்தி நாயனார் எழுந்து புறப்பட்டார்.

அடுத்து உள்ள 120-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருவாரூரில் உள்ள திருமாளிகைகளிலும் மண்டபங் களிலும் பக்கத்தில் பக்கத்தில் பெரிய துவசங்கள் நெருங்கி அசைய, நட்டு வைத்த கால்களின் மேல் நீண்ட தோரணங் களும், தழைகளைக் கொண்ட பாக்கு மரங்களும், மாவிலை களைக் கட்டிய மாலைகளும், நீண்ட இலைகளைப் பெற்ற வாழை மரங்களும், நீர் நிரம்பிய பொன்னாற் செய்யப் பெற்ற பூரண கும்பங்களும், வரிசையாக உள்ள நீண்ட மாணிக்கங்களைப் பதித்த திருவிளக்குகளும், உயரமாக உள்ள திருமாளிகைகளின் வாயில் ஒவ்வொன்றிலும் வரிசை யாகத் தொண்டர்கள் வைத்தார்கள்.' பாடல் வருமாறு:

**"மாளிகைகள் மண்டபங்கள் மருங்குபெருங்**
**கொடிநெருங்கத்**
**தாளின்நெடுந் தோரணமும் தழைக்கமுகும்**
**குழைத்தொடையும்**

**நீளிலைய கதலிகளும் நிறைந்தபசும் பொற்ற
சும்பும்.
ஒளிநெடு மணிவிளக்கும் உயர்வாயில் தொறும்
நிரைத்தார்.''**

மாளிகைகள்-திருவாரூரில் உள்ள மாளிகைகளிலும். மண்டபங்கள்-மண்டபங்களிலும். மருங்கு-பக்கத்தில் பக்கத்தில். பெரும்-பெரிய. கொடி-துவசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்க-நெருக்கமாக இருந்து அசைய. த்: சந்தி. தாளின்—நட்டு வைத்த மூங்கிலிலும் மரத்தினால் செய்த கால்களின் மேலும்; ஒருமை பன்மை மயக்கம். நெடும்-நீளமாக இருக்கும். தோரணமும்-தோரணங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். தழை-இலைகளை உடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கமுகும்-பாக்கு மரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். குழை-மாவிலைகளைக் கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். தொடையும்-மாலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். நீள்-நீளமான. இலைய-இலைகளைப்பெற்ற. கதலிகளும்-வாழை மரங்களையும். நிறைந்த-நீர் நிரம்பிய. பொன்-தங்கத்தால் செய்யப் பெற்ற. தசும்பும்-பூரண கும்பங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஒளி-வரிசையாக உள்ள. நெடு-நீண்ட. மணி-மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். விளக்கும்-திருவிளக்குக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். உயர்-உயரமாக நிற்கும் திருமாளிகைகளின்; வினையாலணையும் பெயர். வாயில்தொறும்-ஒவ்வொரு வாசலிலும். நிரைத்தார்-தொண்டர்கள் வரிசை வரிசையாக வைத்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 121-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'ஒளி வீசும் மாணிக்கங்களைப் பதித்த திருமாளிகைகளில் உள்ள திண்ணைகளில் தூய்மையான நறுமணம் கமழும் சந்தனத்தை அழகுபெறத் தடவிக் குற்றம் இல்லாத நெற் பொரிகளையும், மகளிர் உரலில் இடித்துச் செய்த

பொற்சுண்ணத்தையும், குளிர்ச்சியைப் பெற்ற முத்துக்களையும், நவரத்தினங்களையும் பரப்பி வைத்து, மகரந்தப்பொடி உள்ள மலர்களைத் தொடுத்தல் அமைந்த மாலைகளையும், குளிர்ச்சியான பந்தல்களையும் அமைத்துத் திருவாரூரில் உள்ள தெருக்களில் நுட்பமான புழுதி அடங்கும் வண்ணம் பன்னீரை மிகுதியாகத் தொண்டர்கள் தெளித்து வைத்தார்கள்.' பாடல் வருமாறு:

**"சோதிமணி வேதிகைகள் தூநறும்சாந் தணி நீவிக்**
**கோதில்பொரி பொற்சுண்ணம் குளிர்தரள மணிபரப்பித்**
**தாதிவர்பூந் தொடைமாலைத் தண்பந்தர் களும்சமைத்து**
**வீதிகள்நுண் துகள்அடங்க விரைப்பனிநீர் மிகத்தெளித்தார்."**

சோதி-ஒளி வெள்ளத்தை வீசும். மணி-மாணிக்கங்களைப் பதித்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வேதிகைகள்-திருவாரூரில் உள்ள திருமாளிகைகளில் இருக்கும் திண்ணைகளில். தூ-தூய்மையாக உள்ள. நறும்-நறுமணம் கமழும். சாந்து-அரைத்த சந்தனத்தை. அணி-அழகு பெற. நீவி-துடைத்து. க்: சந்தி. கோது-ஒரு குற்றமும். இல்-இல்லாத; கடைக்குறை. பொரி-நெற் பொரிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். பொற் சுண்ணம்-பெண்மணிகள் உரலில் இடித்துப் பண்ணிய பொற் சுண்ணத்தையும்: "அம்மானைப் பாடி ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.", "செம்பொன் செய சுண்ணம் இடித்தும் நாமே.", "ஏய்ந்த பொற் சுண்ணம் இடித்தும் நாமே.", "பாடிப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.", "முக்கணப்பற் காடப் பொற் சுண்ணம் இடித்தும் நாமே.", "மகிழ்ந்துபொற் சுண்ணம் இடித்தும் நாமே.", "ஆடக மாமலை அன்ன கோவுக் காடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.", "பாடிப் பாடி ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.", "தில்லை வாணனுக்கே

ஆடப் பொற்சுண்ணம் இடித்தும் நாமே.'', ''அத்தன் கருணையொ டாடஆட ஆடப் பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''அம்பலத் தாடினானுக் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''மடந்தை நல்லீர் பாடிப் பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''மங்கை நல்லீர் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''கொங்கை பொங்கப் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''பானற் றடங் கண் மடந்தைநல்லீர் பாடிப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''செம்பொன்செய் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''நஞ்சுண்டல் பாடிப் பொற்றிருச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''நாதற்குச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஈசற்குச் சுண்ணம் இடித்தும் நாமே.'', ''ஆதியும் அந்தமும் ஆயினாருக் காடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே.'' என்று திருவாசகத்தில் வருவனவற்றைக் காண்க. குளிர் - குளிர்ந்த. தரள - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மணி-நவரத்தினங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: மாணிக்கம், பவளம், புருடராகம், பதுமராகம், கோமேதகம், வஜ்ரம், வயிடூரியம், முத்து, மரகதக்கல் என்பவை. பரப்பி-பரப்பி வைத்து. த்: சந்தி. தாது-மகரந்தப் பொடி. இவர்-உள்ள. பூ-மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி. தொடை-தொடுத்தலைப் பெற்ற. மாலை-மாலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தண்-குளிர்ச்சியைக் கொண்ட. பந்தர்களும்-தண்ணீர்ப் பந்தல்களையும். சமைத்து-அமைத்து வைத்து. வீதிகள்-தெருக்களில் உள்ள. நுண்-நுட்பமான. துகள்-புழுதி. அடங்க-அடங்கும் வண்ணம். விரை-நறுமணம் கமழும். ப்: சந்தி. பனி நீர்-பன்னீரை. மிக-மிகுதியாக. ந்: சந்தி. தெளித்தார் - தொண்டர்கள் தெளித்து வைத்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 122-ஆம் பாட்டின் கருத்து வருமாறு:

'திருவாரூரில் வாழும் பெண்மணிகள் மங்கலமான இசைப் பாடல்களைப் பாடவும், மேகத்தைப் போல

முழங்கும் வாத்தியங்கள் முழக்கத்தை எழுப்பவும், சிவந்த கயல் மீன்களைப் போன்ற கண்களைப் பெற்றவர்களும், திருமேனி முழுதும் அணிகலன்களை அணிந்த நடனப் பெண் மணிகள் ஒவ்வொரு திண்ணையிலும் நடனத்தைப் புரியவும், அடியேங்களுடைய தலைவனாகிய வன்மீக நாதன் கோயில் கொண்டருளியிருக்கும் திருவாரூர் நகரத்தில் வாழும் மக்கள் நம்பி யாரூரனாகிய சுந்தர மூர்த்தியை அந்த நகரத்துக்கு முன்னால் அழகு பொங்கும் திருமதிவினுடைய நீளமான அழகிய வாசலுக்கு வெளியில் சேர வந்து எதிர்கொண்டு வரவேற்றார்கள்.' பாடல் வருமாறு:

**" மங்கலகீதம்பாட மழைநிகர்தூ ரியம்முழங்கச்**
**செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறும் நடம்பயில**
**நங்கள்பிரான் திருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்**
**பொங்கெயில்நீள் திருவாயிற் புறம்உறவந் தெதிர்கொண்டார்."**

மங்கல-திருவாரூரில் வாழும் பெண்மணிகள் மங்கல மான. கீதம்-இசைப் பாடல்களை; ஒருமை பன்மை மயக்கம். பாட-பாடவும். மழை-மேகத்தை. நிகர்-ஒத்து முழங்கும். தூரியம்-நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், யாழ், வீணை, முரசு, சல்லரி, கரடிகை, பேரிகை, உடல், முகவீணை, தம்புரா, தபேலா, இடக்கை, தமருகம் முதலிய வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். முழங்க-முழக்கத்தை எழுப்பவும். ச்: சந்தி. செம்-சிவந்த. கயல்-கயல் மீன்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். கண்-கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். முற்று-தங்களுடைய திருமேனிகள் முழுதும். இழையார்-அணிகலன்களை அணிந்து நடனமாடும் பெண்மணிகள்; ஒருமை பன்மை மயக்கம். அந்த அணிகலன்களாவன: சுட்டி, கம்மல், வைர மூக்குத்தி, மாட்டல், ஜிமிக்கிகள், அட்டிகை, வங்கி, காசு மாலை, முத்து மாலை, நவரத்தின மாலை, கைத்தங்கக்,

காப்புக்கள், கங்கணங்கள், ஒட்டியாணம், புல்லாக்கு, தோடுகள், கால் காப்புக்கள், சிலம்புகள், கைவிரல் மோதிரங்கள், காலாழிகள், பீலாழிகள், மெட்டிகள் முதலியவை. தெற்றிதொறும - ஒவ்வொரு திருமாளிகையில் உள்ள ஒவ்வொரு திண்ணையிலும். நடம்-நடனத்தை. பயில-புரியவும். நங்கள்-அடியேங்களுடைய; இது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. பிரான்-தலைவனாகிய வன்மீக நாதன் திருக்கோயில் கொண்டருளியிருக்கும். திருவாரூர்-திருவாரூர் என்னும். நகர்-பெரிய தலத்தில். வாழ்வார்-வாழும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். நம்பியை-ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனாரை. முன்-திருவாரூருக்கு முன்னால். பொங்கு-அழகு பொங்கியிருக்கும். எயில்-திருமதிலினுடைய. நீள்-உயரமான. திரு-அழகிய. வாயில்-வாசலினுடைய. புறம்-வெளியில். உற-சேர. வந்து-திருவாரூரில் வாழும் தொண்டர்கள் வந்து. எதிர்கொண்டார்-சுந்தர மூர்த்தி நாயனாரை எதிர் கொண்டு வரவேற்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பெண்மணிகளின் கண்களுக்குக் கயல் மீன்கள் உவமை: ''கயலார் தடங்கண்ணி.'', ''கயலார் தடங்கண் அஞ்சொல் நல்லார்.'', ''கயலினிணைக் கண்ணாள்.'', ''கயலார் கருங் கண்ணி.'', ''கயலார் கண்ணார்.'', ''கயலன அரிநெடுங் கண்ணி.'', ''கயல சேல கருங்கண்ணியர்.'', ''கயல்நெடுங் கண்ணி னார்கள்.'', ''கயலன வரிநெடுங் கண்ணி யோடு.'', ''ஓர்வரு கண்கள் இணைக்கயலே.'', ''உமையவள் கண்கள் இணைக்கயலே.'', ''அங்கயற் கண்ணி.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்.'' என்று மாணிக்க வாசகரும், ''கயலியல் கண்ணி.'' என்று கபிலதேவ நாயனாரும், ''கயலேர் நெடுங்கண்.'' ''செருக்கய லன்ன சேயரி நெடுங்கண்.'', ''கயல்புரை கண்ணி.'', ''செருக்கயல் உண்கட் சீதையை.'', ''கயலேர் கண்ணி துயிலேற் றெழவே.'', ''கயல்மிகு கண்ணியைக் கவவுப் பிணி நீக்கி.'' (**பெருங்கதை**, 1.40, 359, 42: 131, 47: 235,

55: 109, 2.11: 66, 5.9:99) என்று கொங்கு வேளிரும், "கயல் பொரு விழியொடு.", (திருவவதாரப் படலம், 75) என்று கம்பரும் பாடியவற்றைக் காண்க.

முற்றிழையார்: "முற்றிழை மகளிர்." (பெருங்கதை, 1,47: 253) எனக் கொங்கு வேளிர் பாடியதைக் காண்க.

அடுத்து வரும் 123-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு திருவாரூரில் வாழும் தொண்டர்கள் தம்மிடம் வந்து தம்மை எதிர்கொண்டு வரவேற்றுத் தம்மைப் பணிகிறவர்களாகிய அந்தத் தொண்டர்களுக்கு முன்னால் வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய கைகளை அஞ்சலியாகக் குவித்துக் கும்பிட்டு விட்டு, எழுந்தருளித் தம்முடைய திருவுள்ளம் மகிழ்ச்சியை அடைய அந்தத் தலத்தில் உள்ள ஒரு தெருவின் வழியே எழுந்தருளு பவராகித் தம்மை வரவேற்ற திருத்தொண்டர்களைப் பார்த்து, "எந்தை இருப்பதும் ஆரூர், அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்" என்ற தொடர் வரும் செய்யுளின் ஓசை நன்றாக அமைந்தவையும் உரிய பண்கள் அமைந்தவையும் ஆகிய பல திருப்பதிகங்களைப் பாடியருளித் தம்முடைய தலைவனாகிய வன்மீக நாதனுடைய ஆலயத்தில் உள்ள அழகிய கோபுர வாசலை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

**"வந்தெதிர் கொண்டு வணங்கு வார்முன்**
**வன்றொண்டர் அஞ்சலி கூப்பி வந்து**
**சிந்தை களிப்புற வீதி யூடு**
**செல்வார் திருத்தொண்டர் தம்மை நோக்கி**
**'எந்தை இருப்பதும் ஆரூர் அவர்**
**எம்மையும் ஆள்வரோ கேளீர்.' என்னும்**
**சந்த இசைப்பதி கங்கள் பாடித்**
**தம்பெரு மான்திரு வாயில் சார்ந்தார்."**

வந்து-அவ்வாறு திருவாரூரில் வாழும் தொண்டர்கள் தம்மிடம் வந்து. எதிர்கொண்டு-தம்மை எதிர்கொண்டு

வரவேற்று. வணங்குவார்-பணிகிறவர்களாகிய அந்தத் தொண்டர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். முன்-முன்னால்; இடமுன். வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார். அஞ்சலி-தம்முடைய கைகளை அஞ்சலியாக. கூப்பி-குவித்துக் கும்பிட்டு. வந்து எழுந்தருளி. சிந்தை-தம்முடைய திருவுள்ளம். களிப்பு-மகிழ்ச்சியை. உற-அடைய. வீதியூடு-திருவாரூரில் உள்ள ஒரு தெருவின் வழியே. செல்வார்-எழுந்தருளுபவராகிய அந்த நாயனார்; முற்றெச்சம். திருத்தொண்டர் தம்மை-தம்மை வரவேற்ற திருத்தொண்டர்களை; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. நோக்கி-பார்த்து. 'எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்' என்னும் 'எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீ'-'எந்தை இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்' என்று முடியும். சந்த-செய்யுள் ஓசை நன்றாக அமைந்த. இசை-உரிய பண்கள் அமைந்தவையும்; ஆகுபெயர். இசை: ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பதிகங்கள்-பல திருப்பதிகங்களை. பாடி - பாடியருளி. தம்-தம்முடைய. பெருமான் - தலைவனாகிய வன்மீக நாதனுடைய ஆலயத்தில் விளங்கும்; ஆகுபெயர். திரு-அழகிய.வாயில்-கோபுர வாசலை. சார்ந்தார்-அந்த நாயனார் அடைந்தார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட திருப்பதிகம் காந்தாரப் பண் அமைந்தது. அதில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

'' கரையும் கடலும் மலையும் காலையும்
மாலையும் எல்லாம்
உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திர
லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர்
தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும்
ஆள்வரோ கேளீர். ''

இந்தத் திருப்பதிகத்தை அல்லாமல் அந்த நாயனார் இந்தளப் பண்ணிலும் ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி யிருக்கிறார். அதில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

'' இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ
டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியான்
நோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர் செம்பொனும்
மணியும் தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர் அப்பனே
அஞ்சி னேனே. ''

கொல்லிப் பண் அமைந்த திருவாரூரைப் பற்றிய திருப் பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

'' குருகுபா யக்கொழும் கரும்புகள் நெரிந்தசா
றருகுபா யும்வயல் அந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
துருகுமா றும்இவை உணர்த்தவல் லீர்களே. ''

கொள்ளிக்கௌவாணப் பண்ணில் அவர் பாடியருளிய திருப்பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

'' பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்
பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன்
போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை மூர்க்கனேன்
எத்தனைநாட் பிரிந்திருக்கேன் என்ஆரூர்
இறைவனையே. ''

தக்கேசிப் பண்ணில் அவர் பாடியருளிய திருப்பதிகத்தில் உள்ள முதற் பாசுரம் வருமாறு:

'' பொன்னும் மெய்ப்பொருளும்தரு வானைப்
போக மும்திரு வும்புணர்ப் பானைப்

பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாம்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மா னைஎளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே.''

புறநீர்மைப் பண்ணில் அவர் பாடியருளிய திருப் பதிகத்தில் வரும் ஒரு பாசுரம் வருமாறு:

''அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம்சொல்லி
முந்தி எழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே.''

செந்துருத்திப் பண்ணில் அவர் பாடியருளிய திருப் பதிகத்தில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

''மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை
வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால்
மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல்
சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து
போதீரே.''

பிறகு உள்ள 124-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'ஆகாயத்தை அளாவ உயரமாக விளங்கும் அழகிய ஆலயத்தின் முன் உள்ள கோபுர வாசலைப் பார்த்துச் சுந்தர மூர்த்தி நாயனார் தரையில் படியுமாறு தலை, கைகள், முழங்கால்கள், பாதங்கள், மூக்கு என்னும் ஐந்து உறுப்புக்களாலும் வன்மீக நாதரைப் பணிந்து விட்டு, பிறகு தேன் நிரம்பியிருக்கும் கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களைக் கட்டி நறுமணம் கமழும் மாலைகளைத் தொங்க விட்டிருக்கும் தேவாசிரயன் என்னும் காவணத்தை

வணங்கித் தொழுது, தம்முடைய திருமேனியையும் உயிரையும் உருக்கும் வண்ணம் புரியும் பக்தியோடு தம்முடைய தலையின்மேல் கூப்பிக் கும்பிட்ட செந்தாமரை மலர்களைப் போன்ற திருக்கரங்களோடும், தூய நறுமணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்தவனாகிய வன்மீக நாதனுடைய மூலஸ்தானத்தைச் சுற்றியிருக்கும் அழகிய ஆலயத்தின் கோபுர வாசலுக்குள் அந்த நாயனார் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"வானுற நீள்திரு வாயில் நோக்கி
மண்ணுற ஐந்துறுப் பால்வ ணங்கித்
தேனுறை கற்பக வாச மாலைத்
தேவா சிரயன் தொழுதி றைஞ்சி
ஊனும் உயிரும் உருக்கும் அன்பால்
உச்சிக் குவித்தசெங் கைகளோடும்
தூநறும் கொன்றையன் மூலட் டானம்
சூழ்திரு மாளிகை வாயில் புக்கார்."

வான்-ஆகாயத்தை. உற-அளாவ. நீள்-உயரமாக விளங்கும். திரு-அழகிய. வாயில்-ஆலயத்திற்கு முன்னால் உள்ள கோபுர வாசலை. நோக்கி-பார்த்து. மண்-தரையில். உற-படியுமாறு. ஐந்து உறுப்பால்-தலை, கைகள், முழங்கால்கள், பாதங்கள், மூக்கு என்னும் ஐந்து அங்கங்களாலும்; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி-சுந்தர மூர்த்தி நாயனார் வன்மீக நாதனைப் பணிந்துவிட்டு. இது பஞ்சாங்க நமஸ்காரம் எனப்படும். த்: சந்தி. தேன் உறை-தேன் நிரம்பியிருக்கும். கற்பக-தேவலோகத்தில் உள்ள கற்பக தருவில் மலர்ந்திருக்கும். வாச-நறுமணம் கமழும். மாலை-மலர்களைக் கட்டிய மாலைகளைத் தொங்க விட்டிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தேவாசிரயன்-தேவாசிரயன் என்னும் காவணத்தை. தொழுது-வணங்கிவிட்டு உள்ளே நுழைந்து. இறைஞ்சி-அந்தக் காவணத்தில் அமர்ந்திருக்கும் தொண்டர்களை வணங்கி. ஊனும்-தம்முடைய திருமேனியையும். உயிரும்-தம்முடைய

உயிரையும். உருக்கும்-உருகச் செய்யும். அன்பால்-பக்தி யோடு; உருபு மயக்கம். உச்சி-தம்முடைய தலையின்மேல். குவித்த-கூப்பிக் கும்பிட்ட. செங்கைகளோடும்-செந்தாமரை மலர்களைப் போன்ற கரங்களோடும். தூ-தூய்மையான. நறும்-நறுமணம் கமழும். கொன்றையன்-கொன்றை மலர்மாலையை அணிந்தவனாகிய வன்மீக நாதனுடைய. மூலட்டானம்-மூலஸ்தானத்தை. சூழ்-சுற்றியிருக்கும். திரு-அழகிய. மாளிகை-ஆலயத்தின் முன்னால் உயரமாக நிற்கும். வாயில்-கோபுர வாசலுக்குள். புக்கார்-அந்த நாயனார் நுழைந்தார்.

நறும் கொன்றை: ''நாற்றம் மிக்க கொன்றை.'', ''கடியார லங்கற் கொன்றை.'', ''கடியார் கொன்றைச் சுரும் பின்மாலை.'', ''கடிகொள் கொன்றை.'', ''கமழ்கொன்றை யந் திருமலர்.'', ''கொங்கணி நறுங்கொன்றைத் தொங் கலன்.'', ''பூந்தாம நறுங்கொன்றை.'', ''கந்தமா மலர்க் கொன்றை.'', ''நறும் கொன்றைத்தார்.'', ''வெறியார் மலர்க் கொன்றையந்தார்.'', ''வம்பார் கொன்றை.'', ''விரையினார் கொன்றை.'', ''கடிபடு கொன்றை நன் மலர்.'', ''வெறியுலாம் கொன்றையந் தாரினான்.'', ''விரையார் கொன்றையினாய்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''நாறுபூங் கொன்றை வைத்தார்.'', ''கடிகமழ் கொன்றை யானே.'', ''பூந்தார் நறும்கொன்றை மாலையை வாங்கிச் சடைக்கணிந்து.'', ''நாறு கொன்றை யும்.'', ''நாறுபூங் கொன்றை'', ''கார்கொள் கொன்றைக் கடிமலர்க் கண்ணியான்.'', ''காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடி.'', ''பொன்நலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்.'', ''காரார் கமழ்கொன்றைக் கண்ணி போலும்.'', ''கடிவிளங்கு கொன்றையந் தாரார் போலும்.'', ''கடியார் தளிர்கலந்த கொன்றை மாலை.'', ''பொன்நலத்த நறுங் கொன்றைச் சடையினான்.'', ''வம்புலவு கொன்றைச் சடையாய்.'', ''வண்டிரைக்கும் நறுங்கொன்றைத் தாராய் நீயே.'', ''வெறியார் மலர்க்கொன்றை சூடி னானை.'', ''விரைகமழும் மலர்க்கொன்றைத் தாரான் கண்டாய்.'',

"பொன்காட்டக் கடிக்கொன்றை.", "வெறிவிரவு மலர்க் கொன்றை.", "நாறு பூங்கொன்றை முடியார்.", "கடி மலிந்த மலர்க்கொன்றைச் சடையான்.", "கந்தமலர்க் கொன்றையணி சடையான்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "வாசத்தி னார்மலர்க் கொன்றை யுள்ளார்.", "விரையார் கொன்றையினாய்.", "மருவார் கொன்றை மதிசூடி.", "விரைசெய் மாமலர்க் கொன்றையினானை.", "பொன்னிலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந் திலங்க." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும் பாடியருளிய வற்றைக் காண்க.

உருக்கும் அன்பு: "உண்ணின் றுருக உவகை தருவார்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "உருகு மனத் தடியவர்கட் கூறும் தேனை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி அன் பெனும் ஆறு கரையது புரள." என்று மாணிக்கவாசகரும், "நீராளமாய் உருக உள்ளன்பு தந்ததும்.", "அன்பினால் உருகி விழிநீர் ஆறாக.", "கனிவுபெற உள்ளுருக்கி.", "நெக்குநெக் குருகிப் பணிந்தெழுந் திருகை கூப்பிக் கண்ணாறு கரைபுரள நின்ற அன்பரை.", "உடல்குழைய என்பெலாம் நெக்குருக விழிநீர்கள் ஊற்றென வெதும்பி ஊற்ற...கடல்மடை திறந்தன்ன அன்பர் அன்புக் கெளியை.", "என்பெலாம் நெக்குடைய ரோமம் சிலிர்ப்ப உடல் இளகமன தழலின் மெழுகாய் இடையறா துருக வரு மழைபோல் இரங்கியே இருவிழிகள் நீர்இறைப்ப அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்கு.", "நீராள மாயுருகிக் கண்ணீர் சோர நெட்டுயிர்த்து மெய்ம்மறந்தோர் நிலையாய் நிற்பேன்.", "கரைந்து கரைந்துருகிக் கண்ணீர் ஆறாக.", "முகமெலாம் கணீர்முத் தரும்பிடச் செங்கை முகிழ்ப்ப அகமெலாம் குழைந்து.", "என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்து கரைந் தன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே.", "அன்பாற்கரைந்து கண்ணீர் ஆறுகண்ட புண்ணியருக்கு.", "உள்ளம் குழைய உடல்குழைய உள்ளிருந்த கள்ளம் குழைய

என்று காண்பேன் பராபரமே.'' என்று தாயுமானவரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 125-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பாம்புப் புற்றைத் தான் எழுந்தருளும் இடமாகக் கொண்டிருக்கும் பழையவனை, திருவாரூர்ப் பூங்கோயிலை விரும்பி எழுந்தருளியிருப்பவனை, யாவருக்கும் பற்றுவதற் குரிய இடமாக விளங்கும் பரம் பொருளாக விளங்குபவனை, பார்வதியைத் தன்னுடைய வாமபாகத்தில் வைத்தருளி யிருப்பவனை, தாமரை மலரின்மேல் அமர்ந்திருக்கும் பிரம தேவன் தன்னை அருச்சனை செய்ய அவனுக்குத் திரு வருளை வழங்கிய தலைவனைத், தரையின்மேல் விழுந்து வணங்கி நல்ல செந்தமிழில் வல்லவராகியவரும் திருநாவ லூரில் திருவவதாரம் செய்தருளிய அரசரும் ஆகிய சுந்தர மூர்த்தி நாயனார் இந்த மனிதத் திருமேனியால் பெற்ற பல வகையான நன்மைகளின் இயல்பை உண்மையாகப் பெறும் பேற்றை அடைந்தார்.' பாடல் வருமாறு:

'' புற்றிடம் கொண்ட புராதனனைப்
 பூங்கோயில் மேய பிரானை யார்க்கும்
பற்றிடம் ஆய பரம்பொருளைப்
 பார்ப்பதி பாகனைப் பங்கயத்தான்
அர்ச்சனை செய்ய அருள்புரிந்த
 அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி
நற்றமிழ் நாவலர் கோன்உடம்பால்
 நன்மையின் தன்மையை மெய்ம்மைபெற்றார். ''

புற்று-பாம்புப் புற்றை. இடம்-தான் எழுந்தருளும் இடமாக, கொண்ட-கொண்டிருக்கும். புராதனனை-பழைய வனை. ப்: சந்தி. பூங்கோயில்-திருவாரூரில் உள்ள பூங் கோயிலை. மேய-விரும்பி எழுந்தருளிய. பிரானை - தலைவனை. யார்க்கும்-யாவருக்கும். பற்று-பற்றுக்கோ டாகிய. இடம் ஆய-இடமாக விளங்கிய. பரம் பொருளை- எல்லாருக்கும் மேலாக விளங்கும் செல்வத்தைப்

போன்றவனை. ப்: சந்தி. பார்ப்பதி-பார்வதியை. பாகனை-தன்னுடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்திருப்பவனை. ப்: சந்தி. பங்கயத்தான்-தாமரை மலர்மேல் அமர்ந்திருக்கும் பிரமதேவன். அர்ச்சனை-பழங்காலத்தில் அருச்சனை. செய்ய-புரிய. அருள்-அவனுக்குத் தன்னுடைய திருவருளை. புரிந்த-வழங்கிய. அண்ணலை-தலைவனும் ஆகிய வன்மீக நாதனை. மண்மிசை-தரையின்மேல். வீழ்ந்து-விழுந்து. இறைஞ்சி-வணங்கி. நற்றமிழ்-நல்ல செந்தமிழில் வல்லவராகிய; ஆகுபெயர். நாவலர்-திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவராகிய. கோன்-அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார்;ஒருமை பன்மை மயக்கம். உடம்பால்-தாம் பெற்ற மனிதத் திருமேனியால். நன்மையின்-பெற்ற நன்மைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தன்மையை-இயல்பை. மெய்ம்மை-உண்மையாக. பெற்றார்-பெறும் பேற்றை அடைந்தார்.

புராதனன்: ''காலமும் நாள்கள் ஊழி படையாமுன் ஏக உருவாகி.'', ''முந்தையார் முந்தி யுள்ளார்.'', ''முன்பின் முதல்வன்.'', ''அலங்கல் சேர்சடை ஆதி புராணனை.'', ''முன்னை ஞான முதல்தனி வித்தினை'', ''எல்லாம்முன் தோன்றாமே தோன்றினான்.'', ''முன்னே தானாம்.'', ''முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி.'', ''முந்தி இருந்தாயும் நீயே.'', ''மூத்தவனாய் உலகுக்கு முந்தினானே.'', ''முன்னவன் காண்.'', ''முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி.'', ''முன்பாகி நின்ற முதலே போற்றி.'', ''ஆதி புராணனாய் நின்றாய் போற்றி.'', ''மூத்தவனை வானவர்க்கும்.'', ''பண்டானைப் பரந்தானை.'', ''முந்தைகாண்.'', ''மூவாது யாவர்க்கும் மூத்தான்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''முன்னவன் எங்கள் பிரான்.'', ''முந்தியாகிய மூவரின்மிக்க மூர்த்தியை.'', ''முன்னை நம்பி.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''முன்னோன் காண்க.'', ''சொற்பதம் கடந்த தொல்வோன் காண்க.'', ''புரம்பல எரித்த புராண போற்றி.'', ''போற்றி

போற்றி புராண காரண.'', ''முன்னவனே.'', ''பழைதரு மாபரன்.'', ''முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளே.'', ''முன்னானை மூவர்க்கும்.'', ''முந்திய முதல் நடு இறுதியும் ஆனாய்.'', ''முன்புமாய்ப் பின்பும் முழுது மாய்ப் பரந்த முத்தனே.'', ''மூத்தானே மூவாத முதலானே.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பின்பு உள்ள 126-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் பக்தி பெருகி எழ, தம்முடைய திருவுள்ளம் உருக்கத்தை அடைந்து தடுமாற, எட்டு அங்கங்கள் தரையில் படிந்து வணங்கியும், பிறகு ஐந்து உறுப்புக்களால் பணிந்தும் வன்மீக நாதருடைய சந்நிதியில் முறைப்படி அவ்வாறு பணிந்து முடிவு இல்லாத விருப்பம் முதிர்ச்சியை அடையச் சிறந்து நின்று, நல்ல இந்திரியங் களாகிய மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்தும் ஒன்றுபட்டுத் தலைவனாகிய வன்மீக நாதனுடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை அடையப் பெற்ற பேரானந்த வெள்ளத்தில் முழுகி, சிறிது நேரம் அந்த வெள்ளத்தில் ஆழ்ந்து நின்று, பிறகு இனிய பண் அமைந்ததும், சொற்சுவை பொருட்சுவை என்ற வளப்பத் தைப் பெற்றதும் ஆகிய செந்தமிழ் மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருள.' பாடல் வருமாறு:

''அன்பு பெருக உருகிஉள்ளம் அலைய அட்
டாங்கபஞ் சாங்கமாக
முன்பு முறைமையி னால்வணங்கி முடிவிலாக்
காதல் முதிர ஓங்கி
நன்புலன் ஆகிய ஐந்தும் ஒன்றி நாயகன் சேவடி
எய்தப் பெற்ற
இன்பவெள் ளத்திடை மூழ்கி நின்றே இன்னிசை
வண்டமிழ் மாலை பாட.''

இந்தப் பாடல் குளகம். அன்பு-சுந்தர மூர்த்தி நாயனார் பக்தி. பெருக-பெருகி எழ. உள்ளம்-தம்முடைய திருவுள்ளம். உருகி-உருக்கத்தை அடைந்து. அலைய-தடுமாற. அட்டாங்க -தலை, மூக்கு, வாய், மெய், இரண்டு காதுகள், மேவாய், இரண்டு முழங்கைகள், இரண்டு பாதங்கள் என்னும் எட்டு உறுப்புக்களும்; அங்க: ஒருமை பன்மை மயக்கம். பஞ்சாங்க மாக-தலை, இரண்டு கைகள், இரண்டு முழங்கைகள், இரண்டு முழங்கால்கள், இரண்டு பாதங்கள் என்னும் ஐந்து உறுப்புக்களும். அங்க: ஒருமை பன்மை மயக்கம். முன்பு-வன்மீக நாதருடைய சந்நிதியில். முறைமையினால்-வணங்க வேண்டிய முறையோடு; உருபு மயக்கம். வணங்கி-வன்மீக நாதரைப் பணிந்து. முடிவு-இறுதி. இலா-இல்லாத; இடைக் குறை. காதல்-விருப்பம். முதிர-முதிர்ச்சியை அடைய. ஓங்கி-சிறந்து நின்று. நன்-நல்ல. புலன்-இந்திரியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆகிய-ஆக உள்ள. ஐந்தும்-மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்தும். ஒன்றி-ஒன்று பட்டு. நாயகன்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. சேவடி-செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். எய்தப் பெற்ற-அடையப் பெற்றதனால் உண்டாகிய. இன்ப-பேரானந்த. வெள்ளத்திடை-வெள்ளத்துக்குள். மூழ்கி-முழுகி. நின்று-சிறிது நேரம் அந்த வெள்ளத்தில் ஆழ்ந்து நின்று. ஏ: அசை நிலை. இன்-இனிய. இசை-உரிய பண் அமைந்ததும்; வினையாலணையும் பெயர். வண்-சொற்சுவை பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்றதும்; வினையாலணையும் பெயர். தமிழ்-செந்தமிழ் மொழி. மாலை மாலையாகிய ஒரு திருப் பதிகத்தை. பாட-அந்த நாயனார் பாடியருள.

அப்போது காந்தாரப் பண்ணில் அந்த நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" கரையும் கடலும் மலையும் காலையும்
மாலையும் எல்லாம்

உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திர
லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர்
தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும்
ஆள்வரோ கேளீர். ''

ஐந்து புலன்களும் ஒன்றுதல்: ''ஐம்புலனு மடக்கி ஞானம் புகலுடையோர்தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்.'', ''அஞ்சையும் அடக்கி ஆற்றல் உடையனாய் அநேக காலம் வஞ்சமில் தவத்துள் நின்று மன்னிய பிரதற்கு.'', ''வென்றிலேன் புலன்கள் ஐந்தும்.'', ''பொறிப் புலன்களைப் போக்கறுத் துள்ளத்தை நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள் அறிப்புறும் மமுதாயவன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அஞ்சினை ஒன்றி நின்று அலர் கொண்முடி சேர்வறியா வஞ்சனை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''நன்புலன் ஒன்றி நாத என் றரற்றி.'' என்று மாணிக்க வாசகரும், ''வென்றஐம் புலனால் மிக்கீர்.'', என்று சேக்கிழாரும், ''புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம்.'' என்று வேறு ஒரு புலவரும் பாடியருளி யிருப்பவற்றைக் காண்க.

பிறகு உள்ள 127-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெருமையைப் பெற்ற வேதமாகிய பாம்புப் புற்றைத் தான் எழுந்தருளும் இடமாகக் கொண்ட அரசனாகிய வன்மீக நாதனுடைய அருமையாக விளங்கும் திருவருளால் ஓர் அசரீரி வாக்கு, ''நம்முடைய தோழனாக விளங்கும் தன்மையை அமையுமாறு உனக்கு எம்மை வழங்கினோம்; நாம் முன்பு ஒரு நாள் உன்னைத் தடுத்து ஆட்கொண்டு எம்முடைய தொண்டனாக உன்னை ஏற்றுக்கொண்ட திருமணத்தில் அன்றைக்கு நீ புனைந்து கொண்டிருந்த மணவாளக் கோலத்தை என்றைக்கும் அணிந்து கொண்டு உன்னுடைய விருப்பம் நிறைவேறுமாறு இந்த மண்ணுலகத்-

தின்மேல் நீ விளையாடலைப் புரிவாயாக'' என நம்பி ஆரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார் கேட்கும் வண்ணம் ஆகாயத்தில் எழுந்தது.' பாடல் வருமாறு:

'' வாழிய மாமறைப் புற்றி டங்கொள்
மன்னவன் ஆரரு ளாலோர் வாக்குத்
'தோழமை ஆக உனக்கு நம்மைத்
தந்தனம் நாம்முன்பு தொண்டு கொண்ட
வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம்
என்றும் புனைந்துநின் வேட்கை தீர
வாழிமண் மேல்விளை யாடு வாய்.' என்
றாரூரர் கேட்க எழுந்த தன்றே. ''

வாழிய: அசை நிலை. மா-பெருமையைப் பெற்ற. மறைப்புற்று-வேதமாகிய பாம்புப் புற்றை. இடம்-தான் எழுந்தருளியிருக்கும் இடமாக. கொள்-கொண்ட. மன்னவன் -அரசனாகிய வன்மீக நாதனுடைய. ஆரருளால்-அருமை யாக விளங்கும் திருவருளால். ஓர் வாக்கு-ஓர் அசரீரி வாக்கு. த்: சந்தி. தோழமை-நம்முடைய தோழனாக விளங்கும் பான்மை. ஆக உனக்கு-உனக்கு உண்டாகும் வண்ணம். நம்மை-எம்மை. த்: சந்தி. தந்தனம்-வழங்கினோம். நாம்-யாம். முன்பு-முன் ஒரு நாள். தொண்டு-உன்னைத் தொண்டனாக; திணை மயக்கம். கொண்ட-தடுத்து ஆட்கொண்ட. வேள்வியில்-புத்தூரில் நடந்த உன்னுடைய திருமணத்தில். அன்று-அன்றைக்கு. நீ கொண்ட-நீ புனைந்துகொண்டிருந்த. கோலம் - மணவாளக் கோலத்தை. என்றும் - இனிமேல் என்றைக்கும். புனைந்து-அணிந்து கொண்டு. நின்-உன்னுடைய. வேட்கை-விருப்பம். தீர-நிறை வேறுமாறு. வாழி: அசை நிலை. மண்மேல் - இந்த மண்ணுலகத்தின்மேல். விளையாடுவாய்-திருவிளையாடலை நடத்துவாயாக. என்று-என. ஆரூரர்-நம்பி ஆரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார். கேட்க-கேட்கும்படி. எழுந்தது-ஆகாயத்தில் எழுந்தது. அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

திருவாரூர்: நாகப்பட்டினத்துக்கு மேற்கில் 14-மைல் தூரத்தில் இந்தத் தலம் இருக்கிறது. ''நிறை செல்வத் திருவாரூர்.'' என்று இந்தத் தலம் சிறப்பிக்கப் பெறும். இந்தத் தலத்தில் விளங்கும் திருக்கோயிலுக்குத் திரு மூலட்டானம் என்பது பெயர்; இதைப் பூங்கோயில் என்றும் கூறுவார்கள். ''தேங்காவின் ஊறும் திருவாரூர்த் தொன்னகரிற், பூங்கோயிலுள் மகிழ்ந்து போகா திருந்தாரே.'' என்று தேவாரத்தில் வருவதைக் காண்க. இது திருமகள் வழிபட்ட திருத்தலம்; பிறக்க முத்தி அளிக்கும் சிவத்தலம். மநுநீதி கண்ட சோழ மன்னர் அரசாட்சி புரிந்த தலைநகரம். சிதம்பரம் திருக்கோயிலில் புதைக்கப் பட்டிருந்த தேவாரத் திருப்பதிகங்களைக் கண்டெடுத்து அவற்றை ஏழு திருமுறைகளாக அமைத்து, எட்டாம் திருமுறையாகத் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் வைத்து, ஒன்பதாம் திருமுறையாக, திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா, சேந்தனார் திருவிசைப்பா, கருவூர்த் தேவர் திருவிசைப்பா, பூந்துருத்தி நம்பி காடநம்பி திருவிசைப்பா, கண்டராதித்தர் திருவிசைப்பா, வேணாட்டடிகள் திருவிசைப்பா, திருவாலி அமுதனார் திருவிசைப்பா, புருடோத்தம நம்பி திருவிசைப்பா, சேதிராயர் திருவிசைப்பா, சேந்தனார் திருப்பல்லாண்டு என்பவற்றைச் சேர்த்து வைத்து, பத்தாம் திருமுறையாகத் திருமூல நாயனார் பாடியருளிய திருமந்திரத்தை அமைத்து, பதினோராம் திருமுறையாக, திருவாலவாயுடையார் அருளிச் செய்த திருமுகப் பாசுரம், காரைக்கால் அம்மையார் அருளிச் செய்த திருவாலங் காட்டு மூத்த திருப்பதிகம், மூத்த திருப்பதிகம் திரு விரட்டை மணி மாலை, அற்புதத் திரு அந்தாதி, ஐயடிகள் காடவர்கோன் நாயனார் பாடியருளிய க்ஷேத்திரத் திருவெண்பா, சேரமான் பெருமாள் நாயனார் அருளிச் செய்த பொன் வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக் கோவை, திருக் கைலாய ஞான உலா, நக்கீர தேவ நாயனார் பாடியருளிய கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி, திரு ஈங்கோய் மலை எழுபது,

திருவலஞ்சுழி மும்மணிக் கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவ பாணி, கோபப் பிரசாதம், கார் எட்டு, போற்றித் திருக்கலி வெண்பா, திருமுருகாற்றுப் படை, திருக்கண்ணப்ப தேவர் திருமறம், கல்லாட தேவ நாயனார் இயற்றியருளிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம், கபிலதேவ நாயனார் அருளிச் செய்த மூத்த நாயனார் திரு இரட்டை மணி மாலை, சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை, சிவ பெருமான் திரு அந்தாதி, பரணதேவ நாயனார் பாடியருளிய சிவபெருமான் திரு அந்தாதி, இளம் பெருமான் அடிகள் இயற்றியருளிய சிவபெருமான் திருமும்மணிக் கோவை, அதிரா அடிகள் அருளிச் செய்த மூத்த பிள்ளையார் திரு மும் மணிக் கோவை, பட்டினத்துப் பிள்ளையார் பாடியருளிய கோயில் நான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்ப முடையார் திரு அந்தாதி. திருவொற்றியூர் ஒருபா ஒருபது, நம்பியாண்டார் நம்பி அருளிச் செய்த திருநாரையூர் விநாயகர் திரு இரட்டை மணி மாலை, கோயில் திருப் பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திரு அந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திரு அந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை, ஆளுடைய பிள்ளை யார் திரு உலாமாலை, ஆளுடைய பிள்ளையார் திருக் கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, திரு நாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலை என்பவற்றையும் செப்பேடுகளில் வரையச் செய்து, தியாகராஜப் பெருமானு டைய சந்நிதியில் ஏற்றுவித்த அபய குலசேகர சோழ மாமன்னரும், அந்தப் பதினொரு திருமுறைகளுக்குப் பின் சேக்கிழார் நாயனார் பாடியருளிய பெரிய புராணத்தைப் பன்னிரண்டாம் திருமுறையாக அமைத்து அந்த நூலையும் செப்பேடுகளில் வரையச் செய்து, தியாகேசருடைய சந்நிதியில் ஏற்றுவித்த அநபாயசோழச் சக்கரவர்த்தியும் அரசாட்சியைப் புரிந்த தலைநகரம் இந்தத் திருவாரூர். சுந்தர மூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை என்னும் திருப்பதிகத்

தைப் பாடியருளிய தேவாசிரயன் என்னும் ஆயிரக்கால் மண்டபத்தையும், அந்த நாயனார் விருத்தாசலத்தில் மணி முத்த நதியில் இட்ட பொன்னைப் பரவை நாச்சியாருக்கு எடுத்து வழங்கிய கமலாலயம் என்னும் திருக்குளத்தையும் கொண்டது இந்தத் தலம். சுந்தர மூர்த்தி நாயனாருக்காகத் தியாகராஜப் பெருமானார் நள்ளிரவில் பரவை நாச்சியாரிடம் தூதுவராக எழுந்தருளிய சிறப்பைப் பெற்றது இந்தத் தலம். ''அடியேற் கெளிவந்த தூதனை'' என்று சுந்தர மூர்த்தி நாயனார் குறிப்பிடுவதைக் காண்க.

காஞ்சீபுரத்தில் ஒரு கண்ணில் பார்வையைப் பெற்ற அந்த நாயனார், ''மீளா அடிமை.'' என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளி, மற்றொரு கண்ணிலும் பார்வையைப் பெற்ற தலம் இது. சேரமான் பெருமாள் நாயனார் வந்து சுந்தர மூர்த்தி நாயனாரோடு நண்பரான திருத்தலம் இது. விறன்மிண்ட நாயனார், நமி நந்தி அடிகள் நாயனார், செருத்துணை நாயனார், தண்டியடிகள் நாயனார், கழற்சிங்க நாயனார் முதலிய சிவனடியார்கள் வழி பட்டு முக்தியை அடைந்த தலம் இது. சப்த விடங்கத் தலங்களுள் முதலாவதாக விளங்குவது இந்தத் தலம். ''திருவாரூர்த் தேர் அழகு.'' என்பது ஒரு பழமொழி. திருவாரூரில் திருக்கோயில், திருக்குளம், செங்கழுநீர் ஓடை ஆகியவற்றுள் ஒவ்வொன்றும் ஐந்து ஐந்து வேலிகளாக அமைந்த சிவத்தலம் இது. ''அஞ்சணை வேலி ஆரூர் ஆதரித் திடம்கொண் டாரே'' என்று தேவாரத்தில் வருவதைக் காண்க.

ஆடகேச்சுரம் என்னும் ஆலயம் திருக்கோயிலுக்குள் இருக்கிறது. அந்தக் கோயிலில் பிலம் ஒன்று கல்லினால் மூடப் பட்டிருக்கிறது. அந்தப் பிலம் வன்மீக நாதருடைய திருக் கோயிலுக்குத் தென்கிழக்குத் திசையில் உள்ளது. அதற்கு நாகபிலம் என்று பெயர். அதில் எழுந்தருளியிருக்கும் ஆடகேசுவரரைத் தரிசனம் செய்து இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் யாவரும் சுவர்க்க லோகத்தை அடைந்தமை

யால் அந்த உலகத்தில் இடம் இல்லாமற் போய்விட்டதை அறிந்த இந்திரன் அரதன சிருங்கம் என்னும் மலை ஒன்றால் அந்த நாக பிலத்தை அடைத்துவிட்டான் என்பது ஐதிஹ்யம். இந்தச் செய்தியைத் திருவாரூர்த் தலபுராணத்தால் தெரிந்து கொள்ளலாம்.

கமலாம்பாளுடைய சந்நிதி தனியாக இருக்கிறது. நீலோற்பலாம்பாள், அல்லியங்கோதை என்ற திருநாமங்களைக் கொண்ட அம்பிகையினுடைய சந்நிதியும் தனியாக உள்ளது. மேற்குக் கோபுரத்துக்கு எதிரில் மாற்றுரைத்த பிள்ளையார் என்னும் விநாயகப் பெருமானுடைய ஆலயம் உள்ளது. தெற்குக் கோபுரத்துக்கு அருகில் பரவை நாச்சியாருடைய திருக்கோயில் இருக்கிறது. மனு நீதிச் சோழனுடைய புதல்வன் தேரில் ஏறிச் சென்றதும், பசுமாட்டினுடைய கன்றுக்குட்டி தேர்ச் சக்கரங்களின்கீழ் அகப்பட்டு இறந்ததும், தன்னுடைய புதல்வன்மேல் மனுநீதிச் சோழன் தன்னுடைய தேரை ஓட்டியதும் ஆகிய ஐதிஹ்யங்களைப் புலப்படுத்தக் கல்லினால் தேர் முதலியவை செய்து வைக்கப் பட்டுள்ளன. இவற்றைக் கிழக்குக் கோபுரத்துக்கு அருகில் பார்க்கலாம். கமலாலயம் என்னும் திருக்குளத்தின் நடுவில் ஒரு சிறிய திருக்கோயில் விளங்குகிறது. இந்தத் தலத்தைப் பற்றிய பாசுரம் ஒன்று வருமாறு:

"உயிரா வணமிருந் துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருஎழுதி
உயிரா வணம்செய்திட் டுன்கைத் தந்தால்
உணரப் படுவாரோ டொட்டி வாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
அமரர்நா டாளாதே ஆரூர் ஆண்ட
அயிரா வணமேஎன் அம்மா னேநின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே."

புற்றிடம் கொண்டவர்: "புற்றிடம் கொண்டான்." என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியதைக் காண்க.

பின்பு உள்ள 128-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த அசரீரி வாக்கைக் கேட்பதற்கு விரும்பியிருந்த வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார் என்றைக்கும் அழிவு இல்லாதவனாகிய வன்மீக நாதனை வணங்கிவிட்டு நின்று கொண்டே, "அடியேனைத் தடுத்து ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளிய வேதியனே, திருவாரூரில் விரும்பிக் கோயில் கொண்டருளிய அருமையான மாணிக்கத்தைப் போன்றவனே, வாளைப் போலவும் கயல் மீன்களைப் போலவும் அழகைக் கொண்ட கண்களைப் பெற்ற மங்கை யாகிய அல்லியங் கோதையை வாமபாகத்தில் எழுந்தருளச் செய்திருப்பவனே, அன்றலர்ந்த செந்தாமரை மலர்களைப் போன்ற தேவரீருடைய திருவடிகளை அடியேனுக்குப் பற்றுக் கோடாக இன்றைக்கு நாயைப் போன்ற அடியேனை ஒரு பொருளாகத் திருவுள்ளத்தில் கொண்டு வழங்கியருளியது தேவரீருடைய பெரிய கருணை அல்லவோ?" என்று அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**"கேட்க விரும்பிவன் றொண்டர் என்றும்**
**கேடிலா தானை இறைஞ்சி நின்றே**
**'ஆட்கொள வந்த மறையவனே,**
**ஆரூர் அமர்ந்த அருமணியே,**
**வாட்கயல் கொண்டகண் மங்கை பங்கா,**
**மற்றுன் பெரிய கருணை யன்றே**
**நாட்கம லப்பதம் தந்த தின்று**
**நாயினே னைப்பொரு ளாக.' என்றார்."**

கேட்க-அந்த அசரீரி வாக்கைக் கேட்பதற்கு. விரும்பி-விரும்பியிருந்த. வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார். என்றும்-எந்தக் காலத்திலும். கேடு-அழிவு. இலாதானை-இல்லாதவனாகிய வன்மீக நாதனை; இடைக்குறை. இறைஞ்சி-தரையில் விழுந்து வணங்கிவிட்டு. நின்றே-பிறகு தரையில் விழுந்து எழுந்து

நின்று கொண்டே. ஆட்கொள-அடியேனைத் தடுத்து ஆட் கொள்ளும் பொருட்டு. கொள: இடைக்குறை. வந்த-எழுந்தருளிய. மறையவனே-வேதியனே. ஆரூர்-திருவாரூரில். அமர்ந்த-விரும்பிக் கோயில் கொண்ட. அரு-அருமையான. மணியே-மாணிக்கத்தைப் போன்றவனே. வாள்-வாள் களைப் போலவும்; ஒருமை பன்மை மயக்கம். கயல்-கயல் மீன்களைப் போலவும்; ஒருமை பன்மை மயக்கம். கொண்ட-அழகிய தோற்றத்தைக் கொண்டுள்ள. கண்-கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மங்கை-மங்கையாகிய அல்லியங்கோதையை. பங்கா-வாமபாகத்தில் எழுந்தருளச் செய்தவனே. மற்று: அசைநிலை. நாயினேனை-நாயைப் போன்ற இழிவான அடியேனை. ப்: சந்தி. பொருளாக-ஒரு பொருளாகத் திருவுள்ளத்தில் எண்ணி. நாள்-அன்றலர்ந்த. கமல-செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பதம்-தேவரீருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். இன்று-இன்றைக்கு. தந்தது-அடியேனுக்குப் பற்றுக்கோடாக வழங்கியருளியது. உன்-தேவரீருடைய. பெரிய-பெரியதாக உள்ள. கருணை அன்றே-கருணை அல்லவோ. என்றார்-என்று சுந்தர மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

மகளிர் கண்களுக்கு வாள்கள் உவமை: "வாளார்கண்... மடந்தை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வாட்கொண்ட நோக்கி.", "வாள் நெடுங்கண் செவ்வாய் மென்தோள் மலைமகளை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "வாள்நெடுங்கண் மலைமகள்.", "வாளனகண் மடவாள்.", என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "வாட்ட டங்கண் மட மங்கை நல்லீர்." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

என்றும் கேடு இலாதான்: "கேடும் இலர்." என்று திரு ஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "பிறப்பிலார் இறப்பிலார்.", "பிறப்போ டிறப்பென்றும் இல்லாதான்.",

"மூவாய் பிறவாய் இறவாய் போற்றி.", "பிறவாதும் இறவாதும் பெருகி னானை.", "கீழ்வேளூர் ஆளும் கோவைக் கேடிலியை நாடுவமர் கேடிலாரே." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "மூப்பதும் இல்லை பிறப்பதும் இல்லை இறப்பதில்லை.", "பிறவாய் இறவாய்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "அழிவதும் ஆவதும் கடந்தாய்.", "அழிவிலா ஆனந்த வாரி.", "தான்அந்தம் இல்லான்.", "முடியா முதலே.", "அந்தம் இல் அமுதே." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அருமணி: "அருமணியை.", "திருமணியை.", "முத்தைச் செழுமணியை.", "பெறற்கரிய மாணிக்கத்தை.", "இப்பொன்நீ இம்மணிநீ.", "மணியானே.", "மருகல் உறையும் மாணிக்கத்தை.", "கோலக் காவிற் குருமணியை.", "துருத்தி மேய தூமணியை.", "மணியே பொன்னே மைந்தா.", "மஞ்சனே மணியு மானாய்.", "சீர் தரு மணியே.", "முத்தினை மணியைப் பொன்னை.", "முத்தினை மணியைப் பவளத்தொளிர் தொத்தினை.", "மணிக்குன்று பிறங்கிய என்னனை.", "திருமணியைத் தித்திக்கும் தேனை.", "முத்தினை மணிதன்னை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "அருள்செய்யும் மணியான்.", "மாணிக்கத் தொத்தினை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "மணி வண்ணத்தின் மேலும் ஓர் வண்ணத் தவராய்.", "மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே.", "அருமணியை முத்தினை.", "மாணிக்கத் தின் மலைபோல் வருவார்.", "பொன்னினை மணியை.", "மாசிலா மணியே மறைப்பொருளே." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "என்பொல்லா மணியே.", "ஆடகச்சீர் மணிக்குன்றே.", "கழுமணியே.", "ஏதா மணியே.", "அம்மையே அப்பா ஒப்பிலா மணியே.", "மாசில் மணியின் மணிவார்த்தை." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 129-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் என்று இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டுப் பல தடவைகள் வன்மீக நாதரைப் பணிந்து அவ்வாறு பணிந்ததனால் உண்டாகிய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியோடும் வெற்றியையும் ஆற்றலை யும் உடைய இடபத்தைப் போல நடந்து சென்றுவீதிவிடங்கப் பெருமானாராகிய தியாகராஜருடைய சந்நிதிக்கு எழுந்தருளி அவரை வணங்கித் தோத்திரம் புரிந்து மகிழ்ச்சியை அடைந்து திருக்கோயிலை வலம் செய்துவிட்டுத் தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளினார்; அந்த நாள் முதலாக வன்மீக நாதருடைய அடியவர்கள் யாவரும் அந்த நாய னாரைத் தம்பிரான் தோழர் என்றே வழங்கலானார்கள்.' பாடல் வருமாறு:

**" என்று பலமுறை யால்வ ணங்கி**
**எய்திய உள்ளக் களிப்பி னோடும்**
**வென்றி அடல்விடை போல்ந டந்து**
**வீதி விடங்கப் பெருமான் முன்பு**
**சென்று தொழுது துதித்து வாழ்ந்து**
**திருமா ளிகைவலம் செய்து போந்தார்;**
**அன்று முதலடி யார்கள் எல்லாம்**
**தம்பிரான் தோழர்என் றேஅ றைந்தார்.**

என்று-சுந்தர மூர்த்தி நாயனார் என்று இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு. பல முறையால்-பல தடவைகளாக. முறை: ஒருமை பன்மை மயக்கம். வணங்கி-வன்மீக நாதரைப் பணிந்து. எய்திய-அவ்வாறு பணிந்த தனால் தாம் அடைந்த. உள்ள-தம்முடைய திருவுள்ளத்தில். க்: சந்தி. களிப்பினோடும்-மகிழ்ச்சியோடும். வென்றி-வெற்றி யையும். அடல்-ஆற்றலையும் உடைய. விடைபோல்-இட பத்தைப் போல. நடந்து-நடந்து சென்று. வீதி விடங்கப் பெருமான்-வீதி விடங்கப் பெருமானாகிய தியாகராஜனு டைய. முன்பு-சந்நிதிக்கு. சென்று-எழுந்தருளி. தொழுது-

தியாகராஜரை வணங்கி. துதித்து-தோத்திரம் புரிந்து. வாழ்ந்து-பெருமகிழ்ச்சியை அடைந்து. திருமாளிகை-வன்மீக நாதருடைய திருக்கோயிலை. வலம் செய்து-பிரதட்சிணம் புரிந்து. போத்தார்-தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளி னார். அன்று-அந்த நாள். முதல்-முதலாக. அடியார்கள்-வன்மீக நாதருடைய அடியவர்கள். எல்லாம்-யாவரும். தம்பிரான் தோழர்-சுந்தர மூர்த்தி நாயனாரைத் தம்பிரான் தோழர். என்றே-எனவே. அறைந்தார்-வழங்கலானார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

ஆடவருடைய நடைக்கு இடபத்தின் நடை உவமை: "மால்விடை யும்பொன் நாகமும் நாகமும் நாண நடந் தான்." (கார்முகப் படலம், 32), "விடைபொரு நடை யினான்." (எழுச்சிப் படலம், 10), "நடையை இழிவான மல்லல் ஏற்றின் உளதென்றால்." என்று கம்ப ராமாயணத் தில் வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 130-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

"மையைப் போன்ற கருமை நிறம் வளருகின்ற கழுத்தை உடையவராகிய வன்மீக நாதர் வழங்கிய திருவருளினால் சொற்சுவை பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற செந்தமிழ் மொழியில் வல்லவராக விளங்கும் திருநாவலூரில் வாழ்பவர்களுடைய தலைவராகிய சுந்தர மூர்த்தி நாயனார் சைவ சமயத்தினர்களுக்குரிய அழகான அலங்காரத்தை அணிந்து கொண்டும், சந்தனத்தைப் பூசிக்கொண்டும், உருத் திராக்க மாலையையும் மலர் மாலையையும் பூண்டவராகித் தம்முடைய திருமேனியில் அணிந்து கொண்ட கோலம் முழுவதும் விளங்க, மிகுதியாகவும் மேம்பாட்டைப் பெற்ற தாகவும் அமைந்த தவத்தைப் புரிந்த அரசர் என்று கூறும் வண்ணம் தெய்வத் தன்மையைப் பெற்றதும் அழகியதும் ஆகிய பாம்புப் புற்றில் எழுந்தருளியிருக்கும் வன்மீக நாதரைத் திருப்பதிகங்களால் பாடியருளி ஆனந்த சாகரத் தில் முழுகி இன்புற்று மகிழ்ச்சியோடும் வாழ்ந்து வரலானார்.' பாடல் வருமாறு:

" மைவளர் கண்டர் அருளி னாலே
வண்டமிழ் நாவலர் தம்பெருமான்
சைவ விடங்கின் அணிபு னைந்து
சாந்தமும் மாலையும் தாரும் ஆகி
மெய்வளர் கோலம்எல் லாம்பொலிய
மிக்க விழுத்தவ வேந்தர் என்னத்
தெய்வ மணிப்புற்று ளாரைப் பாடித்
திளைத்து மகிழ்வொடும் செல்லா நின்றார். "

மை-மையைப் போன்ற கருமை நிறம். வளர்-வளர்கின்ற. கண்டர்-கழுத்தை உடையவராகிய வன்மீக நாதர். அருளினால்-வழங்கிய திருவருளினால். ஏ: அசை நிலை. வண்-சொற்சுவை பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற. தமிழ்-செந்தமிழ் மொழியில் வல்லவராக விளங்குபவரும்; திணை மயக்கம். நாவலர்தம்-திரு நாவலூரில் வாழும் மக்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. பெருமான்-தலைவரும் ஆகிய சுந்தர மூர்த்தி நாயனார். சைவ-சைவசமயத்தைச் சார்ந்தவர்களுக்கு உரிய; திணை மயக்கம். விடங்கின்-அழகைப் பெற்ற. அணி-அலங்காரத்தை. புனைந்து-அணிந்து கொண்டு. சாந்தமும்-சந்தனமும். மாலையும்-உருத்திராக்க மாலையும். தாரும்-மலர் மாலையும். ஆகி-பூண்டவராகி. மெய்-தம்முடைய திருமேனியில். வளர்-வளரும். கோலம் எல்லாம்-கோலம் முழுவதும். பொலிய-விளங்க. மிக்க-மிகுதியானதும்; வினையாலணையும் பெயர். விழு-மேன்மையைப் பெற்றதுமாகிய; வினையாலணையும் பெயர். த்: சந்தி. தவ-தவத்தைப் புரிந்த. வேந்தர்-அரசர். என்ன-என்று கண்டவர்கள் வியக்கும் வண்ணம். த்: சந்தி. தெய்வ-தெய்வத் தன்மையைப் பெற்ற. மணி-அழகிய. ப்: சந்தி. புற்று-பாம்புப் புற்றில். உளாரை-எழுந்தருளியிருப்பவராகிய வன்மீக நாதரை; இடைக்குறை. ப்: சந்தி. பாடி-பல திருப்பதிகங்களைப் பாடியருளி. த்: சந்தி. திளைத்து-ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்று. மகிழ்வொடும்-பெரு மகிழ்ச்சியோடும்.

செல்லாநின்றார்-வாழ்க்கையை நடத்திக் கொண்டு போகிறவர் ஆனார்.

மைவளர் கண்டர்:"மையுள் நஞ்சம் மருவு மிடற்றாரே.", "மைசேர் கண்டர்.", "மையார் கண்டன்.", "மைசேர் கண்டத் தெண்டோள் முக்கண் மறையோனே.", "மையுடைய மர மிடற் றண்ணல்.", "மையணி மிடறுடை மறையவன்.", "மைகொள் கண்டத் தெண்டோள் முக்க ணான்.", "மைதவழும் மாமிடறன்.", "மையுலா மணி மிடற்றான்.", "மையினார் மணிபோல் மிடற்றனை.", "மையார் மணிமிடறன்.", "மையி லங்கொளி மல்கிய மாசி லாமணி மிடறினார்.", "மைகொள் கண்டத்தெம் பெருமான்.", "மையணி மிடறுடை மறையவனே.", "மையணி கண்டனார்.", "மையினார் மிடறினார்.", "மைகொள் கண்டத்தர்.", "சீர்மை கொள்கண்டன்.", "மையணி மாமிடற்றான்.", "மை திகழ்தரு மாமணி கண்டனே." என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், "மைஞ்ஞவில் கண்டன்.", "மையணி கண்டத் தானே.", "மையணி கண்டன் மறைவிரி நாவன்.", "மைகொள் கண்டன் எண்தோளன்.", "மைகொள் கண்டத்த ராகி.", "மையு லாவிய கண்டனை வாழ்த்துமே.", "மைய ணுக்கிய கண்டனை.", "மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினான்.", "மைகொள் மணிமிடற்று வார்சடையான்.", "மைவான மிடற்றானை.", "மைசேர்ந்த கண்டம் உடையாய் போற்றி.", "மையாரும் மணிமிடற்றாய்.", "மையாரும் கண்ட மிடற்றார்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "மைகொள் கண்டன் எண்டோளன் முக் கண்ணன்.", "மையாரும் மிடற்றாய்.", "மையார் கண்டத் தினாய்.", "மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்.", "மையனை மையணி கண்டனை.", "மான்மறி ஏந்தும் மைகொள் கண்டனை." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "விடமுண் மிடற்று மையவனே.", "மையமர் கண்டனை வான நாடர் மருந்தினை." என்று மாணிக்க வாசகரும்,

'மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே." என்று காரைக்கால் அம்மையாரும், "மையார் மிடற்றான் அடிமற வாவரம் வேண்டுவனே." என்று சேரமான் பெருமாள் நாயனாரும், "மையார் மணிமிடறு." என்று நக்கீரதேவ நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 131-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'இந்த நிகழ்ச்சிக்கு முன்பே வரம்பு இல்லாத செல்வத்தைப் படைத்தவர்கள் வாழும் நகரமாகிய இந்தத் திருவாரூருக்கு வந்து முதன்மையையும் பெருமையையும் பெற்ற கயிலாச மலையில் எழுந்தருளியிருக்கும் எல்லாத் தேவர்களுக்கும் முதல்வராகிய கைலாச பதியாருடைய வாம பாகத்தில் எழுந்தருளியிருக்கும் பார்வதி அம்மைக்குப் பொதுவாக இல்லாமல் சிறப்பாக உரிய பணிகளைப் புரிபவளாகிய மலரை அணிந்த கூந்தலைப் பெற்ற தோழிமார்களுக்குள் ஒருத்தியும், ஒளி வீசும் ஆபரணங்களைத் தாங்கும் கொங்கைகளைப் பெற்றவளும் ஆகிய கமலினி என்பவள் திருவவதாரம் செய்தருளினாள்.' பாடல் வருமாறு:

**" இதற்குமுன் எல்லை இல்லாத் திருநகர்**
**இதனுள் வந்து**
**முதற்பெரும் கயிலை ஆதி முதல்வர்தம் பங்கி**
**னாட்குப்**
**பொதுக்கடிந் துரிமை செய்யும் பூங்குழற்**
**சேடி மாரில்**
**கதிர்த்தபூண் ஏந்து கொங்கைக் கமலினி**
**அவத ரித்தாள். "**

இதற்கு-இந்த நிகழ்ச்சிக்கு. முன்-முன்பு. எல்லை-வரம்பு. இல்லா-இல்லாத. த்: சந்தி. திரு-செல்வம் படைத்தவர்கள் வாழும்; திணை மயக்கம். நகர்-பெரிய ஊராகிய. இதனுள் வந்து-இந்தத் திருவாரூருக்கு வந்து; உருபு மயக்கம். முதல்-முதன்மையையும். பெரும்-பெருமையையும் பெற்ற

விளங்கும். கயிலை-கயிலாய மலையில் எழுந்தருளியிருக்கும். ஆதி-எல்லாத் தேவர்களுக்கும் முதலில் தோன்றிய. முதல்வர்தம்-முதல் தேவராகிய கைலாச பதியாருடைய. தம்: அசை நிலை. பங்கினாட்கு-வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும் பார்வதி அம்மைக்கு. ப்: சந்தி. பொதுக் கடிந்து-பொதுவாக இருப்பதை விட்டுச் சிறப்பாக இருந்து. உரிமை-அந்த அம்மைக்கு உரிய பணிகளை; ஒருமை பன்மை மயக்கம். செய்யும்-புரிந்து வரும். பூங்குழல்-மலர்களை அணிந்த கூந்தல்களைப் பெற்ற. பூ: ஒருமை பன்மை மயக்கம். குழல்: ஒருமை பன்மை மயக்கம். சேடிமாரில்-தோழிமார்களுக்குள். கதிர்த்த-ஒளியை வீசிய. பூண்-அணிகலன்களை; ஒருமை பன்மை மயக்கம். ஏந்து-தாங்கும். கொங்கை-நகில்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கமலினி-கமலினி என்னும் தோழி. அவதரித்தாள்-திருவவதாரம் செய்தருளினாள்.

பூண் ஏந்து கொங்கை: "இழைவளர் தருமுலை மலைமகள்.", "போகம் ஆர்த்த பூண்முலையாள்.", "பொங்கு பூண்முலைப் புரிகுழல் வரிவளைப் பொருப்பின் மங்கை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "இலகு பூண்முலை.", (நகரப் படலம், 2.) "இழைகுலா, முலையினாளை." (கோலங்காண் படலம், 20) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க. "இலைப்பூண் கவை இலைப் புறம் புதைஇப் பொற்கொடியிழையொடு நற்குடன் தாழ.", "இலைப்பூண் திளைக்கும் ஏந்திள முலையள்.", "நின் பூணிள வனமுலை." (**பெருங்கதை,** 2. 4: 119-20, 3.5, 22: 117) என்று கொங்கு வேளிர் பாடியவற்றையும் காண்க.

அடுத்து உள்ள 132-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'ஒளியை வீசும் ஒரு மாணிக்கம் பிறந்திருக்கிறது என்று சொல்லும் வண்ணம் உருத்திர கணிகைகளாகும் கணவர்கள் இல்லாத பரத்தையர்களின் குடும்பத்தில் பிறந்து பரவையார் என்னும் திருநாமத்தை விதிப்படி விளக்கத்தோடு

மேன்மையையும் தகுதியையும் பெற்ற சான்றோர்கள் ஒளி அமைந்த பிறைச் சந்திரனைச் சூடிய தூயவனாகிய சிவ பெருமானுடைய நல்ல நட்சத்திரமாகிய திருவாதிரையன்று மங்கலமான அணிகலன்களை அணிந்து வைத்து.' பாடல் வருமாறு:

**" கதிர்மணி பிறந்த தென்ன**
**உருத்திர கணிகை மாராம்**
**பதியிலார் குலத்துள் தோன்றிப்**
**பரவையார் என்னும் நாமம்**
**விதியுளி விளக்கத் தாலே**
**மேதகு சான்றோர் ஆன்ற**
**மதியணி புனிதன் நன்னாள்**
**மங்கல அணியால் சாத்தி. "**

இந்தப் பாடல் குளகம். கதிர்-ஒளியை வீசும். மணி-ஒரு மாணிக்கம். பிறந்தது-பிறந்திருக்கிறது. என்ன-என்று பாராட்டிக் கூறும் வண்ணம். உருத்திர கணிகைமாராம்- உருத்திர கணிகைகளாகும். பதி-தங்களுக்குத் திருமணம் செய்து கொண்ட கணவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இலார்-இல்லாதவர்களாகிய பொது மகளிருடைய; ஒருமை பன்மை மயக்கம்; இடைக்குறை. குலத்துள்-குடும்பத்தில். தோன்றி-பிறந்து. ப்: சந்தி. பரவையார் என்னும்-பரவை யார் என்று அழைக்கும். நாமம்-திருநாமத்தை. விதியுளி- விதிப்படி. விளக்கத்தால்-பலரும் அறிந்து கொண்டு விளங்கிய புகழோடு; உருபு மயக்கம். ஏ: அசை நிலை. மேதகு- மேன்மையையும் தகுதியையும் பெற்ற. சான்றோர்-சான் றாண்மையை உடைய பெரியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆன்ற-ஒளி அமைந்த. மதி-பிறைச் சந்திரனை. அணி-தன்னுடைய தலையில் சூடிய. புனிதன்-தூயவனாகிய சிவபெருமானுடைய. நல்-நல்ல. நாள்-நட்சத்திரமாகிய திருவாதிரையில். மங்கல-மங்கலமான. அணியால்-அணிகலன் களை அணிவதோடு; உருபு மயக்கம். அணி: ஒருமை பன்மை மயக்கம். சாத்தி-வைத்து. 'நாமம் சாத்தி' என்று கூட்டுக.

புனிதன்: "தன் ஒப்பில்லாத் தூயவன்.", "தூயானைத் தூயவாயம் மறை ஓதிய வாயானை.", "தூநயம்கொள் திருமேனியில்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "புத்தூர் உறையும் புனிதனை.", "புனிதன் பொற்கழல் ஈசன்.", "தூயானைத் தூவெள்ளை ஏற்றான் தன்னை.", "புலியூரிசே ராடைப் புனிதன்.", "தூத்தூய திருமேனித் தோன்றல்.", "பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி.", "பொல்லா என்நோய் தீர்த்த புனிதன்.", "புற்றாடர வார்த்த புனிதன்.", "புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன்.", "பொறியா டரவார்த்த புனிதன்.", "புண்ணியனைப் புனிதன் தன்னை.", "புனிதன் தன்னைப் பொய்யிலியை.", "பொய்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னை.", "வில்லைப் பூண்டானைப் புண்ணியனைப் புனிதன் தன்னை.", "நஞ்சம் உண்டு பொறுத்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னை.", "தூநெறியாய் நின்றான்.", "பவித்திரனைப் பசுபதியை.", "தூயானைச் சுடர்ப்பவளச் சோதி யானை.", "பூதப் படையாள் புனிதா போற்றி.", "பொன்போல் மேனிப் புனிதனார்.", "புரிசடைஎம் புனிதன்.", "புரம்எரித்த புனிதன்.", "புரிசடைமேற் புனல்கரந்த புனிதன்.", "புரங்கள் மூன்றும் பொடியாக எய்தானைப் புனிதன் தன்னை.", "பொடியாம் மேனிப் புனிதன்.", "புரிசடை மேற் புனலடைத்த புனிதன்.", "மார்பிற் பொறிகிளர் வெண்பூண் நூற் புனிதர்.", "புனிதப் பொருளாக நின்றார்.", "மலர்க் கொன்றை சூடினானைத் தூயானை.", "புகலூரை அகலாத புனிதன்.", "ஐயாற்றெம் புனிதன்.", "புரையார்ந்த கோவணத்தெம் புனிதன்.", "புறம்புறமே சோதித்த புனிதன்.", "தூயவன்காண் நீறு துதைந்த மேனி துளங்கும் பளிங்கனைய சோதியான்காண்.", "தூநெறிக்குத் தூநெறியாய் நின்றார்.", "பூதப் படையாள் புனிதர்.", "புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "தாரகனைப் பொருது முன் பொன்றுவித்த பொருளினை முன் படைத்து கந்தபுனிதன்.",

"தூயார் சுடுபொடி ஆடிய மேனியர்.", "தூயவர் கண்ணும் வாயும் மேனியும்.", "புனிதனைப் புலித்தோல் உடையானை.", "தூய சோதியை.", "பூத நாதனே புண்ணியா புனிதா." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "தூய மேனிச் சுடர்விடு சோதி.", "துப்பனே தூயாய்.", "பொருளனே புனிதா." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

சிவபெருமானுக்கு உரிய நட்சத்திரம் திருவாதிரை: "ஆதியன் ஆதிரையன்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "ஆதி நாயகன் ஆதிரை நாயகன்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "ஆதியன் ஆதிரையன் அயன் மால் அறிதற்கரிய சோதியன்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "மதிகனலி என்றிவற்றை, முன்னம் படைத்த முதல்வனை இன்னம், ஆர்திரையான் ஆர்திரையான் என்றென் றயருமால், ஊர்திரைநீர் வேலி உலகு." என்று மூத்தொள்ளாயிரம் பாடிய ஆசிரியரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 133-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையாருக்குத் தெய்வத்தைத் துதித்துக் கைகளிலும் கால்களிலும் காப்புக்களை அணிந்து பாதுகாத்துப் பழகுகின்ற பெரிய உறவினர்கள் ஒவ்வொரு மாதமும் வளர்ந்து வந்த பருவம் ஒவ்வொன்றிலும் உரிய விழாவை நடத்தி அலங்காரங்களை எடுப்பாகச் செய்ய அறிவில் சிறந்து நிற்கும் சான்றோர்கள், "மேன்மையான செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மங்கையாகிய திருமகளே இந்தக் குடும்பத்தில் வந்து பிறந்திருக்கிறாள்" என்று கூறித் தங்களுடைய உள்ளங்கள் உண்டாக்கி எழுந்த பெருமகிழ்ச்சி பொங்கி எழப் பரவையார் தளர்நடை நடக்கும் பருவத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"பரவினர் காப்புப் போற்றிப்
பயில்பெரும் சுற்றம் திங்கள்
விரவிய பருவந் தோறும்
விழாஅணி எடுப்ப மிக்கோர்
'வரமலர் மங்கை இங்கு
வந்தனள்' என்று சிந்தை
தரவரு மகிழ்ச்சி பொங்கத்
தளர்நடைப் பருவம் சேர்ந்தார்."

பரவினர்-சான்றோர்கள் குலதெய்வத்தைத் துதித்து; முற்றெச்சம். காப்பு-பரவையாருடைய கைகளிலும் கால்களிலும் காப்புக்களை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. போற்றி-அணிந்து பாதுகாத்து. ப்: சந்தி. பயில்-பழகிய. பெரும்-பெரிய. சுற்றம்-உறவினர்கள்; திணை மயக்கம். திங்கள்-ஒவ்வொரு மாதமும். விரவிய-வளர்ந்து வந்த. பருவம் தோறும்-ஒவ்வொரு பருவத்திலும். விழா-விழாவை நடத்தி. அணி-அலங்காரங்களை; ஒருமை பன்மை மயக்கம். எடுப்ப-எடுப்பாகச் செய்ய. அந்த அலங்காரங்களாவன: சுட்டி அணிதல், காதுகளுக்குத் தோடுகளை அணிதல், மாட்டல் பூட்டல், ஜிமிக்கிகளை அணிதல், வங்கியை அணிதல், ஒட்டியாணத்தை அணிதல், பட்டுப் பாவாடையை உடுத்தல், பட்டு அங்கியை அணிதல் முதலியவை. மிக்கோர்-அளவிற் சிறந்த சான்றோர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வரம்-மேன்மையான. மலர்-செந்தாமரை மலரில் வீற்றிருக்கும். மங்கை-மங்கையாகிய திருமகளே. இங்கு-இந்தக் குடும்பத்தில். வந்தனள்-வந்து பிறந்திருக்கிறாள். என்று-என்று கூறி. சிந்தை-தங்களுடைய உள்ளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தர-வழங்க. வரு-உண்டாகிய. மகிழ்ச்சி-ஆனந்தம். பொங்க-பொங்கி எழும் வண்ணம். த்: சந்தி. தளர் நடை-தளர் நடை நடக்கும். ப்: சந்தி. பருவம்-பருவத்தை. சேர்ந்தார்-பரவையார் அடைந்தார்.

பிறகு வரும் 134-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையாரைப் பார்த்தவர்கள், "இந்தப் பெண் குழந்தை இளைய பெண் மான் கன்றோ? தெய்வத் தன்மை

வளரும் இளமையான அரும்போ? நறுமணம் கமழும் தேனினுடைய இளம் பதமான நிலையோ? சமுத்திரத்தில் வீசும் அலைகளின் மேல் மிதக்கும் நறுமணம் கமழும் இளம் பவளக் கொடியோ? நிலா வீசும் இளைய பிறைச் சந்திரனுனுடைய கொழுந்தோ? மன்மதன் தன்னுடைய இளைய பருவத்தில் கற்றுக் கொள்ளும் ஒப்பற்ற இளமையான வில்லாகிய கரும்போ?'' என்று வியக்க.' பாடல் வருமாறு:

**'' 'மானிளம் பிணையோ? தெய்வ**
**வளரிள முகையோ? வாசத்**
**தேனிளம் பதமோ? வேலைத்**
**திரைஇளம் பவள வல்லிக்**
**கானிளம் கொடியோ? திங்கட்**
**கதிரிளங் கொழுந்தோ? காமன்**
**தானிளம் பருவம் கற்கும்**
**தனிஇளம் தனுவோ?' என்ன. ''**

இந்தப் பாடல் குளகம். மான் இளம் பிணையோ-இந்தப் பெண் குழந்தை இளைய பெண்மான் குட்டியோ. தெய்வ-தெய்வத் தன்மையைப் பெற்ற. வளர்-வளரும். இள-இளைய. முகையோ-தாமரை அரும்போ. தாமரை மலர் தெய்வத் தன்மையை உடையது: ''தெய்வத் தாமரைத் திருமகட் கெடுத்தோர்.'' (1. 34: 149) என்று **பெருங்கதையில்** வருவதைக் காண்க. வாச-நறுமணம் கமழும். த்: சந்தி. தேன்-தேனினுடைய. இளம் பதமோ-முற்றி விளையாத இளமையான பதமோ. வேலை-சமுத்திரத்தில் வீசும். த்: சந்தி. திரை-அலைகளின்மேல் மிதக்கும்; ஒருமை பன்மை மயக்கம். இளம்-இளைய. பவள வல்லி-பவளக் கொடியினுடைய. க்: சந்தி. கான்-காட்டில் உள்ள. இளம் கொடியோ-இளமையான பூங்கொடியோ. திங்கள்-சந்திரனுடைய. கதிர்-நிலாவின். இளம் கொழுந்தோ-இளமையான கொழுந்தோ. காமன் தான்-மன்மதன். தான்: அசை நிலை. இளம் பருவம்-தன்னுடைய இளமைப்பருவத்தில். கற்கும்-எய்யப் பழகும். தனி-ஒப்பற்ற. இளம்-இளம் பருவத்தில்

உள்ள. தனுவோ-வில்லாகிய கரும்போ. என்ன-என்று பரவையாரைப் பார்த்த மக்கள் வியப்பை அடைய.

மகளிருக்கு மான் உவமை: ''மங்கை வாணுதல் மான்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மானினம் வருவ போன்றும்...மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.'' (உலாவியற் படலம் 1), ''மடந்தையை மானை எடுக்கும் ஆனையேபோல் தடங்கைகாண் கொண்டு தழீஇ எடுக்கலுற்றான்.'',''பெண்ணே வண்மைக் கேகயன் மானே.'' (கைகேசி சூழ்வினைப் படலம், 3, 28,), ''மங்கையர்க்கு விளக்கன்ன மானையும்.'', (கங்கைப் படலம், 16), ''சிற்றிடைச் சீதை என்னும் மான்.'' (மாரீசன் வதைப் படலம், 79), ''மான்அவள் உரைத்த வோடும்.'' (சடாயு உயிர் நீத்த படலம், 57), ''சனகன் மானை.'' (கார்காலப் படலம், 14), ''மானை நாடுதல் புரிஞர்.'' (மராமரப் படலம், 4), ''வல்லியம் மருங்கு கண்ட மானென மறுக்க முற்று மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினாள்.'', (மாயா சனகப் படலம், 18) என்று கம்ப ராமாயணத்தில் வருவனவற்றைக் காண்க. ''மானமர் பிணையின் மம்மர் எய்தி.'' (1. 56: 29) என்று பெருங்கதையிலும் ''எஃகெறி பிணையின் மாழ்கி இறுகிமெய்ம் மறந்து சோர்ந்தாள்.'' (299) என்று சீவக சிந்தாமணியிலும் வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 135-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையார் என்னும் பெண் குழந்தை யாவரும் விரும்பும் தோற்றப் பொலிவும் அழகு வாய்த்தலும் ஒவ்வொரு நாளும் வளர்ச்சியை அடைந்து பொங்கி எழ, விளையாடுகின்ற மெல்லிய கழங்கும், பந்தும், அம்மனையும், ஊசலாடுவதும் இத்தகைய விளையாட்டுக்களின் போது பாடுகின்ற இனிய இசைப் பாடல்களும் தங்களுடைய தலைவியாகிய இமய மலை அரசனுடைய புதல்வியும் பூங் கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியினுடைய திருவடிகளில் தன்னுடைய திருவுள்ளத்தில் கூடியிருக்கும்

பக்தியினால் உருகும் வண்ணம் பாடுகின்ற கொள்கையில் ஒரு குறிப்பாக உள்ள எண்ணம் வெளிப்பட.' பாடல் வருமாறு:

**"நாடும்இன் பொற்பு வாய்ப்பு நாளும்நாள்**
**வளர்ந்து பொங்க**
**ஆடும்மென் கழங்கும் பந்தும் அம்மனை ஊசல்**
**இன்ன**
**பாடும்இன் னிசையும் தங்கள் பனிமலை வல்லி**
**பாதம்**
**கூடும்அன் புருகப் பாடும் கொள்கையோர்**
**குறிப்புத் தோன்ற."**

இந்தப் பாடல் குளகம். நாடும்-யாவரும் விரும்பும். இன்-இனிய. பொற்பு-தோற்றப் பொலிவும். வாய்ப்பு-வாய்த்த அழகும். நாளும் நாள்-நாளுக்கு நாள்; ஒவ்வொரு நாளும். வளர்ந்து-வளர்ச்சியை அடைந்து. பொங்க-பொங்கி எழ. ஆடும்-விளையாடும். மென்-மென்மையான. கழங்கும்-கழங்கு விளையாட்டும்; ஆகுபெயர். பந்தும்-பந்து விளையாட்டும்; ஆகுபெயர். அம்மனை-அம்மானைக் காய்களை வீசி விளையாடுதலும்; ஆகுபெயர். அம்மனை: ஒருமை பன்மை மயக்கம். ஊசல்-ஊசல் ஆடுதலும்; ஆகு பெயர். இன்ன-இத்தகைய விளையாட்டுக்களை விளையாடும்போது. பாடும்-பரவையாராகிய பெண் குழந்தை பாடும். இன்-இனிய. இசையும்-இசைப் பாடல்களும்; ஒருமை பன்மை மயக்கம். தங்கள்-தங்களுடைய தலைவியாகிய. பனிமலை-இமாலய மன்னனுடைய; திணை மயக்கம். வல்லி-புதல்வியும் பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியினுடைய. பாதம்-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். கூடும்-தன்னுடைய திருவுள்ளத்தில் கூடியிருக்கும். அன்பு-பக்தியினால். உருக-உருகும் வண்ணம். ப்: சந்தி. பாடும்-பாடிக் கொண்டிருக்கும். கொள்கை-கொள்கையில். ஓர்-ஒரு. குறிப்பு-குறிப்பாக உள்ள எண்ணம். த்: சந்தி. தோன்ற-வெளிப்பட.

மகளிருக்குப் பூங்கொடி உவமை: "மடக்கொடி யவர்கள் வருபுனலாட.", "தளரும் கொடியன்னாள்.", "கொடியன சாயலா ளோடு.", "பூங்கொடி மடவாள் உமை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "பைங்கொடியாள் பாகன்." என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பின்பு உள்ள 136-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பரவையார் ஆகிய பெண் குழந்தை குழந்தைப் பருவத்துக்கு மேல் உள்ள பேதைப் பருவத்தைக் கடந்து, அள்ளிக் கொள்ளுவதற்கு ஏற்றபடி தம்மிடத்தில் பொருந்திய தோற்றப் பொலிவோடு, அங்கம் இல்லாதவ னாகிய மன்மதனுடைய உண்மையான செல்வங்கள் வந்து சேர அவற்றோடு மிகுதியாக உயர்ந்து விளங்குபவற்றைப் போல விளங்கிய நகில்கள் கோங்கிலவினுடைய மொட்டுக் களைத் தாழ்வை அடையும் வண்ணம் செய்யத் தம்முடைய திருவுள்ளத்தில் உள்ள இயல்பு இந்த உலகத்தில் பிறப்பதற்கு முன்பு பார்வதி தேவியாருக்குச் சேடியாக இருந்த உண்மை யான நிலையும் தோன்றுமாறு தம்முடைய வாழ்க்கையை நடத்தி வரலானார்.' பாடல் வருமாறு:

**" பிள்ளைமைப் பருவம் மீதாம்**
**பேதைமைப் பருவம் நீங்கி**
**அள்ளுதற் கமைந்த பொற்பால்**
**அநங்கன்மெய்த் தனங்கள் ஈட்டம்**
**கொள்ளமிக் குயர்வ போன்ற**
**கொங்கைகோங் கரும்பை வீழ்ப்ப**
**உள்ளமெய்த் தன்மை முன்னை**
**உண்மையும் தோன்ற உய்ப்பார். "**

பிள்ளைமைப் பருவம்-பரவையாராகிய பெண் குழந்தை ஐந்து பிராயம் வரையில் வளர்ந்து குழந்தைப் பருவத்துக்கு. மீது ஆம்-மேலாக இருக்கும். பேதைமைப் பருவம்-ஐந்து பிராயம் முதல் ஏழு பிராயம் வரையில் உள்ள பேதைப்

பருவத்தை. நீங்கி-கடந்து. அள்ளுதற்கு-அள்ளிக் கொள்ளுவதற்கு. அமைந்த-ஏற்றபடி பொருந்திய. பொற்பால்-தோற்றப் பொலிவோடு; உருபு மயக்கம். அநங்கன்-அங்கம் இல்லாதவனாகிய மன்மதனுடைய. மெய்-உண்மையான. த்: சந்தி. தனங்கள்-செல்வங்கள். ஈட்டம் கொள்ள-குவியலாக வந்து சேர. மிக்கு-மிகுதியாகி. உயர்வ-உயரமாக உள்ளவை. போன்ற-போல விளங்கிய கொங்கை-தம்முடைய நகில்கள்; ஒருமை பன்மை மயக்கம். கோங்கு-கோங்கிலவினுடைய. அரும்பை-மொட்டுக்களை; ஒருமை பன்மைமயக்கம். வீழ்ப்ப-தம்முடைய அழகால் தோல்வியை அடையும வண்ணம் செய்ய. உள்ள-தம்முடைய திருவுள்ளத்தில் உள்ள. மெய்-உண்மையான.'உள்ளத்தின் தன்மையும் திருமேனியின் தன்மையும்' எனலும் ஆம். த்: சந்தி. தன்மை-இயல்பு. முன்னை-இந்த உலகத்தில் தாம் பிறப்பதற்கு முன் இருந்த. உண்மையும்-பார்வதி தேவியாருடைய சேடி என்னும் உண்மையான இயல்பும். தோன்ற-தோன்றுமாறு. உய்ப்பார் -தம்முடைய வாழ்க்கையை நடத்தி வரலானார்.

கொங்கைக்குக் கோங்கரும்பு உவமை: "கோங்கன்ன குவிமுலையாள்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "பொன்னிறக் கோங்கின் பொங்கு முகிழ்ப் பென்ன, முன்னர் ஈன்ற முலை.", "கோங்கரும் பேய்ப்ப முகிழ்த்தல் முன்னிய முலை.", "கருங்கண் வெம்முலை அரும்பின் அழித்து...கோங்கம் குறுகல் செல்வார்.", *(1. 41: 64-5, 46: 224-5, 2. 12: 102-5)* என்று **பெருங்கதை**யிலும், "கோங்கின், குவிமுகிழ் இளமுலை." (**திருமுருகாற்றுப் படை,** *34-5,)* "யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளிப் பூணகத் தொடுங்கிய வெம்முலை." (**சிறுபாணாற்றுப்படை,** *25-6)*, "முலையேர் மென்முகை அவிழ்ந்த கோங்கின்." (**குறுந்தொகை,** *554:2)*, "முதிர்கோங்கின் முகையென... பெருத்தநின் இளமுலை." (**கலித்தொகை,** *56: 23-4)*, "கோங்குமுகைத் தன்ன குவிமுலை." (**அகநானூறு,** *240: 11)*,

"கோங்கின், முகைவனப் பெய்திய இளமுலை." (புறநானூறு, 336:9-10), "யாணர்க் கோங்கின் குவிமுகை எள்ளிப், பூணகத் தொடுங்கு முலை." (ஞானாமிர்தம்,) "யாணர்க் கோங்கின் மென்முகிழ் முலை." (பாகவதம், 10, கோலியர். 13) என்று வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 137-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையார் தம்முடைய தோழிமார்கள் தம்முடைய பக்கத்தில் சுற்றி வரவும், படர்ந்து வீசும் திருமேனியின் பிரகாசம் தெருவில் சுற்றி வீசவும், தேன் கமழும் தம்முடைய கூந்தலின் நறுமணம் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் திசைகளிலெல்லாம் போய்ச் சுற்றி மணக்கவும், உயரமாக விளங்கும் திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளி யவரும் ஒப்பற்றவருமாகிய வன்மீக நாதரைப் பக்தியோடும் அவருடைய வீரக்கழலைப் பூண்டவையும், செந்தாமரை மலர்களைப் போன்றவையும் ஆகிய திருவடிகளைப் பணியும் பொருட்டு என்றைக்கும் போகிறவராகிய அந்தப்பரவையார் அந்த வழக்கப்படி ஒரு நாள் பூங்கோயிலுக்கு எழுந்தருளி னார்.' பாடல் வருமாறு:

**"பாங்கியர் மருங்கு சூழப் படரொளி மறுகு சூழத்**
**தேங்கமழ் குழலின் வாசம் திசையெலாம் சென்று சூழ**
**ஓங்குபூங் கோயில் உள்ளார் ஒருவரை அன்பி னோடும்**
**பூங்கழல் வணங்க என்றும் போதுவார் ஒரு நாட் போந்தார்."**

பாங்கியர்-பரவையார் தம்முடைய தோழிமார்கள். மருங்கு-தம்முடைய பக்கத்தில். சூழ-சுற்றி வரவும். ப்: சந்தி. படர்-படர்ந்து வீசும். ஒளி-தம்முடைய திருமேனியின் பிரகாசம். மறுகு-தெருவில். சூழ-சுற்றி வீசவும். த்: சந்தி. தேம்-தேன். கமழ்-கமழும். குழலின்-தம்முடைய கூந்தலின்.

வாசம்-இயற்கையான நறுமணம். திசை-கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் திசைகள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம்-யாவற்றிலும்; இடைக்குறை. சென்று-போய். சூழ-சுற்றி மணக்க. ஓங்கு-உயரமாக விளங்கும். பூங்கோயில்-திருவாரூர்ப் பூங்கோயிலில். உள்ளார்-எழுந் தருளியிருப்பவரும். ஒருவரை-ஒப்பற்றவரும் ஆகிய வன்மீக நாதரை. அன்பினோடும்-பக்தியோடும். பூங்கழல்-வீரக் கழலைப் பூண்டவையும் செந்தாமரை மலர்களைப் போன்றவையும் ஆகிய திருவடிகளை; ஆகுபெயர். 'கழல்' இன்ன தென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. வணங்க-பணியும் பொருட்டு. என்றும்-என்றைக்கும். போதுவார்-போகிறவராகிய பரவையார். ஒரு நாள்-ஒரு தினம். போந்தார்-அந்த வழக்கப்படியே பூங்கோயிலுக்கு எழுந்தருளினார்.

உத்தம மகளிரின் கூந்தலில் இயற்கையாக நறுமணம் வீசும் என்பதை, "செறிஎயிற் றரிவை கூந்தலின், நறியவும் உளவோநீ அறியும் பூவே." (குறுந்தொகை, 2: 4-5) என்பதனால் உணரலாம்.

தனக்கு உவமை இல்லாத ஒருவர்: "உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்.", "மாறிலா மணியே.", "தன்னொப் பறியாத் தழலாய் நிமிர்ந்தான்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வேறிணை யின்றி என்றும் விளங்கொளி மருங்கி னானை.", "மற்றாரும் தன்னொப்பார் இல்லா தானை.", "மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி.", "ஒப்பொருவர் இல்லாத ஒருவன்.", "தன்னொப் பில்லாத் தத்துவன்.", "சதாசிவன் காண் தன்னொப்பார் இல்லா தான்காண்.", "தத்துவனைத் தன்னொப்பார் இல்லா தானை.", "கடுஞ்சினத்தோன் தன்னுடலை நேமி யாலே தடிந்தானைத் தன்னொப்பார் இல்லா தானை." "மாறிலா மேனி உடையார்.", "மற்றாரும் தன்னொப்பார் இல்லான் கண்டாய்.",

''தன்னொப் பில்லாத் தழலுருவை.'', ''கைலை மலையானை மற்றொப்பார் இல்லா தானை.'', ''நின்னாவார் பிறரன்றி நீயே ஆனாய்.'', ''ஒப்புடையன் அல்லன்...ஒருவமன் இல்லி.'', என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''ஒப்பரிய குணத்தானை இணையிலியை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''தன்னே ரில்லோன்தானே காண்க.'', ''ஒப்பில் ஒருத்தனே போற்றி.'', ''ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி.'', ''மாறி வாதமாக் கருணை வெள்ளமே.'', ''உவமிக்கின் மெய்யெ உன்னை ஒப்பாய்.'', ''ஒப்பிலாதன உவமனில் இறந்தன ஒண்மலர்த் திருப்பாதத் தப்பன்.'', ''தனை ஒப்பாரை இல்லாத் தனியை.'', ''மாறு காணா எம்பிரான்.'', ''அம்மையே அப்பா ஒப்பிலா மணியே.'', ''ஒப்புனக் கில்லா ஒருவனே.'' என்று மாணிக்க வாசகரும், ''ஏதொக்கும் என்பதனை யார்அறிவார்.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''தனக்குவமை இல்லாதான்.'', (**திருக்குறள்** 7), என்று திருவள்ளுவரும், ''தன் நேர் பிறர் இல்லானை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''தன்னா னைத் தன்னொப்பார் இல்லா தானை.'' என்று திரு நாவுக்கரசு நாயனாரும், ''தன்னை ஒப்பாய் ஒன்றும் இல்லாத் தலைமகன்.'' (**திருமந்திரம்**, 7) என்று திருமூலரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 137-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு பரவையார் திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வன்மீக நாதரை வணங்கும்பொருட்டு எழுந்தருளிய சமயத்தில் அவர் தம்முடைய திருவடிகளில் அணிந்திருந்த சிலம்புகள், ''நாங்கள் இந்த உலகத்தில் வாழும் மக்களை வெற்றி கொண்டு அடிமைப் படுத்தி விட்டோம்'' என்று கூறுவதைப் போல முழங்கவும், மாணிக்கங்கள் கிளர்ச்சி பெற்ற காஞ்சி என்னும் மேகலையை அணிந்த பெண்குறி வரிகளைப் பெற்ற நாகங்கள் வாழும் உலகத்தை வெற்றிகொண்ட துணிவை மேற்கொண்டு அந்த

மேகலை பேரொலியை எழுப்பவும், மேகம் நெளிகளைக் கொண்ட தம்முடைய கூந்தலின் கருமையைக் கண்டு தோல்வியைப் பெறவும், அந்தக் கூந்தலில் மொய்த்திருக்கும் வண்டுகளின் கூட்டம், "இவரைக் கண்டால் தேவ லோகத்தில் வாழும் தேவர்களும் இவரை வணங்குவார்கள்" என்று ரீங்காரம் செய்யவும்.' பாடல் வருமாறு:

**"அணிசிலம் படிகள், 'பார்வென்**
**றடிப்படுத் தனம்.' என் றார்ப்ப**
**மணிகிளர் காஞ்சி அல்குல்**
**வரிஅர வுலகை வென்ற**
**துணிவுகொண் டார்ப்ப மஞ்சு**
**சூரிகுழற் கழிய, 'விண்ணும்**
**பணியும்' என் றினவண் டார்ப்பப்**
**பரவையார் போதும் போதில்."**

இந்தப் பாடல் குளகம். இதில் விற்பூட்டுப் பொருள் கோள் அமைந்துள்ளது.

பரவையார்-பரவையார் என்னும் பதியிலார். போதும்-திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வன்மீக நாதரை அவ்வாறு வணங்கும் பொருட்டு எழுந்தருளும். போதில்-சமயத்தில். அடிகள்-அவருடைய திருவடிகளில். அணி-அணிந்து கொண்டிருந்த. சிலம்பு-சிலம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். பார்-இந்த உலகத்தில் வாழும் மக்களை; இட ஆகுபெயர். வென்று-வெற்றி கொண்டு. அடிப்படுத் தனம்-நாங்கள் அடிமைகளாக ஆக்கிவிட்டோம். என்று-என்று கூறுவதைப் போல. ஆர்ப்ப-முழக்கத்தைச் செய்யவும். மணி-மாணிக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கிளர்-பதித்துக், கிளர்ச்சியைப் பெற்ற; பெயரெச்சத் தொழிற் பெயர். காஞ்சி-எட்டுக் கோவைகளைப் பெற்ற காஞ்சி என்னும் மேகலை; "எண்கோவை காஞ்சி." என வருதலைக் காண்க. அல்குல்-அவருடைய பெண்குறியின் மேல் இருந்து கொண்டு. வரி-கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை

மயக்கம். அரவு-பாம்புகள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். உலகை-நாக லோகத்தை. வென்ற-வெற்றி பெற்ற. துணிவு-துணிவை. கொண்டு-மேற்கொண்டு. ஆர்ப்ப-பேரொலியை எழுப்பவும். மஞ்சு-மேகம். சுரி-நெளிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். குழற்கு—அவருடைய கூந்தலின் கருமைக்கு. அழிய-தோல்வியைப் பெறவும். இன வண்டு-அந்தக் கூந்தலில் மொய்க்கும் வண்டுகளின் கூட்டம். வண்டு: ஒருமை பன்மை மயக்கம். விண்ணும்-தேவ லோகத்தில் வாழும் தேவர்களும்; இட ஆகுபெயர். பணியும்-இவரை வணங்குவார்கள்; திணை மயக்கம். என்று-என்று தெரிவிப்பதைப் போல. ஆர்ப்ப-ரீங்காரம் செய்ய. ப்: சந்தி.

பெண் குறிக்குப் பாம்பு உவமை: ''நாகபணம் திகழ் அல்குல் மல்கு...மங்கை.'', ''பையார் அரவே ரல்குலாளொடும்.'', ''படஅர வேரல்குள் பல்வளைக்கை மடவரலாளை.'', ''பணம்கொள் ஆடர வல்குல் நல்லார்.'', ''பைய் ராவரும் அல்குல் மெல்லியல்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பையர வசைத்த அல்குல்.'', ''பைம்மா ணரவல்குற் பங்கயச் சீறடியாள்.'',''படவேரரவல்குற் பாவை நல்லீர்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பொங்கரா அல்குற் செவ்வாய்...மங்கை.'', ''பைந்நாப் படவர வேரல்குல் உமை.'' என்று மாணிக்க வாசகரும், ''அங்கர வல்குல் நங்கைக்கு.'', ''அரவணி அல்குல் துகில் நெறி திருத்தியும்.'' (**பெருங்கதை**, *1. 42: 137, 4. 12: 232*) என்று கொங்கு வேளிரும், ''அரவுவெகுண் டன்ன அல்குல்.'' (**சீவக சிந்தாமணி**, *1878*) என்று திருத்தக்க தேவரும் பாடியருளியவற்றைக் காண்க.

பெண்மணிகளும் சிலம்புகளை அணிதல்: ''சிலம்பு கலந்தார்ப்ப.'' (**திருவாசகம்**) என்று மாணிக்க வாசகரும், ''பெதும்பை மகளிர் சிலம்பொலி அரவமும்.'', ''சிலம்பொலிச் சீறடி......வாசவ தத்தை.'' (**பெருங்கதை**, *1. 41: 68, 2. 2: 47-9*) என்று கொங்கு வேளிரும், ''இன்னரிச் சிலம்போ

டேங்கிக் கிண்கிணி இகலி ஆர்ப்ப.'', ''சிலம்பு செம்பொற் கிண்கிணி மிழற்ற ஒல்கி.'', ''சேலுண் கண்ணியர் சிலம்பொடு திலகமும் திருத்தி.'', ''சிலம்பு பைம்பொற் கிண்கிணி ஆர்ந்த பாதத் தரிவையர்.'' (சீவக சிந்தாமணி, 1985, 2068, 2079, 2381) என்று திருத்தக்க தேவரும் பாடியருளியவற்றைக் காண்க.

கூந்தலுக்கு மேகம் உவமை: ''காரு லாவிய வார்குழ லாள்.'', ''காரியல்மெல் ஓதி நதிமாதை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளியவற்றைக் காண்க.

சுரிகுழல்: ''சுரிகுழற் பணைமுலை மடந்தை.'' (திருவாசகம்) என்று மாணிக்கவாசகர் பாடியருளியதைக் காண்க.

பிறகு உள்ள 139-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருவாரூர்ப் பூங்கோயிலில் உள்ள பாம்புப் புற்றைத் தாம் எழுந்தருளும் இடமாக விரும்பித் தங்கியிருக்கும் வன்மீக நாதரை வாழ்த்தி வணங்கிவிட்டுத் தம்முடைய திரு மாளிகைக்கு எழுந்தருளுபவராகிய பரவையாரைத் தம்மைச் சுற்றியுள்ள பரிவார மக்கள் தம்மைச் சூழ்ந்து வர, ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார் நல்ல பெருமையைப் பெற்ற ஊழின் தன்மை கூட்டியதனால், முறுவல் பொருந்தி விளங்கும் சிவந்த இதழ்களைப் பெற்ற வாயையும், வில்லைப் போன்ற நெற்றியையும், வேலாயுதங்களைப் போன்ற கண் களையும், விளங்குகின்ற அணிகலன்களையும் உடையவ ராகப் பார்த்தார்.' பாடல் வருமாறு:

**'' புற்றிடம் விரும்பி னாரைப் போற்றினர் தொழுது செல்வார்**<br>
**சுற்றிய பரிசனங்கள் சூழ ஆளுடைய நம்பி**<br>
**நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்**<br>
**விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார். ''**

புற்று-திருவாரூர்ப் பூங்கோயிலில் உள்ள பாம்புப் புற்றை. இடம்-தாம் எழுந்தருளும் இடமாக. விரும்பினாரை-விரும்பி ஏற்றுக்கொண்டவராகிய வன்மீக நாதரை. ப்: சந்தி. போற்றினர்-வாழ்த்தி; முற்றெச்சம். தொழுது-வணங்கி விட்டு. செல்வார்-தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளுபவராகிய பரவையாரை. சுற்றிய-தம்மைச் சுற்றி உள்ள. பரிசனங்கள்—பரிவார மக்கள். சூழ-தம்மைச் சூழ்ந்து வர. ஆளுடைய நம்பி-ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார். நல்-நல்ல. பெரும்-பெருமையைப் பெற்ற. பான்மை-ஊழின் தன்மை. கூட்ட-கூடச் செய்ய. நகை-புன்முறுவல். பொதிந்து-அமைந்து. இலங்கு-விளங்கும். செவ்வாய்-சிவந்த இதழ்களைப் பெற்ற வாயையும். விற்புரை-வில்லைப் போன்ற. நுதலின்-நெற்றியையும். வேல்-வேலாயுதங்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். கண்-கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். விளங்கு-தங்கத்தால் செய்யப் பெற்ற ஒளியை வீசிக்கொண்டு பொலியும். இழையவரை-அணிகலன்களையும் பெற்றவராகிய அந்தப் பதியிலாரை. இழை: ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கண்டார்-பார்த்தார்.

மகளிருடைய நெற்றிக்கு வில் உவமை: "வில்லியல் நன்னுதலார்." என்று மாணிக்க வாசகர் பாடியருளியதைக் காண்க. "விற்கொண்ட வாணுதலாள் வேலி" என்று கம்பர் பாடியிருப்பதைக் காண்க.

மகளிர் கண்ணுக்கு வேல் உவமை: "வேலொண் கண்ணியி னாளை.", "வேலன கண்ணி மார்கள்.", "வேலின் உருவேறு கண்ணி.", "வேலன கண்ணியொடும்.", "வேலு மன கண்ணியொடு.", "வேல்நிகர் கண்ணியர்.", "வேலி னேர்தரு கண்ணி னாள்உமை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வேலை வென்ற கண்ணாரை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "வேலங்காடு தடங்கண்ணார்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "முழுதயில் வேற் கண்ணியர்." என்று மாணிக்க வாசகரும், "வென்வேல்

கடுக்கும் வெம்மை நோக்கத்து.'', ''மாறம் வேற்கண் வாச வதத்தை.'', ''செருவேல் பழித்த சேயரி நெடுங்கண்.'' (**பெருங்கதை**, 1. 42: 53, 2. 14: 138, 15: 85) என்று கொங்குவேளிரும், ''இணைவே லுண்கண்.'' (**சீவகசிந்தாமணி**, 465) என்று திருத்தக்கதேவரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 140-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு பரவையாரைப் பார்த்த சுந்தர மூர்த்தி நாயனார், ''இந்தப் பெண்மணி தேவலோகத்தில் வளர்ந்து நிற்கும் கற்பக மரத்தில் உள்ள மலர்கள் மலர்ந்த கொம்போ? மன்மதனுக்குப் பெரிய வாழ்வை வழங்குபவளோ? சிறப்பைப் பெற்ற புண்ணியச் செயல்களைப் புரிந்த புண்ணியத்தின் பயனோ? மேகத்தைத் தலையில் தாங்கி வில்லும் கருங்குவளை மலர்களும் பவளமும் மலர்ந்த சந்திரனை மலரச் செய்த நறுமணம் கமழும் பூங்கொடியோ? அற்புதமான வடிவமோ? சிவபெருமானுடைய திருவருளோ? இன்னது என்று நான் தெரிந்து கொள்ள முடியாமல் திகைத்து நிற்கிறேன்'' என்று எண்ணி வியப்பை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

**''கற்பகத்தின் பூங்கொம்போ? காமன்றன்**
**பெருவாழ்வோ?**
**பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ?**
**புயல்சுமந்து**
**விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்**
**கொடியோ?**
**அற்புதமோ? சிவனருளோ? அறியேன்.'**
**என் றதிசயித்தார்.''**

கற்பகத்தின்-அவ்வாறு பரவையாரைப் பார்த்த சுந்தர மூர்த்தி நாயனார், இந்தப் பெண்மணி தேவலோகத்தில் வளர்ந்து நிற்கும் கற்பக மரத்தில் உள்ள. பூங்கொம்போ-மலர்கள் மலர்ந்த கொம்போ. பூ: ஒருமை பன்மை மயக்கம். காமன்தன்-மன்மதனுக்கு. தன்: அசை நிலை. பெருவாழ்வோ

-பெரிய வாழ்வை வழங்குபவளோ. பொற்புடைய-சிறப்பைப் பெற்ற. புண்ணியத்தின்-புண்ணியச் செயல்களைப் புரிந்தத னால் உண்டாகிய; ஒருமை பன்மை மயக்கம். புண்ணியமோ -புண்ணியத்தின் பயனோ. புயல்-மேகத்தை; என்றது பரவையாருடைய கூந்தலை. சுமந்து-தன்னுடைய தலையில் தாங்கிக்கொண்டு. வில்-விற்களையும்; ஒருமை பன்மை மயக்கம்; என்றது பரவையாருடைய புருவங்களை. குவளை -குவளை மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம்; என்றது பரவையாருடைய கண்களை. பவளம் அலர்-பவளங்களைப் பூத்த; ஒருமை பன்மை மயக்கம். என்றது பரவையாருடைய அதரங்களை. மதி-சந்திரனை; என்றது பரவையாருடைய திரு முகத்தை. பூத்த-மலரச் செய்த. விரை-நறுமணம் கமழும். கொடியோ-பூங்கொடியோ; இது திருமேனி முழு வதையும் குறித்துக் கூறியது. அற்புதமோ-இந்த உலகத்தில் எங்கும் காண முடியாத அற்புதமான வடிவமோ; ஆகுபெயர். சிவன்-சிவ பெருமானுடைய. அருளோ - திருவருளோ. அறியேன்-அடியேன் தெரிந்து கொள்ள வில்லை. என்று-என எண்ணி. அதிசயித்தார்-அந்த நாயனார் வியப்பை அடைந்தார்.

மகளிர் கூந்தலுக்கு மேகம் உவமை: ''காரியல் மென்ஓதி நதிமாதை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''நீனிறக் கொண்மூ நெற்றி முள்கும், வானிற வளர்பிறை வண்ணம் கடுப்பச், சில்மெல் ஓதி சேர்ந்த சிறுநுதல்.'' (**பெருங்கதை**, *1: 41: 74-6*) என்று கொங்கு வேளிரும் பாடிய வற்றைக் காண்க.

மகளிர் புருவத்துக்கு வில் உவமை: ''சிலையணி அழித்த சென்றேந்து புருவத், தரிமலர் நெடுங்கணி.'' (**பெருங்கதை**, *2. 12: 91-2*) என வருவதைக் காண்க.

மகளிர் கண்ணுக்குக் குவளை மலர் உவமை: ''திருநீல மலரொண்கண் தேவி.'', ''காவியங் கருங்கண்ணினாள்.'', ''காவியங்கண் மடவார்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''குவளைக் கண்ணி கூறன் காண்க.''

"பானற் றடங்கண் மடந்தை நல்லீர்." என்று மாணிக்க வாசகரும், "கண்மலர் அழித்த கவின்பொன் மேனி, நீல மொடிகின்ற நேரிழை மகளிர்." (**பெருங்கதை**, 2. 12: 56-7.) என்று கொங்கு வேளிரும் பாடியருளியவற்றைக் காண்க.

அதரங்களுக்குப் பவளம் உவமை: "பவளவாய்த் தேன் மொழிப் பாவை.", "பவளத்துவர் வாயினாள்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வனபவள வாய் திறந்து." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "பவளக் கனிவாய்ப் பாவை." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "பவழக் கடிகை பழித்த செவ்வாய்." (**பெருங்கதை**, 2. 15: 81) என்று கொங்கு வேளிரும், "இருங்கடற் பவளச் செவ்வாய்.", "அரக்கார் பவள வாயார்.", "காதலர்க் கமிழ் தீந்த கடற் பவழக் கடிகைவாய்." (**சீவக சிந்தாமணி**, 658, 1656, 2241) என்று திருத்தக்க தேவரும் பாடியருளிய வற்றைக் காண்க.

மகளிர் முகத்துக்குச் சந்திரன் உவமை: "திங்கள் வாண் முகத் தரிவை.", "கோல வாண்மதி போல்முகத்து.", "பனிமா மதிபோல்முகத் தந்தமில் புகழாள்.", "நிறை வெண்டிங்கள் வாண்முக மாதர்.", "மாகத் திங்கள் வாண் முக மாதர்.", "கொடுவெண் டிங்கள் வாண்முக மாதர்.", "கதிரார் திங்கள் வாண்முக மாதர்.", "வானார் திங்கள் வாண்முக மாதர்.", "பனிவெண் டிங்கள் வாண்முக மாதர்.", "கிளரும் திங்கள் வாண்முக மாதர்.", "சூழ்ந்த திங்கள் வாண்முக மாதர்.", "தனிவெண் டிங்கள் வாண்முக மாதர்.", "வெள்ளைத் திங்கள் வாண்முக மாதர்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "கண்ணார் மாதர் மதிமுகம்." (**பெருங்கதை**, 4: 12: 246) என்று கொங்கு வேளிரும், "அணிவட்ட மதிமுகம்.", "மதிமுகம் அறியும்.", "மதிமுகம் தைவந்திட்டாள்." (**சீவக சிந்தாமணி**, 165, 1708, 1709) என்று திருத்தக்க தேவரும் பாடியருளியவற்றைக் காண்க.

மகளிருக்குப் பூங்கொடி உவமை: ''தளரும் கொடி யன்னாள்.'', ''மலைவல்லி உமை.'', ''பூங்கொடி மடவாள் உமை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''இமவான் பெற்ற பெண்கொடி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 141-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இந்தப் பெண்மணியினுடைய சித்திரத்தை நான்கு முகங்களைப் பெற்ற பிரமதேவன் தன்னுடைய கையால் ஒரு கிழியில் தீட்ட முடியாமையால் தன்னுடைய கருத்தில் உண்டான விடா முயற்சியினால் அமைத்துக் கொண்டதாகிய ஓர் ஒப்பற்ற மாணிக்கத் தீபமோ? இங்கே இந்த அழகிய வடிவம் அந்தர் மத்திய பாதலங்களில் வாழ்பவர்கள் புரிந்த தவத்தின் பயனால் என்னுடைய முன்னால் நின்றது'' என்று எண்ணித் திருநாவலூரில் வாழ்பவர்களுடைய அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார் வியப்பை அடைந்து நின்று கொண்டிருந்தார்; ஐந்து மலரம்புகளையும் கரும்பு வில்லையும் தம்முடைய ஆயுதங்களாகக் கொண்ட மன்மதனார் அந்த நாயனாருக்கும் பரவையாருக்கும் இடையில் நின்றார்.' பாடல் வருமாறு:

**'' 'ஓவியம்நான் முகன் எழுத ஒண்ணாமை உள்ளத்தால்**
**மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணி விளக்கோ?**
**மூவுலகின் பயனாகி முன்நின்ற' தெனநினைந்து**
**நாவலர்கா வலர்நின்றார்; நடுநின்றார் படை மதனார்.''**

ஓவியம்—இந்தப் பெண்மணியினுடைய சித்திரத்தை. நான்முகன்-நான்கு முகங்களைப் பெற்ற பிரமதேவன். முகம்: ஒருமை பன்மை மயக்கம். எழுத-தன்னுடைய கையால் ஒரு கிழியில் தீட்டுவதற்கு. ஒண்ணாமை-முடியாமையினால். உள்ளத்தால்-தன்னுடைய கருத்தில்; உருபு மயக்கம். மேவிய

-உண்டாகிய. தன்-தன்னுடைய. வருத்தம் உற-இடைவிடாமல் வருத்தம் உண்டாகும் வண்ணம். விதித்தது-அமைத்துக் கொண்டதாகிய. ஒரு-ஒப்பற்ற. மணி-ஒரு மாணிக்கத்தைப் பதித்த. விளக்கோ-தீபமோ. மூஉலகின்-அந்தர் மத்திய பாதலமாகிய மூன்று உலகங்களில் வாழ்பவர்களுடைய; இட ஆகுபெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். பயனாகி-தவத்தின் பிரயோசனமாகி. முன்-எனக்கு முன்னால். நின்றது-நின்று கொண்டிருக்கின்றது. என-என்று; இடைக்குறை. நினைந்து-எண்ணிக் கொண்டு. நாவலர்-திருநாவலூரில் வாழும் மக்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். காவலர்-அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார். நின்றார்-வியப்பை அடைந்து நின்றுகொண்டிருந்தார். படை-ஐந்து மலரம்புகளையும், கரும்பு வில்லையும், வண்டுகளாகிய நாணையும் ஆயுதங்களாகக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். அந்த ஐந்து மலர்களாவன: தாமரை மலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர், நீலோற்பல மலர் என்பவை; "நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணர்வும் நீக்கும் அசோகு-நுனித்துணரின், முல்லை கிடைகாட்டும் முழுநீலம் மாதே, கொல்லும்மதன் அம்பின் குணம்.'' என்று வருவதைக் காண்க. மதனார்-காமராஜர். நடு-அந்த நாயனாருக்கும் பரவையாருக்கும் இடையில். நின்றார்-தம்முடைய அம்புகளை எய்வதற்குச் சமயம் பார்த்து நின்று கொண்டிருந்தார்.

பிறகு உள்ள 142-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் பரவையாருடைய அழகைப் பார்த்து வியப்பை அடைந்து நின்றுகொண்டிருந்த போது, குளிர்ச்சியைப் பெற்ற முத்துக்களைக் கட்டிய தோடுகளும், மாணிக்கங்களைப் பதித்த மகரக் குழைகளும் சேர்ந்து காதுகள் வரைக்கும் தடுத்துக்கொண்டு ஓடுபவையும், கடைசிப் பக்கங்கள் பிறழ்பவையும், கெண்டை மீன்களைப் போன்றவையும், நீளமாக உள்ளவையும் ஆகிய தம்முடைய கண்கள் வியப்பை அடைந்து பார்க்க, கிளர்ச்சியைப் பெற்றுப்

பிரகாசத்தை வீசும் அணிகலன்களை அணிந்தவனும், சிறந்த அறிவை உடையவனும் ஆகிய சுந்தர மூர்த்தியை எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாகிய வன்மீக நாதன் வழங்கிய திருவருளால் அயல் மனிதர்கள் தெரிந்து கொள்ளாதவாறு தம்முடைய திருவுள்ளம் சுந்தர மூர்த்தியை விரும்ப, முன் பிறவியில் உள்ள நல்ல ஊழ் கூட்டி வைத்ததனால் பரவை யாராகிய பெண்மணியாரும் சுந்தர மூர்த்தியைப் பார்த் தார்.' பாடல் வருமாறு:

**" தண்டரள மணித்தோடும் தகைத்தோடும் கடை**
**பிறழும்**
**கெண்டைநெடும் கண்வியப்பக் கிளர்ஒளிப்பூண்**
**உரவோனை**
**அண்டர்பிரான் திருவருளால் அயல்அறியா**
**மனம்விரும்பப்**
**பண்டைவிதி கடைக்கூட்டப் பரவையாரும்**
**கண்டார். "**

தண்-சுந்தர மூர்த்தி நாயனார் பரவையாருடைய அழகைப் பார்த்து வியப்பை அடைந்து நின்றுகொண்டிருந்த போது குளிர்ச்சியைப் பெற்ற. தரள-முத்துக்களைக் கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். தோடும்-தோடுகளும்; ஒருமை பன்மை மயக்கம்.தோடும் என்பதை இதற்கும் கூட்டுக. மணி-மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தோடும்-மகரக் குழைகளும்; ஒருமை பன்மை மயக்கம். தகைத்து-சேர்ந்து காதுகள் வரைக்கும் தடுத்துக் கொண்டு. ஓடும்-ஓடுபவையும்; வினையாலணையும் பெயர். கடை-கடைசிப் பக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பிறழும்-புரளுபவையும்; வினையாலணையும் பெயர். கெண்டை-கெண்டை மீன்களைப் போன்றவையும்; உவம ஆகுபெயர். கெண்டை: ஒருமை பன்மை மயக்கம். நெடும்-நீளமாக விளங்குபவையும் ஆகிய; வினையாலணையும் பெயர். கண்-தம்முடைய விழிகள்; ஒருமை பன்மை மயக்கம். வியப்ப-வியப்பை அடைந்து பார்க்க. க்: சந்தி. கிளர்-கிளர்ச்சியைப்

பெற்று. ஒளி-பிரகாசத்தை வீசும். ப்: சந்தி. பூண்-அணிகலன் களை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: கிரீடம், வாகுவலயங்கள், முத்து மாலை, மாணிக்கமாலை, பவள மாலை, உருத்திராக்க மாலை, தங்க அரை ஞாண், வைரக் கடுக்கன்கள், வீரக்கழல், சிலம்புகள் முதலியவை. உரவோனை-சிறந்த அறிவைப் பெற்ற சுந்தர மூர்த்தியை. அண்டர் பிரான்-எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாகிய வன்மீக நாதன். அண்டர்: ஒருமை பன்மை மயக்கம். திருவருளால்-வழங்கிய திருவருளால். அயல்-வேறு மனிதர்கள்; திணை மயக்கம். அறியா-தெரிந்து கொள்ளாதவாறு. மனம்-தம்முடைய திருவுள்ளம். விரும்ப-சுந்தர மூர்த்தி நாயனாரை விரும்ப. ப். சந்தி: பண்டை-முன் பிறவியிலிருந்து வந்த. விதி-நல்ல ஊழ். இதை ஆகூழ் என்பர். கடைக்கூட்ட-கூட்டி வைத்ததனால். ப்: சந்தி. பரவையாரும்-பரவையாராகிய மாதரசியாரும். கண்டார்-சுந்தர மூர்த்தி நாயனாரைப் பார்த்தார்.

மகளிர் கண்ணுக்குக் கெண்டை மீன் உவமை: "கெண்டைகொண் டலர்ந்த கண்ணினார்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "கெண்டை யந்தடங் கண் உமைநங்கை." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "கெண்டையங் கண்களும் உன்னியே கிடப்பேனை." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 143-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையாருடைய திருமேனி கண்களால் பார்த்து அளவிட முடியாத பேரழகைச் சொரிந்த ஒளியை எங்கும் பரப்ப, வானம் கொள்ள முடியாத பெரிய பிரகாசத்தை வீசும் திருமேனியைப் பெற்றவனாகிய சுந்தர மூர்த்தி தன்னுடைய எதிரில் பார்க்கும் மென்மையான இயல்பைக் கொண்ட அந்தப் பெண்மணியினிடத்தில் கணக்கில் அடங்காத காதலினால் முன்பு ஒரு காலத்திலும் அடையாததாகிய ஒரு விருப்பமும், இந்த மண்ணுலகத்தில் எந்தப்

பெண்மணியும் மேற்கொள்ளாத நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் இயல்பை வலிந்து ஒதுக்கிவிட்டு எழுந்த வுடன்.' பாடல் வருமாறு:

" கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி
கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளியான் எதிர்நோக்கும்
மெல்லியலுக்
கெண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத
தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடம்அச் சம்பயிர்ப்பை
வலிந்தெழலும். "

இந்தப் பாடல் குளகம். கண்-பார்த்தவர்களுடைய கண்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். கொள்ளா-அடங்காத. க்: சந்தி. கவின்-பேரழகை. பொழிந்த-மழையைப் போலச் சொரிந்த. திருமேனி-பரவையாருடைய திருமேனி. கதிர்-பிரகாசத்தை. விரிப்ப-பரவச் செய்ய. விண்-ஆகாயம். கொள்ளா-சூரியன் சந்திரன் என்பவற்றாலும் அடையாத. ப்: சந்தி. பேரொளியான்-பெரிய பிரகாசத்தைத் தன்னுடைய திருமேனியிற் பெற்றவனாகிய சுந்தர மூர்த்தி. எதிர்-தன்னுடைய எதிரில். நோக்கும்-வியப்பை அடைந்து பார்க்கும். மெல்-மென்மையான. இயலுக்கு-இயல்பைக் கொண்ட அந்தப் பெண்மணிக்கு; ஆகுபெயர். எண்-கணக்கில். கொள்ளா-அடங்காத. க்: சந்தி. காதலின்-காதலினால். முன்பு-முன்னால் ஒரு காலத்திலும். எய்தாதது-அடையாததாகிய. ஒரு வேட்கை-ஒரு விருப்பமும். மண்-இந்த மண்ணுலகத்தில் எந்தப் பெண்மணியும்; இட ஆகுபெயர். கொள்ளா-மேற் கொள்ளாத. நாண்-நாணமும்; பிற ஆடவரைப் பார்ப் பதற்கு வெட்கம் அடைதல். மடம்-மடமும்; கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை என்னும் இயல்பு; தனக்குத் தெரிந்திருந்தாலும் அந்தக் கருத்தை வெளியிடாமல் அடக்கிக் கொண்டு மற்றவர்கள் கூறும் கருத்துக்களைக் கேட்டல். அச்சம்-பயம். பயிர்ப்பை-பயிர்ப்பு என்னும் குணத்தைச்

பயிர்ப்பாவது, பிற ஆடவர் தன்மேற் பட்டால் அருவருப்பை அடைதல். வலிந்து-வலிமையோடு ஒதுக்கிவிட்டு. எழலும்-எழுந்தவுடன்.

மெல்லியல்: "மெல்லினத்தார்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "சொல்லெதிர் கொள்ளாள் மெல்லியல்.", "சில்லைச் சிறுசொல் மெல்லியல் மிழற்ற.", "மெல்லியற் குலமகள்.", "மெழுகுசெய் பாவை யின் மெல்லியல் அசைந்து.", "மெல்லியற் பணைத்தோள் மகளிர்க்கு.", (**பெருங்கதை,** *1. 33: 178, 35: 248, 2, 2: 46, 16: 115, 3. 7: 11-2.*) என்று கொங்கு வேளிரும், "முல்லை சான்ற கற்பின் மெல்லியல், மடமான் நோக்கின் வாணுதல் விறலியர்.", (**சிறுபாணாற்றுப் படை**) என்று நல்லூர் நத்தத் தனாரும், "மெல்லியல் மகளிர் நல்லடி வருட." (**நெடுநல் வாடை,** 151) என்று நக்கீரனாரும், "சொல்லலும் பழியோ மெல்லியலீர்." (**குறிஞ்சிப்பாட்டு,** 145) என்று கபிலரும், "முல்லை சான்ற கற்பின், மெல்லியற் குறுமகள்." (**நற்றிணை,** 10, 11) என்று இடைக்காடனாரும், "மெல்லியற் குறுமகள் உறைவி னூரே." (**அகநானூறு,** 274: 14) என்று அதே புலவரும், "மெல்லிய லாளை நோக்கி." (அகலிகைப் படலம், 79), "மெல்லியல் ஒருத்தி." (உண்டாட்டுப் படலம், 46), "பூவின் மெல்லியல் மேனி." (பிணிவிடு படலம், 31), "மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள்." (மாயாசனகப் படலம், 18) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 144-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனாரைப் பார்த்த பரவையார், இந்த ஆடவன் எனக்கு முன்னால் வந்து என்னுடைய எதிரில் காட்சியை வழங்கியருளும் முருகப் பெருமானோ? பெருகி வீசும் திருமேனிப் பிரகாசத்தோடு தோற்றம் அளிக்கும் தனக்கு ஒப்பு யாரும் இல்லாத மன்மதனோ? மலர் மாலையை அணிந்திருக்கும் மார்பைப் பெற்ற ஒரு வித்தியா தரனோ? மின்னலைப் போன்ற சிவந்த சடாபாரத்தைத் தன்னுடைய தலையின்மேற் கொண்ட தலைவனாகிய

வன்மீக நாதனுடைய உண்மையான திருவருளைப் பெறும் பாக்கியத்தைத் தன்னுடைய உடைமையாகப் பெற்றவனோ? என்ன வியப்பு! என்னுடைய உள்ளத்தை மயங்கச் செய்த இந்தப் பேரழகன் யாரோ?'' என்று எண்ணினார்.' பாடல் வருமாறு:

**'' ' முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ?**
**பெருகொளியால்**
**தன்னேரில் மாரனோ? தார்மார்பின்**
**விஞ்சையனோ?**
**மின்னேர்செஞ் சடைஅண்ணல் மெய்யருள்**
**பெற் றுடையவனோ?**
**என்னேஎன் மனம்திரித்த இவன்யாரோ?'**
**எனநினைந்தார். ''**

முன்-சுந்தர மூர்த்தி நாயனாரைப் பார்த்த பரவையார், இந்த ஆடவன் எனக்கு முன்னால். ஏ: அசை நிலை. வந்து-மணவாளக் கோலத்தோடு வந்து. எதிர்-என்னுடைய எதிரில். தோன்றும்-காட்சியை வழங்கியருளும். முருகனோ-முருகப் பெருமானோ. பெருகு-பெருகி வீசும். ஒளியால்-பிரகாசத்தோடு தோற்றம் அளிக்கும்; உருபு மயக்கம். தன்-தனக்கு. நேர்-ஒப்பாக. இல்-யாரும் இல்லாத; கடைக்குறை. மாரனோ-மன்மதனோ. தார்-மலர் மாலையை அணிந்த. மார்பின்-மார்பைப் பெற்ற. விஞ்சையனோ-ஒரு வித்தியா தரனோ. மின்-மின்னலை. நேர்-போன்ற. செம்-சிவந்த. சடை-சடாபாரத்தைத் தன்னுடைய தலையின்மேற் பெற்ற. அண்ணல்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. மெய்-உண்மையான. அருள்-திருவருளை. பெற்று-பாக்கியமாக அடைந்து. உடையவனோ-அந்தத் திருவருளைத் தன்னுடைய உடைமையாகக் கொண்டவனோ. என்-என்ன ஆச்சரியம். ஏ: அசைநிலை. என்-அடியேனுடைய. மனம்-உள்ளத்தை. திரித்த-மயங்கச் செய்த. இவன்-இந்தப் பேரழகன். யாரோ-யாவனோ. என-என்று; இடைக்குறை. நினைந்தார்-எண்ணினார்.

அழகுடைய ஆடவனுக்கு முருகன் உவமை: "கந்தனை அனையவர் கலைதெரி கழகம்." என்று கம்பராமாயணத்தில் வருவதைக் காண்க.

சடைக்கு மின்னல் உவமை:"மின்னி லங்கு சடையான்.", "மின்னிற்பொலி சடையான்.", "மின்னலிலும் செஞ் சடையான்.", "மின்னார்சடை.", "மின்திகழ் செஞ்சடை யான்.", "மின்னியல் செஞ்சடை.", "மின்னேர் சடைகள் உடையான்.", "மின்னு லாவிய சடையினர்.", "மின்னியல் செஞ்சடை வெண்பிறையன்.", "மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்.", "மின்னை விரிபுன்சடை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "மத்தம் மின்திகழ் சடையில் வைத்து.", "மின்னும் ஒப்பர் விரிசடை.", "புன் சடை யின்புறம் மின்உள்ள.", "மின்னியலும் வார்சடை எம்பெருமான்.", "மின்னொத்த செஞ்சடை வெண்பிறை யார்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கொன்றை அணிந்தவனே." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், "மின்போலும் செஞ்சடை யான்." என்று காரைக்கால் அம்மையாரும், "மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை." என்று சேரமான் பெருமாள் நாயனாரும், "மின்செய்வார் செஞ்சடையாய்." என்று நக்கீர தேவநாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 145-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையார் தலைவனாகிய அந்தச் சுந்தர மூர்த்தி யினிடத்தில் உண்டான அளவு கடந்த காதலால் தம்முடைய உள்ளத்தில் நிறைந்திருக்கும் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு பண்புகளும் ஒரு பக்கத்தில் சாய்ந்து விட்டன என்றாலும், அழகிய நிறத்தைப் பெற்ற மலர்களை அணிந்த கருமையான கூந்தலை உடையவரும், மடப்பத்தைக் கொண்டவரும், பூங்கொடியைப் போன்ற வரும் ஆகிய பரவையாரை வன்மையைப் பெற்ற உள்ளத்தை

உடையவராகச் செய்து நெற்றியில் ஒற்றைக் கண்ணை உடையவராகிய வன்மீக நாதரை வணங்குவதற்கு உண்டான பக்தியே கடைப்பிடித்து அவரைப் போகுமாறு செலுத்த.' பாடல் வருமாறு:

**'' அண்ணலவன் தன்மருங்கே அளவிறந்த**
**காதலினால்**
**உண்ணிறையும் குணம்நான்கும் ஒருபுடை**
**சாய்ந் தனஎனினும்**
**வண்ணமலர்க் கருங்கூந்தல் மடக்கொடியை**
**வலிதாக்கிக்**
**கண்ணுதலைத் தொழும்அன்பே கைக்**
**கொண்டு செலஉய்ப்ப.''**

இந்தப் பாடல் குளகம். அண்ணல் அவன் தன்-பரவை யார் தலைவனாகிய அந்தச் சுந்தர மூர்த்தியினுடைய. தன்: அசைநிலை. மருங்கு-பக்கத்தில். ஏ: அசை நிலை. அளவு இறந்த-அளவைக் கடந்த. காதலினால்-காதலால். உள்-தம்முடைய திருவுள்ளத்தில். நிறையும்-நிறைந்து விளங்கும். குணம் நான்கும்-நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்ற நான்கு உத்தமமான பண்புகளும்; குணம்: ஒருமை பன்மை மயக்கம். ஒரு புடை-சுந்தர மூர்த்தி நாயனாரின் ஒப்பற்ற பக்கமாக. சாய்ந்தன-சாய்ந்து விட்டன. எனினும்-என்றாலும்; இடைக்குறை. வண்ண-பல நிறங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மலர்-மலர்களை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: மல்லிகை மலர், முல்லை மலர், மகிழ மலர், தாழம்பூ, சாதி மல்லிகை மலர், ஊசி முல்லை மலர், கொன்றை மலர் முதலியவை. க்: சந்தி. கரும்-கருமையான. கூந்தல்-கூந்தலையும். மட-மடப்பத்தையும். க்: சந்தி. கொடியை-பூங்கொடியைப் போன்ற தோற்றத்தையும் கொண்ட பரவையாரை; உவமஆகு பெயர். வலிது ஆக்கி-வலிமையை உடையவராகச் செய்து; திணைமயக்கம். க்: சந்தி. கண்ணுதலை-நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் படைத்த வன்மீக நாதரை. த்: சந்தி. தொழும்-வணங்கும்.

அன்பே-பக்தியையே. கைக் கொண்டு-மேற்கொண்டு. செல-திருவாரூர்ப் பூங்கோயிலுக்குப் போகுமாறு; இடைக்குறை. உய்ப்ப-அந்தப் பரவையாரைச் செலுத்த.

அடுத்து வரும் 146-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவையினுடைய பக்கத்தில் ஓடிச் சென்று தன்னுடைய கரும்பு வில்லை வளைத்து ஐந்து மலரம்புகளாகிய ஆயுதங் களைப் பெற்றவனும் அங்கம் இல்லாதவனுமாகிய மன்மதன் எய்த அம்புகள் வளைத்துக் கொண்டு எந்தப் பக்கத்திலும் போக முடியாமல் தடையை உண்டாக்க, மடப்பம் வருதலை யுடைய அந்தப் பெண்மணியும் தேன் நிரம்பிய மலர் மாலையைத் தன்னுடைய கூந்தலின்மேல் சிறகுகளைப் பெற்ற வண்டுகள் கூடிக்கொண்டு மொய்த்து ரீங்காரத்தைச் செய்ய, திருவாரூர்ப் பூங்கோயிலை விரும்பி எழுந்தருளியுள்ள தலைவனாகிய வன்மீக நாதனுடைய தங்கத்தை வேய்ந்த விமானத்தைக் கொண்ட ஆலயத்துக்கு எழுந்தருளி அதற் குள்ளே நுழைந்தாள்.' பாடல் வருமாறு:

**" பாங்கோடிச் சிலைவளைத்துப் படை அநங்கன்**
**விடுபாணம்**
**தாம்கோலி எம்மருங்கும் தடைசெய்ய|மடவரலும்**
**தேங்கோதை மலர்க்குழல்மேற் சிறைவண்டு**
**கலந்தார்ப்பப்**
**பூங்கோயில் அமர்ந்தபிரான் பொற்கோயில்**
**போய்ப்புகுந்தார். "**

பாங்கு-பரவையினுடைய பக்கத்தில். ஓடி-ஓடிச்சென்று. ச்: சந்தி. சிலை வளைத்து-தன்னுடைய வில்லாகிய கரும்பை வளைத்து. ப்: சந்தி. படை-ஆயுதங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அநங்கன்-அங்கம் இல்லாத மன்மதன் விடு-எய்த. பாணம்தாம்-மலரம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். தாம்: அசைநிலை. அவனுடைய அம்புகளாகிய ஐந்து மலர்களாவன: தாமரை மலர், மாமலர், அசோக மலர், முல்லை மலர், நீலோற்பல மலர் என்பவை. கோலி-பரவையை வளைத்துக் கொண்டு. எம்மருங்கும்-எந்தப்

பக்கத்திலும் போகாதவாறு. தடை-தடையை. செய்ய-உண்டாக்க. மடவரலும் - மடப்பம் வருதலை உடைய அந்தப் பெண்மணியும். தேம்-தேன் நிரம்பிய. கோதை-மாலையாகக் கட்டிய. மலர்-மலர்களை அணிந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குழல்மேல்-தன்னுடைய கூந்தலின்மேல். சிறை-சிறகுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வண்டு-வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். கலந்து-கூடிக்கொண்டு. ஆர்ப்ப-மொய்த்து ரீங்காரத்தைச் செய்ய. ப்: சந்தி. பூங்கோயில்-திருவாரூர்ப் பூங்கோயிலில். அமர்ந்த-விரும்பி எழுந்தருளியுள்ள. பிரான்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. பொன்-தங்கத்தால் வேய்ந்த விமானத்தைக் கொண்ட. கோயில்-ஆலயத்துக்கு. போய்-பரவை எழுந்தருளி. ப்: சந்தி. புகுந்தார் - உள்ளே நுழைந்தாள்.

மடவரல்: ''மடமான் விழிஉமை.'', ''மடவார் இடுபலி.'', ''மடவாரொடு மகிழ்மைந்தர்கள்.'', ''மலையார் தரு மடவாள்.'', ''பல்வளைக்கை மடவரலாளை.'', ''மடமாதொர் பாகமாய்.'', ''மடம்படு மலைக்கிறைவன் மங்கை.'', ''மடநல்லார் மாமயிலை.'', ''மயிலன்ன சாயல் மடமங்கை.'', ''மடமுடையவர் பயில்வைகல்மா நகர்.'', ''மடவரல்...இடமுடைச் சடையினன்.'', ''மடவரல் பங்கினன்.'', ''மடவார்கள் புனலாடுவது.'', ''பூங்கொடி மடவாள் உமை.'', ''காவியங்கண் மடவாளொடும்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மலைமடமங்கை யோடும்.'', ''வெற்பின்இடை மடவலை.'' ''கரும்பமரும் மொழிமடவாள்.'', ''சுரும்பமரும் குழல்மடவார்.'', ''மலைவளர்த்த மடமங்கை.'', ''மருவுற்ற மலர்க்குழலி மடவாள்.'', ''வரையார் மடமங்கை பங்கா.'', ''வரையார்ந்த மடமங்கை பங்கன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மழைக்கண் மடவாளை ஓர்பாகம் வைத்தீர்.'', ''வாளன கண்மடவாள்.'', ''வரிநெடுங்கண் மடவரல் உமை.'', ''மலைச்கண் மடவாள் ஒருபாலாய்.'', ''மலை

யான்மகள் மடமாது.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''வாட்டடங்கண் மடமங்கை நல்லீர்.'' என்று மாணிக்க வாசகரும், ''மடவர லுண்கண் வாணுதல் ஆம்.'' (புற நானூறு, 89: 2) என்று ஔவையாரும், ''மூதில் மடவாள்.'', ''மடவரல் மகளிர்க்கு.'', ''மூதில் மடவாள்.'', ''மடவரற் புணர்ந்த மகிழ்ச்சி.'' என்று ஐயன் ஆரிதனாரும், ''அரும் பெறல் மடமகள்.'', ''மடத்தகை பொருந்திய வயத்தகை மாதரை.'', ''மடத்தகை மகளிர்.'', ''ஆருயி ரன்ன அரும் பெறல் மடமகள்.'', ''காவலன் மடமகட் காணாது'', ''மடதகை மாதர் வருந்தினும்.'', ''கொற்றவன் மடமகள்.'', ''மம்மர் உள்ளத் தொடு மடத்தகை மாழ்க.'', ''மடத்தகை மகளிர்.'', ''அவந்தியன் மடமகள்.'', ''மாசில் மடமகள்.'', ''கச்சத் தானைக் காவலான் மடமகள்.'', ''மருவில் மாதவன் மாசில் மடமகள்.'', ''நாகர் மடமகள் போல.'', ''மடமகட் கொண்ட இடனறி சூழ்ச்சி.'', ''மன்னவன் மடமகள்.'', ''மடங்கெழு மாதர் மறைந்தனள்.'', ''மதரரி மழைக்கண் மடம்படு காரிகை.'' (**பெருங்கதை**, *1. 43: 35, 45: 31, 45: 45, 46: 71, 47: 262, 53: 115, 54: 55, 56: 117, 57: 48, 2. 4: 81, 161: 43, 19: 16, 2. 20: 53, 3. 1: 16, 6: 56, 9: 181, 5. 7: 126*) என்று கொங்கு வேளிரும், ''பெருமட மாது.'', ''மடத்தகைய ளொடும்.'', ''தோகை மடவார்.'' (**சீவக சிந்தாமணி**, *356, 1173, 2337*), ''மண மகள் ஆதி என்று மடவரல் தன்னை ஏவி.'' (*மிதிலை காட்சிப் படலம், 107*), ''மடவாரின் மிழற்றும் ஓதை.'' (*வரைக்காட்சிப் படலம், 76,*), ''நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்.'' (*மந்தரை சூழ்ச்சிப் படலம், 78*), ''மடமங்கைய ராய்என் மனத்தவ ராயி னாரே.'' (*மாரீசன் வதைப்படலம், 144*), ''மடமங்கை ஏவ.'', ''மடவாள் மறுக்கம் உறுவாள்.'' (*சடாயு உயிர் நீத்த படலம், 151, 159*), ''மடவாரால மடந்தை முன்னர்.'' (*அரசியற் படலம், 18*), ''மடக்கொடிச் சீதை.'' (*காட்சிப் படலம், 64.*) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு உள்ள 147-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார் பரவையார் திருவாரூர்ப் பூங்கோயிலுக்குள் நுழைந்த அதைப் பார்த்து, ''என்னுடைய உள்ளத்தைப் பறித்துக்கொண்ட இந்த மயிலைப் போன்ற சாயலையும் நடையையும் பெற்ற பெண்மணியினுடைய இனிய சிவந்த கோவைப் பழங்களைப் போன்ற அதரங்களோடு கூடிய வாயைப் பெற்ற இளைய பூங்கொடியைப் போன்ற பெண்மணி யாரோ?'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, அன்றைக்கு அந்த இடத்தில் அவருக்கு முன்னால் நின்றுகொண்டிருந்த மக்கள், ''அந்தப் பெண்மணியார் நங்கையாகிய பரவையார் ஆவார்; தேவ லோகத்தில் வாழும் தேவர்களைப் போன்ற தகுதியைப் பெற்றவர்களுக்கும் போய்ச் சேர்வதற்கு அருமையாக விளங்குபவர்'' என்று கூற.' பாடல் வருமாறு:

**'' வன்றொண்டர் அதுகண் 'டென்**
**மனம்கொண்ட மயிலியலின்**
**இன்தொண்டைச் செங்கனிவாய்**
**இளங்கொடிதான் யார்?' என்ன**
**அன்றங்கு முன்நின்றார்,**
**அவர்நங்கை பரவையார்**
**சென்றும்பர் தரத்தார்க்கும்**
**சேர்வரியார்.' எனச் செப்ப. ''**

இந்தப் பாடல் குளகம். வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார். அது-பரவையார் திருவாரூர்ப் பூங்கோயிலுக்குள் நுழைந்த அந்தச் செயலை. கண்டு-பார்த்து. என்-அடியேனுடைய. மனம்-உள்ளத்தை. கொண்ட-பறித்துக் கொண்ட. மயில்-இந்த மயிலைப் போன்ற; உவம ஆகுபெயர். இயலின்-சாயலையும் நடையையும் பெற்ற பெண்மணியினுடைய; ஒருமை பன்மை மயக்கம்; ஆகு பெயர். இன்-இனிய. தொண்டைச் செங்கனி-சிவந்த கோவைப் பழங்களைப் போன்ற அதரங்களை

உடைய. கனி: ஒருமை பன்மை மயக்கம். வாய்-வாயைப் பெற்ற. இளம்-இளமைப் பருவத்தோடு விளங்கும். கொடி தான்-பூங்கொடியைப் போன்ற பெண்ணரசி. தான்: அசை நிலை. யார்-யாரோ. என்ன-என்று கேட்க. அன்று-அன்றைக்கு. அங்கு-அந்த இடத்தில். முன்-அந்த நாயனாருக்கு முன்னால். நின்றார்-நின்று கொண்டிருந்த. மக்கள்: ஒருமை பன்மை மயக்கம். அவர்-அந்த மாதரசியார். நங்கை-நங்கையாகிய. பரவையார்-பரவையார் என்னும் திருநாமத்தைக் கொண்டவர். உம்பர்-தேவலோகத்தில் வாழும் தேவர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். தரத்தார்க்கும்-தகுதியைப் பெற்ற ஆடவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். சென்று-வந்து. சேர்வு-அடைவதற்கு. அரியார்-அருமையாக விளங்குபவர். என-என்று; இடைக் குறை. ச்: சந்தி. செப்ப-சுந்தர மூர்த்தி நாயனாரிடம் கூற.

மயிலியல்: ''மயிலார் சாயல் மாது.'', ''மயிலுறு சாயல் வனமுலை.'', ''மயிலன மடநடை மலைமகள்.'', ''மயிலன்ன சாயல் மடமங்கை.'', ''மயிற்கெதிர்ந் தணங்கு சாயல் மாது.'', ''மயிலேரன சாயலோ டமர்ந்தவன்.'', ''கலவ மாமயி லாரியலாள்.'', ''கான்முக மயிலியல் மலைமகள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த, சில்வளை விறலியும்.'' (புறநானூறு, 60: 4-5) என்று மருத்துவன் தாமோதரனாரும், ''கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி.'' (புறநானூறு, 133: 5) என்று முடமோசியாரும், ''கலிமயிற் கலாவம் கால் குவித் தன்ன, ஒலிமென் கூந்தல்.'' (புறநானூறு, 8:9) என்று அரிசில் கிழாரும், ''மயிலன்ன மென்சாயலார்.'' (புறநானூறு, 395: 13) என்று நக்கீரரும், ''மராஅ மயிலின் மயங்குபு தூங்கும், குழாஅ மகளிர்.'' (பெருங்கதை, 1. 40: 145-6), ''பொறிமயிற் றொழுதி புயல்கழி காலைச், செறிமயிர் உளர்த்தும் செய்கை போல்தம், நெறிமயிர்க் கூந்தல் நீரற வாரி.'' (பெருங்கதை, 1. 42: 199-201), ''மயிலியல் மாதர்.'' (பெருங்கதை, 2. 3: 145), ''கோடுகொள் மயிலின் குழாஅம்

ஏய்ப்ப, மாடந் தோறும் மலிந்திறை கொண்டனர்.'' (**பெருங்கதை**, *2: 7: 93-4*) என்று கொங்கு வேளிரும், ''மாதுகு மயிலி னல்லார்.'' (**சீவக சிந்தாமணி**, *463*) என்று திருத் தக்க தேவரும், ''இயல்புடை பெயர்மயில்.'', ''பயில் நடமே கேகயம் நவில்வன.'' (நாட்டுப் படலம், 42, 49), ''பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடும்.'' (தாடகை வதைப் படலம், 26), ''தோகைக் கொம்பின் அன்னவர்.'' (மிதிலைக் காட்சிப் படலம், 21), ''தோகையர் இன்னன சொல்லிட.'', (கார்முகப் படலம், 32), ''நடிக்கும்மயில் என்னவரு நல்லி விழி யாரும்.'', ''மயிலினம் திரிவ என்னத் திரிந்தனர் மகளி ரெல்லாம்.'' (வரைக்காட்சிப் படலம், 15, 29), ''மயிலின் அன்னார்.'', ''மயில்போல் வருவாள்.'' (பூக்கொய் படலம், 10, 15), ''மயிற்கணங்கள் போல் வண்டுளர் கோதை மாதர்.'', ''கானமா மயில்கள் எல்லாம் களிகெடக் களிக்கும் சாயல் சோனைவார் குழலினார்..'' (நீர் விளையாட்டுப் படலம், 9, 14), ''கனங்குழை மயிலனாள்.'', ''புனத்துள மயிலனாள்.'' (உண்டாட்டுப் படலம், 43, 61), ''மயிலினம் திரிவ போன்றும்.'', ''புனம்கொள் கார்மயில் போலியோர் பொற்கொடி.'', (உலாவியற் படலம், 1, 29), ''கேகயன் தோகை.'', ''நாடக மயில்துயின் றென்ன.'' (மந்தரை சூழ்ச்சிப் படலம், 41, 88), ''ஆய்மயிற் பெண்ணருங் கலமே.'' (சித்திர கூடப் படலம், 32), ''அஞ்சொலின மஞ்ஞையென அன்னமென...வந்தாள்.'', ''மயில் வந்ததென வந்தாள்.'' (சூர்ப்பணகைப் படலம், 31, 33), ''மயிலுடைச் சாய லாளை.'', ''மயில் நின்றென வந்தென் முன்னர் இந்நின்ற வள்.'' (மாரீசன் வதைப் படலம், 85, 1181), ''தோகையும் இவ்வழித் தோமில் சிந்தனை, சேகறு நோன்பினர் என்னும் சிந்தையாள்.'', ''புனமயிற் சாயலின்.'', ''தோகையும் பெண்ணெனும் பேதைமை மயக்க.'', ''அஞ்சொல் மயிலை.'' (சடாயு உயிர்நீத்த படலம், 25, 28, 150, 190), ''இளமயிலின் இயல்பை நோக்கும் இயல்பானாள்.'', ''மயிலியல் பிரிந்த பின்.'' (அயோமுகிப் படலம், 31, 95), ''ஓடா நின்ற களி மயிலே சாயற் கொதுங்கி உள்ளழிந்து, கூடா தாரிற் றிரிகின்ற

நீயும் ஆகம் குளிர்ந்தாயோ.'' (பம்பா நதிப் படலம், 27.), ''தோகை மகளிர் குழாத்தினால்.'', ''மயிலியல்...மாதர்.'' (கிட்கிந்தைப் படலம், 45, 77), ''மயிலியற் றேவி மார்கள்.'' (கடல்தாவு படலம், 12), ''மயிலி யற்குயில் மழலையாள்.'', (காட்சிப் படலம், 4), ''மயிலினைத் தொழுது தோன்றி னான்.'' (உருக்காட்டு படலம், 22), ''மயிலியற் சீதை.'' (பிணிவிடு படலம், 15), ''மயிற்புரை இயலி னாரும்.'' (திருவடி தொழுத படலம், 71) என்று கம்பரும் பாடியருளிய வற்றைக் காண்க. ''மயிலியல் உமையினை.'' (இராவணன் பிறப்புப் படலம், 49), ''புனமயிற் சாயற்பைம் பொற்பூண் முலை ஒருத்தி.'' (அசுவமேத யாகப் படலம், 92.) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

தொண்டைச் செங்கனி வாய்: ''தொண்டை வாயினிர்.'' மந்திரப் படலம், 69.), ''தொண்டைவாய்க் கேகயன் தோகை.'' (மந்தரை சூழ்ச்சிப் படலம், 41), ''தொண்டை வாய் மடந்தைமார்.'' (கைகேசி சூழ்வினைப் படலம், 79), ''தொண்டையஞ் சேயொளித் துவர்த்தவாய்.'' (அயோமுகிப் படலம், 68), ''கொவ்வைப் பழனும்...தவளம்என் றுரைக்கும் வண்ணம் சிவந்து...வாய்.'' (நாடவிட்ட படலம், 49), ''தொண்டைவாய் மயிலினை.'' (உருக்காட்டு படலம், 22), ''தொண்டையங் கனிவாய்ச் சீதை.'' (பொழில் இறுத்த படலம், 40) என்று கம்பராமாயணத்தில் வருவனவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 148-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் தொண்டர்கள் கூறியதைக் கேட்ட சுந்தர மூர்த்தி நாயனார், ''இந்தப் பெண்மணியினுடைய திருநாமம் பரவை என்பது; இவள் தன்னுடைய பெண்ணுக்குரிய தன்மையில் பெருமையைப் பெற்ற தேவலோகத்தில் வாழும் தேவர்களின் கூட்டம் விரும்புகின்ற பெண்குறிகளைப் பெற்ற அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை முதலிய தெய்வப் பெண்மணிகள் வாழ்த்தித் துதிக்கும் தலைமையை

உடைய தெய்வ மங்கை; அழகோடு விளங்கும் இவளுடைய முத்துக்களைப் போலப் புன்னகை புரியும் பற்கள் முல்லை அரும்புகளைப் போலக் காட்சி அளிக்கும்; சீர்த்தியைப் பெற்ற பரவை என்னும் கூத்தை ஆடியருளும் திருமகளைப் போன்ற இவளுடைய திருவுருவத்தினுடைய மென்மையான சாயல் என்னும் அழகிய சமுத்திரத்தின் நடுவில் அகப்பட்ட என்னுடைய காதல் ஏழு சமுத்திரங்களைப் போன்றது." பாடல் வருமாறு:

**'' பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை
விரும்பல்குல்
லார்பரவை அணிதிகழும் மணிமுறுவல்
அரும்பரவை
சீர்பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட என்ஆசை எழு
பரவை. ''**

பேர்-அந்தத் தொண்டர்கள் கூறியதைக் கேட்ட சுந்தர மூர்த்தி நாயனார், இந்தப் பெண்மணியினுடைய திருநாமம். பரவை-பரவை என்பது. பெண்மையினில்-இவள் தன்னிடம் உள்ள பெண்ணுக்குரிய தன்மையில். பெரு-பெருமையைப் பெற்ற. உம்பர்-தேவலோகத்தில் வாழும் தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். அவை-கூட்டம். விரும்பு-விரும்பு கின்ற. அல்குலார்-பெண்குறிகளைப் பெற்றவர்களாகிய அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை முதலிய தெய்வப் பெண்கள்; ஒருமை பன்மை மயக்கம். பரவு-வாழ்த்தித் துதிக்கும். ஐ-தலைமையைப் பெற்ற தெய்வ மங்கை. அணி-அழகோடு. திகழும்-விளங்கும். மணி-முத்துக் களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். முறுவல்-புன்னகை பூக்கும் பற்கள்; ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம். அரும்பர்-முல்லை அரும்புகளைப் போன்றவை; ஒருமை பன்மை மயக்கம். அவை: பகுதிப் பொருள் விகுதி. சீர்-சீர்த்தியைப் பெற்ற, பரவை-பரவை என்னும் கூத்தை ஆடியருளும் திருமகளைப் போல; ஆகுபெயர். ஆயினாள்-

இருப்பவளுடைய. திரு உருவின்-திருமேனியாகிய வடிவத்தில் அமைந்த. மென்-மென்மையான. சாயல்-சாயல் என்னும். ஏர்-அழகைக் கொண்ட. பரவை-சமுத்திரத்தின். இடைப் பட்ட-நடுவில் அகப்பட்ட. என்-என்னுடைய. ஆசை-காதல். எழு-ஏழு. பரவை-கடல்களைப் போன்றது; உவம ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம்.

இவ்வாறன்றி, 'பெரும் பரவை' என்பதைப் பெரு உம்பர் அவை என்று பிரித்து, 'பெரிய தேவர்களுக்குத் தாயைப் போன்றவள்' என்று பொருள் கொள்ளுதலும் ஆம். உம்பர்-ஒருமை பன்மை மயக்கம். அவை-அவ்வை: தாய்; இடைக் குறை. 'விரும்பல்குலார் பரவை' என்பதை, விரும்பு அல்குல் ஆர்பு அரவு ஐ என்று பிரித்து, 'விரும்புகின்ற நிதம்பத்தி னுடைய அழகின் நிறைவு ஆதிசேடனாகிய பாம்பின் படத்தை ஒத்திருக்கும்' என்று பொருள் கூறுதலும் ஆம். ஆர்பு-நிறைவு; தொழிற்பெயர். அரவு ஐ-பாம்புகளின் தலைவனாகிய ஆதிசேடனுடைய படம்; அரவு; ஒருமை பன்மை மயக்கம். ஐ-தலைவனாகிய ஆதிசேடனுடைய படம்; ஆகுபெயர். 'சீர்பரவை ஆயினாள்' என்பதை, 'சீர் பரவு ஐ ஆயினாள்' என்று பிரித்து, 'திருமகளும் துதி செய்யத் தக்க அழகைப் பெற்றவள்' என்று பொருள் கூறுதலும் பொருந்தும்.

பிறகு வரும் 149-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் என இத்தகைய பலவற்றை யும் எண்ணிவிட்டு அடியேங்களுடைய தலைவனாகிய கைலாசபதி திருவாய் மலர்ந்தருளிச் செய்த முறைப்படி இந்தப் பிறவிக்கு முன்னால் இருந்து தொடர்ந்து வரும் காதல் என்னும் முறையில் கட்டப்பெற்று, "நன்றாக அடியேனைத் தடுத்து ஆட்கொண்டவராகிய வன்மீக நாதரிடத்தை அடைவேன்" என்று தம்முடைய திருவுள்ளத் தில் மகிழ்ச்சியை அடைந்து போய், ஆளுடைய நம்பியாகிய அந்தநாயனார் எழுந்தருளி எல்லாத் தேவர்களுக்கும் தலைவ

னாகிய வன்மீக நாதனுடைய ஆலயத்துக்குள் நுழைய.' பாடல் வருமாறு:

" என்றினைய பலவும்நினைந் தெம்பெருமான்
அருள்வகையான்
முன்தொடர்ந்து வரும்காதல் முறைமை
யினால் தொடக்குண்டு.
' நன்றெனையாட் கொண்டவர்பால் நண்ணு
வன்.' என் றுள்மகிழ்ந்து
சென்றுடைய நம்பியும்போய்த் தேவர்பிரான்
கோயில்புக. "

இந்தப் பாடல் குளகம். என்று-என. இனைய-இத்தகைய. பலவும்-பல எண்ணங்களையும். நினைந்து-சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணி. எம்பெருமான்-அடியேங்களுடைய தலைவனாகிய கைலாசபதி. அருள்-வழங்கிய திருவருளினுடைய. வகையான்-விதத்தினால். முன்-இந்தப் பிறவிக்கு முன்னாலிருந்து. தொடர்ந்து-தொடர்ச்சியாக அமைந்து. வரும்-உண்டாகி வரும். காதல்-காதலாகிய. முறைமையினால்-முறையால்; உறவு முறையால். தொடக்குண்டு-கட்டுப்பட்டு. நன்று-நன்றாக. எனை-அடியேனை; இடைக்குறை. ஆட்கொண்டவர்பால்-தடுத்து ஆட் கொண்டவராகிய வன்மீக நாதரிடம். நண்ணுவன்-போவேன். என்று-என. உள்-தம்முடைய திருவுள்ளத்தில். மகிழ்ந்து-மகிழ்ச்சியை அடைந்து. சென்று-தம்முடைய திரு மாளிகையிலிருந்து எழுந்தருளி. உடைய நம்பியும்-ஆளுடைய நம்பியாகிய அந்த நாயனாரும். போய்-சென்று. த்: சந்தி. தேவர்-தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. கோயில்-திருவாரூர்ப் பூங்கோயிலுக்குள். புக-நுழைய.

பிறகு உள்ள 150-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'பரவையார் என்னும் மாதரசியார் வலமாக வந்து வன்மீக நாதரை வணங்கி விட்டுத் துதித்துச் சுந்தர மூர்த்தி

நாயனாருக்கு முன்பாகவே அரசராகிய வன்மீக நாதருடைய ஆலயத்திலிருந்து ஒரு பக்கமாக வெளியில் வந்தார்; அப்போது நம்பி ஆரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் கொண்டிருந்த காதலால் மெல் லியலாகிய அந்தப் பரவையாரை விரும்பிப் பாம்புகளாகிய மாலையை அணிந்த வன்மீக நாதருடைய திருவடிகளை வணங்கினார்.' பாடல் வருமாறு:

'' பரவையார் வலம்கொண்டு பணிந்தேத்தி
முன்னரே
புரவலனார் கோயிலினின் றொருமருங்கு
புறப்பட்டார்;
விரவுபெருங் காதலினால் மெல்லியலார்
தமைவேண்டி
அரவின்ஆ ரம்புனைந்தார் அடிபணிந்தார்
ஆரூரர். ''

பரவையார்-பரவையார் என்னும் மாதரசியார். வலம் கொண்டு-வலமாக வந்து. பணிந்து-வன்மீக நாதரை வணங்கி. ஏத்தி-துதித்துவிட்டு. முன்னர்-சுந்தர மூர்த்தி நாயனாருக்கு முன்னால். ஏ: அசை நிலை. புரவலனார்-அரசராகிய தியாக ராருடைய. கோயிலினின்று-ஆலயத் திலிருந்து. ஒரு மருங்கு-ஒரு பக்கமாக. புறப்பட்டார்-வெளியில் வந்தார். விரவு-தம்முடைய திருவுள்ளத்தில் கொண்ட. பெரும்-பெரியதாக இருக்கும். காதலினால்-காதலால். மெல்லியலார்தமை-மெல்லியலாராகிய அந்தப் பரவையாரை. தம்: அசை நிலை. தமை: இடைக்குறை. வேண்டி-அடைய விரும்பி. அரவின்-பாம்புகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். ஆரம்-மாலையை. புனைந்தார்-அணிந்த வராகிய வன்மீக நாதருடைய. அடி-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். ஆரூரர்-நம்பியாரூரராகிய அந்த நாயனார். பணிந்தார்-வணங்கினார்.

மெல்லியலார்: ''மெல்லினத்தார் பக்கல் மேவினர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மெல்லியல்

இறைஞ்சி.'', ''சில்லைச் சிறுசொல் மெல்லியல் மிழற்ற.'', ''மெல்லியல் மாதரை உள்ளகம் புகுத்தி.'', ''மெல்லியற் குலமகள்.''; ''மெழுகுசெய் பாவையின் மெல்லியல் அசைந்து.'', ''மெல்லியற் பணைத்தோள் மகளிர்க்கு.'', ''மெல்லியற் கோமகள் மெல்லென வாங்கி.'', ''மெல்லியல் மாதர் நகுமொழி பயிற்ற.'' (**பெருங்கதை**, *1. 33: 178, 35: 248, 38: 259, 2. 2: 46, 2. 16: 115, 3. 7: 11-2, 8: 94, 22: 119*) என்று கொங்கு வேளிரும், ''முல்லை சான்ற கற்பின் மெல்லியல், மடமான் நோக்கின் வாணுதல் விறலியர்.'' (**சிறுபாணாற்றுப்படை**, *30-31*) என்று நத்தத்தனாரும், ''மெல்லியல் மகளிர் நல்லடி வருட.'' (**நெடுநல் வாடை**, 151) என்று நக்கீரனாரும், ''சொல்லலும் பழியோ மெல்லியலீர்.'' (**குறிஞ்சிப் பாட்டு**, *145*) என்று கபிலரும், ''மெல்லிய லாளை நோக்கி.'' (அகலிகைப் படலம், 79), ''மெல்லியல் முலைகளும் விம்ம விம்முவாள்.'' (கார்முகப் படலம், 63), ''மெல்லியல் ஒருத்தி.'' (உண்டாட்டுப் படலம், 46), ''பாருழையி னில்லதொரு மெல்லுருவு.'' (சூர்ப்பணகைப் படலம், 36) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 151-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் அவ்வண்ணம் வன்மீக நாதரை வணங்கித் துதித்துவிட்டு, ''அழகைப் பெற்ற திருவாரூர்ப் பூங்கோயிலில் விளங்கும் அழகிய பாம்புப் புற்றில் எழுந்தருளியிருப்பவரும், மையின் நிறம் தங்கியிருக்கும் அழகிய கழுத்தைக் கொண்ட மகர் தேவரும் ஆகிய வன்மீக நாதரிடத்திலிருந்தும் வந்து என்னுடைய இனிய உயிரைப் போன்றவளும், அன்னப் பறவையைப் போன்றவளும் ஆகிய பரவை எந்த வழியாகப் போனாள்?'' என்று எண்ணி அந்த நாயனார் சிவந்த அதரங்களோடு கூடிய வாயையும், வெண்மையான பற்களையும் பெற்றவளும், பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய அந்தப் பெண்மணியைத் தேடிக் கொண்டு போவா ரானார்.' பாடல் வருமாறு:

**''‘அவ்வாறு பணிந்தேத்தி அணிஆரூர் மணிப் புற்றின்**
**மைவாழும் திருமிடற்று வானவர்பால் நின்றும்போந்**
**தெவ்வாறு சென்றாள்என் இன்னுயிராம் அன்னம்?’எனச்**
**செவ்வாய்வெண் நகைக்கொடியைத் தேடுவா ராயினார்.''**

அவ்வாறு-சுந்தர மூர்த்தி நாயனார் அந்த வண்ணம். பணிந்து-வன்மீக நாதரை வணங்கி. ஏத்தி-துதித்துவிட்டு. அணி-அழகைப் பெற்ற. ‘அலங்காரத்தைப் பெற்ற’ எனலும் ஆம். ஆரூர்-திருவாரூர்ப் பூங்கோயிலில் விளங்கும்; ஆகு பெயர். மணி-அழகிய. புற்றின்-பாம்புப் புற்றில் எழுந்தருளி யிருப்பவரும்; இட ஆகுபெயர். மை-மையினுடைய நிறம். வாழும்-தங்கியிருக்கும். திரு-அழகிய. மிடற்று-கழுத்தைக் கொண்ட. வானவர்-மகா தேவரும் ஆகிய வன்மீக நாதரு டைய. பால் நின்றும்-இடத்திலிருந்தும். போந்து-வந்து. என்-என்னுடைய. இன்-இனிமையான. உயிராம்-உயிரைப் போன்றவள் ஆகும்; உவம ஆகுபெயர். அன்னம்-அன்னப் பறவையினுடைய தோற்றத்தையும் நடையையும் கொண்ட வள்; உவம ஆகுபெயர். எவ்வாறு-எந்த வழியாக. சென் றாள்-போனாள். என-என்று எண்ணி; இடைக்குறை. ச்: சந்தி. செவ்-சிவந்த அதரங்களோடு கூடிய; வினை யாலணையும் பெயர். வாய்-வாயையும். வெண்-வெண்மை யான. நகை-பற்களையும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொடியை-பூங்கொடியைப் போன்ற திருமேனியையும் பெற்றவளை; உவம ஆகுபெயர். த்: சந்தி. தேடுவார்-தேடிக்கொண்டு போவார். ஆயினார்-அந்த நாயனார் ஆனார்.

மகளிருக்கு அன்னப் பறவை உவமை: ''அன்னம் அன்ன மென்னடையாள்.'', ''அன்ன நடையார் மனைகள் தோறும் அழகாற் பலிதேர்ந்து.'', ''அன்னமன நடையாள் ஒருபாகத்

தமர்ந்தருளி.'', ''மடஅன்னமும் அன்னதோர் நடையுடைம் மலைமகள்.'', ''அன்னநடைப் பெடைமான் விழித் திருந்திழை.'', ''அன்ன மென்னடை அரிவையொ டினிதுறை அமரர்தம் பெருமானார்.'', ''அன்ன மன்னநடைச் சாய லோடு.'',''அன்னமன் னந்நடை மங்கை.'', ''அன்னமன் னந் நடை யாளொடும்.'', ''அன்னமன் ன ந் ந டை அரிவை பங்கரே.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''அன்ன நடையார் அதிகைக் கெடில வீரட் டானத் துறை யம் மானே.'', ''அன்ன நடையாள் பாகத் தானே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அன்னத் தொழுதியின் மென்மெல வலங்கொண், டம்மென் சாயற் செம்முது பெண்டிர்.'', ''அன்ன மென்னடை அரிவை.'' (**பெருங்கதை,** 2. 3: 59. 60, 3. 9: 6) என்று கொங்கு வேளிரும், ''அன்னம் ஒத்தும்.'', ''அன்னங்க ளாகி யம்பூந் தாமரை அல்லி மேய்வார்.'' (**சீவக சிந்தாமணி**, 189, 2262) என்று திருத் தக்க தேவரும், ''இளஅன்னப் பேடை.'' (**விக்கிரம சோழனுலா,** 115) என்று ஒட்டக் கூத்தரும், ''அன்ன மென் னடையவர் ஆடு மண்டபம்'' (நகரப் படலம், 12), ''அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ.'', ''அன்னம் இன்னணம் ஆயினள்.'' (மிதிலைக் காட்சிப் படலம், 11, 182), ''அன்னங்கள் புகுந்த என்ன அகன்சுனை குடை கின் றாரும்.'' (வரைக்காட்சிப் படலம், 54), ''அன்னமும்... நாண மன்னலை இருந்தமணி மண்டபம் அடைந்தாள்.'', ''அன்னம் அரிதிற் பிரிய.'' (கோலம் காண் படலம், 28, 43), ''அன்னமென் னடையாரும்.'', ''அன்ன மென்னடை அணங்கனைய மாதரும்.'', ''ஆர்வத் தின் றுணை அன்னமும்.'', ''அன்னமும் அன்னவர் அம்பொன் மலர்த் தாள் சென்னி புனைந்தனள்.'' (கடிமணப் படலம், 33, 44, 86, 96), ''அன்ன மென்னடையாய்.'' (வனம்புகு படலம், 14), ''அன்னமும் துயர்க்கடல் அடிவைத் தாளரோ.'' (கிளை கண்டு நீங்கு படலம், 87), ''அன்னம் அன்ன அணங்கினை நோக்கினான்.'' (சடாயு காண் படலம், 42,), ''ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும் சீதைதன்

நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய்தான்.'', ''அன்னமென...வஞ்சமகள் வந்தாள்.'', ''அன்னம் மின்னிடை அலச ஓடி.'' (சூர்ப்பணகைப் படலம், 5, 31, 69) ''தாமரை வனத்திடை தாவும் அன்னம்போல், தூமவெங் காட்டெரி தொடர்கின் றாள்தனை.'', ''குலைவுறல் அன்னம்.'', ''அன்னம் அயர்கின்றது நோக்கி.'' (சடாயு உயிர் நீத்த படலம், 14, 68, 105), ''சனகன் பெற்ற அன்னத்தை.'' (வாலிவதைப் படலம், 78), ''தூவி அன்னம் அன்னாள்.'' (கார்காலப் படலம், 51), ''களிமட அன்னம் என்ன...அரக்கர் மாதர்.'' (ஊர் தேடு படலம், 103), ''அன்ன நடையாய் கேட்கென்ன அறிய அறைவா னாயினான்.'' (உருக்காட்டு படலம், 59), ''அன்னமும் முன்னர்ச் சொன்ன முறைமையின் அடியில் வீழ்ந்தாள்.'', (மீட்சிப் படலம், 244) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க. ''அன்னமென் னடையினார் அடியிணை வருட.'' (திக்கு விசயப் படலம், 242), ''அன்னமென் னடைநேர் நருமதை என்னும் அரிவை.'' (கார்த்தவீரியார்ச் சுனப் படலம், 3), ''அன்னமென் னடைநுண் மின்னிடை மருங்குல் அணிதிகழ் மேகலை.'', ''மென்னடை அன்னம் நின்னடைக் கஞ்சி வெளியிடை நின்றிட வெள்கித் துன்னிடை மலர்ப்பூஞ் சோலையில் மறைய.'', (சீதைவனம் புகுபடலம், 16, 17) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

அடுத்து வரும் 152-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் பரவையாரைத் தேடும் போது,''பந்த பாசமாகிய அடியேனுடைய தீய வினையாகிய பற்றை அறுப்பதற்காக மிகுதியாக இருக்கும் ஆசைக்கு மேலாகவும் ஓர் ஆசையை உண்டாக்குவதாகிய ஒளியோடு நிலைபெற்று விளங்கி என்னுடைய உள்ளத்தை மயங்கச் செய்த பரமேசுவரராகிய வன்மீக நாதருடைய திருவருளைப் போன்ற பெண்மணி எந்த வழியாகப் போனாளோ?'' என்று எண்ணினார்.' பாடல் வருமாறு;

**" பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலும்ஓர் ஆசை அளிப்பதோர்
தேசின் மன்னிஎன் சிந்தை மயக்கிய
ஈச னார்அருள் எந்நெறிச் சென்றதே. "**

*பாசமாம்-பந்த பாசமாகும். வினை-தீவினையாகிய. பற்று-பற்றை. அறுப்பான்-அறுத்துக் கொள்வதற்காக. மிகும்-என்னிடத்தில் மிகுதியாக உண்டாகும். ஆசை மேலும் -ஆசைக்கு மேலாகவும். ஓர்-ஒப்பற்ற. ஆசை-இவளை அடையவேண்டும் என்னும் ஆசையை. அளிப்பது-உண்டாக்கு வதாகிய. ஓர்-ஒப்பற்ற. தேசின்-திருமேனியில் வீசும் ஒளி யோடு. மன்னி-நிலைபெற்று விளங்கி. என்-அடியேனுடைய. சிந்தை-உள்ளத்தை. மயக்கிய-மயங்கச் செய்த. ஈசனார்-பரமேசுவரராகிய வன்மீக நாதருடைய. அருள்-திருவருளைப் போல விளங்கும் அந்தப் பரவை. எந்நெறி-எந்த வழியாக. ச்: சந்தி. சென்றதே-போனாளோ; திணை மயக்கம். இவ்வாறு சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணினார்.*

*அடுத்து வரும் 153-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*' "தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய தலைவ ராகிய வன்மீக நாதருடைய வீரக் கழலைப் பூண்ட திருவடி களை அல்லாமல் வேறு எதையும் நம்பும் வழியை அறியாத அடியேனை நடுக்கத்தை அடையும் வண்ணம் நிலையில்லாத விருப்பத்தை உண்டாக்கிவிட்டுப் பூங்கொடியைப் போலத் துவண்டு இன்றைக்கு அடியேங்களுடைய தலைவனாகிய வன்மீக நாதனுடைய திருவருளைப் போல்பவளாகிய பரவை எந்த வழியாகச் சென்றாளோ?" என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணினார்.' பாடல் வருமாறு:*

**" உம்பர் நாயகர் தம்கழல் அல்லது
நம்பு மாறறி யேனை நடுக்குற
வம்பு மால்செய்து வல்லியின் ஒல்கிஇன்
றெம்பி ரான்அருள் எந்நெறிச் சென்றதே. "**

உம்பர்-தேவலோகத்தில் வாழும் தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகர்தம்-தலைவராகிய வன்மீக நாதருடைய. தம்: அசை நிலை. கழல்-வீரக்கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். 'கழல்' இன்னதென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. அல்லது-அல்லாமல். நம்புமாறு-வேறு எதையும் நம்பும் வழியை. அறியேனை-அறியாதவனாகிய அடியேனை. நடுக்குற-நடுக்கத்தை அடைய. வம்பு-நிலையில்லாத. மால்-விருப்பத்தை; காம மயக்கத்தை. செய்து-உடையவனாகச் செய்துவிட்டு. வல்லியின்-பூங்கொடியைப் போல. ஒல்கி-துவண்டு. இன்று-இன்றைக்கு. எம்பிரான்-அடியேங்களுடைய தலைவனாகிய வன்மீக நாதனுடைய. 'அடியேங்கள்' என்றது சுந்தர மூர்த்தி நாயனார் தம்மையும் மற்றத் தொண்டர்களையும் சேர்த்து. அருள்-திருவருளைப் போன்ற பரவை; உவம ஆகுபெயர். எந்நெறி-எந்த வழியாக. ச்: சந்தி. சென்றதே-போனாளோ; திணைமயக்கம்.

மகளிருடைய தோற்றத்திற்கும் இடைக்கும் பூங்கொடி உவமை: "வல்லிநுண் இடையாள் உமையவள்.", "வல்லிய நுண்ணிடையாள் உமையாள்.", "கொடிபுல்கு மென்சாயல் உமை.", "கொடிஇலங்கும் இடையாள்.", "கொடியிடை வெருவுற.", "கொடியன சாயலாளோடு.", "பூங்கொடி மடவாள் உமை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "வள்ளி மருங்குல்.", "இமவான் பெற்ற பெண் கொடி.", "கொடியிடையார் ஏழை மென்றோள் இளையார்கள்.", "பைங்கொடியாள் பாகன்.", "கொடிமருங்குல் உமையாட்கு." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "குன்ற மலைக்குமரி கொடியே ரிடையாள்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளி." (**திருமுருகாற்றுப்படை**, 13-4) என்று நக்கீரரும், "புது வதுவை சென்னியுடன் வல்லி பெறுதி.", "வல்லிநாம்." (**விக்கிரம சோழன் உலா**, 151, 198) என்று ஒட்டக் கூத்தரும், "சிறுகொடி மருங்கின்.", "கொடியென நடுங்கும் கோல மருங்குலர்.", "கொடிசேர் சாயலை.", "சில்லென்

கோலத்துச் சிறுகொடி மருங்கில்.'', ''பிடியிடை ஒடுங்கும் கொடியிடை மருங்கின்.'', ''வளர்கொடி மருங்குல் வருந்தப் புல்லி.'', ''ஒழுகுகொடி மருங்குல் ஒன்றாய் ஒட்டி.'', ''கொடி புரை மருங்குல் வால்வளைப் பணைத்தோள் வாசவதத் தாய்.'', (**பெருங்கதை,** 1. 40: 297, 42: 71, 44: 154, 46: 138, 2. 10: 43, 16: 114, 17: 112-3) என்று கொங்கு வேளிரும், ''கொடிமின் னிடைக்கயல் மணிக்கணின் நல்லவர்.'' (**சீவக சிந்தாமணி,** 1310) என்று திருத்தக்க தேவரும், ''ஒருமடக் கொடி யாகி வந்து.'' (அகலிகைப் படலம், 51), ''கொடி யுலாம் மருங்குல் நல்லார்.'' (நீர் விளையாட்டுப் படலம், 13), ''வல்லியை உயிர்த்தநில மங்கை.'' (கோலம் காண் படலம், 24), ''கன்றுபிரி காராவின் துயருடைய கொடி.'' (குகப் படலம், 66) ''வல்லிகள் நுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்குவ நோக்க.'' (சூர்ப்பணகைப் படலம், 6), ''வள்ளிநுண் மருங்குல்.'' (ஊர் தேடு படலம், 38), ''மடக்கொடிச் சீதை.'' (காட்சிப் படலம், 64), ''கொடித் தான் என்ன மெய்சுருண்டாள்.'' (பிராட்டி களம் காண் படலம், 3) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 154-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''பாசபந்தத்தையும் முக்தியையும் வழங்கும் பரமேசுவர னாகிய வன்மீக நாதனுடைய வீரக்கழலைப் பூண்ட திருவடி களை அடியேனுடைய உள்ளத்தில் நிறைவு பெறும் வண்ணம் அமையவும் தியானிக்கும் அடியேனுடைய மனத்தை இங்கே வந்து காமமயக்கத்தை உண்டாக்கி விட்டு மானைப் போலத் தோற்றம் அளித்தும், அந்த விலங்கைப் போலப் பார்த்தும் அடியேங்களுடைய தந்தையாரைப் போன்ற வன்மீக நாதர் வழங்கும் திருவருளை ஒத்த பரவை எந்த வழியாகப் போனாளோ'' என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணினார்.' பாடல் வருமாறு:

**'' பந்தம் வீடு தரும்பர மன்கழல்**
**சிந்தை ஆரவும் உன்னும்என் சிந்தையை**

வந்து மால்செய்து மான்என வேவிழித்
தெந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே. ''

பந்தம்-பிறப்புக்குக் காரணமான பற்றையும். வீடு-அந்தப் பற்றை ஒழித்து விட்டால் முக்தியையும். தரும்-வழங்கியருளும். பரமன்-பரமேசுவரனாகிய வன்மீக நாதனுடைய. கழல்-வீரக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகு பெயர். 'கழல்' இன்னதென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. சிந்தை-அடியேனுடைய உள்ளம். ஆரவும்-நிறைவு பெறும் வண்ணமும். உன்னும்-தியானிக்கும். என்-அடியேனுடைய. சிந்தையை-மனத்தை. வந்து-இங்கே அடியேனுக்கு முன்னாலே வந்து. மால்-காம மயக்கத்தை. செய்து-உண்டாக்கி விட்டு. மான்-மானை. என-என்று கூறும்படி தோன்றியும்; என: இடைக்குறை. ஏ: அசை நிலை. விழித்து-அந்த மானைப் போலவே நோக்கியும். எந்தையார்-அடியேங்களுடைய தந்தையாரைப் போன்ற வன்மீக நாதர். 'அடியேங்கள்' என்றது சுந்தர மூர்த்தி நாயனார் தம்மையும் மற்றத் தொண்டர்களையும் சேர்த்து. அருள்-வழங்கும் திருவருளைப் போன்ற பரவை; உவம ஆகுபெயர். எந்நெறி-எந்த வழியாக. ச்: சந்தி. சென்றதே-போனாளோ; திணை மயக்கம்.

பந்தம் வீடு தரும் பரமன்: ''பந்தமும் வீடும் படைப் போன்.'' என்று **திருவாசகத்தில்** வருவதைக் காண்க.

மகளிர் தோற்றத்துக்கு மானின் தோற்றமும், அவர்களுடைய பார்வைக்கு மானின் பார்வையும் உவமைகள்: ''மானடைந்த நோக்கி காண மகிழ்ந்தெரி யாடலென்னே.'', ''மானேர் நோக்கி கண்டங் குவப்ப மாலை ஆடுவார்.'', ''மானன மென்விழி மங்கையொர் பாகமும் ஆனவன்.'', ''மான் விழித்திருமாதைப் பாகம் வைத்து.'', ''மானமரும் மென்விழியாள் பாக மாகும் மாண்பினீர்.'', ''மான்அஞ்சும் மடநோக்கி மலைமகள்.'', ''மானை நோக்கியைத் தேவி தன்னை.'', ''மானினேர்விழி மாதராய் வழுதிக்கு மாபெருந் தேவி.''. ''மானார் விழிநன் மாதொடும் மகிழ்ந்து

மைந்தன்.'', ''மானம் மடநோக் குடையாள்.'', ''மானன நோக்கி தன்னோ டுடனாவது மாண்பதுவே.'', ''மானன மென்விழி யாளொடும் வக்கரை மேவியவன்.'' என்று திரு ஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மானுலாம் மழைக் கணார்.'', ''மான்பெட்டை நோக்கி மணாளீர்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மான்மறித் தனைய நோக்கி மடந்தைமார்.'', ''மானை மேவிய கண்ணினாள் மலை மங்கை.'', ''மானைப் புரையும் மடமென் னோக்கி மடவாள்.'', ''வரைமான் அனையார்.'', ''மானை நோக்கியர் கண்வலைப் பட்டு.'', ''மான்திகழும் சங்கிலியை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மானேர் நோக்கி மணாளா.'', ''மானேர் நோக்கி உமையாள் பங்கா.'',''வலைத்தலை மானன்ன நோக்கியர்.'', ''உழைதரு நோக்கியர்.'', ''மானே நீ.'', ''மானோர் பங்கா.'', ''மானேர் நோக்கி மணவாளா மன்னே.'' என்று மாணிக்க வாசகரும், ''மடமான் நோக்கின் வாணுதல் விறலியர்.'' (**சிறுபாணாற்றுப் படை**, 31) என்று நத்தத்தனாரும், ''மானமர் நோக்கம் கலங்கி.'' (**குறிஞ்சிப் பாட்டு**, 25) என்று கபிலரும், ''மான்நோக்கிற் கிளிமழலை மென்சாயலோர்.'' (**பட்டினப் பாலை**, 149-50) என்று கடியலூர் உருத்திரங் கண்ணனாரும், ''மானின் மடப் பெடை மம்மர் எய்த.'', ''மானமர் பிணையின் மம்மர் எய்தி.'', ''மான்தோம் கூறும் மம்மர் நோக்கினர்.'', ''மானேர் நோக்கியர்.'', ''மானேர் நோக்கின் வாசவ தத்தை.'', ''மானேர் நோக்கின் மதன மஞ்சிகையும்.'' (**பெருங்கதை**, 1. 53: 151, 56: 29, 2. 2: 223, 5: 112, 3. 6: 40, 5, 9: 91) என்று கொங்கு வேளிரும், ''மானின் நோக்கி வரும்வழி நோக்கி.'', ''மானயா நோக்கியர்.'', ''மானை நோக்கியர் வாய்மது வாடின.'' (**சீவக சிந்தாமணி**, 359, 1822, 2578) என்று திருத்தக்க தேவரும், ''மானேர் நோக்கம் மறப்பார் அல்லர்.'' (**சிலப்பதிகாரம்**, 7: 44) என்று இளங் கோவடிகளும், ''பிணையேர் மடநோக்கும்.'' (**குறள்**, 1089) என்று திருவள்ளுவரும், ''மானிளம் பிணையோ.'' (தடுத்

தாட்கொண்ட புராணம், 134), "மங்கையர்க்குவாள் விழி யிணை தோற்ற மான்குலங்கள்." (திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம், 18), "மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார்." (காரைக்காலம்மையார் புராணம், 45), "மானினேர் விழியினாய் கேள்." (திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் புராணம், 760) என்று சேக்கிழாரும், "பிள்ளைமான் நோக்கியை.", "உழைகவித்தன என்ன உயிர்த்துணை நுழைக விக்கருங் கண்ணியர்." (எழுச்சிப் படலம், 27, 48), "நவ்வி நோக்கியர்.", "நவ்வி விழியாரும்." (வரைக்காட்சிப் படலம், 9, 15), "மானி னோக்கியர் மைந் தரோ டாடிய ஆன நீர்விளை யாடலை நோக்கினான்." (நீர் விளையாட்டுப் படலம், 32), "மானுடை நோக்கினார்.", "மானமர் நோக்கி." (உண்டாட்டுப் படலம், 7, 26), "மானினம் வருவ போன்றும்." (உலாவியற் படலம், 1), "உழைகுலாம் நயனத்தார்." (கோலம்காண் படலம், 20), "புனமானனை யாரொடு போயின என்மனனே." (கடிமணப் படலம், 16), "நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்.", "நவ்வி வீழ்ந்தென." (மந்தரை சூழ்ச்சிப் படலம், 78, 88), "மடந்தையை மானை எடுக்கும் ஆனையே போல்...எடுக்க லுற்றான்.", "வண்மைக் கேகயன் மானே." (கைகேசி சூழ்வினைப் படலம், 3, 28), "ஏவுண் டோய்வுறும் உழைக் குலம் உழைப்பன ஒத்து." (நகர் நீங்கு படலம், 202), "சாயல் கண்டும் நின்விழி கண்டும் மஞ்ஞையும் மடமானும் வருவன பலகாணாய்.", "மயிலியல் இளமானே." (வனம் புகு படலம், 6, 3), "மானே அனையாளொடு." (சரபங்கர் பிறப்பு நீங்கு படலம், 23), "மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.", "நவ்வியின் ஒதுங்கி." (சூர்ப்ப ணகைப் படலம், 33, 37), "சீதை என்னும்மான்.", "நன் மான் அனையாள் தனைநாடுவான்." (மாரீசன் வதைப் படலம், 79, 213), "தொள்கின்றலை எய்திய மானெனச் சோர்ந்து நைவாள்." (சடாயு உயிர் நீத்த படலம், 130), "மானே அன்னாள்." (கவந்தப் படலம், 30), "நவ்வி நோக்கி யர் இதழ்நிகர் குமுதத்து நறுந்தேன்.", "அமிழ்து

போலவே உரைசெய்புன மானை நாடுதல் புரிஞர்.'' (பம்பா நதிப் படலம், 17, 43), ''உழையுலாம் நெடுங்கண் மாதர்.'' (கலன் காண் படலம், 35), ''சனகன் மானை நாடி நின்றழைப் பன போன்றன மஞ்ஞை.'' (கார்காலப் படலம், 44), ''செவ்வுழை நெடுங்கணவள்.'' (பிலம் நீங்கு படலம், 55), ''உழைத்தடம் கண்ணி.'' (சம்பாதிப் படலம், 1), ''என்மான் அகவ்வுற்றனள்.'', (உருக்காட்டு படலம், 87), ''மானார் கண்ணிள மடவா ராயினர்.'' (அட்ச குமாரன் வதைப் படலம், 40), ''வல்லியம் மருங்கு கண்ட மானென மறுக்க முற்று மெல்லியல் ஆக்கை முற்றும் நடுங்கினள்.'' (மாயா சனகப் படலம், 18), ''மானிடைக் கயலில் வாளின் மலரிடை நயனம் வாங்கி.'' (நாகபாசப் படலம், 283), ''மானமர் நோக்கி னாரை.'' (களியாட்டுப் படலம், 12), ''மானனை யாளை.'' (மாயா சீதைப் படலம், 30), ''உழைப் பொலி உண்கண்.'' (இராவணன் வதைப் படலம், 231) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

''மானின் நோக்கினாள்.'' (புலத்தியப் படலம், 9) ''மானை நேர்விழி மங்கையர் வாழ்த்திட'' (வரை எடுத்த படலம், 29) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

அடுத்து உள்ள 155-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணி மிகவும் ஆற்ற முடியாதவராய், ''என்னுடைய உயிரைப் போன்ற பரவை எந்த இடத்தில் நின்று கொண்டிருக்கிறாள்?'' என்று கருதி, முத்துக்களாலான மாலையாகிய அணிகலனை அணிந்த கொங்கைகளையும், நறுமணம் வீசும் நீண்ட கூந்தலையும், வஞ்சிக் கொடியைப் போன்ற தோற்றப் பொலிவையும் இடையையும் பெற்ற அந்தப் பெண்மணியைத் தேடுவதற்காகப் போய்த் திருவாரூர்ப் பூங்கோயிலில் உள்ள தேவாசிரயன் என்னும் காவணத்தை அடைந்து, பிறகு.' பாடல் வருமாறு:

**'' என்று சாலவும் ஆற்றலர், 'என்னுயிர்**
**நின்ற தெங்'கென நித்திலப் பூண்முலை**
**மன்றல் வார்குழல் வஞ்சியைத் தேடுவான்**
**சென்று தேவா சிரயனைச் சேர்ந்தபின். ''**

*இந்தப் பாடல் குளகம். என்று-என்று இவ்வாறு சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணி. சாலவும்-மிகவும். ஆற்றலர்-தம்முடைய துயரத்தை ஆற்ற முடியாதவராகி; முற்றெச்சம். என்-என்னுடைய. உயிர்-உயிரைப் போன்ற பரவை; உவமை ஆகுபெயர். எங்கு-எந்த இடத்தில். நின்றது-நின்று கொண்டிருக்கிறாள்: திணை மயக்கம். என-என்று கருதி; இடைக்குறை. நித்தில-முத்துக்களைக் கோத்த; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பூண்-அணிகலனாகிய மாலையை அணிந்திருக்கும். முலை-கொங்கைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். மன்றல்-நறுமணம் கமழும். வார்-நீளமான. குழல்-கூந்தலையும். வஞ்சியை-வஞ்சிக் கொடியைப் போன்ற தோற்றப் பொலிவையும் இடையையும் பெற்ற பரவையை. த்: சந்தி. தேடுவான்-தேடும் பொருட்டு. சென்று-போய். தேவாசிரயனை-திருவாரூர்ப் பூங்கோயிலில் உள்ள தேவாசிரயன் என்னும் காவணத்தை. ச்: சந்தி. சேர்ந்த-அடைந்த. பின்-பிறகு.*

*வஞ்சி: ''வஞ்சி மருங்குல் வாடுபு நுடங்க.'', ''என்வஞ்சி மருங்குல்.''* (**பெருங்கதை,** *2. 9: 163, 3. 1: 157) என்று கொங்கு வேளிரும், ''வஞ்சியங் கொம்பனாள்.'', ''வஞ்சி நுண்ணிடை.''* (**சீவக சிந்தாமணி,** *358, 2384), ''வஞ்சியிடையீர்.''* (**சிலப்பதிகாரம்,** *29), ''வஞ்சி மகளிர்கொல்.'' என்று இளங்கோவடிகளும், ''வஞ்சிபோல் மருங்குல்.'' (நகரப் படலம், 10), ''வஞ்சிபோல் இடையாள்.'' (அகலிகைப் படலம், 85), ''வஞ்சிபோல் மருங்குலார்.'' (பூக்கொய் படலம், 7), ''வஞ்சிபோலி'' (மந்தரை சூழ்ச்சிப் படலம், 68), ''வஞ்சி நாண.'', ''வஞ்சியாள் வதனம் என்னும் தாமரை.'' (கங்கைப் படலம், 20, 51), ''வஞ்சியென நஞ்ச*

மென வஞ்சமகள் வந்தாள்.'', ''வஞ்சி யன்ன மின்னிடை அலச ஓடி.'' (சூர்ப்பணகைப் படலம், 31, 66), ''வஞ்சியை வல்லைக் கொண்டுபோய்.'' (சடாயு உயிர் நீத்த படலம், 143), ''வஞ்சிகள் பொலிந்தன மகளிர் மாலைபோல்.'' (கார்காலப் படலம், 119), ''வஞ்சிபோல் மருங்குவாள்.'' (நாடவிட்ட படலம், 37), ''வஞ்சியிற் செவ்வியாளை.'' (நிந்தனைப் படலம், 74), ''வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினாள்.'' (உருக்காட்டு படலம், 106), ''பஞ்சியடி வஞ்சியர்கள்.'' (பொழிவிறுத்த படலம், 14), ''வஞ்சியை எங்கும் காணா துயிரினை மறந்தா னென்ன.'' (மாயா சீதைப் படலம், 51) என்று கம்பரும் பாடியவற்றைக் காண்க.

''வஞ்சியிடையோ வனமுலையோ.'' (சம்புவன் வதைப் படலம், 59), ''வஞ்சியுறை நுண்ணிடை வருந்த.'', ''வஞ்சி போல் இடையார்.'' (அசுவமேத யாகப் படலம், ;9, 68) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

அடுத்து உள்ள 156-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நீலோற்பல மலர்களை ஒத்திருக்கும் கண்களைப் பெற்ற பரவையை அடையும் பொருட்டுச் சுந்தர மூர்த்தி நாயனார் யாரோடும் வார்த்தைகளைப் பேசாமல் இருந்து, ''திருவாரூர்ப் பூங்கோயிலை ஆட்சி புரிகிறவராகிய வன்மீக நாதர் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற அந்த மங்கையை அடியேனுக்கு வழங்கி அடியேனு டைய உயிரை விட்டு விடாமல் வழங்கியருள்வார்'' என்று அந்த நாயனார் எண்ணிக் கொண்டிருக்கும் சமயத்தில்.' பாடல் வருமாறு:

**'' காவி நேர்வரும் கண்ணியை நண்ணுவான்**
**யாவ ரோடும் உரை இயம் பாதிருந்**
**' தாவி நல்குவர் ஆரூரை ஆண்டவர்**
**பூவின் மங்கையைத் தந்'தெனும் போழ்தினில். ''**

இந்தப் பாடல் குளகம். காவி-நீலோற்பல மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். நேர்வரும்-ஒத்து விளங்கும். கண்ணியை-கண்களைப் பெற்ற பரவையை; ஒருமை பன்மை மயக்கம். நண்ணுவான்-அடையும் பொருட்டுச் சுந்தர மூர்த்தி நாயனார். யாவரோடும்-வேறு யாருடனும். உரை-வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். இயம்பாது இருந்து-பேசாமல் இருந்து. ஆரூரை-திருவாரூர்ப் பூங் கோயிலை; இட ஆகுபெயர். ஆண்டவர்-ஆட்சி புரிபவராகிய வன்மீக நாதர். பூவின்-செந்தாமரை மலரில் வீற்றிருக்கும். மங்கையை-மங்கையாகிய திருமகளைப் போன்ற அந்தப் பரவையை; உவம ஆகுபெயர். த்: சந்தி. தந்து-அடியே னுக்கு வழங்கியருளி. ஆவி-அடியேனுடைய உயிரை. நல்குவர்-விட்டுவிடாமல் அளிப்பார். எனும்-என்று அந்த நாயனார் எண்ணிக் கொண்டிருக்கும்; இடைக்குறை. போழ்தினில்-சமயத்தில்.

மகளிர் கண்களுக்கு நீலோற்பல மலர்கள் உவமை: "காவி மலர்புரையும் கண்ணார்.", "காவியம் சுருங்கண்ணி னாள்.", "காவியின் நேர்விழி மாதர்.", "காவியங்கண் மடவாளொடும்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "சுனையுள் நீலம் சுளியும் நெடுங்கணாள்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "குவளைக் கண்ணி கூறன் காண்க." (திருவண்டப் பகுதி, 64), "பானல் தடங்கண் மடந்தை நல்லீர்." (திருப்பொற் சுண்ணம், 15) என்று மாணிக்கவாசகரும், "மாதரார் கண்ணும் மதிநிழல் நீரிணை கொண்டு மலர்ந்த நீலப் போதும் அறியாது வண்டூச லாடும் புகாரே." (கானல்வரி 6: 3-4), "குவளையும்... கொண்ட மாதர் வாண்முகத்து மதைஇய நோக்கமொடு." (வேனிற்காதை, 65-6), "காவி உகுநீரும்." (வழக்குரை காதை, இறுதி வெண்பா, 2) என்று சிலப்பதிகாரத்தில் இளங் கோவடிகளும், "சுண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினார்.", "குவளையே அளவுள்ள கொழுங்கணாள்.", "தேனிமிர் குவளைக்கட் டிருமகள் அனையாளை." (**சீவக**

**சிந்தாமணி,** *51, 243, 2429)* என்று திருத்தக்க தேவரும், "பானலங் கண்க ளாட." (வரைக்காட்சிப் படலம், 50), "மையவாம் குவளை எல்லாம் மாதர்கண் மலர்கள் பூத்த." (நீர் விளையாட்டுப் படலம், 3), "வஞ்சி போலினன் றடிமிசை வீழ்ந்துரை வழங்கும்." (மந்தரை சூழ்ச்சிப் படலம், 68), "வஞ்சி நாண லிடைக்கும் மடநடை.", "வஞ்சியாள் வதனம் என்னும் தாமரை." (கங்கைப் படலம், 20, 51), "வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்." (சூர்ப்பணகைப் படலம், 31), "வஞ்சிகள் பொலிந்தன மகளிர் மாலை போல்." (கார்காலப் படலம், 119), "வஞ்சியிற் செவ்வியாளை." (நிந்தனைப் படலம், 54), "வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினாள்." (உருக்காட்டு படலம், 106), "பஞ்சியடி வஞ்சியர்கள்." (பொழிவிறுத்த படலம், 14), "வஞ்சி அஞ்சும் இடை மங்கையர்." (இராவணன் தானை காண் படலம், 13), "வஞ்சியை எங்கும் காணாது." (மாயா சீதைப் படலம், 51) என்று கம்பரும் பாடியவற்றைக் காண்க.

"வஞ்சியிடையோ." (சம்புலவன் வதைப் படலம், 51), "வஞ்சிபுரை நுண்ணிடை வருந்த.", "வஞ்சிபோல் இடையார்." (அசுவமேத யாகப் படலம், 49, 68) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

பிற்கு உள்ள 157-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'தன்னுடைய நல்ல புகழை எங்கும் நாட்டிய திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தர மூர்த்தி தன்னுடைய திருவுள்ளம் விரும்பியவளும், மின்னலைப் போன்ற இடுப்பைக் கொண்டவளும், இனிய சுவையைப் பெற்ற அமுதத்தைப் போன்றவளும் ஆகிய பரவையை நான் கடலைக் கடைந்து உனக்குக் காண்பிப்பேன் என்று சொல்லுவதைப் போலப் பூட்டிய ஏழு பச்சைக் குதிரைகளைக் கொண்ட இரதத்தை ஓட்டுகிறவனாகிய சூரியன் மேற்குச் சமுத்திரத்தில் புகுந்து அத்தமனத்தை அடைய.' பாடல் வருமாறு:

"நாட்டும் நல்லிசை நாவலூ ரன்சிந்தை
வேட்ட மின்னிடை இன்னமு தத்தினைக்
காட்டு வன்கட லைக்கடைந் தென்பபோல்
பூட்டும் ஏழ்பரித் தேரோன் கடல்புக."

இந்தப் பாடல் குளகம். நல்-நல்ல. இசை-தன்னுடைய புகழை. நாட்டும்-எங்கும் நாட்டிய. நாவலூரன்-திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தர மூர்த்தி. சிந்தை-தன்னுடைய திருவுள்ளம் வேட்ட-அடைய விரும்பிய. மின்-மின்னலைப் போன்ற. இடை-இடுப்பையும். இன்-இனிய சுவையைப் பெற்ற. அமுதத்தினை- அமுதத்தைப் போன்ற வார்த்தைகளையும் பெற்ற பரவையை; உவம ஆகுபெயர். க்: சந்தி. கடலை-சமுத்திரத்தை. க்: சந்தி. கடைந்து-நான் கடைந்து. காட்டுவன்-உனக்குக் காட்டுவேன். என்பபோல் -என்று கூறுவதைப் போல. பூட்டும்-பூட்டியிருக்கும். ஏழ்-ஏழு. பரி-பச்சைக் குதிரைகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தேரோன்-இரதத்தை ஓட்டுபவனாகிய சூரியன். கடல்-மேற்குச் சமுத்திரத்தில். புக-புகுந்து அத்தமனத்தை அடைய.

பெண்களினுடைய இடைக்கு மின்னல் உவமை: "மின்னாரிடை யாளொடும்.", "மின்னார் இடையாள் உமையாளொடும் இருந்த விமலனை.", "மின்னி னாரிடை யாளொரு பாகமாய் மன்னினான்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "மின்னிறம் மிக்க இடைஉமை நங்கை.", "மின்னி னேரிடை யாள்உமை.", "மின்னின் நுண்ணிடைக் கன்னியர்.", "மின்கலந்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்.", "மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்.", "மின்னிடையாள் பாகன்.", "மின் நலத்த நுண்ணிடையாள் பாகத் தான்காண்.", "மின்னே ரிடைபங்கன் நீயே.", "மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்.", "மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்.", "மின்காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும்,

விருப்பவன்.'', ''மின்னொத்த நுண்ணிடையாள் பாகம் கண்டேன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மின் செய்த நுண்ணிடையாள் பரவை.'', ''மின்னும் நுண்ணிடை மங்கைமார்.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்.'' என்று மாணிக்க வாசகரும், ''மின்னு ருக்குறும் இடைமெலிய.'' (**சீவக சிந்தாமணி**, 185) என்று திருத்தக்க தேவரும், ''மின்ஒத்த இடையி னாரும்.'' (நீர் விளையாட்டுப் படலம், 6), ''மின்னென நுடங்கு கின்ற மருங்குலாள் ஒருத்தி.'' (உண்டாட்டுப் படலம், 16), ''மின்னேபுரை இடையா ளொடும்.'' (பரசுராமப் படலம். 4), ''மின்னையேய் இடை நுடங்கிட விரைந்து தொடர்வாள்.'' (விராதன் வதைப் படலம், 40), ''மின்னைப்போல் இடையாளொடு.'' (சூர்ப்பணகைப் படலம், 62), ''மின்னிடைச் சனகியை.'' (கவன்காண் படலம், 18), ''மின்னிற மருங்குலாய்.'' (காட்சிப் படலம், 37), ''மின்னிடைச் செவ்வாய்.'' (நிந்தனைப் படலம், 12), ''மின்துன்னு மருங்குல் விளங் கிழையாள்.'' (உருக்காட்டு படலம், 10) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

''மின்னின் இடைதன் கருத்தறிந்து.'', ''மின்னேரிடை யாள் தன்வயிற்றில் விளங்கும் புகழ்வீ டணன்பிறந்தான்.'' (இராவணன் பிறப்புப் படலம், 10, 16), ''மின்னிடையினார் தம்மை வெல்லவரிது.'' (திக்குவிசயப் படலம், 172), ''மின்னார் மருங்குல் திருவென்ன விளங்கும் உருமை.'' (அனுமப் படலம், 44), ''மின்னிடை.'', ''மின்னேரி லாத இடை மெல்லியலை.'' (திக்கு விசயப் படலம், 17, 71), ''மின்னிடை மடவாய்.'', ''மின்னிடை யாளைக் கண்டு மெய்யுருகி.'' (இலவணன் வதைப் படலம், 21, 23), ''மின்னியல் நுண்ணிடை மிதிலை வல்லி.'' (அசுவ மேத யாகப் படலம், 134) என்று உத்தர காண்டத்தில் வருவன வற்றையும் காண்க. ''மின்னனைய நுண்ணிடையார்.''

(**பெரியாழ்வார் திருமொழி**, 2: 6), "மின்னிடைச் சீதை." (ஷை 2. 6: 8.), "மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள்.", "மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை."(ஷை 30: 11: -2), "மின்னொத்த நுண்ணிடையாய்." (ஷை, 3. 9, 7), "மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்." (**பெருமாள் திருமொழி**, 4: 6), "மின்ஒத்த நுண்ணிடையானை." (ஷை. 6: 5), "மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியல்." (ஷை. 9: 8), "மின்னின் நுண்ணிடை மடக்கொடி." (**பெரிய திருமொழி**, 3. 1: 7), "மின்னில் மன்னு நுடங்கிடை மடவார்." (ஷை. 3: 5: 4), "மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கும் இடையாள்.", (ஷை. 3: 7, 7), "மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்காய்." (ஷை. 3: 9: 5), "மின்னி வீன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா," (ஷை. 5. 1: 6), "மின்னே ரிடையார் வேட்கையை மாற்றி." (ஷை. 6. 3: 6), "மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலைத் திருமார்பில் மன்னத்தான் வைத்துகந்தான்." (ஷை. 6. 9: 6), "மின்னிடையார் வேட்கை நோய் கூர இருந்தானை." (ஷை. 9. 4: 10), "மின்னும் மாவல்லியும் வஞ்சியும் வென்ற நுண் இடை நுடங்கும் அன்னமென் னடையினார்." (ஷை. 9· 7: 2), "மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்.", (**திருவாய் மொழி**, 6: 2: 1), "மின்னனைய நுண்மருங்குல் வேகவதி." (**பெரிய திருமடல்**, 29), "மின்னிடையாள் நாயகனை." (ஷை. 61), "மின்னிடையார் சேரியிலும்." (ஷை. 71), "மின்னிடை யாய்ச்சியர்தம் சேரி." (ஷை. 71) என்று திவ்யப் பிரபந்தத்தில் வருவனவற்றையும் காண்க.

மொழிக்கு அமுதம் உவமை: "அமிழ்து பொதி செந்நா அஞ்சி வந்த வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி அரிவை." (**குறுந்தொகை**, 14), "அமிர்துகு குதலையொடு." (**கம்பராமாயணம்**, திருவவதாரப் படலம், 12) என வருவன வற்றைக் காண்க.

பிறகு வரும் 158-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தங்களோடு வந்து சேரும் மென்மையான பெண் பறவைகளோடு இரையைத் தேடி உண்டுவிட்டுப் பொய்கையில் பகல் நேரத்தைக் கழித்த பறவைகளினுடைய கூட்டம் தாங்கள் தங்கியிருக்கும் கூடுகளை நோக்கிப் பறந்து போகும் வண்ணமும், தங்களுடைய காதலுக்கு உரியவர்களைப் பிரிந்து தனியாக இருப்பவர்கள் நடுக்கத்தை அடையுமாறும் துன்பத்தை உண்டாக்கும் மாலை நேரம் வந்தது.' பாடல் வருமாறு:

**'' எய்து மென்பெடை யோடிரை தேர்ந்துண்டு**
**பொய்கை யிற்பகல் போக்கிய புள்ளினம்**
**வைகு சேக்கைகள் மேற்செல வந்தது**
**பையுள் மாலை தமியோர் பனிப்புற. ''**

எய்து-தங்களோடு வந்து சேரும். மென்-மென்மையான. பெடையோடு-பெண் பறவைகளுடன்; ஒருமை பன்மை மயக்கம். இரை-உணவை. தேர்ந்து-தேடிச் சென்று. உண்டு-உண்டு விட்டு, பொய்கையில்-மனிதர்கள் ஆக்காத நீர் நிலைகளில்; ஒருமை பன்மை மயக்கம். பகல்-பகல் நேரத்தை. போக்கிய-கழித்த. புள்-பறவைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இனம்-கூட்டம். வைகு-தாங்கள் தங்கியிருச்கும். சேக்கைகள்-கூடுகளை. மேற்செல-நோக்கிப் பறந்து போகும் வண்ணமும். செல: இடைக்குறை, தமியோர்-தங்களுடைய காதலுக்கு உரியவர்களைப் பிரிந்து தனியாக இருப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பனிப்புற-நடுக்கத்தை அடையுமாறும். பையுள்-துன்பத்தை உண்டாக்கும். மாலை-மகலை நேரம். வந்தது-திருவாரூரில் வந்து சேர்ந்தது.

மாலை நேரம் தமியோருக்குத் துன்பத்தை உண்டாக்குதல்: ''பெரும்புலம் பின்றே சிறு புன் மாலை.'' (57: 5), ''ஐதுவந் திசைக்கும் அருளில் மாலை, ஆள்வினைக் ககன்றோர் சென்ற நாட்டும், இனைய வாகித் தோன்றின், வினைவலித் தமைதல் ஆற்றலர் மன்னே.'' (69: 9-12),

''புன்கண் மாலைத், தம்மொடும் அஞ்சும் நம்மிவண் ஒழியச், செல்ப என்ப...நுதல் கவினழிககும் பசலையும், அயலோர், தூற்றும் அம்பலும் அளித்தே.'' (73: 4-10.), ''படர்வந்து நலியும் சுடர்செல் மாலை, நோய்மலி பருவரல்.'' (78: 5-6), ''புலம்பொடு வந்த புன்கண் மாலை, அன்னர் உன்னார் கழியிற் பன்னாள், வாழலேன்.'' (117: 8-9.), ''புன்கண் மாலைத், தனியே இருத்தல் ஆற்றேன்.'' (160: 3-4.), ''மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும், வேலைநீ வாழி பொழுது.'' (1221), ''புன்கண்ணை வாழி மருள் மாலை எம்கேள்போல், வன்கண்ண தோநின் துணை.'' (1222), ''பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித், துன்பம் வளர வரும்.''(1223), ''காதலர் இல்வழி மாலை கொலைக்களத், தேதிலர் போல வரும்.'' (1224), ''காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி, மாலை மலரும்இந் நோய்.'' (1227), ''காலைக்குச் செய்தநன் றென்கொல் யான், மாலைக்குச் செய்த பகை.'' (1225), ''அழல்போலும் மாலைக்கு.'' (1228), ''பதிமருண்டு பைதல் உழக்கும் மதி மருண்டு, மாலை படர்தரும் போழ்து.'' (1229), ''பொருள் மாலை யாளரை உள்ளி மருள்மாலை, மாயும் என் மாயா உயிர்.'' (1230) என்ற குறட்பாக்களையும்,''வாலிழை மகளிர் உயிர்பொதி அவிழ்க்கும், காலை ஆவ தறியார், மாலை என் மனார் மயங்கி யோரே.'' (**கலித்தொகை**, 19: 14-6), ''ஐதேந் தகவல்குல் ஆவித் தழலுயிராக், கைசோர்ந் தணலூன்றிக் கண்ணீர் கவுளலைப்பக், கையற்று யாம்இனையப், புண்ணீரும் வேலிற் புகுந்ததால் மாலை.'' (**சீவக சிந்தாமணி**, 1221), ''புல்லென் மருண்மாலைப் போழ்தின்று வந்தென்னைக், கொல்லாது போதல் அரிதால்.'' (**கலித்தொகை**, 145: 29-30), ''புன்கண்கூர் மாலைப் புலம்பும் என் கண்ணேபோல்.'', (**சிலப்பதிகாரம்**, 7: 33), ''கொலை குறித் தன்ன மாலை.'' (**அகநானூறு**, 364: 13), ''என்னை விழுங்குவான், அன்றே வந்ததிம் மாலை அளியேன் ஆவி யாதாங்கொல்.'' (**சீவக சிந்தாமணி**, 1660), ''நோயொடு புகுந்து கல்லென் மாலை நீங்க.'' (**மதுரைக் காஞ்சி**, 557-8).

"கொடுங்கோற் கோவலர் குழலோ டொன்றி, ஐதுவந் திசைக்கும் அருள்இல் மாலை." (**நற்றிணை,** 69: 8-9), "ஆபெயர் கோவலர் ஆம்பலொ டனைஇப், பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப, ஆருயிர் அணங்கும் தெள்ளிசை, மாரி மாலையும் தமியள் கேட்டே." (**அகநானூறு,** 74: 16-7) என வருவனவற்றையும் காண்க.

பிறகு உள்ள 159-ஆம் பாடலின் கருத்து வருமாறு;

'செம்பஞ்சுக் குழம்பைப் பூசிக் கொண்டிருக்கும் மென்மையான திருவடிகளையும், பொம்மைகளைப் போன்ற தோற்றத்தையும் பெற்ற பெண்மணிகளினுடைய உள்ளங்களையும், வஞ்சகமான செயல்களைப் புரியும் அறிவுஇல்லாத மக்களுடைய வலிமையான தீவினையையும், ஹரனுடைய ந,ம,சி,வா,ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தைத் தெரிந்து கொள்ளாத அறிவு இல்லாதவர்களுடைய மனங்களையும் போல உயரமாக உள்ள ஆகாயம் இருண்டு விட்டது.' பாடல் வருமாறு:

> **" பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்**
> **வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்அரன்**
> **அஞ்செழுத் தும்உண ராஅறிவிலோர்**
> **நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான். "**

பஞ்சின்-செம்பஞ்சுக் குழம்பைப் பூசிக் கொண்டிருக்கும். மெல்-மென்மையான. அடி-திருவடிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பாவையர்-பொம்மையைப் போன்ற தோற்றத்தையும் கொண்ட பெண்மணிகளினுடைய. உள்ளமும்-உள்ளங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வஞ்ச-வஞ்சனையான செயல்களைப் புரியும்; ஆகு பெயர். மாக்கள்தம்-அறிவு இல்லாத மக்களுடைய; தம்: அசை நிலை. வல்-வலிமையான. வினையும்-தீவினையையும்; பாவத்தையும். அரன்-ஹரனுக்குரிய. ஹரன்-சங்காரம் செய்தருள்பவன். அஞ்செழுத்தும்-ந,ம,சி,வா,ய என்னும்

ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தையும். எழுத்து: ஒருமை பன்மை மயக்கம். உணரா-தெரிந்து கொள்ளாத. அறிவு இலோர்-நல்ல அறிவு இல்லாத மக்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். இலோர்: இடைக்குறை. நெஞ்சும்-மனங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். என்ன-போல. நீண்ட-உயரமாக உள்ள. வான்-ஆகாயம். இருண்டது-இருட்டி விட்டது.

மகளிர் தங்களுடைய பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பைப் பூசிக்கொள்ளுதல்: "பஞ்சின் மெல்லடி மாதர்.", "பஞ்சு லாவிய மெல்லடிப் பார்ப்பதி.", "பஞ்சுதோய் மெல்லடிப் பாவையாள்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "பஞ்சின்மெல் அடியினார்கள்.", "பஞ்சின் மெல்லடிப் பாவை.", "பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனை.", "பஞ்சின் மெல்லடி யாளுமை பங்க.", "பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கன் தன்னை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கைபங்கா.", "பஞ்சின் மெல்லடிப் பாவைமார்.", "பஞ்சிச் சீறடி யாளைப் பாகம்வைத் துகந்தானை.", "பஞ்சின் மெல்லடியார் பயிலும் திருப்பனையூர்.", "பஞ்சேரும் மெல்லடியாளை." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "பஞ்சே ரடியாள் பாகத் தொருவா.", "பஞ்சின் மெல்லடியாள் பங்க.", "பஞ்சாய அடிமடவார்.", "பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால்." (**திருவாசகம்,** 425, 451, 549, 652) என்று மாணிக்க வாசகரும், "அரத்தப் பஞ்சி அணிநிறம் கொளீஇ.", "பஞ்சி அணிந்த அம்செம் சீறடி.", "பஞ்சி மெல்லடிப் பரல்வடுப் பொறிப்ப.", "பஞ்சி மெல்லடிப் பாவாய்.", "பஞ்சி உண்ட அஞ்செஞ் சீறடி." (**பெருங்கதை,** 2. 4: 195, 7. 87, 9: 162, 19: 170, 3. 13: 40) என்று கொங்கு வேளிரும், "பஞ்சி மெல்லடி." (**சீவக சிந்தாமணி,** 358) என்று திருத்தக்க தேவரும், "பஞ்சிவான் மதியை ஊட்டிய அனைய படருகிர்ப் பங்கயச் செங்கால்.", "பஞ்சி சூழ் மெல்லடிப் பாவைமார்.", "பஞ்சினை அணிவார்.",

''பஞ்சி மெல்லடிப் பாவையும் ஆடினாள்.'', ''பஞ்ச ளாவிய சீறடி.'', ''பஞ்சியொளிர்...சீறடிய ளாகி.'', ''பஞ்சின் மெல்லடிகள்.'', ''பஞ்சின் மெல்லடியாள் பாகன்.'', ''பஞ்சி போர்த்த மெல்லடி.'', ''பஞ்சின்மெல் லடியினார்.'', ''பஞ்சியடி வஞ்சியர்கள்.'' (நகரப் படலம், 10, எதிர்கோட் படலம், 32, கைகேசி சூழ்வினைப் படலம், 64), கங்கைப் படலம், 20, சித்திர கூடப் படலம், 20, சூர்ப்பணகைப் படலம், 31, 66, வாலிவதைப் படலம், 145, கார்காலப் படலம், 45, பிலம் நீங்கு படலம், 15, பொழில் இறுத்த படலம், 14) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க. ''செம்பஞ்சின் சீறடியும்.'', ''பஞ்சியடிக்குப் பல்லணி யெல்லாம் அணிவாரும்.'' (திக்கு விசயப் படலம், 175, அசுவமேதயாகப் படலம், 35) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

மகளிருக்குப் பாவை உவமை: ''பாடக மெல்லடிப் பாவையோடும்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''பூங்கொடிப் பாவையை.'' என்று மாணிக்க வாசகரும், ''பொறியறு பாவையின் அறிவறக் கலங்கி.'', ''பாவையும் படரொடு பருவரல் கொள்ள.'', ''பாவை நோக்கத் தாரணங் கெய்தி.'', ''புதுமரப் பாவை பொறியற் றாங்கு.'', ''பாவை பிரிவினைக் காவலன் உணர்ந்தபின்.'', ''பொம்மென உயிர்க்கும் பூநுதற் பாவையை.'', ''பைவிரி அல்குற் பாவாய்.'', ''பொன்புனை பாவையும் போகுதல் வலிப்ப.'', ''மறமாச் சேனன் பாவையர்.'', ''மெழுகுசெய் பாவையின் மெல்லியல் அசைந்து.'', ''பொறியறு பாவையின்.'', ''போதணி கூந்தற் பொற்பூம் பாவை.'', ''செல்லப் பாவை சென்றினிது பிறந்துழி.'', ''பாசிழை யல்குற் பாவையும் புலம்பி.'',''பாவை வினவ.'', ''அன்புபுரி பாவை ஆடிய பொய்கையுள்.'' (**பெருங்கதை**, 1. 33: 146, 198, 35: 48, 36: 60, 47: 240, 48: 80, 108, 53: 137, 2. 7: 118-9, 16: 115, 18: 96, 19: 98, 3. 1:

72, 7: 72, 8: 69, 9: 126) என்று கொங்கு வேளிரும், ''பாவை அன்னவர்.'', ''பாவைஇவள் இருக்கும் இடம்.'', ''பாவைநீ புலவியின் நீடல்.'' (**சீவக சிந்தாமணி,** 125, 594, 1017) என்று திருத்தக்க தேவரும், ''விலைப்பாவையர் மனமும் போற் பசையும் அற்றதே.'' (தாடகை வதைப் படலம், 15), ''பைங்கொடி ஓவியப் பாவை போன்றனள்.'' (மிதிலைக் காட்சிப் படலம், 39), ''பாவையர் பணிமென் கொம்பை நோக்கினர் பரிந்து நிற்பார்.'', ''இப்பாவை எங்கோற் குயிரன்னவள்.'' (பூக்கொய் படலம், 11, 13), ''பாவைமார் பரந்த கோலப் பண்ணையிற் பொலிவாள்.'' (நீர் விளையாட்டுப் படலம், 151), ''புலிப்பாவை பரம்கெட.'' (நகர் நீங்கு படலம், 121), ''பாவையும் அதனைக் கேளா.'' (சடாயு உயிர் நீத்த படலம், 86), ''பாவையர் குழாங்கள் சூழ.'', ''பாவை பேசுவபோல்.'' (ஊர் தேடு படலம், 120, 173), ''பாவைநின் பொருட்டினால் பழிபெற.'' (நிந்தனைப் படலம், 69), ''பாவை மார்நறுங் குழல்களும் பரிமளம் கமழ்ந்த.'' (இலங்கை எரியூட்டு படலம், 40), ''பாவைநீ இவனின் வந்த பயன் பழுதாவ தன்றால்.'' (மாயா சனகப் படலம், 54), ''பாவையர் குழுவை.'' (மீட்சிப் படலம், 170) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

''பொருள்தேர் பாவையர்க்கும் உண்டோ பதி.'' (திக்கு விசயப் படலம், 160) என்று உத்தரகாண்டத்திலும், ''பாவாய் இதுநமக்கோர் பான்மையே ஆகாதே.'' (94: 1) என்று பெரிய திருமொழியிலும், ''என்பாவை போய்இனித் தண்பழனத் திருக்கோளூர்க்கே.'', ''பாவைகள் தீர்க்கிற்றிரே விளையாட்டி என் பாசறவே.'' (6: 7: 3, 8: 7) என்று திருவாய் மொழியிலும் வருவனவற்றைக் காண்க.

பிறகு வரும் 160-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'''ஒரு குற்றமும் இல்லாத திருவுள்ளத்தைப் பெற்ற வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரே வருத்தத்தை அடைந்தால் ஒடியும் இடுப்புக்களைப் பெற்ற மங்கைமார்

களிடம் வேறு யார் பிழைப்பார்?'' என நறுமணம் கமழும் மலர்களை அணிந்த இரவாகிய நங்கை யாவருக்கும் முன்னால் கொண்ட புன்னகையைப் போல வெண்மையான நிலா அரும்பியது.' பாடல் வருமாறு:

**"'மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்தினால்**
**இறும ருங்குலார்க் கியார்பிழைப் பார்?' என்று**
**நறும லர்க்கங்குல் நங்கைமுன் கொண்டபுன்**
**முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா."**

மறு-ஒரு குற்றமும். இல்-இல்லாத; கடைக்குறை. சிந்தை-திருவுள்ளத்தைப் பெற்ற. வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரே. வருந்தினால்-பரவையை அடைய வேண்டுமென்று வருத்தத்தை அடைந்தால். இறு-ஒடிந்து போவதைப் போல் உள்ள. மருங்குலார்க்கு-இடுப்புக்களைப் பெற்ற பெண்மணிகளிடத்தில்; உருபு மயக்கம். மருங்குல்: ஒருமை பன்மை மயக்கம். இ: குற்றியலிகரம். யார்-வேறு எந்த ஆடவர். பிழைப்பார்-வருத்தத்தை அடையாமல் இருப்பார். என்று-என. நறு-நறுமணம் கமழும். மலர் - மலர்களைத் தன்னுடைய கூந்தலில் அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். கங்குல் நங்கை-இரவாகிய நங்கை. முன்-யாவருக்கும் முன்னால். கொண்ட-தன்னுடைய வாயில் கொண்ட. புன்முறுவல்-புன்னகையை. என்ன-போல. வெண்-வெண்மையான. நிலா-நிலாவை. முகிழ்த்தது-சந்திரன் அரும்பச் செய்தது.

கங்குல் நங்கை: ''சேணு லாவிய நாளெ லாமுயிர் ஒன்று போல்வன செய்துபின், ஏணு லாவிய தோளி னாளிடர் எய்த ஒன்றும் இரங்கிலா, வாணி லாநகை மாத ராள்செயல் கண்டு மைந்தர்முன் நிற்கவும், நாணி னாளென ஏகி னாள்நளிர் கங்குலாகிய நங்கையே.'' (**கம்பராமாயணம்,** கைகேசி சூழ்வினைப் படலம், 46)

இறுமருங்குல்: ''இறுமென நுடங்கும் சிறுகொடி மருங்கின்.'' (**பெருங்கதை,** 1, 40: 297)

அடுத்து உள்ள 161-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தங்களுக்குத் துன்பத்தை உண்டாக்கும் மக்களுக்காக வருத்தத்தை அடைந்து தங்களுடைய அருமையான உயிரைப் போன்ற கணவர்கள் தங்களுடைய கைகளால் தடவ மலர்ச்சியை அடையும் நல்ல குடும்பத்திற் பிறந்த காதல் மருவும் பெண்மணிகளைப் போலப் பரவியிருந்த கொடுமை யான பகல் நேரத்தில் தளர்ச்சியை அடைந்து குளிர்ச்சியைக் கொண்ட சந்திரனுடைய கிரணங்கள் சார்வதனால் ஆம்பல் மலர்கள் மலர்ந்தன.' பாடல் வருமாறு:

**" அரந்தை செய்வார்க் கழுங்கித்தம் ஆருயிர்**
**வரன்கை தீண்ட மலர்குல மாதர்போல்**
**பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்**
**கரங்கள் தீண்ட அலர்ந்த கயிரவம். "**

அரந்தை-தங்களை விரும்பித் துன்பத்தை. செய் வார்க்கு-உண்டாக்கும் காமுகர்களுக்காக; ஒருமை பன்மை மயக்கம். அழுங்கி-வருத்தத்தை அடைந்து. த்: சந்தி. தம்-தங்களுடைய. ஆருயிர்-அருமையான உயிர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். வரன்-கணவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கை-தங்களுடைய கைகளால்; ஒருமை பன்மை மயக்கம். தீண்ட-தங்களை வருட. மலர்-அதனால் தங்களு டைய முகங்கள் மலரும். குல-நல்ல குடும்பத்தில் பிறந்த. மாதர்-காதல் மருவிய பெண்மணிகளை; ஒருமை பன்மை மயக்கம். போல்-போல. பரந்த-பரவியிருந்த. வெம்-வெப்ப மான. பகற்கு-சூரியனுடைய வெயிலுக்கு; ஆகுபெயர். ஒல்கி-தளர்ச்சியை அடைந்து. ப்: சந்தி. பனி-குளிர்ச்சியைப் பெற்ற. மதி-சந்திரனுடைய. கரங்கள்-கிரணங்களாகிய நிலா. தீண்ட-வீச. கயிரவம்-ஆம்பல் மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம்; அல்லி மலர்களுமாம். அலர்ந்த-மலர்ந்தன.

ஆருயிர் வரன்: "சேணு லாவிய நாளெ லாம்உயிர் ஒன்று போல்வன செய்துபின், ஏணுலாவிய தோளினான்." (கைகேசி சூழ்வினைப் படலம், 46) என்று கம்பராமாயணத் தில் வருவதைக் காண்க.

பிறகு உள்ள 162-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இந்த உலகத்தில் பிறக்கும் நிலைபெற்ற உயிர்கள் எல்லாவற்றிற்கும் பரிசுத்தத்தையே உண்டாக்கும் இன்பத்தையும் குளிர்ச்சியையும் வழங்கி விட்டுச் சென்று அண்டங்கள் எல்லாவற்றிலும் முழுதும் பரவியிருந்து தலைவனாகிய வன்மீக நாதனுக்கு உரிய வெண்மையான விபூதியினுடைய பெரிய பிரகாசத்தைப் போலச் சந்திரன் வீசும் நீளமான கிரணங்களாகிய நிலா விளங்கியது.' பாடல் வருமாறு:

**"தோற்றும் மன்னுயிர் கட்கெலாம் தூய்மையே**
**சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்**
**ஆற்ற அண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்**
**ணீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா."**

தோற்றும்-இந்த உலகத்தில் பிறக்கும். மன்-நிலை பெற்ற. உயிர்கட்கு-பல வகையான உயிர்களுக்கு. அவை யாவன: மக்கள், விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ் பிராணிகள் முதலியவை. எலாம்-எல்லாவற்றிற்கும்; இடைக் குறை. தூய்மையே-பரிசுத்தத்தையே. சாற்றும்-உண்டாக்கும். இன்பமும்-இன்பத்தையும். தண்மையும்-குளிர்ச்சியையும். தந்து-வழங்கிவிட்டு. போய்-சென்று. ஆற்ற-முழுதும். அண்டம்-அண்டங்கள்; உலகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம்-எல்லாவற்றிலும்; இடைக்குறை. பரந்து-பரவியிருந்து. அண்ணல்-தலைவனாகிய வன்மீக நாதனுக்கு உரிய. வெண்-வெண்மையான. நீற்றின்-விபூதியினுடைய. பேரொளி-பெரிய பிரகாசத்தை. நீள்-நீளமான. நிலா-சந்திரன் வீசும் நிலா. போன்றது-போல விளங்கியது.

அடுத்து வரும் 163-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வாவியில் பறவைகளினுடைய சத்தம் அடங்கியுள்ள மாலை நேரத்தில் திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தர மூர்த்தி நாயனாரும் நங்கையாகிய பரவை ஆகும் பாவையைப் போன்ற பெண்மணி உண்டாக்கிய

துன்பத்தைக் கொடுக்கும் பெரிய காதலும், தம்முடைய உயிரைச் சூழ்ந்துள்ள தனிமையுமாக ஆனார்.' பாடல் வருமாறு:

**" வாவி புள்ளொலி மாறிய மாலையில்**
**நாவ லூரரும் நங்கை பரவையாம்**
**பாவை தந்த படர்பெருங் காதலும்**
**ஆவி சூழ்ந்த தனிமையும் ஆயினார். "**

வாவி-வாவியில்; 'வாபி' என்னும் வடசொல் திரிபு. புள்-மீன்கொத்திப் பறவை முதலிய பறவைகளின்; ஒருமை பன்மை மயக்கம். ஒலி-சத்தம். மாறிய-அடங்கிய. மாலையில் -மாலை நேரத்தில். நாவலூரரும்-திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தர மூர்த்தி நாயனாரும். நங்கை-நங்கையாகிய. பரவையாம் - பரவையாகும். பாவை-பொம்மையைப் போன்ற பெண்மணி. தந்த-உண்டாக்கிய. படர்-துன்பத்தைத் தரும். பெரும்-பெரியதாக இருக்கும். காதலும்-காம மயக்கமும். ஆவி-தம்முடைய உயிரை. சூழ்ந்த-சூழ்ந்துள்ள. தனிமையும் - தனியாக இருக்கும் தன்மையுமாக. ஆயினார்-ஆனார்.

அடுத்து உள்ள 164-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' "சிவபெருமானுடைய அழகிய கண்ணில் எழுந்த நெருப்பில் அகப்பட்டு எரிந்துபோன மன்மதன் வெளியில் தன்னுடைய உருவத்தை மீண்டும் பெற்று வந்து என்னுடைய முன்னால் நின்றுகொண்டு தன்னுடைய மலரம்புகளைத் தொடுத்து எய்வதா? அடியேங்களுடைய தந்தையாரைப் போன்ற வன்மீக நாதர் வழங்கும் திருவருள் இத்தகையதோ?" என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணுவாரானார்.' பாடல் வருமாறு:

**" 'தம்தி ருக்கண் எரிதழ லிற்பட்டு**
**வெந்த காமன் வெளியே உருச்செய்து**
**வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே?**
**எந்தை யார்அருள் இவ்வண்ண மோ?' என்பார். "**

தம்-சிவபெருமானுடைய. திரு-அழகிய. க்: சந்தி. கண்-நெற்றிக்கண்ணில். எரி-எரியும். தழலில்-நெருப்பில். பட்டு-அகப்பட்டு. வெந்த-எரிந்து போன. காமன்-மன்மதன். வெளி-வெளியில். ஏ: அசை நிலை. உரு-தன்னுடைய உருவத்தை. ச்: சந்தி. செய்து-மீண்டும் அடைந்து. வந்து-இங்கே வந்து. என்-என்னுடைய. முன்-முன்னால். நின்று-நின்று கொண்டு. வாளி-தன்னுடைய மலரம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். அந்த அம்புகளாவன: தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லை மலர், நீலோற்பல மலர் என்பவை. தொடுப்பதே-தன்னுடைய கரும்பு வில்லில் வைத்துத் தொடுத்து எய்வதோ. எந்தையார்-அடியேனுடைய தந்தையாரைப் போன்ற வன்மீக நாதர். அருள்-வழங்கும் திருவருள். இவ்வண்ணமோ-இத்தகையதோ. என்பார்-என்று சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணுவாரானார்.

கண் தழலிற் பட்டு வெந்த காமன்: "கண்ணிறைந்த விழியின் அழலால் வருகாமன் உயிர்வீட்டி.", "காமன் எரிப் பிழம்பாக நோக்கி.", "பார்த்தவன் காமனைப் பண்பழிய.", "காமனைக் கனலாகச் சீறி.", "காயச் செவ்விக் காமற் காய்ந்து.", "கருப்புநல் வார்சிலைக் காமன்வேவக் கடைக் கண்டானும்.", "காமனார் உடல்கெடக் காய்ந்தஎம் கண்ணுதல்.", "கரும்பன வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவின்அழித்த...பிரான்.", "பொருசிலை மதனனைப் பொடிபட விழித்தவர்.", "கரும்பமர் வில்லியைக் காய்ந்து.", "காமனைக் காய்ந்தவர்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "விழித்தனர் காமனை வீழ்தர.", "காமனைக் காய்ந்த கண்ணார்.", "காமனை அன்று கண்ணாற் கனலெரி யாக நோக்கி.", "அஞ்சணை கணையி னானை அழலுற அன்று நோக்கி.", "கண்ணினாற் காம வேளைக் கனலெழ விழிப்பர் போலும்.", "காய்ந்தாய் அனங்கன் பொடிபட.", "கரும்பு பிடித்தவர் காயப்பட்டார்.", "காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக்

காரோணா.'', ''கரும்பற்றச் சிலைக் காமனைக் காய்ந்தவன்.'', ''கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்.'', ''தென்றல் நன்னெடுந் தேருடை யான் உடல் பொன்ற வெங்கனல் பொங்க விழித்தவன்.'', ''ஒற்றைக் கண்ணால் விழித்திடுமே காமனையும் பொடியாய் வீழ.'', ''கண்ணெரியால் ஐங்கணையோன் உடல்காய்ந்தான்.'', ''வன்கருப்புச் சிலைக்காமன் உடல் அட்டானை.'', ''காமனையும் கரியாகக் காய்ந்தார்.'', ''விற்பயிலும் மதனழிய விழித்தான்.'', ''காமனையும் கண்அழலால் விழித்த நாளோ.'', ''ஐங்கணையான் தன்னை வீழக் கனலா எரிவிழித்த கண் மூன்றினார்.'', ''காமன் உடல்வேவக் காய்ந்த கண்ணானை.'', ''இமைப்பளவிற் காமனைமுன் பொடியாய் வீழ மாற்றவன் காண்.'', ''காமன்உடல் வேவித்த கண்ணினான்.'', ''பார்த்தானைக் காமன்உடல் பொடியாய் வீழ.'', ''காய்ந்தவன்காண் கண்ணழலாற் காமன் ஆகம்.'', ''உயர் கருப்புச் சிலையோன் நீறாய் ஓள்ளழல்வாய் வேவவுறு நோக்கத் தானை.'', ''அனங்கன்உடல் பொடியாய் வீழ்ந்து மங்கநகத் தான்வல்ல மருந்து.'' ''நவிர்மலர்ப்பூங் கணை வேளை நாச மாக வெஞ்சினத்தீ விழித்ததொரு நயனத் தானை.'', ''அனங்கன் ஆகம் மறுத்தவன்.'', ''காமனையுங் காலனையும் காய்ந்தார்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''கடிபடு பூங்கணையான் கருப்புச்சிலைக் காமனை வேவக் கடைக் கண்ணினால் பொடிபட நோக்கிய தென்னை கொலோ.'', ''ஐங்கணையக் கோனை எரித்தெரி யாடி.'', ''கரும்புவிலின் மலர்வாளிக் காமன்உடல் வேவக் கனல் விழித்த கண்ணுதலோன்.'', ''காய்ந்தவன் காய்ந்தவன் கண் அழலால் அன்று காமனை.'', ''ஐவணமாம் பகழியுடை அடல் மதனன் பொடியாகச் செவ்வணமாம் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி.'', ''நறைசேர் மலரைங் கணையானை நயனத் தீயாற் பொடிசெய்த இறையார்.'', ''காமற் காய்ந்ததோர் கண்உடை யானை.'', ''காமன் ஆகந்தனைக் கட்டழித் தானை.'', ''காமனைக் கனலா விழித்தானை.'', ''காமனுக் கனலே.'', ''கண்ணுதலாற் காமனையும் காய்ந்த.'',

''காமன் பொடியாக் கண்ஒன் றிமைத்த ஓமக் கடலார்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''அநங்களை...வடுச்செய் தான்.'', ''காமன் உடல்உயிர்...தூய்மைகள் செய்தவா.'' என்று மாணிக்க வாசகரும், ''ஒளிவிலி வன்மகனை ஒண் பொடியா நோக்கி.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''ஐங்கணை யவனொடு காலனை அடர்த்தனை.'', ''வாமன் மகனாய் மலர்க்கணையேன் றொட்டியஅக் காமன் அழ கழித்த கண்போற்றி.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''கண்திறந்து காமன் பொடியாக.'' என்று பரணதேவ நாயனாரும், ''பூமென் கரும்பொடு பொடிபட நிலத்துக், காமனைப் பார்த்த கண்ணுதல் போற்றி.'', ''நெற்றியிற் சிறந்த ஒற்றைநாட் டத்துக் காமனை விழித்த மாமுது தலைவ.'', ''கண்படை யாகக் காமனை ஒருநாள் நுண் பொடி யாக நோக்கி.'', ''நோக்கிற்றுக் காமன்உடல் பொடியாக.'', ''கண்ணாற் காமனைக் காய்ந்தனை.'', ''அஞ் சரத்தான் பொடியாய்விழத் தீவிழித்து.'', ''பூங்கணை வேளைப் பொடிபட விழித்ததும்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''எம்பரன் மேற்கள் தங்கியகணை எய்தலும் தன்னைப் பொன்னார் முடிமேற் புட்டங்கி னான்மக னாமென்று பார்க்கப் பொடிந்தனனே.'' என்று நம்பி யாண்டார் நம்பியும், ''இக்கு மூல்லையுடன் பற்றாக் கையும் வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற் செற்றார்க்கு.'' என்று அருணகிரிநாதரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 165-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''அடியேன் பரவையாரிடம் கொண்ட காம வேத னையைப் பார்த்தும் அடியேன்மேல் நின்று நெருப்பைப் போன்ற கிரணங்களைச் சந்திரன் வீசுவதோ? அடியேனைத் தொண்டனாகத் தடுத்து ஆட்கொண்ட வன்மீக நாதரும், நீர் நிரம்பிய அலைகளை வீசும் நீண்ட கங்கையாற்றைத் தம்முடைய உயரமான தலையில் தங்க வைத்தவருமாகிய அவர் சூடும் வெண்மையான பிறைச் சந்திரனைப் போலக் குளிர்ச்சியைப் பெற்ற சந்திரனே, நீ இருக்கவில்லையே!''

என்று சுந்தர மூர்த்தி நாயனார் குறை கூறியருளினார்.' பாடல் வருமாறு:

**" ஆர்த்தி கண்டும்என் மேல்நின் றழற்கதிர்**
**தூர்ப்ப தே!எனைத் தொண்டுகொண் டாண்டவர்**
**நீர்த்த ரங்க நெடும்கங்கை நீள்முடிச்**
**சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி. "**

ஆர்த்தி-அடியேன் பரவையாரிடம் கொண்ட காம வேதனையை. கண்டும்-பார்த்தும். என்மேல்-அடியேன்மீது. நின்று-வானத்தில் இருந்துகொண்டு. அழல்-நெருப்பைப் போன்ற. கதிர்-கிரணங்களாகிய நிலாவை; ஒருமை பன்மை மயக்கம். தூர்ப்பதே-சந்திரன் வீசுவதா? சந்திரன்: தோன்றா எழுவாய். எனை-அடியேனை; இடைக்குறை. தொண்டு-தொண்டனாக; திணைமயக்கம். கொண்டு-ஏற்றுக்கொண்டு. ஆண்டவர்-தடுத்து ஆட்கொண்டவரும். நீர்-நீர் நிரம்பிய. த்:சந்தி. தரங்க-அலைகளை வீசும்; ஒருமை பன்மை மயக்கம். நெடும்-நீளமாக இருக்கும். கங்கை-கங்கையாற்றை. நீள்-உயரமான. முடி-தம்முடைய தலையில் அணிந்தவரும்; திணைமயக்கம். ச்: சந்தி. சாத்தும்-சூடும். வெண்-வெண்மை யான. மதி-பிறைச் சந்திரனை. போன்று-போல. தண்-குளிர்ச்சியைப் பெற்ற. மதி-சந்திரனே; விளி. இலை-நீ இருக்கவில்லையே; இடைக்குறை.

பிறகு வரும் 166-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'"தொடர்ந்து மேலும் மேலும் அலைகளை வீசிக் கொண்டு பொங்கி எழும் கடலே, அடியேனை முன்பு ஒரு நாள் தடுத்து ஆட்கொண்டவராகிய வன்மீக நாதர் விழுங்கும்வண்ணம் கடுமையாக உள்ள ஆலகால விடத்தை உன்னுடைய அலைகளாகிய கைகளால் எடுத்து நீட்டிய நீ அடியேனை இன்றைக்கு என்னதான் செய்ய மாட்டாய?" என்று சுந்தர மூர்த்தி நாயனார் கடலைப் பார்த்துத் திருவாய் மலர்ந் தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**"அடுத்து மேன்மேல் அலைத்தெழும் ஆழியே,
தடுத்து முன்எனை ஆண்டவர் தாம்உணக்
கடுத்த நஞ்சுன் தரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ என்னைஇன் றென்செயாய்?"**

இது சுந்தர மூர்த்தி நாயனார் கடலை நோக்கித் திரு வாய் மலர்ந்தருளிச் செய்தது. அடுத்து-தொடர்ந்து. மேன் மேல்-மேலும் மேலும். அலைத்து-அலைகளை வீசிக் கொண்டு. எழும்-பொங்கி எழும். ஆழியே-கடலே. எனை-அடியேனை; இடைக்குறை. முன்-முன்பு ஒரு நாள். தடுத்து ஆண்டவர் தாம்-தடுத்து ஆட்கொண்டவராகிய வன்மீக நாதர்; தாம்: அசைநிலை. உண-விழுங்குமாறு. க்: சந்தி. கடுத்த-கடுமையாக உள்ள. நஞ்சு-ஆலகால விடத்தை. உன்-உன்னுடைய. தரங்க-அலைகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கரங்களால்-கைகளால். எடுத்து நீட்டு நீ-எடுத்து நீட்டிய நீ. என்னை-அடியேனை. இன்று-இன்றைக்கு. என்-என்ன. செயாய்-செய்ய மாட்டாய்; இடைக்குறை.

ஆலகால விடம் உப்புக் கடலில் எழுந்ததாக ஒரு கொள்கை உண்டு: "சுரனும் ஏனை இமையவரும் உண்ப ரென அஞ்சி நஞ்சும் அமுதமும் உடன், திரைமகோததியை விட." (28) என்று **தக்கயாகப் பரணியில்** வருவதைக் காண்க.

கடல் நஞ்சை நீட்டியது: "கடலில் நஞ்சமுதுண் டிமையோர் தொழுதேத்த.", "இடியார் கடல்நஞ் சமு துண்டு.", "சூழ்தரு மால்கடல் நஞ்சினை உண்டு.", "கனைத்தெழுந்த வெண்திரைசூழ் கடலிடை நஞ்சு தன்னைத் தினைத்தனையா மிடற்றில் வைத்த திருந்திய தேவ.", "கலமார் கடலுள் விடமுண்டு.", "முந்நீர் சூழ்ந்த நஞ்சம் உண்ட முதல்வர்.", "பண்டாழ் கடல்நஞ்சை உண்டு.", "மறிதிரை படுகடல் விடமடை மிடறினர்.", "காசக் கடலில் விடமுண்ட கண்டத் தீசர்.", "கடலேறிய

நஞ்சமுதுண்டவனே.'', ''வங்கமலியும் கடல் விடத்தினை நுகர்ந்த அங்கணன்.'', ''உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்து.'', ''வேலைதன்னில் மிகுநஞ்சினை உண்டிருள் கண்டனார்.'', ''கலிபடு தண்கடல் நஞ்சம் உண்ட கறைக் கண்டனும்.'', ''பெருங்கடல் நஞ்சமு துண்டுகந்து.'', ''ஆழியுள் நஞ்சமு தாக உண்டு.'', ''கடலிடைக்கடு நஞ்சம் உண்ட கடவுள்.'', ''கரையார் கடல்நஞ்சமு துண்டவர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''கடல் நஞ் சுண்ட கண்டன்.'', ''வேலைக் கடல்நஞ்சம் உண்டு.'', ''வேலைக் கடல் நஞ்சம் உண்டாய் என்விண்ணப்பம்.'', ''ஓதமார் கடலின் விடமுண்டவன்.'', ''வேலைசேர் நஞ்சம் மிடற்றான்.'', ''வங்கமலி கடல்நஞ்சம் உண்டாய் போற்றி.'', ''அலையார் கடல்நஞ்சம் உண்டார்.'', ''அலை யடுத்த பெருங்கடல் நஞ்சமுதா உண்டு.'', ''காரார் கடல் நஞ்சை உண்டார்.'', ''ஆலாலம் வேலை ஞாலம் எண்டிசை யும் சுடுகின்ற வாற்றைக் கண்டு இமைப்பளவில் உண்டி ருண்ட கண்டர்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய நுங்கி.'', ''காரார் கடலின் நஞ்சுண்ட கண்டர்.'', ''வங்கம் மேவிய வேலை நஞ்செழ வஞ்சர்கள் கூடித் தங்கள்மேல் அடராமை உண்ணென உண்டிருள் கண்டன்.'', ''ஓதக் கடல்நஞ்சினை உண்டிட்ட பேதைப் பெருமான்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''வேலை நஞ்சுண் மழைதரு கண்டன்.'', ''மறிகடல் விடமுண்ட வானவா.'' என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 167-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தமிழ் நாட்டில் வீசும் தென்றற் காற்றே, நீ பிறந்த இடம் அடியேங்களுடைய தலைவனாகிய சிவபெருமான் கோயில் கொண்டிருக்கும் பொதிய மலையில்; சிறப்பை அடைந்திருப்பது தெய்வத் தன்மையைப் பெற்ற நீர் வளத்தைப் பெற்ற சோழவள நாட்டில்; வெளியில் உள்ள வயல்களிலிருந்தும், தடாகத்திலிருந்தும் வந்து வெப்பம்

பொங்கி எழும் நெருப்பை அள்ளி வீசுவதற்கு உரிய கொடுமை யைப் பழகியது எந்த இடத்திலோ?' பாடல் வருமாறு:

**" பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்**
**சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினில்;**
**புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட**
**மறம்ப யின்றதெங் கோதமிழ் மாருதம்? "**

தமிழ்-செந்தமிழ் நாட்டில்; ஆகுபெயர். மாருதம்-வீசும் தென்றற் காற்றே; விளி. பிறந்தது-நீ தோன்றிய இடம். எங்கள்-அடியேங்களுடைய; இது சுந்தர மூர்த்தி நாயனார் தம்மையும் மற்றச் சிவனடியார்களையும் சேர்த்துக் கூறியது. பிரான்-தலைவனாகிய சிவபெருமான் கோயில் கொண் டிருக்கும். மலயத்திடை-பொதியில் மலையில். "ஆவியந் தென்றல் வெற்பு" என்று பொதியில் மலையைக் குறிப்பிடு வதைக் காண்க. ச்: சந்தி. சிறந்து அணைந்தது-சிறப்போடு சேர்ந்து விளங்குவது. தெய்வ-தெய்வத் தன்மை பொருந்திய. நீர்-நீர் வளத்தைப் பெற்ற. நாட்டினில்-சோழவள நாட்டில். புறம்-வெளியில் உள்ள. பணை-வயல்களிலிருந்தும்; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி. தடம்-தடாகத்திலிருந்தும் வந்து. பொங்கு-வெப்பம் பொங்கி எழும். அழல்-நெருப்பை. வீசிட-அள்ளி வீசுவதற்கு. மறம்-கொடுமையை. பயின்றது-பழகிக் கொண்டது. எங்கோ-எந்த இடத்திலோ. ஓ: அசை நிலை.

தென்றற் காற்றுப் பொதிய மலையில் பிறத்தல்: "பொங்குமழை தவழும் பொதியில் மீமிசைச், சந்தனச் சோலை தொறும் தலைச்சென் றாடி,...எழுந்த அந்தண் தென்றால்." (**பெருங்கதை**. 3. 1: 184-199) என்று வருவ தைக் காண்க.

பிறகு உள்ள 168-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி இத்தகைய இயல்பைப் பெற்ற வார்த்தைகளைப் பிறகும் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவ னாகி நிலைபெற்று விளங்கும் காமமயக்கத்தைக் கொண்ட வனாகிய வள்ளலிடம் தன்னுடைய அருமையாகப் பெறு

வதற்குரிய உள்ளம் தயங்கும் வண்ணம் செல்லும் அன்னப் பறவையைப் போன்ற தோற்றப் பொலிவையும், நடக்கும் நடையையும் பெற்ற பரவையினுடைய செயலை இனிமேல் பாடத் தொடங்குவோம்.' பாடல் வருமாறு:

**"இன்ன தன்மைய பின்னும் இயம்புவான்**
**மன்னு காதல னாகிய வள்ளல்பால்**
**தன்ன ரும்பெறல் நெஞ்சு தயங்கப்போம்**
**அன்னம் அன்னவள் செய்கை அறைகுவாம்."**

இது சேக்கிழார் கூற்று. இன்ன-இத்தகைய. தன்மைய-இயல்பைப் பெற்ற வார்த்தைகளை. பின்னும்-பிறகும். இயம்புவான்-கூறுபவனாகிய சுந்தர மூர்த்தி. மன்னு-நிலை பெற்று விளங்கும். காதலன் ஆகிய-காம மயக்கத்தைக் கொண்டவனாகிய. வள்ளல்பால்-வள்ளலாகிய அவனிடத்தில். தன்-தன்னுடைய. அரும் பெறல்-அருமையாகப் பெறுவதற்குரிய. நெஞ்சு-உள்ளம். தயங்க-தயக்கத்தை அடையும் வண்ணம். ப்: சந்தி. போம்-செல்லும். அன்னம்-அன்னப் பறவையை. அன்னவள்-போன்ற தோற்றப் பொலிவையும் நடக்கும் நடையையும் பெற்ற பரவையினுடைய. செய்கை-செயலை. அறைகுவோம்-இனிமேல் பாடத்தொடங்குவோம்

அன்னம் அன்னவள்: "அன்னம் அன்ன மென்னடையாள்.", "அன்னமன நடையாள்.", "மடஅன்னமும் அன்னதோர் நடையுடைம் மலைமகள்.", "அன்ன நடை.", "அன்ன மென்னடை அரிவையொ டிணிதுறை அமரர்தம் பெருமானார்.", "அன்ன மன்னந் நடைச் சாயலோடு.", "அன்னம்அன் னந்நடை யாளொடும்.", "அன்ன மன் னந் நடை அரிவை பங்கரே." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "அன்ன நடையார் அதிகைக் கெடில வீரட்டானத் துறையும் மானே.", "அன்ன மெல்நடை யாளை யொர் பாகமா.", "அன்ன நடைமடவாள் பாகத் தானே." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "அன்னமென் நடையினாரும்.", "அன்னம் அனையாள் புலவியினை அகற்றில்

உய்யலாம்.'', ''அன்னம் அனையார்.'', ''அன்ன நடை மடவார் ஆட்டோவா அணியரங்கு.'' என்று சேக்கிழாரும், ''அன்னத் தொழுதியின் மென்மெல வலங்கொண், டம்மென் சாயற் செம்முது பெண்டிர்.'', ''அன்ன மென்னடை அரிவை.'' (**பெருங்கதை**, 2. 8: 59-60, 3. 9: 6) என்று கொங்கு வேளிரும், ''சேலுண்ட ஒண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்.'', ''அனமென மடநடை அளகக் கடைசியர்.'', (நாட்டுப் படலம், 13, 431),''அன்ன மென்னடையவர் ஆடும் மண்டபம்.'' (நகரப் படலம், 62), ''அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ.'', ''அன்னம் இன்னணம் ஆயினள்.'' (மிதிலைக் காட்சிப் படலம், 61, 82), ''மன்னணிப் புரவிகள் மகளிர் ஊர்வன, அன்னம்உந்திய திரைஆறு போல்வன.'', (எழுச்சிப் படலம், 15), ''அன்னங்கள் புகுந்த என்ன அகன் சுனை குடைகின் றாரும்.'', (வரைக் காட்சிப் படலம், 54), ''அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண, மன்னவை இருந்தமணி மண்டபம் அடைந்தாள்.'', ''அன்னம் அரிதிற் பிரிய.'' (கோலம் காண் படலம், 28, 43),''அன்ன மென்னடை யாரும்.'', ''பெடைஅன நடையாரும்.'', ''அன்ன மென்னடை அணங்கனைய மாதரும்.'', ''ஆர்வத் தின்றுணை அன்னமும்.'', ''அன்னமும் அன்னவர் அம் பொன் மலர்த்தாள், சென்னி புனைந்தனள்.'' (கடிமணப் படலம், 23, 37, 44, 86, 96), ''அன்னமென் னடையாய்.'' (வனம்புகு படலம், 14), ''அன்னமும் துயர்க்கடல் அடி வைத் தாளரோ.'' (கிளைகண்டு நீங்கு படலம், 87),''அன்னம், அன்ன அணங்கினை நோக்கினான்.'' (சடாயு காண் படலம், 42), ''ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழைய ளாகும், சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோர் முறுவல் செய் தான்.'', ''அன்னமென...வஞ்சமகள் வந்தாள்.'' (சூர்ப்ப ணகைப் படலம், 5. 31) ''அன்ன மயர்கின்றது நோக்கி.'' (சடாயு உயிர் நீத்த படலம், 105), ''சனகன் பெற்ற அன்னத்தை.'' (வாலிவதைப் படலம், 78), ''களிமட அன்னம் என்ன...மஞ்சனம் ஆடு வாரை.''(ஊர்தேடு படலம், 103), ''அன்ன நடையாய் கேட்கென்ன அறிய அறைவா னா

யினான்.'' (உருக்காட்டு படலம், 59), ''அன்னமே என்னும்.'' (மாயா சீதைப் படலம், 45), ''அன்னமும் முன்னர்ச் சொன்ன முறைமையின் அடியில் வீழ்ந்தாள்.'' (மீட்சிப் படலம், 344) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க. ''அன்ன நடையார் பொருட்டால்.'', ''அன்னமென் நடையி னார்உன் அடியிணை வருட.'' (திக்கு விசயப் படலம், 94, 242),''அன்னமென் னடைநேர் நருமதை என்னும் அரிவை.'' (கார்த்தவீரியார்ச்சுனப் படலம், 6), ''அன்ன மென்னடை...தேனும் கலந்த நன் மொழியாய்.'', ''மென்னடை அன்னம் நின்னடைக் கஞ்சி வெளியிடை நின்றிட வெள்கி...மறைய.'' (சீதை வனம் புகு படலம், 16, 17), ''அன்னமென் னடையாள் மித்திரன் றன்னை அணுகிட.'' (இலவணன் வதைப் படலம், 21), ''அன்னம் அன்னவள் அவ்வுரை கேட்டலும்.'' (அசுவமேத யாகப் படலம், 191.) என்று உத்தர காண்டத்திலும், ''அன்னமென் னடையினார் கலவியை.'', ''அன்ன நடைமட ஆய்ச்சி.'' (பெரிய திருமொழி, 9. 7: 2, 10, 7: 14.), ''அன்ன நடைய அரம்பையர்.'', ''அன்ன நடையார் அலரேச.'', ''அன்ன நடைய அணங்கு.'', ''உமையென்னும் அன்ன நடைய அணங்கு.'' (பெரிய திருமடல்) என்று திவ்யப் பிரபந்தத்திலும் வருவனவற்றைக் காண்க.

பிறகு உள்ள 169-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மேகத்தின் நிறத்தைக் கொண்டதும், நீல மணியைப் போன்றதும் ஆகிய கழுத்தைப் பெற்றவராகிய வன்மீக நாதருடைய வீரக் கழலைப் பூண்ட திருவடிகளைப் பரவை பணிந்து விட்டுத் தன்னுடைய கணவனை முன்னால் பெறுபவளைப் போலக் கூட்டமாகக் கூடிக்கொண்டிருந்த தன்னுடைய தோழிமார்கள் தன்னைச் சூழ்ந்து வர, அடைந்த பெரிய காம மயக்கத்தோடும் கொங்கைகளைத் தாங்கிக் கொண்டு தளர்ச்சியை அடையும் இடுப்பை உடைய அந்தப் பரவையும் வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரிடம் தனியாகப் போன உள்ளத்தைக் கொண்டு

உண்டாகும் பெரியதாகிய மையலையும் கொண்டு தன்னுடைய மாணிக்கங்களைப் பதித்த திருமாளிகையை அடைந்தாள்.' பாடல் வருமாறு:

"கனம்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக்
கணவனைமுன் பெறுவாள் போல
இனம்கொண்ட சேடியர்கள் புடைசூழ
எய்துபெருங் காத லோடும்
தனம்கொண்டு தளர்மருங்குற் பரவையும்வன்
றொண்டர்பால் தனித்துச் சென்ற
மனம்கொண்டு வரும்பெரிய மயல்கொண்டு
தன்மணிமா ளிகையைச் சார்ந்தாள்."

கனம் கொண்ட-மேகத்தின் நிறத்தைப் பெற்ற. கனம்: ஆகுபெயர். மணி-நீலமணியைப் போன்ற. கண்டர்-கழுத்தைப் பெற்றவராகிய வன்மீக நாதருடைய. கழல்-வீரக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். 'கழல்' இன்ன தென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. வணங்கி-பணிந்துவிட்டு க்: சந்தி. கணவனை-தன்னுடைய கணவனாகச் சுந்தர மூர்த்தியை. முன்-முன்னால். பெறுவாள் போல-அடைபவளைப் போல. இனம்-கூட்டமாக. கொண்ட-கூடிக் கொண்டிருந்த. சேடியர்கள்-தன்னுடைய தோழிமார்கள். புடை-தன்னுடைய பக்கத்தில். சூழ-சூழ்ந்து வர. எய்து-அடைந்த. பெரும்-பெரியதாக இருக்கும். காதலோடும்-காம மயக்கத்துடனும். தனம்-கொங்கைகளை; ஒருமை பன்மை மயக்கம். கொண்டு-தாங்கிக் கொண்டு. தளர்-தளர்ச்சியை அடையும். மருங்குல்-இடுப்பைப் பெற்ற. பரவையும்-பரவை என்னும் பெண்மணியும். வன்றொண்டர்பால்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரிடம். தனித்து-தனியாக இருந்து. சென்ற-போன. மனம்-மனத்தை. கொண்டு-உடன் கொண்டு. வரும்-உண்டாகும். பெரிய-பெரியதாகிய. மயல்-மையல்; மயக்கத்தை. கொண்டு-அடைந்து. தன்-தன்னுடைய. மணி-

மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். மாளிகையை-திருமாளிகையை. சார்ந்தாள்-அடைந்தாள்.

சிவபெருமானுடைய கழுத்துக்கு மேகம் உவமை: "காரார் கண்டத் தெண்டோள் எந்தை.", "கொண்டலும் நீலமும் புரைதிரு மிடறர்.", "முகில்தோன்றி யன்ன மணி நீல கண்டம் உடையாய்.", "மழையார் மிடறா.", "மேகத்த கண்டன்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "மேகம்போல் மிடற்ற ராகி.", "காரேறு முகிலனைய கண்டத்தான்.", "காராரும் மணிமிடற்றெம் பெருமான்.", "காரொளிய கண்டத்தெம் கடவுள்.", "கொடுநஞ் சுண்ட காராரும் கண்டன்.", "காராரும் கண்டனை.", "காரேறு முகிலனைய கண்டத் தானே." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "காராரும் மிடற்றாய்.", "காரதார் கறை மாமிடற் றானை.", "கார்நிலவு மணிமிடற்றீர்.", "காரிடங்கொள் கண்டத்தன்.", "காராரும் மிடற்றானை.", "காரூர் கண்டத் தெண்டோள்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "மழைதரு கண்டன்." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

மணி கண்டர்: "மணியார் திகழ்கண்டம் உடையான்.", "கருக்கு மணிமிடறன்." "மணிநீல கண்டம் உடையாய்.", "கறையார் மணிமிடற்றான்.", "மையார் மணிமிடறன்.", "நீல மாமணி மிடற்று நீறணிந்த சிவன்.", "நஞ்சமுது செய்த மணிகண்டன்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "நஞ்சிருள் மணிகொள் கண்டர்.", "நீலமா மணிகண் டத்தர்.", "மணிசெய் கண்டத்து மான்மறிக் கையினான்.", "நீலமா மணிகண் டத்தெண் டோளனே.", "மையாரும் மணிமிடற்றாய்.", "காராடும் மணிமிடற்றெம் பெருமான்.", "கருமணிபோற் கண்டத் தழகன்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "கறைக்கொள் மணி கண்டமும்.", "மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்.", "கார்நிலவு மணிமிடற்றீர்.", "நஞ்சேரும்

நன்மணி கண்டம் உடையானே.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 170-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவை தன்னுடைய சிறிய திருவடிகளின்மேல் சிலம்புகள் தன்னுடைய காம மயக்கத்தைத் தெரிந்து கொண்டவற்றைப் போலச் சிறிது அளவிலேயே ஒலியை எழுப்ப,முன்னால் உள்ள வேறு ஒருவருடனும் பேசாதவளாகி மெல்ல மெல்ல அடிகளை வைத்து நடந்து, தன்னுடைய திரு மாளிகையினுடைய மேல் தளத்துக்கு ஏறிச் சென்று, மரகதக் கல்லால் செய்த தூண்களோடு விளங்கும் மாணிக்கங் களைப் பதித்த திண்ணையில் அழகைக் கொண்ட தங்கத் தாற் செய்யப் பெற்ற கால்களை உடையதும் ஒப்பு இல்லாத தும் மலர்களைப் பரப்பியதும் ஆகிய படுக்கையின்மேல் அழகிய நிலா முற்றத்தில் ஒரு பக்கத்தில் வந்து அமர்ந்திருந் தாள்.' பாடல் வருமாறு:

**"சீறடிமேல் நூபுரங்கள் அறிந்தனபோல்**
**சிறிதளவே ஒலிப்ப முன்னர்**
**வேறொருவ ருடன்பேசாள் மெல்லஅடி**
**ஒதுங்கிமா ளிகையின் மேலால்**
**ஏறிமர கதத்தூணத் திலங்குமணி**
**வேதிகையில் நலம்கொள் பொற்கால்**
**மாறில்மலர்ச் சேக்கைமிசை மணிநிலா**
**முன்றில்மருங் கிருந்தாள் வந்து."**

சீறடிமேல்-பரவை தன்னுடைய சிறிய திருவடிகளில் அணிந்திருந்த. அடிமேல்: உருபு மயக்கம். அடி: ஒருமை பன்மை மயக்கம். நூபுரங்கள்-சிலம்புகள். அறிந்தனபோல்-தன்னுடைய காம மயக்கத்தைத் தெரிந்து கொண்டவற்றைப் போல. சிறிது அளவே-சிறிய அளவிலேயே. ஒலிப்ப-ஓசையை எழுப்ப. முன்னர்-தன்னுடைய முன்னால் உள்ள. வேறு ஒரு வருடன்-வேறு ஒருவரோடும். பேசாள்-பேசாதவளாகி; முற் றெச்சம். மெல்ல-மெல்ல மெல்ல. அடி-தன்னுடைய திருவடி

களால்; ஒருமை பன்மை மயக்கம். ஒதுங்கி-நடந்து சென்று. மாளிகையின்-தன்னுடைய திருமாளிகையில் உள்ள.மேலால்-மேல் தளத்துக்கு; உருபு மயக்கம். ஏறி-ஏறிச் சென்று. மரகதத் தூணத்து-மரகதக் கற்களால் இழைத்த தூண்களோடு; ஒருமை பன்மை மயக்கம். இலங்கு-விளங்கும். மணி-மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். வேதிகையில்-திண்ணையில். நலம்-அழகை. கொள்-கொண்ட. பொற்கால்-தங்கத்தால் செய்யப் பெற்ற கால்களை உடையதும். கால்: ஒருமை பன்மை மயக்கம். மாறு-ஒப்பு. இல்-இல்லாததும். இல்: கடைக்குறை. மலர்-மலர்களைப் பரப்பியதுமாகிய; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சேக்கைமிசை-படுக்கையின்மேல். மணி-அழகிய. நிலா முன்றில்-நிலா முற்றத்தில். மருங்கு-ஒரு பக்கத்தில். வந்து இருந்தாள்-வந்து அமர்ந்திருந்தாள்.

பிறகு வரும் 171-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சமயத்தில் பரவை தன்னுடைய பக்கத்தில் நின்று கொண்டிருந்த தோழியினுடைய முகத்தைப் பார்த்து, "திருவாரூர்ப் பூங்கோயிலை ஆட்சி புரியும் மையின் நிறத்தைப் பெற்ற கழுத்தைக் கொண்டவராகிய வன்மீக நாதரை நாம் பணிவதற்காகப் போகும் தெருவில் நம்முடைய எதிரில் வந்த ஆடவர் யார்?" என்று கேட்க, அந்தத் தோழி, "இந்த உலகத்தில் வேதியராக எழுந்தருளித் திருமாலும் பிரமதேவனும் திருவடிகளையும் திருமுடியையும் தேடிய ஒப்பற்றவராகிய திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை நாதர் எதிரில் வந்து நின்று தடுத்து ஆண்டு கொண்டவரும், சைவ சமயத்தினுடைய முதல் திருத்தொண்டரும், தம்பிரான் தோழரும் ஆகிய ஆளுடைய நம்பி." என்று கூறினாள்.' பாடல் வருமாறு:

**" அவ்வளவில் அருகிருந்த சேடிதனை முகம் நோக்கி,**

**'ஆரூர் ஆண்ட**

**மைவிரவு கண்டரைநாம் வணங்கப்போம்**
**மறுகெதிர்வந் தவரார்?' என்ன,**
**இவ்வுலகில் அந்தணராய் இருவர்தே**
**டொருவர்தாம் எதிர்நின் றாண்ட**
**சைவமுதல் திருத்தொண்டர் தம்பிரான்**
**தோழனார் நம்பி.' என்றாள். ''**

அவ்வளளில்-அந்தச் சமயத்தில். அருகு-பரவை தன்னுடைய பக்கத்தில். இருந்த-நின்று கொண்டிருந்த. சேடிதனை-தோழியினுடைய; உருபு மயக்கம். தன்: அசைநிலை. முகம்-முகத்தை. நோக்கி-பார்த்து. ஆரூர்-திருவாரூர்ப் பூங்கோயிலை; இட ஆகுபெயர். ஆண்ட-ஆட்சி புரிந்தவரும்; வினையாலணையும் பெயர். மை-மையினுடைய நிறம்; ஆகுபெயர். விரவு-பொருந்திய. கண்டரை-கழுத்தைப் பெற்றவராகிய வன்மீக நாதரை. நாம்-நாம் இருவரும். வணங்க-பணிவதற்காக. ப்: சந்தி. போம்-செல்லும். மறுகு-தெருவில். எதிர்-நம்முடைய எதிரில். வந்தவர்-வந்தஆடவர். ஆர்-யார். என்ன-என்று பரவை கேட்க. இவ்வுலகில்-இந்த உலகத்தில். அந்தணராய்-ஒரு முதிய வேதியராகி எழுந்தருளியவரும். இருவர்-திருமால் பிரமதேவன் ஆகிய இருவரும். தேடு-திருவடிகளையும் திருமுடியையும் பன்றி உருவெடுத்தும் அன்னப் பறவையாகப் பறந்தும் தேடிப்பார்த்த. ஒருவர்தாம்-ஒப்பற்றவரும் ஆகிய திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை நாதர்; தாம்: அசைநிலை. எதிர்-எதிரில். நின்று-நின்று கொண்டு. ஆண்ட-தடுத்து ஆட்கொண்டவரும்; வினையாலணையும் பெயர். சைவ-சைவ சமயத்தினுடைய. முதல்-தலைமையான. திருத்தொண்டர்-திருத்தொண்டரும். தம்பிரான் தோழனார்-தம்பிரான் தோழரும் ஆகிய. நம்பி-ஆரூருடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார். என்றாள்-என்று அந்தத் தோழி கூறினாள்.

மைவிரவு கண்டர்: ''மையாடிய கண்டன்.'', ''மையுள் நஞ்சம் மருவு மிடற்றாரே.'', ''மைசேர் கண்டர்.'', ''மையார் கண்டன்.'', ''மையுடைய மாமிடற் றண்ணல்.'',

"மையணி மிடறுடை மறையவன்.", "மைகொள் கண்டத் தெண்டோள் முக்கணான்.", "மைதவழும் மாமிடறன்.", "மையுலா மணிமிடற்றான்.", "மையினார் மணிபோல் மிடற்றனை.", "மையார் மணிமிடறன்.", "மையிலங் கொளிமல்கிய மாசிலா மணிமிடறினார்.", "மையணி மிடறுடை மறையவனே.", "மையணி கண்டனார்."; "மையினார் மிடறினார்.", "மைகொள் கண்டத்தர்.", "மையணிமா மிடற்றான்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "மைஞ்ஞுலில் கண்டன்.", "மையணி கண்டத் தானே.", "மையணி கண்டன் மறைவிரி நாவன்.", "மைகொள் கண்டன் எண்தோளன் முக்கண்ணினன்.", "மைகொள் கண்டத்த ராகி.", "மையு லாவிய கண்டனை வாழ்த்துமே.", "மைய னுக்கிய கண்டனை.", "மைகொள் கண்டத்தன் மான்மறிக் கையினான்.", "மையனைய கண் டத்தாய்.", "மைவான மிடற்றானை.", "மைசேர்ந்த கண்டம் உடையாய் போற்றி.", "மையாரும் மணி மிடற்றாய் மாதோர் கூறாய்.", "மையாரும் கண்ட மிடற்றார்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "மைகொள் கண்டன் எண்டோளன் முக்கண்ணன் வலஞ் சுழி...பரமன்.", "மையாரும் மிடற்றாய்.", "மையார் கண்டத்தினாய்.", "மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்.", "மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர் மாணிக்கத்தை.", "மைகொள் கண்டர்எண் தோளர்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "மையமர் கண்டனை வான நாடர் மருந்தினை." என்று மாணிக்க வாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 172-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'என்று அந்தத் தோழி கூறிய வார்த்தைகளைப் பரவை கேட்டவுடனே, "அடியேங்களுடைய தமராகிய தொண் டரோ?" என்று கூறுவதற்கு முன்னாலே, வன்றொண்ட ராகிய சுந்தர மூர்த்தி நாயனாரிடம் வைத்திருந்த தன்னு

டைய திருவுள்ளத்தில் உண்டாகிய காம மயக்கம் அளவு இல்லாமல் வளர்ச்சியை அடைந்து பொங்கி எழவே, தன்னிடத்தில் இருந்த மனத்தை நிறுத்தும் தன்மை, நாணம் முதலாகும் பண்புகளோடு போய்விட, உயிர் ஒன்றையுமே தாங்கிக் கொண்டு மின்னலைப் போல விளங்கும் நுட்பமான இடுப்பைப் பெற்ற அந்தப் பெண்மணி வெப்பமாகப் பெருமூச்சை விட்டுக்கொண்டு மென்மையான படுக்கையின்மேல் விழுந்த சமயத்தில்.' பாடல் வருமாறு:

**"என்றஉரை கேட்டலுமே, 'எம்பிரான்**
**தமரேயோ?' என்னா முன்னம்**
**வன்றொண்டர் பால்வைத்த மனக்காதல்**
**அளவின்றி வளர்ந்து பொங்க**
**நின்றநிறை நாண்முதலாம் குணங்களுடன்**
**நீங்கஉயிர் ஒன்றும் தாங்கி**
**மின்றயங்கு நுண்ணிடையாள் வெவ்வுயிர்த்து**
**மெல்லணைமேல் வீழ்ந்த போது."**

இந்தப் பாடல் குளகம். என்ற-என்று அந்தத் தோழீ கூறிய. உரை-வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்டலும்-பரவை கேட்டவுடன். ஏ: அசைநிலை. எம்-அடியேங்களுடைய; என்றது பரவை தன்னையும் தன்னுடைய தோழியையும் சேர்த்துச் சொன்னது. பிரான்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. தமரேயோ-தமராகிய தொண்டரோ, "திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம், அஞ்சுவதி யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை." என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியதைக் காண்க. என்னா-என்று சொல்வதற்கு. முன்னம்-முன்பே. வன்றொண்டர்பால்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரிடத்தில். வைத்த-தான் கொண்டிருந்த. மன-திருவுள்ளத்தில் உண்டான. க்: சந்தி. காதல்-காம மயக்கம். அளவு இன்றி-ஓர் அளவே இல்லாமல். வளர்ந்து-வளர்ச்சியை அடைந்து. பொங்க-பொங்கி எழ.

நின்ற-தன்னிடம் இருந்த. நிறை-உள்ளத்தைப் பிற ஆடவரிடம் செல்லாமல் நிறுத்தும் தன்மையும். நாண்-நாணமும்; பிற ஆடவரைப் பார்ப்பதற்கு உண்டாகும் வெட்கம். முதலாம்-முதலாகும். குணங்களுடன்-நல்ல பண்புகளோடு. அவையாவன அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை. நீங்க-போய்விட. உயிர் ஒன்றும்-தன்னுடைய உயிர் ஒன்றையுமே. தாங்கி-தாங்கிக் கொண்டு. மின்-மின்னலைப் போல. தயங்கு-விளங்கும். நுண்-நுட்பமான. இடையாள்-இடுப்பைப் பெற்ற பரவை. வெவ்வுயிர்த்து-வெப்பமாகப் பெருமூச்சை விட்டுக்கொண்டு. மெல்-மலரைப் பரப்பிய மென்மையான. அணைமேல்-படுக்கையின்மேல். வீழ்ந்த-விழுந்த. போது-சமயத்தில்.

மகளிர் இடுப்புக்கு மின்னல் உவமை: ''மின்னாரிடையாளொடும்.'', ''மின்னா ரிடையாள் உமையா ளோடும்.'', ''மின்திரண் டன்ன நுண்ணிடை அரிவை.'', ''மின்னின் இடையாளொளர் கூறன்.'', ''மின்னி னாரிடை யாளொரு பாகமாய் மன்னினான்.'', ''மின்னியலும் நுண்ணிடை நன் மங்கையர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மின்னி னேரிடை யாளுடை பங்கனை.'', ''மின்னின் நுண்ணிடைக் கன்னியர்.'', ''மின்கலந்த நுண்இடையாள் பாகம் வைத்தார்.'', ''மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்.'', ''மின்இடையாள் பாகன்.'', ''மின்னலைத்த நுண்ணிடையாள் பாகத்தான்.'', ''மின்னேரிடை பங்கன் நீயே.'', ''மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான்காண்.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்.'', ''மின் காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும் விருப்பவன்.'', ''மின்னொத்த நுண்ணிடையாள் பாகம் கண்டேன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மின் செய்த நுண்ணிடையாள் பரவை.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மின்னிடை...மென்மொழியீர்.'', ''மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்,'', ''மின் கணினார்

நுடங்கும் இடையார்.'', ''மின்னிடை நுண்ணிடையார்கள்.'' என்று மாணிக்க வாசகரும், ''மின்னணங் குறுமிடை.'' (**சீவக சிந்தாமணி**, *1006*) என்று திருத்தக்க தேவரும், ''மின்னிடைச் சீதை பொருட்டா.'', ''மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள்.'', ''மின்னொத்த நுண்ணிடையாய்.'' என்று பெரியாழ்வாரும், ''மின்னனைய நுண்ணிடையார் உருப் பசியும் மேனகையும்.'', ''மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு.'', ''மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியல்.'' என்று குலசேகரப் பெருமாளும், ''மின்கொடி மருங்குல் சுருங்க.'', ''மின்குலாம் மருங்குல் சுருங்க.'', ''மின்னின் நுண்ணிடை மடக்கொடி.'', ''மின்னல் மன்னு நுடங்கிடை மடவார்.'', ''மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கும் இடையாள்.'', ''மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா.'', ''மின்னி னன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா.'', ''மின்னே ரிடையார் வேட்கையை மாற்றி.'', ''மின்னுமா வல்லியும் வஞ்சியும் வென்ற நுண்ணிடை.'' என்று திருமங்கையாழ்வாரும், ''மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார்.'', ''மின்னிடையாரோடும் விளையாடி.'' என்று நம்மாழ்வாரும், ''மின்னனைய நுண்மருங்குல் வேகவதி.'', ''மின்னிடையாள் நாயகனை.'', ''மின்னிடை ஆய்ச்சியர்.'', ''மின்னிடையார் சேரியிலும்.'' என்று திருமங்கையாழ்வாரும், ''மின்பிறழ் நுசுப்பினர்.'' (திருவவதாரப் படலம், 116), ''மின்ஒத்த இடையி னாரும்.'' (நீர் விளையாட்டுப் படலம், 6), ''மின்னென நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி.'' (உண்டாட்டுப் படலம், 16), ''மின்னேபுரை இடையாளொடும்.'' (பரசுராமப் படலம், 47), ''மின்னை யேய்இடை நுடங்கிடவிரைந்து தொடர்வாள்.'', (விராதன் வதைப் படலம், 40), ''மின்னைப் போல் இடையாளோடு மேவுமெய் யுடையன் அல்லன்.'', ''மின்னிடை அலச ஓடி.'' (சூர்ப்பணகைப் படலம், 61, 66), ''மின்னிடைச் சனகியை.'' (கலன்காண் படலம், 18), ''மின்னிடைச் செவ்வாய்...வீங்குதேர் அல்குலார்.'' (நிந்தனைப் படலம், 12), என்று கம்பரும் பாடியருளிய

வற்றைக் காண்க. "மின்னி னிடைதன் கருத்தறிந்து.", "மின்னேர் இடையாள் வயிற்றில் விளங்கும் புகழ்வீ டணன் பிறந்தான்.", "மின்னிடையாள் சுரபை." (இராவணன் பிறப்புப் படலம், 10, 16, 65), "மின்னிடை யார்தம்மை வெல்ல அரிது." (திக்கு விசயப் படலம், 172), "மின்னார் மருங்குல் திருஎன்ன விளங்கும் உருமை." (அனுமப் படலம், 44), "மின்னிடை மருங்குல்.", "மின்னிடை பூணாய்.", "மின்னேரி லாதஇடை மெல்லியலையும் விட்டு." (திக்கு விசயப் படலம், 16, 17, 77), "மின்னிடை யாளைக் கண்டு மெய்யுருகி." (இலவணன் வதைப் படலம், 23), "மின்னியல் நுண்ணிடை மிதிலை வல்லி." (அசுவ மேதயாகப் படலம், 134) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றைக் காண்க.

அடுத்து வரும் 173-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'பரவைக்கு நறுமணம் கமழும் சந்தனக் குழம்பைத் திருமேனி முழுவதும் பூசியும், பெறுவதற்கு அருமையான பன்னீரின் மணம் வீசும் துளிகளை அவளுடைய படுக்கையின் பக்கத்தில் தெளித்தும், தளிர்களை வைத்தும், குளிர்ச்சியை உண்டாக்கும் வாசனைத் திரவியத்தைப் பூசியும், தோழிப் பெண்கள் செய்த இந்தச் செயல்கள் எல்லாம் பெரிய நெருப்பில் நெய்யைப் பொழிந்தாற் போல இருந்தன; அந்த நெருப்பின்மேல் சமிதைகளை இடுவதைப்போல மன்மதனும் தன்னுடைய பெரிய கரும்பு வில்லினுடைய வலிமையைப் புலப்படுத்தி அழகிய மலரம்புகளை மழையைப் போல வந்து எய்தான்.' பாடல் வருமாறு:

" ஆரநறும் சேறாட்டி அரும்பனிநீர்
நறுந்திவலை அருகு வீசி
ஈரஇளந் தளிர்க்குளிரி படுத்துமட
வார்செய்த இவையும் எல்லாம்
பேரழலின் நெய்சொரிந்தால் ஒத்தனமற்
றதன்மீது சமிதை என்ன
மாரனும்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி
மணிவாளி சொரிந்தான் வந்து."

நறும்-நறுமணம் கமழும். ஆர-அரைத்த சந்தனத்தின். சேறு-குழம்பை. ஆட்டி-பரவையினுடைய திருமேனி முழுவதும் பூசியும். அரும்-கிடைப்பதற்கு அருமையான. பனிநீர்-பன்னீரினுடைய. நறும்-நறுமணம் வீசும். திவலை-துளிகளை; ஒருமை பன்மை மயக்கம். அருகு-பரவை படுத்திருந்த படுக்கையின் பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வீசி-தெளித்தும். ஈர-ஈரமான. இளம்-முற்றாத இளமையான. தளிர்-இலைகளை; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. 'பரப்பியும்' என ஒரு சொல் வருவிக்க. குளிரி-குளிர்ச்சியை உண்டாக்கும் வாசனைத் திரவியத்தை. படுத்து-பரவையின் திருமேனி முழுவதும் பூசியும். மடவார் செய்த-தோழிப் பெண்கள் செய்த இவையும்-இந்தச் செயல்களும். எல்லாம்-வேறு பரிகாரங்கள் யாவும். பேரழலின்-பெரிய நெருப்பில். நெய்-நெய்யை. சொரிந்தால்-மழையைப் போலப் பொழிந்தால். ஒத்தன-போன்றன. மற்று: அசைநிலை. அதன்மீது-அந்தப் பெரிய நெருப்பின்மேல். சமிதை-சமிதைகளை இட்டால்; ஒருமை பன்மை மயக்கம். என்ன-போல. மாரனும்-மன்மதனும். தன்-தன்னுடைய. பெரும் சிலையின்-பெரிய கரும்பு வில்லினுடைய. வலி-வலிமையை. காட்டி-புலப்படுத்தி. மணி-அழகிய. வாளி-மலரம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். வந்து-அந்த இடத்துக்கு வந்து. சொரிந்தான்-மழையைப் போல எய்தான்.

பிறகு வரும் 174-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவை மலர்களைப் பரப்பிய படுக்கையில் உறக்கத்தைக் கொள்ளவில்லை; வீசி வரும் தென்றற் காற்றுத் தன்னுடைய பக்கத்தில் அடிப்பதைச் சகிக்கவில்லை; மேகங்கள் தவழும் ஆகாயத்திலிருந்து சந்திரன் வீசும் நிலா வெளிவிடும் நெருப்பைப் பொறுக்கவில்லை; உள்ளத்தை நிறுத்துவதைச் செய்யும் பாரத்தைத் தாங்க முடியாத இயல்புடன் கலாபத்தைப் பெற்ற மயிலைப் போலத் தன்னுடைய படுக்கையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தன்னுடைய கருமையான கூந்தலினுடைய பாரத்தைத் தாங்க முடியாது

கைகளை உடையவளாகி, கோங்கிலவ மலரில் உள்ள இதழ்களைப் போன்ற சிவந்த காவியைப் போன்ற வாய் தன்னுடைய வசத்தில் நில்லாமையினால் பொருள் அற்ற இந்த கைய வார்த்தைகளை வீணாகப் பரவை கூறலானாள்.'' பாடல் வருமாறு:

**'' மலரமளித் துயிலாற்றாள்; வரும்தென்றல்**
**மருங்காற்றாள்; மங்குல் வானில்**
**நிலவுமிழும் தழலாற்றாள்; நிறையாற்றும்**
**பொறையாற்றா நீர்மை யோடும்**
**கலவமயில் எனஎழுந்து கருங்குழலின்**
**பரமாற்றாக் கைய ளாகி**
**இலவஇதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்றா**
**மையின்வறிதே இன்ன சொன்னாள். ''**

மலர்-மலர்களைப் பரப்பிய; ஒருமை பன்மை மயக்கம். அமளி-படுக்கையில். த்: சந்தி. துயில்-உறக்கத்தை. ஆற்றாள் -பரவை கொள்ளவில்லை. வரும்-வீசிக்கொண்டு வரும். தென்றல்-தென்றற்காற்று. மருங்கு-தன்னுடைய பக்கத்தில் வீசுவதை. ஆற்றாள்-பொறுக்க அவளால் முடியவில்லை. மங்குல்-மேகங்கள் தவழும்; ஒருமை பன்மை மயக்கம். வானில்-ஆகாயத்திலிருந்து; உருபு மயக்கம். நிலவு-சந்திரனுடைய கிரணங்களாகிய நிலா. உமிழும்-கொப்புளிக்கும். தழல்-நெருப்பை. ஆற்றாள்-அவளால் சகிக்க முடியவில்லை. நிறை-தன்னுடைய உள்ளத்தை வேறு ஆடவரிடம் செல்லாமல் நிறுத்தும் செயலை. ஆற்றும்-செய்யும். பொறை-பொறுமையை. ஆற்றா-மேற்கொள்ளாத. நீர்மையோடும்-தன்மையுடனும். கலவ-கலாபத்தைப் பெற்ற. மயில் என-மயிலைப் போல; என: இடைக்குறை; 'என்று சொல்லும் வண்ணம்' எனலும் ஆம். எழுந்து-தான் படுத்துக் கொண்டிருந்த படுக்கையிலிருந்து எழுந்து நின்று. கரும்-கருமையான. குழலின்-தன் கூந்தலினுடைய. பரம்-பாரத்தை. ஆற்றா-தாங்க முடியாத. கையளாகி-கைகளை உடையவளாகி; ஒருமை பன்மை மயக்கம். இலவ-கோலங்கிலவ மலரில் உள்ள.

இதழ்-இதழ்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செம்-சிவந்த. துவர்-காவிக் கல்லைப் போன்ற. வாய்-தன்னுடைய வாய். நெகிழ்ந்து-தன்னை அறியாமலேயே வெளிவந்து. ஆற்றாமையின்-மேலே சொன்னவற்றைச் சகிக்க முடியாமையினால். வறிது-வீணாகப் பொருள் அற்றவையாகிய; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை. இன்ன-இத்தகைய வார்த்தைகளை. சொன்னாள்-பரவை கூறலானாள்.

மகளிருக்கு மயில் உவமை: ''மயிலார் சாயல் மாதோர் பாகமா.'',''மயிலுறு சாயல் வனமுலை ஒருபால் மகிழ்பவர்.'', ''மயிலும்...போல்மாதர்.'', ''கலவ மயிலாளோர் பங்கனை.''; ''மயிலார்ந்த சாயல் மடமங்கை.'', ''இடமயி லன்ன சாயல் மடமங்கை.''; ''மயிற்கெதிர்ந் தணங்கு சாயல் மாது.'', ''மயிலி னேரன சாயலோ டமர்ந்தவன்.'', ''கலவ மாமயி வாரியலாள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மயிலியல் மலைமாதின் மணாளனை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''கார் மயில் ஒருங்கிய சாயல்...மாதர்.'' என்று மாணிக்க வாசகரும், ''கலவ மயிலனாார்.'', ''மயிலியல் ஆயத்து.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''புனமா மயில் சாயல் கண்டு முன் போகா.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''இளமயில் அனைய சாயல் ஏந்திழை.'' என்று சேக்கிழாரும், ''மயில் கண் டன்ன மடநடை மகளிரொடு.'' (**திருமுருகாற்றுப் படை**, 205), ''பீலி மஞ்ஞையின் இயலி.'' (**பெரும் பாணாற்றுப்படை**, 331), ''நன்மா மயிலின் மென்மெல இயலி.'' (**மதுரைக் காஞ்சி**, 608), ''அணிமயி லன்ன அசை நடைக் கொடிச்சியை.'' (**ஐங்குறுநூறு**, 258: 2), ''வருநல மயிலன மடநடை மலைமகள்.'' (**தேவாரம்**), ''மயிலெனப் பேர்ந்து.'' (**திருக்கோவையார்**, 224), ''நடைமயிலே.'' (**பிரயோக விவேகம்**, 42), ''மயில்மயிற் குளிக்கும் சாயல்.'' (**சிறுபாணாற்றுப்படை**, 16), ''மயிலிய லோரும்.'' (**மதுரைக் காஞ்சி**, 418), ''புனமயில்போல்—மன்னி...இயங்குகின்ற தாயத்திடை.'' (**கிளவி விளக்கம்**), ''ஒப்பு மயில்இழக்கும்.''

**(கண்டனலங்காரம்)**, *''மயிலோ ரன்ன சாயல்.''* **(மதுரைக் காஞ்சி**, *706*), *''மயிலியல் மானோக்கிற், கிளிமழலை மென் சாயலோர்.''* **(பட்டினப்பாலை**, *149-50*), *''மணிபுரை எருத் தின் மஞ்ஞை போல,...ஏகுதி மடந்தை.''*, *''மயிலோ ரன்ன சாயல்...மடந்தை.''* **(நற்றிணை**, *264: 4-6, 301: 4-8*), *''மயில்இயற், செறிஎயிற் றரிவை.''*, *''மஞ்ஞை ஆடுமகள், 'வெறிஉறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்.''* **(குறுந்தொகை** *2: 3-4, 105: 3-4*), *''தோகை பூக் கொய் மகளிரிற் றோன்றும்.''* **(ஐங்குறுநூறு** *297*), *''மயிலியலார் மருவுண்டு.''*, *''மயிலியற் றளர்பொங்கி.''* **(கலித்தொகை**, *29: 6, 5 7: 2*), *''வரை யிழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி.''* **(அகநானூறு**, *158: 5*), *''கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த, சில்வளை விறலியும்.''*, *''கலவ மஞ்ஞையிற் காண்வர இயலி.''*, *''அரிவை, கலிமயிற் கலாவம் கால்குவித் தன்ன, ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇ.''*, *''மயிலன்ன மென்சாயலார்.''* **(புறநானூறு**, *60: 4, 133: 5, 176: 7-9, 395: 13*), *''மராஅ மயிலின் மயங்குபு தூங்கும், குழாஅம் மகளிர்.''*, *''பொறிமயிற் றொழுதி புயல்கழி காலைச், செறிமயிர் உளர்த்தும் செய்கை போல்தம், நெறிமயிர்க் கூந்தல் நீரற வாரி.''*, *''மணிக்கட் பீலிமா மயிற்பேடை, அணிக்கவின் மென்னடை அனுக்க அசைந் தசைந்து.''*, *''மயிலியல் மாதர் இயல்பிற் படுத்த.''*, *''மயிலெருத் தணிமுடி மாதர்த தோழி.''* **(பெருங்கதை**, *1. 40: 145, 42: 119-201, 53: 153-4, 2. 3: 145, 3. 5: 85*) வேறு புலவர்கள் பாடிய வற்றையும் *''தோகையர் இன்னன சொல்லிட.''* (*கார்முகப் படலம், 32*), *''நடிக்கும்மயி லென்னவரு நல்விழி யாரும்.''*, *''மயிலினம் திரிவ என்னத் திரிந்தனர் மகளிர் எல்லாம்.''* (வரைக் காட்சிப் படலம், 15, 29), *''மயில்போல் வருவாள்.''* (பூக்கொய் படலம், 15), *''கானமா மயில்கள் எல்லாம் களி கெடக் களிக்கும் சாயல் சோனைவார் குழலினார்.''* (நீர் விளையாட்டுப் படலம், 14), *''புனத்துள மயிலனாள்.''* (உண்டாட்டுப் படலம், 61), *''மயிலினம் திரிவ போன்றும்...மாதர்... மொய்த்தார்.''*, *''புனம்கொள் கார்மயில் போல் ஓர்

பொற்கொடி.'' (உலாவியற் படலம், 1, 29), ''கைவளர் மயில் னாளை.'' (கோலம் காண் படலம், 18), ''தொண்டை வாய்க்கேகயன் தோகை.'', ''நாடகமயில் துயின்றென்ன.'' (மந்தரை சூழ்ச்சிப் படலம், 41, 88). ''தோகையர் குழாமும்.'' (கைகேசி சூழ்வினைப் படலம், 68), ''ஆடுகின்ற மாமயிலினும் அழகிய குயிலே.'', ''வளைகள் காந்தளிற் பெய்தன அனையகைம் மயிலே.'', ''வடுவின் மாவகி ரிவை யெனப் பொலிந்தகண் மயிலே.'', ''ஆய்மயிற் பெண்ணருங் கலமே.'' (சித்திரகூடப் படலம், 12, 29, 30, 32), ''தேமலர்த் தொகை இழந்தன தோகையர் ஓதியே.'', ''முழையின் மஞ்ஞைபோல் எரியின் மூழ்கினார்.'' (பள்ளியடைப் படலம் 25, 128), ''அஞ்சொலிள மஞ்ஞையென...வஞ்சமகள் வந் தாள்.'', ''மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.'' (சூர்ப்பணகைப் படலம், 31, 33), ''மயிலுடைச் சாய லாளை.'' (மாரீசன் வதைப் படலம், 85), ''தோகையும் இவ்வழித் தோமில் சிந்தனை, சேகறு நோன்பினர் என்னும் சிந்தையாள்.'', ''புனமயிற் சாயலின் எழிலில்.'' (சடாயு உயிர்நீத்த படலம், 25, 28), ''மயிலியல் பிரிந்தபின்.'' (அயோமுகிப் படலம், 95), ''தோகையும் பிரிந்தனள்.'' (கவந்தப் படலம், 24), ''ஓடா நின்ற களிமயிலே சாயற் கொதுங்கி உள்ளழிந்து, கூடா தாரில் திரிகின்ற நீயும் ஆகம் குளிர்ந்தாயோ.'' (பம்பாநதிப் படலம், 27), ''குலங்கொள் தோகை மகளிர்.'', ''மயிலியல்...மாதர்.'' (கிட்கிந்தைப் படலம், 45, 77), ''காண்டகு தோகை.'', ''மயிலியற் றேவி மார்கள்.'' (கடல்தாவு படலம், 2, 12), ''கானக மயில்கள் என்ன...பொலிதர அரக்கர் மாதர்.'', ''மழைதொடர் மஞ்ஞை என்ன விழாவொடு வருகின் றாரை.'', ''மயிலே அன்னார்.'' (ஊர் தேடு படலம், 103, 116, 215), ''மயிலியற் குயில் மழலையாள்.'' (காட்சிப் படலம், 4), ''தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன்றினான்.'' (உருக்காட்டு படலம், 4), ''மயிலியற் சீதை.'' (பிணி விடு படலம், 15), ''மயிற்புரை இயலி னாரும்.'' (திருவடி தொழுத படலம், 71) என்று கம்ப ராமாயணத்தில் வருவனவற்றைக் காண்க.

"மயிலியல் உமையினை." (இராவணன் பிறப்புப் படலம் 49), "புனமயிற் சாயற் பைம்பொற் பூண்முலை ஒருத்தி." (அசுவமேத யாகப் படலம், 92), "மயில்நிறத் தவளை." (சந்திரகேதுப் படலம், 7) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றைக் காண்க.

இலவ இதழ்: "இலவ இதழ் வாய் உமை." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "இலவிதழ்வாய் வீழ்வார்." என்று பட்டினத்துப் பிள்ளையாரும், "இலவிதழ்த் துவர்விட." (உண்டாட்டுப் படலம், 24), "இலவும் இந்திர கோபமும் புரை இதழ் இனியோய்." (சித்திரகூடப் படலம், 25) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 175-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நறுமணம் கமழும் மென்மையான கூந்தலைப் பெற்ற பெண்மணிகளே, நீங்கள் செய்கிற செயலாகிய இது எதற்காக? கலைகளையும் ஒளியையும் பெற்ற சந்திரன் என்னைச் சுடுகின்றான்; இந்தச் சந்தனக் குழம்பாகிய நெருப்பைப் பன்னீரோடு கலந்து என் உடம்பின்மேல் தடவு கின்ற கொடியவர்களாகிய மாதர்களே, இதைச் செய்யாமல் விட்டு விடுங்கள்; விட்டு விடுங்கள்; இங்கே வந்து வீசுகின்ற சந்திரனுடைய நிலாவும் நறுமணம் நிரம்பிய பொதியில் மலையிலிருந்து வரும் தென்றற் காற்றும் நெருப்பைப்போல வருகின்றன; அழகிய குளிர்ச்சியைப் பெற்ற கங்கையாற்றின் நீரும் பாம்பும் தங்கியிருக்கும் சடாபாரத்தைத் தன்னுடைய தலையின்மேல் கொண்ட வன்மீக நாதனுடைய திருவருளைப் பெற்று அதைத் தம்முடைய உடைமையாக உடையவராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய திருவருளை வழங்காமல் இருக்கிறார்.' பாடல் வருமாறு:

**" கந்தம் கமழ்மென் குழலீர், இதுஎன்?**
**கலைவாள் மதியம் கனல்வாள் எனைஇச்**
**சந்தின் தழலைப் பனிநீர் அளவித்**
**தடவும் கொடியீர், தவிரீர், தவிரீர்,**

வந்திங் குலவும் நிலவும் விரையார்
மலயா னிலமும் எரியாய் வருமால்;
அந்தண் புனலும் அரவும் விரவும்
சடையான் அருள்பெற் றுடையார் அருளார்.''

கந்தம்-நறுமணம். கமழ்-கமழும். மென்-மென்மையான. குழலீர்-கூந்தலை உடைய என்னுடைய தோழிமார்களே. இது-நீங்கள் செய்யும் செயலாகிய இது. என்-எதற்காக. கலை-கலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். வாள்-ஒளியையும் பெற்ற. மதியம்-சந்திரன். எனை-என்னை; இடைக்குறை. கனல்வான்-எரிக்கிறான்; கால மயக்கம். இச் சந்தின்-இந்தச் சந்தனக் குழம்பாகிய. தழலை-நெருப்பை. ப்: சந்தி. பனிநீர்-பன்னீரோடு. அளவி-கலந்து. த்: சந்தி. தடவும்-என்னுடைய உடம்பின்மேல் தடவும். கொடியீர்-கொடிய பெண்மணிகளே. தவிரீர்-அந்தக் காரியத்தைச் செய் வதை விட்டுவிடுங்கள். தவிரீர்-விட்டு விடுங்கள். இங்கு வந்து-நான் படுத்திருக்கும் இந்த இடத்திற்கு வந்து. உலவும்-வீசும். நிலவும்-சந்திரனுடைய கிரணமாகிய நிலாவும். விரை-நறுமணம். ஆர்-நிரம்பிய. மலய அனிலமும்-பொதிய மலை யிலிருந்து வீசும் தென்றற் காற்றும். எரியாய்-நெருப்பைப் போல ஆகிவரும்-என்மேல் வீசும். ஆல்: அசைநிலை. அம்-அழகிய. தண்-குளிர்ச்சியைப் பெற்ற. புனலும்-கங்கை யாற்றின் நீரும். அரவும்-பாம்பும். விரவும்-சேர்ந்து தங்கும். சடையான்-சடாபாரத்தைத் தன்னுடைய தலையிற் பெற்ற வன்மீக நாதனுடைய. அருள்-திருவருளை. பெற்று-அடைந்து. உடையார்-அதையே தம்முடைய உடைமையாகக் கொண்ட வராகிய சுந்தர மூர்த்தி நாயனார். அருளார்-எனக்குத் தம்முடைய திருவருளை வழங்காமல் இருக்கிறார்.

சந்தின் தழல்: ''செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ் சீதச் சந்தனமென் றாரோ தடவினார்.'' என்று **நந்திக் கலம்பகத்தில்** வருவதைக் காண்க.

கந்தம் கமழ் குழலீர்: ''குரவம்கமழ் நறுமென் குழல் உமை.'', ''மருவார் குழலி மாது.'', ''முருகு விரிகுழலார்.'',

''ஏலம் மலிகுழலார்.'', ''தேமரு வார்குழல்.'', ''கொட்டமே கமழும் குழலாளொடு கூடினாய்.'', ''கொங்கு சேர்குழலாள்.'', ''ஏலமலர்க் குழல்மங்கை நல்லாள்.'', ''வம்பலரும் மலர்க்கோதை பாகம்மகிழ் மைந்தனும்.'', ''மருவமை குழல் உமை பங்கர்.'', ''ஏலமார் தருகுழல் ஏழை.'', ''கொங்கியல், சுரிகுழல் வரிவளை இளமுலை உமை.'', ''கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க் கோமள மாதுமையாள்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மட்டுவார் குழலாளொடு.'', ''வம்பு பூங்குழல் மாது.'', ''மட்டிட்ட குழலார்.'', ''மட்டுவார் குழலாளொடு மால்விடை இட்ட மாவுகந் தேறும் இறைவனார்.'', ''மருவுற்ற மலர்க்குழலி மடவாள்.'', ''வம்பின்மலர்க் குழலுமையாள் மணவாளன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''குரவமரும் குழலாள் உமைநங்கை.'', ''குரவம் நாறிய குழலினார்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்.'' என்று மாணிக்க வாசகரும், ''வம்புலாம் கூந்தல் மனைவியை.'', ''விரைகமழ்ந்த மென் கருங்குழல்.'', ''வம்புலாம் கூந்தல் மண்டோதரி.'', ''கொங்குண் குழலார்.'', ''கொங்கார் குழலார்.'', ''மணங்கள் நாறும் வார்குழலார் மாதர்கள்.'', ''வெறியார் கருங்கூந்தல் ஆய்ச்சியர்.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''வம்பவிழ் கோதை பொருட்டா.'' என்று நம்மாழ்வாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 176-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'என்வரைக்கும் இராத்திரி நேரம் விடியும் வண்ணம் இருக்கவில்லை; பொறுமையும், என்னுடைய உள்ளத்தை வெளியில் போகாமல் நிறுத்தும் இயல்பும் சிறிதளவும் என்னிடம் தங்கவில்லை; என்னுடைய கொங்கைகளும் மனமும் உலரும்; தீய வினையை முன் பிறவியில் செய்திருக்கும் அடியேன் ஒருத்தியாக உள்ள என்னுடைய அளவிலோ பெருமையைப் பெற்ற வாழ்வு இருக்கிறதோ? தோழி

மார்களே சொல்லுங்கள்; பல தோழிமார்களும் செய்யும் துயரந்தான் இதுவோ? கரும்பு வில்லையும் மலரம்புகளையும் ஆயுதங்களாகக் கொண்ட காமதேவர் என்னுடைய பக்கத்திலிருந்து போகாமல் இருக்கிறார்; மலருகின்ற நிலாவை வீசும் பிறைச்சந்திரனும், கொன்றை மலர்களும் சூடிய தலையைப் பெற்ற வன்மீக நாதருடைய திருவருளை அடைந்து அதையே தம்முடைய உடைமையாகப் பெற்றவராகிய அந்தச் சுந்தர மூர்த்தி நாயனாரோ அடியேன் படும் வேதனையைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறார்."

பாடல் வருமாறு:

"புலரும் படியன் றிரவென் னளவும்;
பொறையும் நிறையும் இறையும் தரியா;
உலரும் தனமும் மனமும் வினையேன்
ஒருவேன் அளவோ பெருவாழ் வுரையீர்;
பலரும் புரியும் துயர்தான் இதுவோ?
படைமன் மதனார் புடைநின் றகலார்;
அலரும் நிலவும் மலரும் முடியார்
அருள்பெற் றுடையார் அவரோ அறியார்."

என்-அடியேனுடைய. அளவும்-வரையிலும். இரவு-இராத்திரி நேரம். புலரும்படி-விடியும் வண்ணம். அன்று-இராத்தாக இருக்கிறது. பொறையும்-பொறுமையும். நிறையும்-என்னுடைய மனத்தை ஒரு வழியில் நிறுத்தும் ஆற்றலும். இறையும்-சிறிதளவேனும். தரியா-என்னிடத்தில் தங்காமல் இருக்கின்றன. தனமும்-என்னுடைய கொங்கைகளும்; ஒருமை பன்மை மயக்கம். மனமும்-உள்ளமும். உலரும்-உலர்ந்து போகும். வினையேன்-முன் பிறவியில் தீவினையைப் புரிந்த அடியேனாகிய. ஒருவேன்-ஒருத்தியின். பெருவாழ்வு-பெருமையைப் பெற்ற வாழ்க்கை. அளவோ-அளவிலாவது வருமோ. உரையீர்-தோழிமார்களே, கூறுங்கள். பலரும்-நீங்கள் பல பேர்களும். புரியும்-செய்யும். துயர்தான்-துயரந்தான். இதுவோ-இது மட்டுமா? படை-கரும்பு வில்லையும் மலரம்புகளையும், வண்டுகளாகிய நாணையும் ஆயுதங்

களாகக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். மன்மதனார்-காமதேவர். புடை நின்று-என்னுடைய பக்கத்திலிருந்து. அகலார்-போகாமல் இருக்கிறார். அலரும்-மலர்ச்சியைப் பெறும். நிலவும்-நிலாவை வீசும் பிறைச் சந்திரனும். மலரும்-கொன்றை மலர்மாலையும்; ஆகு பெயர். முடியார்-சூடிய தலையைப் பெற்ற வன்மீக நாதருடைய. அருள்-திருவருளை. பெற்று-அடைந்து. உடையார்-அதனையே தம்முடைய உடைமையாகக் கொண்ட சுந்தர மூர்த்தி நாயனாராகிய. அவரோ-அந்த ஆணழகரோ. அறியார்-அடியேன் படும் வேதனையைத் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறார்.

அடுத்து வரும் 177-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தேரும் துவசங்களும் நெருங்கியிருக்கும் திருவீதியைப் பெற்ற திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வன்மீக நாதரே, தேவரீரே அல்லாமல் வேறு யார் அடியேன் படும் துயரத்தைத் தெரிந்து கொள்வார்? சுவாமிகளே, அடியேன் சோர்வை அடையம் வண்ணம் இதுதானோ? கங்கையாற்றின் நீரும் பிறைச்சந்திரனும் புள்ளிகளைப் பெற்றவையும், கொலை செய்யும் இயல்பை உடையவையும் ஆகிய பாம்புகளின் வரிசையும் வரிசையான கபால மாலையின் பக்கத்தில் ஊருகின்ற சடாபாரத்தை உடைய வன்மீக நாதரே, இடப வாகனத்தின்மேல் எழுந்தருளுகிறவரே, தேவரீருடைய பக்தி இல்லாதவர்களைப் போல அடியேனா துன்பத்தை அடைவேன்?' பாடல் வருமாறு:

**"தேரும் கொடியும் மிடையும் மறுகில்**
**திருவா ரூரீர், நீரே அல்லால்**
**ஆரென் துயரம் அறிவார்? அடிகேள்,**
**அடியேன் அயரும் படியோ இதுதான்?**
**நீரும் பிறையும் பொறிவாள் அரவின்**
**நிரையும் நிரைவெண் டலையின் புடையே**
**ஊரும் சடையீர், விடைமேல் வருவீர்,**
**உமதன் பிலர்போல் யானோ உறுவேன் ?"**

தேரும்-இரதமும். கொடியும்-துவசங்களும்; ஒருமை பன்மை மயக்கம். மிடையும்-நெருங்கியிருக்கும். மறுகில்-தெருவை உடைய; உருபு மயக்கம். திருவாரூரீர-திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளியிருக்கும் வன்மீக நாதரே. நீரே-தேவரீரே. அல்லால்-அல்லாமல். என்-அடியேனுடைய. துயரம்-துயரத்தை. அறிவார்-தெரிந்து கொள்பவர். ஆர்-யார் இருக்கிறார். அடிகேள்-சுவாமிகளே. அடியேன் அயரும்-அடியேன் சோர்வை அடையும். இதுதான்-இந்த வேதனை தான். படியோ-வண்ணமோ. நீரும்-கங்கையாற்றின் புனலும். பிறையும்-பிறைச் சந்திரனும். பொறி-புள்ளிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வாள்-கொலை செய்யும் இயல்பைக் கொண்ட. 'ஒளியைப் பெற்ற' எனலும் ஆம். அரவின்-பாம்புகளின்; ஒருமை பன்மை மயக்கம். நிரை-வரிசையாக விளங்கும். வெண்டலையின்-பிரம கபாலங் களின்; ஒருமை பன்மை மயக்கம். புடை-பக்கத்தில். ஏ: அசை நிலை. ஊரும்-தங்கியிருக்கும். சடையீர்-சடாபாரத்தைத் தலையில் உடையவரே. விடைமேல்-இடபவாகனத்தின் மீது. வருவீர்-எழுந்தருளி வருபவரே. உமது-தேவரீருடைய. அன்பு-பக்தி. இலர் போல-இல்லாதவரைப் போல. இலர்: இடைக்குறை. யானோ-அடியேனோ. உறுவேன்-துன்பத்தை அடைவேன்.

விடைமேல் வருவீர்: ''விடை ஏறி.'', ''விடைதனை ஊர்தி நயந்தார்.'', ''விடை அமர்ந்து.'', ''எருதே கொணர் கென் றேறி.'', ''வெள்ளை எருதேறி...வருவார்.'', ''ஏறும் ஒன்றேறி.'', ''ஏறில் எருதேறும்.'', ''இயலும் விடையேறி.'', ''பந்த விடைஏறும் எந்தை.'', ''ஊரும் விடையானை.'', ''வெள்ளை எருத்தின் மிசையார்.'', ''ஆனேற தேறி.'', ''விடைய தேறி.'', ''ஏறினார் விடைமிசை.'', ''இடபம் ஏறுவர்.'', ''விடைஉகந் தேறுதிர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''ஏறுகந் தேறவல் லானும்.'', ''ஏறேறும் பெருமானை.'', ''ஏறினர் ஏறினை.'', ''ஏறேற்ற மாலேறி.'', ''ஏறுகந்தேற வைத்தார்.'', ''ஏறினை ஏறும்

எந்தை.'', ''ஏறுகந் தேறி னானே.'', ''அடல்விடை ஊர்தி யாகி.'', ''ஆனணைந் தேறும்.'', ''ஊர்ந்த விடையுகந் தேறிய செல்வனை.'', ''விடுபட்டி ஏறுகந் தேறி.'', ''பெற்றம் ஏறுவர்.'', ''விடையும் ஏறுவர்.'', ''மால்விடை இட்டமா உகந்தேறும் இறைவனார்.'', ''ஏற தேறிய எம்பெருமான்.'', ''ஏற தேறும் இடைமருதீசனார்.'', ''பெற்றம் ஏறிவென்.'', ''கொல்லை மால்விடை ஏறிய கோவினை.'', ''விடை ஊர்தியை.'', ''விடைகொள் ஊர்தியினான்.'', ''இடபம் ஏறியும்.'', ''ஏறேறும் எந்தையை.'', ''ஏறேற்க ஏறுமா வல்லான்.'', ''ஏறேற என்றும் உகப்பாய் போற்றி.'', ''வீறுடைய ஏறேறி.'', ''ஏறேறி ஏழுலகும் ஏத்த நின்றார்.'', ''ஆனேறொன் றூர்ந்துழலும் ஐயாறன்.'', ''ஆனேறொன் றதுஏறும் அண்ணல்.'', ''ஏறேறி எங்கும் திரிவான்.'', ''நரையார்ந்த விடையேறி.'', ''கடிய விடைஏறி.'', ''ஆனேற தேறும் அழகர்.'', ''நரைவிடையொன் றூர்தி யானை.'', ''விடைஏறிச் கடைதோறும் பலிகொள் வானை.'', ''மால்விடைஒன் றூர்தி யானை.'', ''ஏறேறி இந்நெறியே போதக் கண்டேன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''விடைய தேறித் திரிவதென்னே.'', ''ஏற்றை அடர ஏறி வேறுபட்டுத் திரிவ தென்னே.'', ''வேகம் கொண் டோடிய வெள்விடை ஏறி.'', ''வருவார் விடைமேல்.'', ''ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை.'', ''பெற்றம் ஏறுகந் தேறவல் லானை.'', ''விடையின்மேல் வருவானை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''இடபம் உகந்தேறிய வாறு.'', ''விடை விடாதுகந்த விண்ணவர் கோவே.'' என்று மாணிக்கவாசகரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 178-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'என்று இத்தகையவையாகிய வார்த்தைகள் பல வற்றையும் கூறும், இருட்டைப் போல அமைந்த முன்னுச்சி மயிரையும், சுருள் சுருளாகிய கூந்தலையும் பெற்ற பரவை யையும் வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரையும்

இந்த உலகத்தின்மேல் பிறக்குமாறு முன் காலத்தில் திரு வாய் மலர்ந்தருளிச் செய்தவனாகிய கைலாசபதி திருவருளை வழங்கும் விதத்தை யார் எண்ணுவார்? இந்தத் தலத்திற்கு வந்து தேவர்களும் வணங்கும் செல்வ வளத்தைப் பெற்ற திருவாரூர்ப் பூங்கோயிலில் வாழும் சிவபெருமானாகிய வன்மீகநாத சுவாமிகள், ''அன்றைக்கு அந்த இடத்தில் அந்த இருவருடைய திருமணத்தை நீங்கள் புரியுங்கள்'' எனத் தம்முடைய அடியவர்கள் தெரிந்து கொள்ளும் விதத்தால் திருவாய் மலர்ந்தருளிச் செய்து.' பாடல் வருமாறு:

**'' என்றின் னனவே பலவும் புகலும்**
**இருளார் அளகச் சுருளோ தியையும்**
**வன்றொண் டரையும் படிமேல் வரமுன்**
**புருள்வான் அருளும் வகையார் நினைவார்?**
**சென்றும் பர்களும் பணியும் செல்வத்**
**திருவா ரூர்வாழ் பெருமான் அடிகள்**
**அன் றங் கவர்மன் றலைநீர் செயும்.' என்**
**றடியார் அறியும் படியால் அருளி. ''**

இந்தப் பாடல் குளகம். என்று-என. இன்னனவே-இத்தகையனவாக உள்ள வார்த்தைகளையே. பலவும்-பல வற்றையும். புகலும்-கூறும். இருள்-இருட்டைப் போல. ஆர்-அமைந்த. அளக-முன்னுச்சி மயிரையும். ச்: சந்தி. சுருள்-சுருள் சுருளாகிய. ஓதியையும்-கூந்தலைப் பெற்றபரவையையும்; ஆகு பெயர். வன்றொண்டரையும்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனாரையும். படிமேல்-இந்த உலகத்தின் மேல். வர-பிறக்குமாறு. முன்பு-முன் காலத்தில். அருள்வான்-திருவாய் மலர்ந்தருளிச் செய்தவனாகிய கைலாசபதி. அரு ளும்-தன்னுடைய திருவருளை வழங்கும். வகை-விதத்தை. யார்-எவர். நினைவார்-எண்ணுவார். சென்று-வந்து. உம்பர் களும்-தேவர்களும். பணியும்-வணங்கும். செல்வ-செல்வ வளத்தைக் கொண்ட. த்: சந்தி. திருவாரூர்-திருவாரூர்ப் பூங் கோயிலில்; ஆகுபெயர். வாழ்-வாழும். பெருமான்-சிவ பெருமானாகிய. அடிகள்-வன்மீக நாத சுவாமிகள். அன்று-

அன்றைக்கு. அங்கு-அந்தத் திருவாரூரில். அவர்-அந்தப் பரவை சுந்தர மூர்த்தி நாயனார் என்னும் இருவருடைய; ஒருமை பன்மை மயக்கம். மன்றலை-திருமணத்தை. நீர்-நீங்கள். செயும்-புரிவீர்களாக; இடைக்குறை. என்று-என. அடியார்-தம்முடைய அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அறியும்-தெரிந்து கொள்ளும். படியால்-விதத்தால். அருளி-திருவாய் மலர்ந்தருளிச் செய்து.

சுருள் ஓதி: "சுரிகுழல் நல்ல துடி இடையோடு." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "சுரிபுரி குழலியோடும்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "சுருள்புரி கூழையர்.", "சுரிகுழற் பணைமுலை மடந்தை.", "சுரிகுழல் மடந்தை." என்று மாணிக்க வாசகரும், "நெறிந்த கருங்குழல்மடவாய்." என்று பெரியாழ்வாரும், "சுரிகுழல் கனிவாய்த் திரு.", "நெறித்திட்ட மென்கூழை நேரிழை." என்று திருமங்கை ஆழ்வாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 179-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' "நிலை பெற்ற புகழைக் கொண்ட திருநாவலூரில் வாழும் மக்களை ஆட்சி புரியும் அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார் மகிழ்ச்சியை அடையும் வண்ணம் மங்கையாகிய பரவையை வழங்கினோம்; இத்தகைய விதத்தில் நம்முடைய அடியவர்கள் தெரிந்து கொள்ளும் வண்ணமே யாம் கூறினோம்" எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டுத் தங்கத்தைப் போன்ற புரிகளைக் கொண்ட சிவந்த சடாபாரத்தைத் தன்னுடைய தலையில் பெற்றவனும், இடப வாகனத்தை ஓட்டுபவனும், போர் புரியும் பெரிய யானையின் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்துக் கொண்டவனும் ஆகிய வன்மீக நாதன், அன்னப் பறவையைப் போன்ற நடையை உடையவளாகிய பரவைக்கு, "நம்பியாரூரனாகிய சுந்தர மூர்த்தியோடு உனக்குத் திருமணம் சமீபகாலத்தில் நடைபெறும்" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

''மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ,
'மங்கை பரவை தன்னைத் தந்தோம்;
இன்னவ் வகைநம் அடியார் அறியும்
படியே உரைசெய் தனம்' என் றருளிப்
பொன்னின் புரிபுன் சடையன் விடையன்
பொருமா கரியின் உரிவை புனைவான்
அன்னந் நடையாள் பரவைக், 'கணிய
தாரு ரன்பால் மணம்.' என் றருள.''

இந்தப் பாடல் குளகம். மன்னும்-நிலை பெற்று விளங்கும். புகழ்-புகழைப் பெற்ற. நாவலர்-திருநாவலூரில் வாழும் மக்களை; ஒருமை பன்மை மயக்கம். கோன்-ஆட்சி புரியும் அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார். மகிழ-மகிழ்ச்சியை அடையும் வண்ணம். மங்கை-மங்கைப் பருவத்தை அடைந்தவளாகிய. பரவை தன்னை-பரவையை; தன்: அசைநிலை. த்: சந்தி. தந்தோம்-உனக்கு மனைவியாக வழங்கினோம். இன்ன-இத்தகைய. வ்: சந்தி; செய்யுளின் ஓசை நோக்கி வந்த மெய்யெழுத்து. வகை-விதத்தை. நம்-எம்முடைய. அடியார்-அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அறியும்-தெரிந்து கொள்ளும். படி-விதம். ஏ: அசை நிலை. உரை செய்தனம்-யாம் கூறினோம். என்று-என. அருளி-திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. ப்: சந்தி. பொன்னின்-தங்கத்தைப் போன்ற. புரி-புரிகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். புன்-சிவந்த. சடையன்-சடாபாரத்தைத் தன்னுடைய தலையின்மேற் பெற்றவனும். விடையன்-இடப வாகனத்தை ஓட்டுபவனும். பொரு-போர்புரியும். மா-பெரிய. கரியின்-தாருகாவனத்து முனிவர்கள் தன்னைக் கொல்லுவதற்காக விடுத்த யானையினுடைய உரிவை-உரித்த தோலை. புனைவான்-போர்வையாகப் போர்த்துக் கொண்டவனும் ஆகிய வன்மீக நாதன். அன்ன-அன்னப் பறவையின் நடையைப் போன்ற; ஆகு பெயர். ந்: செய்யுள் ஓசையை நோக்கி வந்த ஒற்றெழுத்து. நடையாள்-நடக்கும் நடையைப் பெற்றவளாகிய. பரவைக்கு-பரவை என்னும்

பெண்மணிக்கு. ஆரூரன்பால்-நம்பியாரூரனாகிய சுந்தர மூர்த்தியோடு; உருபு மயக்கம். மணம்-உனக்குத் திருமணம். அணியது - சமீபகாலத்தில் நடைபெறுவது. என்று-என. அருள-திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

சடைக்குப் பொன் உவமை: ''பொன்னீர்மை துன்றப் புறந்தோன்றும்...புன்சடையினான்.'', ''பொன்திரண் டன்ன புரிசடை.'', ''பொன்னியன்ற சடை.'', ''புல்கு பொன்னிறம் புரிசடை.'', ''பொன்த்யங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை.'', ''பொன்போலும் சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே.'', ''பொன்னன புரிதரு சடையினர்.'', ''புரிதரு புன்சடை பொன்தயங்க.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பொன்னலில் புன்சடையான்.'', ''பொற்சடை பொன்போல் மிளிர.'', ''பொன்னன வார் சடை.'', ''பொன்னக் கன்ன சடைப்புக லூரரோ.'', ''பொன்உள் ளத்திரள் புன்சடை.'', ''செம்பொனாற் செய்தழகு பெய்தாற்போலும் செஞ்சடைஎம்பெருமானே.'', ''பொன்னேர் சடைமுடியாய் நீயே.'', ''பொன்னிசையும் புரிசடைஎம் புனிதன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''செம்பொனேர் சடையாய்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''பொன்னை வென்றதோர் புரிசடை.'' என்று மாணிக்க வாசகரும், ''பொன்னைச் சுருளாகச் செய்தனைய தூச்சடையான்.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''புன்சடை விட்டெரி பொன்திகழும்.'' என்று கபிலதேவ நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து உள்ள 180-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'காம மயக்கமாகிய துயரத்தில் கவலையை அடைந்த வராகிய பரவையாருடைய உள்ளத்தில் வரம்பு இல்லாத இருட்டும், இராத்திரி நேரம் கழிந்து போகும் கடைசிச் சாமத்தின் இருட்டும் நீங்கி, விடியற் காலம் வர, சூரியன் உதயமாகும் சமயத்தில் வன்மீக நாதருடைய அடியவர்கள் கூடிக்கொண்டு பாதுகாப்புத் துணைவராகிய அந்த வன்மீக

நாதருடைய பெரிய திருவருளை வணங்கித் திருநாவலூரில் வாழும் மக்களை ஆட்சி புரியும் அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார் மகிழ்ச்சியை அடையும் வண்ணம் மலர் மாலையைச் சூடிய கூந்தலையுடைய பரவையினுடைய திருமணத்தைத் தகுதியான இயல்போடு நடக்குமாறு புரிந்தார்கள்." பாடல் வருமாறு:

**"காமத் துயரில் கவல்வார் நெஞ்சிற்**
**கரையில் இருளும் கங்குல் கழிபோம்**
**யாமத் திருளும் புலரக் கதிரோன்**
**எழுகா லையில்வந் தடியார் கூடிச்**
**சேமத் துணையாம் அவர்பே ரருளைத்**
**தொழுதே திருநா வலர்கோன் மகிழத்**
**தாமக் குழலாள் பரவை வதுவை**
**தகுநீர் மையினால் நிகழச் செய்தார்."**

காம-காம மயக்கத்தினுடைய. த்: சந்தி. துயரில்-துயரத்தில் ஆழ்ந்து. கவல்வார்-கவலையை அடைபவராகிய பரவையாருடைய. நெஞ்சில்-திருவுள்ளத்தில் இருந்த. கரை-வரம்பு. இல்-இல்லாத; கடைக்குறை. இருளும்-இருட்டாகிய மயக்கமும்; உவம ஆகுபெயர். கங்குல்-இராத்திரி நேரம். கழிபோம்-கழிந்து போகும். யாமத்து-இறுதிச் சாமத்தினுடைய. இருளும்-இருட்டும். புலர-விடிய. க்: சந்தி. கதிரோன்-வெயிலாகிய கிரணங்களை வீசும் சூரியன். எழு-உதயமாகும். காலையில்-காலை நேரத்தில். அடியார்-வன்மீக நாதருடைய அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வந்து-பரவையார் வாழும் திருமாளிகைக்கு வந்து. கூடி-கூட்டமாகக் கூடிக் கொண்டு. ச்: சந்தி. சேம-பாதுகாப்பு. த்: சந்தி. துணையாம்-துணைவராகும்; திணை மயக்கம். அவர்-அந்த வன்மீக நாதருடைய. பேரருளை-பெரிய திருவருளை. த்: சந்தி. தொழுது-வணங்கிவிட்டு. ஏ: அசைநிலை. திருநாவலர்-திருநாவலூரில் வாழும் மக்களை; ஒருமை பன்மை மயக்கம். கோன்-ஆட்சி புரியும் அரசராகிய சுந்தர மூர்த்தி நாயனார். மகிழ-மகிழ்ச்சியை அடையும் வண்ணம். த்: சந்தி. தாம-

மலர் மாலையைச் சூடிய. க்: சந்தி. குழலாள்-கூந்தலை உடையவளாகிய. பரவை - பரவையினுடைய. வதுவை-- திருமணத்தை. தகு-தகுதியைப் பெற்ற, நீர்மையினால்-இயல் போடு; உருபு மயக்கம். நிகழ-நடை பெறுமாறு. செய்தார்-- புரிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

துணையாக உள்ளவர்: "முற்றுணை யாயி னானை.", "தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்னடி யோங் களுக்கே.", "சுற்றமும் துணையும்.", "அரும்துணையை.", "பிறப்பை நீக்கும்என் துணையே.", "வழித்துணையாம் மழபாடி வயிரத் தூணே." என்று திருநாவுக்கரசு நாயனா ரும், "என்அமுதே எனக்கார் துணை நீயலதே.", "இறைவா என்அமுதே எனக்கார் துணை நீயலதே.", "என்தாதை பெருமான் எனக்கார்துணை நீயலதே.", "ஆரா என்அமுதே எனக்கார் துணை நீயலதே.", "ஐயா என் அமுதேஎனக் கார்துணை நீயலதே.", "அண்ணா என் அமுதே எனக்கார்துணை நீயலதே.", "அரியாய் என் அமுதே எனக்கார்துணை நீயலதே.", "ஆறார் செஞ்சடை யாய் எனக்கார் துணை நீயலதே.", "அயனே என் அமுதே எனக் கார்துணை நீயலதே.", "வீரட்டத்துள் ஏராரும் இறையைத் துணையா.", "துணைஎன்று நான் தொழப் பட்ட ஒண் சுடரை.", "பாதமே தொழுவார் பற்றுவான் துணை.", "வழித்துணை மருந்தே." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "தோழா போற்றி துணைவா போற்றி.", "தனித்துணைநீ.", "வினையேனுடைய மனத் துணையே." என்று மாணிக்க வாசகரும் பாடியருளிய வற்றைக் காண்க.

தாமக் குழலாள்: "பூவார் குழலார்.", "குரவம் கமழ் குழலாள்.", "பூவியல் புரிகுழல்...உமையவள்.", "கொத் தலர் குழலி யோடு.", "ஏல மலர்க்குழல் நங்கை.", "பூங்கமழ் கோதை.", "வம்பலரும் மலர்க்கோதை.", "மலர்நிறை சுரி குழல் மடவரல்...உமை.", "கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க் கோமள மாதுமையாள்." என்று

திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "கொந்தார் பூங் குழலினாரை.", "பூமென் கோதை உமை.", "குராமன்னும் குழலாள்.", "வம்பு பூங்குழல் மாது.", "வம்பின் மலர்க் குழல் உமையாள்." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "மட்டார் பூங்குழல் மலைமகள்.", "குரவமரும் குழலாள் உமை.", "குரவம் நாறிய குழலினார்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "குரவம் கமழ்கோதை." என்று சேரமான் பெருமாள் நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பின்பு வரும் 181-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'செந்தமிழ் நாட்டில் தெற்குத் திசையில் புகழ் பெற்று விளங்கும் திருநாவலூரில் வாழும் மக்களை ஆட்சி புரியும் அரசனாகிய சுந்தர மூர்த்தி எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாகிய வன்மீக நாதன் வழங்கிய திருவருளால் மின்னலைப் போலவும் அமைந்திருக்கும் பூங்கொடியைப் போலவும் இருக்கும் இடுப்பைப் பெற்றவளாகிய பரவை என்னும் பெயரைப் பெற்றவளும், மென்மையான இயல்பைக் கொண்டவளும் ஆகியவளுடைய தங்க நிறம் அமைந்திருக்கும் கொங்கைகளாகிய உயர்ந்திருத்தலைப் பெற்று இணைந்திருக்கும் மலைகளே தம்முடைய சார்பு ஆகப் பல தினங்களும் பழகும் யோகத்தைப் பரம்பரையினால் விருப்பத்தைப் பெற்று விளங்கினார்.' பாடல் வருமாறு:

**"தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான்**
**திருவருளால்**
**மின்னாரும் கொடிமருங்குற் பரவையெனும்**
**மெல்லியல்தன்**
**பொன்னாரும் முலைஓங்கற் புணர்குவடே**
**சார்வாகப்**
**பன்னாளும் பயில்யோகம் பரம்பரையின்**
**விரும்பினார்."**

தென்-செந்தமிழ் நாட்டில் தெற்குத் திசையில் புகழ் பெற்று விளங்கும். நாவலூர்-திருநாவலூரில் வாழும் மக்களை; இட ஆகுபெயர். மன்னன்-ஆட்சி புரியும் அரசனாகிய சுந்தர மூர்த்தி. தேவர்-எல்லாத் தேவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். பிரான்-தலைவனாகிய வன்மீக நாதன். திருவருளால்-வழங்கிய திருவருளால். மின்-மின்னலைப் போலவும். ஆரும்-அமைந்திருக்கும். கொடி-பூங்கொடியைப் போலவும் விளங்கும். மருங்குல்-இடுப்பைப் பெற்ற. பரவை எனும்-பரவை என்று திருநாமம் கூறப்படும்; இடைக்குறை. மெல்-மென்மையான. இயல்தன்-இயல்பை உடையவளுடைய. தன்: அசைநிலை. பொன்-தங்கத்தைப் போல. ஆரும்-அமைந்திருக்கும். 'பொன்-தங்க ஆபரணங்களைப் பூண்ட' எனலும் ஆம்; ஆகுபெயர். முலை-கொங்கைகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். ஓங்கல்-உயரமாக இருந்தலைக் கொண்ட. புணர்-இணைந்திருக்கும். குவடே-மலைகளே; ஒருமை பன்மை மயக்கம். சார்வாக-தம்முடைய சார்பு ஆக. பன்னாளும்-பல தினங்களும்; ஒருமை பன்மை மயக்கம். பயில்-தாம் பழகும். யோகம்-யோகமாக. பரம்பரையின்-பரம்பரை உரிமையினால். விரும்பினார்-விருப்பத்தைப் பெற்று அந்த நாயனார் விளங்கினார்.

இடுப்புக்கு மின்னல் உவமை: ''மின்னா ரிடையாளொடு.'', ''மின்னா ரிடையாள் உமையா ளோடும் இருந்த விமலனை.'', ''மின்போல் மருங்குல் மடவாளொடு மேவி.'', ''மின்னின் இடையாளொர் கூறன்.'', ''மின் னி டை மாதொடும் வீற்றிருந்த விமலன்.'', ''மின்னி னாரிடையாளொருபாகமாய் மன்னினான்.'', ''மின்னியலும் நுண்ணிடை நன் மங்கையர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மின்னிறம் மிக்க இடையுமைநங்கை.'', ''மின்னினேரிடை யாள் உமைபங்கனை.'', ''மின்னின் நுண்ணிடைக் கன்னியர்.'', ''மின்நலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்.'', ''மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்.'', ''மின்னிடையாள் பாகன்.'', ''மின்னே ரிடை

பங்கன் நீயே.'', ''மின்னுருவ நுண்ணிடையாள் பாகத் தான் காண்.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத் தாரும்.'', ''மின்காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும் விருப்பவன்.'', ''மின்னொத்த நுண்ணிடையாள் பாகம் கண்டேன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மின் செய்த நுண்ணிடையாள் பரவை.'', ''மின்னும் நுண்ணிடை மங்கைமார்.'', ''மின்ற யங்கிய இடைமட மங்கை மேவும் ஈசனை.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''எம்மை ஆளுடையாள் இட்டிடையின் மின்னி.'', ''மின்னிடைச் செந்துவர் வாய்... மென்மொழியீர்.'', ''மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்.'', ''மின்கணினார் நுடங்கும் இடையார்.'', ''மின்னியல் நுண்ணிடையார்கள்.'' என்று மாணிக்க வாசகரும், ''மின்னின் இடையாள் உமையாள்.'' என்று திருவாவியமுதனாரும், ''மின் னு ருக் கு று ம் இடை.'', ''மின்னணங்குறும் இடை.'' என்று திருத்தக்க தேவரும், ''மின்னனைய நுண்ணிடையார்.'', ''மின்னிடைச் சீதை.'', ''மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள்.'', ''மின்போல் நுண் ணிடையாளொரு கன்னியை.'', ''மின்னொத்த நுண்ணிடை யாய்.'' என்று பெரியாழ்வாரும், ''மின்னனைய நுண் ணிடையார் உருப்பசியும் மேனகையும்.'', ''மின்னொத்த நுண்ணிடையாளை.'', ''மின்பற்றா நுண்மருங்குல் மெல் லியல்.'' என்று குலசேகரப் பெருமாளும், ''மின்குலாம் மருங்குல்.'', ''மி ன் னி ன் நுண்ணிடைமடக் கொடி.'', ''மின்னில் மன்னும் நுடங்கிடை மடவார்.'', ''மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கும் இடையாள்.'', ''மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா.'', ''மின்னின் அன்ன மருங்குல்.'', ''மின்னே ரிடையார் வேட்கையை.'', ''மின் னொத்த நுண்மருங்குல் மெல்லியலை.'', ''மின்னிடையார் வேட்கை நோய்.'', ''மின்னும்மா வல்லியும்...வென்ற நுண் ணிடை.'' என்று திருமங்கையாழ்வாரும், ''மின்னிடை மடவார்கள்.'' என்று நம்மாழ்வாரும், ''மின்னனைய நுண் மருங்குல் மெல்லியலார்.'', ''மின்னிடையா ரோடும் விளை

யாடி.'', ''மின்னிடைமேல் கைவைத்து.'', ''மின்னனைய நுண்மருங்குல் வேகவதி.'', ''மின்னிடையாள் நாயகனை.'', ''மின்னிடையார் சேரியிலும்.'', ''மின்னிடை ஆய்ச்சியர்.'' என்று திருமங்கை ஆழ்வாரும் பாடியருளியவற்றைக் காண்க.

மகளிர் இடுப்புக்குப் பூங்கொடி உவமை: ''வல்லி நுண் இடையாள் உமையவள்.'', ''வல்லிய நுண்ணிடையாள் உமையாள்.'', ''பூங்கொடி மடவாள் உமை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''எழுது கொடிஇடையார்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''கொடியிடை காணில்.'' என்று கருவூர்த் தேவரும், ''கொடியைக் கோமளச் சாதியை.'' என்று சேதிராயரும், ''கொடியென நுடுங்கும் கோல மருங்குலர்.'', ''சிறுகொடி மருங்கின்.'', ''ஒழுகுகொடி மருங்குல்.'' எனக் கொங்கு வேளிரும், ''வள்ளி நுடங்கிடை மாதர்.'' என்று பெரியாழ்வாரும், ''வல்லிச் சிறு நுண்ணிடையார்.'' என்று திருமங்கை ஆழ்வாரும் பாடியருளியவற்றைக் காண்க.

''கொடியிடை.'' (நகரப் படலம், 37), ''கொடியுலாம் மருங்குல் நல்லார்.'' (நீர் விளையாட்டுப் படலம், 13), ''வள்ளி நுண்ணிடை மாமலராள்.'' (கங்கைப் படலம், 19), ''வல்லிகள் நுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்குல் நேர்க்க.'' (சூர்ப்பணகைப் படலம், 6), ''வள்ளிநுண் மருங்கும் அன்ன வானவர் மகளிர்.'' (ஊர்தேடு படலம், 38) என்று கம்பரும் பாடியருளியவற்றைக் காண்க. ''கொடிமென் நுசுப்பிற் குயிலமென் சொல் அவளை.'' (தோத்திரப் படலம், 3) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றைக் காண்க.

கொங்கைக்கு மலை உவமை: ''மலைமுலை... அரக்கியர்.'' (படைத் தலைவர் வதைப் படலம், 61) என்று கம்பராமாயணத்தில் வருவதைக் காண்க.

மகளிர் இடுப்புக்கு மின்னல் உவமை: ''மின்பிறழ் நுசுப்பினர்.'' (திருவவதாரப் படலம், 116), ''மின்னொத்த இடையினாரும்.'' (நீர் விளையாட்டுப் படலம், 6), ''மின்

னை நுடங்குகின்ற மருங்குவாள் ஒருத்தி.'' (உண்டாட்டுப் படலம், 16), ''மின்னேபுரை இடையாளொடும்.'' (பரசு ராமப் படலம், 4), ''மின்னை யேய்இடை நுடங்கிட.'' (விராதன் வதைப் படலம், 40), ''மின்னைப்போல் இடையாளொடு.'', ''மின்னிடை அலச ஓடி.'' (சூர்ப்பணகைப் படலம், 62, 66), ''மேகத்தின் மின்னை முன்னே வென்ற நுண் ணிடையை.'' (மாரீசன் வதைப் படலம், 76), ''மின் னிடைச் சனகியை.'' (கலன்காண் படலம், 18), ''மின்னிடை ...மாதர்.'' (கிட்கிந்தைப் படலம், 77), ''மெலிவுடை மருங்குல் மின்னின் அலமர.'' (ஊர்தேடு படலம், 110), ''மின்னிடைச் செவ்வாய்.'' (நிந்தனைப் படலம், 12) என்று கம்ப ராமாயணத்திலும், ''மின்னிடையாள் சரமை.'' (இராவணன் பிறப்புப் படலம், 65), ''மின்னிடையினார்.'' (திக்குவிசயப் படலம், 172), ''மின்னார் மருங்குல் திரு.'' (அனுமப் படலம், 44), ''மின்னே ரிலாதஇடை மெல் லியலை.'' (சீதை வனம்புகு படலம், 71), ''மின்னிடை மடவாய்.'' (இலவணன் வதைப் படலம், 21), ''மின்னிடை யாளைக் கண்டு மெய்யுருகி.'' (ஷ. 23), ''மின்னிய நுண் ணிடை மிதிலை வல்லி.'' (அசுவ மேதயாகப் படலம், 124) என்று உத்தர காண்டத்திலும் வருவனவற்றைக் காண்க.

அடுத்து வரும் 182-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி தன்னை ஆளாக உடைய தலைவனாகிய வன்மீக நாதனுடைய திருவடிகளாகிய செந்தாமரை மலர்களைத் தன்னுடைய தலையின்மேலும் திருவுள்ளத்திலும் மலரச் செய்து பல திருப்பதிகங்களாகிய தான் பாடியருளும் செந்தமிழ் மொழியில் கட்டிய மாலைகள் பலவற்றை அணிந்து பரவை என்று கூறப்படும் மின்னலைப் போன்ற இடுப்பைப் பெற்ற மங்கையோடும் சேர்ந்து விளையாடி இருவரும் வாழ்க்கையை நடத்திக் கொண்டு போகிறவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலும் சிந்தையிலும் மலர்வித்துத்
திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப்
பரவையெனும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச்
செல்கின்றார்."

தன்னை-சுந்தர மூர்த்தி தன்னை. ஆளுடைய-ஆளாக உடைய. பிரான்-தலைவனாகிய வன்மீக நாதனுடைய. சரண-திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். அரவிந்த மலர்-செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். சென்னியிலும்-தன்னுடைய தலையின்மேலும். சிந்தையிலும்-தன்னுடைய திருவுள்ளத்திலும். மலர்வித்து-மலரும் வண்ணம் செய்து. த்: சந்தி. திருப்பதிகம்-திருப்பதிகங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். பன்னு-தான் பாடியருளும். தமிழ்-செந்தமிழ் மொழியில். தொடை-கட்டுதலைப் பெற்ற. மாலை-மாலைகள்; ஒருமை பன்மை மயக்கம். பல-பலவற்றை. சாத்தி-வன்மீக நாதருக்கு அணிந்து. ப்: சந்தி. பரவை எனும்-பரவை என்று கூறப்படும். எனும்: இடைக்குறை. மின்-மின்னலைப் போன்ற. இடையாள் உடன்-இடுப்பைப் பெற்ற பெண்மணியோடு. கூடி-சேர்ந்து. விளையாடி-திருவிளையாடல்களைப் புரிந்து; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செல்கின்றார்-பரவையும் சுந்தர மூர்த்தியும் தங்களுடைய இல்லற வாழ்க்கையை நடத்திக் கொண்டு போகிறவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

சென்னியிலும் சிந்தையிலும் வைத்தல்: "தகவுடையோர் சிந்தையிலும் சென்னியிலும் வீற்றிருக்கும் சீர்த்தியான்." (குகப் படலம், 32) என்று கம்ப ராமாயணத்தில் வருவதைக் காண்க.

சரணாரவிந்த மலர்: "மலரடி கூடுவார்.", "பங்கய மலர்ச் சிறடி." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்

ரும், "ஆயிரம் தாமரை போலும் ஆயிரம் சேவடி யானும்.", "பூங்கழல் தொழுதும்.", "மாயிரு ஞால மெல்லாம் மலரடி வணங்கும்.", "செய்யநின் கமல பாதம்.", "தாளுடைச் செங்கமலத் தடங்கொள் சேவடியர்.", "அம்மலர்ப் பாதம்.", "பொலம்புண்ட ரீகப் புதுமலர் போல்வன... ஐ யா ற ன் அடித்தலமே.", "பூவார் அடிச்சுவடு.", "மாமல ராகக் குலாவின...இன்னம் பரான்றன் இணை யடியே.", "செந்தாமரையாம் அடி.", "நறுமலராய் நாறும் மலர்ச்சேவடி.", "அந்தாமரைப் போதலர்ந்த அடி.", "அடித்தா மரைமேல் வைத்தார்.", "பூவார்ந்த பொன் னடிக்கே." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "விரும்பி நின்மலர்ப் பாதமே நினைந்தேன்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "திருப்பாதப் போதுக்காக்கி.", "ஒண்மலர்த் தாள் தந்து.", "சொற்கழிவு பாதமலர்.", "செங்கமலப் பொற்பாதம்.", "அண்ணாமலையான் அடிக்கமலம்.", "ஆதியாம் பாதமலர்.", "போகமாம் பூங்கழல்கள்.", "மால் நான்முகனும் காணாத புண்டரிகம்.", "ஆட் கொண் டருளும் பொன்மலர்கள்.", "பொங்கு மலர்ப் பாதம்.", "தாட்டா மரைகாட்டி.", "நாண்மலர்ப் பாதம் காட்டி.", "செம்மலர்ப் பாதங்கள்.", "அம்பலவன் தேனார் கமலமே.", "செய்யார் மலரடிக்கே.", "பூவா ரடிச்சுவடு.", "இணைப்போ தவ்வையளித்து.", "செழுக்கமலத் திரளன நின் சேவடி.", "ஒண்மலர்த் திருப்பாதத் தப்பன்.", "எழிலார் பாதப் போது.", "பாதப் பூம்போது.", "உன் பாதமலர் காட்டிய வாறு.", "பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே.", "தாட்செய்ய தாமரைச் சைவனுக்கு.", "மென்மலர்க் கழல்காட்டி.", "சோதியான் தூய மாமலர்ச் சேவடி.", "அழகன்றன் வட்ட மாமலர்ச் சேவடி.", "பொங்கு மாமலர்ச் சேவடி.", "வைத்த மாமலர்ச் சேவடி.", "சேய மாமலர்ச் சேவடி.", "அத்தன் மாமலர்ச் சேவடி.", "வழுவி லாமலர்ச் சேவடி.", "செம் பொன் மாமலர்ச் சேவடி.", "மாலறியா மலர்ப்பாதம்.", "மாமறையும் மறியா மலர்ப்பாதம்.", "வானவரும் மறியா

மலர்ப் பாதம்.'' என்று மாணிக்க வாசகரும், ''அரணார் அவிந்தழிய வெந்தீஅம் பெய்தான் சரணார விந்தங்கள்.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''அடிமலர் வானவர் ஏத்த.'', ''செய்வளர் கமலச் சீறடி.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''அடிப்போது நம்தலை வைத்து.'' என்று நக்கீர தேவநாயனாரும், ''உன்பாத மலரணைந்து.'' என்று பரணதேவ நாயனாரும், ''அடியே...மலர் பழிக்கும்மே.'', ''புடைதரு தாமரைப் போதுகொலாம் சரண்.'' என்று இளம் பெருமான் அடிகளும், ''நடம்முயன் றெடுத்த பாதப் போதும்.'', ''தெய்வத் தாமரைச் செவ்வி யின் மலர்ந்து...திகழ்ந்துள தொருபால் திருவடி.'', ''அடி வலப்பாலது செந்தாமரை ஒத்தது.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''சம்பு வின்அடித் தாமரைப் போது.'',''பாத மலர்கள்மேல் விழுந்தார் பத்தி முதிர்ந்த பாலகனார்.'', ''பூவா ரடிகள்என் தலைமேற் பொறித்துவைப்பாய்.'', ''பாதமலர் சூட்டினான் சிவபெருமான்.'', ''வாசமலர் மென் கழல்.'', ''கடிமலர்மென் சேவடிகள்.'', ''சரண கமலம் பூண்டார்.'', ''பாத பங்கயம் போற்றி.'', ''புற்றிடம் கொண்டவர் புனிதப் பங்கயப்பதம் தொழுது.'', ''பொன் னடிக் கமலங்களில்.'', ''திருவால வாயமர்ந்த தனிநாதன் பூ மருவும் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார்.'', ''பாத தாமரை பணிந்தார்.'', ''மலர்க்கழல் பணிவுற்றார்.'', ''திருமூலட் டானத்தார் விரையேறு மலர்ப்பாதம் தொழுத ணைந்தார்.'', ''திருநள்ளாறர் புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்த நிலமிசைப்பணிந்தார்.'',''ஆவியினும் அடைவுடை யார் அடிக்கமலத் தருள்போற்றி.'', ''செய்ய கமலச் சேவடிக் கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்தார்.'', ''நாட்டம் மலரும் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியிற் கூட்டும் உணர்வு கொண்டெழுந்து.'', ''அம்பிகா வல்லவர் செய்ய அடித் தாமரையின் கீழ்வீழ்ந்தார்.'', ''பாத தாமரை சூட.'', ''மையணியும் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்.'', ''பூங்கழலார்.'', ''செங்கமலக் கழல் வணங்கி.'', ''இறைவர் மலரடியின் நிழல்சேர்ந்தார்.'', ''சேவடிப்போ தெப்போதும்

சென்னியினும் மலர்ந்தனவால்.", "ஏறுயர்த்தார் பாதார விந்தத்தின் பாலராக.", "செங்கமல மலர்ப்பாதம் சேர்வதனுக் குரியார்கள்.", "திருத்தில்லை மன்றாடும் மலர்ப் பாதம்.", "மலர்த்தாள் வாழ்த்தி." என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

சுந்தரமூர்த்தி நாயனார் இந்தளப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ
டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனைய போர்வை பற்றியான்
நோக்கி னேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர் செம்பொனும்
மணியும் தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர் அப்பனே
அஞ்சி னேனே. "

அந்த நாயனார் கொல்லிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" குருகுபா யக்கொழும் கரும்புகள் நெரிந்தசா
றருகுபா யும்வயல் அந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
துருகுமா றும்இவை உணர்த்தவல் லீர்களே. "

அந்த நாயனார் கொல்லிக் கௌவாணப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" பத்திமையும் அடிமையையும் கைவிடுவான்
பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன்
போய்த்தொழுவேன்
முத்தினைமா மணிதன்னை வயிரத்தை
மூர்க்கனேன்
எத்தனைநாட் பிரிந்திருக்கேன் என்ஆரூர்
இறைவனையே. "

அந்த நாயனார் தக்கேசிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" பொன்னும் மெய்ப்பொரு ளும்தரு வானைப்
போக மும்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாம்தவி ரப்பணிப் பானை
இன்ன தன்மையன் என்றறி வொண்ணா
எம்மா னைஎளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரு ரானை மறக்கலு மாமே."

அந்த நாயனார் காந்தாரப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" கரையும் கடலும் மலையும் காலையும் மாலையும் எல்லாம்
உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லாம்
அரையன் இருப்பதும் ஆரூர் அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்."

அந்த நாயனார் புறநீர்மைப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" அந்தியும் நண்பகலும் அஞ்சு பதம்சொல்லி
முந்தி எழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே."

அந்த நாயனார் செந்துருத்திப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

" மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி

ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல்
சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து
போதீரே. ''

அடுத்து உள்ள 183-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் காதல் மருவிய பரவையோடு கூடத் தங்கித் தம்முடைய திருமாளிகையிலும், பக்கத்தில் விளங்கும் பூம்பொழிலிலும், செந்தாமரை மலர், வெண்டா மரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற்பல மலர், குமுதமலர் முதலிய நீர்ப்பூக்கள் மலர்ந்திருக்கும் வாவியிலும், பக்கத்தில் உள்ள செய்குன்றிலும், அதன் பக்கத்தில் உள்ள ஒரு திண்ணையிலும், குளிர்ச்சியைப் பெற்ற முத்துப் பந்தலிலும் விளையாடி விட்டுத் தாம் அமர்ந்திருந்த செழுமையான ஆசனத்திலிருந்து இறங்கி வந்து தங்களுடைய தலைவராகிய வன்மீக நாதர் எழுந்தருளியிருக்கும் திரு வாரூர்ப் பூங்கோயிலை அடைந்து அந்த நாதரைத் தம்மு டைய கைகளைக் கூப்பிக் கும்பிடும் விருப்பத்தோடு ஆளு டைய நம்பியாகிய அந்த நாயனார்.' பாடல் வருமாறு:

**'' மாதுடன் கூட வைகி மாளிகை மருங்கு சோலை**
**போதலர் வாவி மாடு செய்குன்றின் புடையோர்**
**தெற்றிச்**
**சீதளத் தரளப் பந்தர்ச் செழுந்தவி சிழிந்து**
**தங்கள்**
**நாதர்பூங் கோயில் நண்ணிக் கும்பிடும்**
**விருப்பால் நம்பி. ''**

இந்தப் பாடல் குளகம். மாதுடன் கூட-சுந்தர மூர்த்தி நாயனார் காதல் மருவிய பரவையோடு சேர்ந்து. வைகி-தங்கி மாளிகை-தம்முடைய திருமாளிகையின். மருங்கு-பக்கத்தில் விளங்கும். சோலை-பூம்பொழிலிலும். போது-செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற்பல மலர், குமுத மலர், செங்கழுநீர்

மலர் முதலிய நீர்ப் பூக்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலர்-மலர்ந்திருக்கும். வாவி-வாவியிலும். 'வாபி' என்ற வட சொல்லின் திரிபு. மாடு-அதன் பக்கத்தில் அமைத்திருக்கும். செய்குன்றின்-செய்குன்றிலும். புடை-அதன் பக்கத்தில் உள்ள. ஓர் தெற்றி-ஒரு திண்ணையிலும். ச்: சந்தி. சீதள-குளிர்ச்சியைப் பெற்ற. த்: சந்தி. தரள-முத்துக்களால் கட்டப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பந்தர்-பந்தலிலும் விளையாடி விட்டு. ச்: சந்தி. செழும் தவிசு-தாம் அமர்ந்திருந்த செழுமையான ஆசனத்திலிருந்து. இழிந்து-இறங்கி வந்து. தங்கள்-தங்களுடைய; என்றது சுந்தர மூர்த்தி நாயனாரையும் பரவையாரையும் சேர்த்து. நாதர்-தலைவராகிய வன்மீக நாதர் எழுந்தருளியிருக்கும். பூங்கோயில்-திருவாரூர்ப் பூங் கோயிலை. நண்ணி-அடைந்து. க்: சந்தி. கும்பிடும்-தம்முடைய கைகளைக் தம்முடைய தலையின்மேல் வைத்துக் குவித்துக் கும்பிடும். விருப்பால்-விருப்பத் தோடு; உருபு மயக்கம். நம்பி-ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனார்.

பிறகு வரும் 184-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் தேவ லோகத்தில் வாழும் தேவர்கள் வாழ்த்தும் அழகு கிளர்ந்து எழும் ஆடையை உடுத்து, அரைத்த சந்தனத்தின் குழம்போடு சேர்ந்த குங்குமப் பூவை அரைத்த கலவையைத் தம்முடைய திரு மேனியின்மேல் பூசிக்கொண்டு, அழகைப் பெற்ற கிரீடத்தைத் தம்முடைய தலையில் அணிந்து கொண்டு, ஒளி வீசுகின்ற மாணிக்கங்களைப் பதித்த அணிகலன்களைப் பூண்டு கொண்டு இந்திரனுடைய செல்வத்தைவிட மேற்பட்டு விளங்கும் அழகு மிகுதியாக இலகிக் காட்சி அளிக்க.' பாடல் வருமாறு:

**" அந்தரத் தமரர் போற்றும் அணிகிளர் ஆடை**
**சாத்திச்**
**சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவை**
**சாத்திச்**

**சுந்தரச் சுழியம் சாத்திச் சுடர்மணிக் கலன்கள்**
**சாத்தி**
**இந்திரத் திருவின் மேலாம் எழில்மிக விளங்கித்**
**தோன்ற.** [1]

இந்தப் பாடல் குளகம். அந்தரத்து-தேவ லோகத்தில் வாழும். அமரர்-தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். போற்றும்-வாழ்த்திப் பாராட்டும். அணி-அழகு. கிளர்-கிளிர்ச்சி பெற்று விளங்கும். ஆடை-பட்டாடையை. சாத்தி-தம்முடைய இடுப்பில் உடுத்துக் கொண்டு. ச்: சந்தி. சந்தனத்து-அரைத்த சந்தனத்தின். அளறு-குழம்பு. தோய்ந்த-கலந்து அமைத்த. குங்கும-அரைத்த குங்குமப் பூவின். க்: சந்தி. கலவை-கலவையை. சாத்தி-தம்முடைய திருமேனியின்மேல் பூசிக்கொண்டு. ச்: சந்தி. சுந்தர-அழகைப் பெற்ற. சுழியம்-கிரீடத்தை. சாத்தி-தம்முடைய தலையின்மேல் வைத்துக்கொண்டு. ச்: சந்தி. சுடர்-ஒளியை வீசும். மணி-மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கலன்கள்-ஆபரணங்களை. சாத்தி-அணிந்து கொண்டு. அவையாவன: காசுமாலை, முத்து மாலை, கைகளில் தங்கக் காப்புகள், காதுகளில் வைரத் தோடுகள், இடுப்பில் தங்க அரை நாண், கால்களில் சிலம்புகள், தோள் வலயங்கள், கைவிரல்களில் தங்க மோதிரங்கள் முதலியவை. இந்திர-இந்திரனுக்குரிய. த்-சந்தி. திருவின்-செல்வத்தை விட. மேலாம்-மேலாக விளங்கும். எழில்-அழகு. மிக-மிகுதியாக. விளங்கி-இலங்கி. த்: சந்தி. தோன்ற-காட்சி அளிக்க; தோற்றப் பொலிவை உண்டாக்க.

பிறகு உள்ள 185-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய வலக் கையில் அலங்காரம் செய்யப் பெற்ற தங்கப் பிரம்பும், தம்முடைய காதுகளில் விளங்கும் வைரத் தோடுகளும், தம்முடைய திரு மேனியில் அசையும் பூணூலும், தம்முடைய நுதலில் திகழும் விபூதியும், "இவை இந்த ஆதிசைவப் பிராம்மணனுக்கு

அழகைப் பெற்றவையாகும்'' என அழகிய ஆபரணங்களை அணிந்த பெண்மணிகள் வாழ்த்திப் பாராட்டச் சைவ சமயத்துக்கு உரிய உண்மையான செல்வத்தோடு கூடிய திருக்கோலம் தழைத்து விளங்கத் திருவாரூரில் உள்ள ஒரு திருவீதியை அடைந்தார்.' பாடல் வருமாறு:

**'' கையினிற் புனைபொற் கோலும் காதினில்**
**இலங்கு தோடும்**
**மெய்யினில் துவளும் நூலும் நெற்றியில்**
**விளங்கு நீறும்**
**'ஐயனுக் கழகி தாம்'என் றாயிழை மகளிர்**
**போற்றச்**
**சைவமெய்த் திருவின் கோலம் தழைப்பவீ**
**தியினைச் சார்ந்தார். ''**

கையினில்-தம்முடைய வலக்கையில். புனை-அலங்காரம் செய்யப் பெற்ற. பொன்-தங்கத்தால் செய்யப் பெற்ற. கோலும்-பிரம்பும். காதினில்-தம்முடைய செவிகளில்; ஒருமை பன்மை மயக்கம். இலங்கு-விளங்கும். தோடும்-வைரத் தோடுகளும்; ஒருமை பன்மை மயக்கம். மெய்யினில்-தம்முடைய திருமேனியில். துவளும்-புரளும். நூலும்-பூணூலும். நெற்றியில்-தம்முடைய நுதலில். விளங்கு-அழகோடு திகழும்; ''சுந்தர மாவது நீறு.'', ''சுந்தர நீறணிந்தும்.'' என்று வருவனவற்றைக் காண்க. நீறும்-மூன்று பட்டைகளாக அணிந்து கொண்ட விபூதியும். ஐயனுக்கு-இந்த ஆதிசைவ அந்தணனாகிய சுந்தர மூர்த்திக்கு. அழகிது ஆம்-அழகை உடையவை ஆகும்; ஒருமை பன்மை மயக்கம். என்று-என. ஆய்-அழகிய. 'ஆராய்ந்து அணிந்து கொண்ட' எனலும் ஆம். இழை-ஆபரணங்களைப் பூண்ட; ஒருமை பன்மை மயக்கம். மகளிர்-பெண்மணிகள். போற்ற-வாழ்த்திப் பாராட்ட. ச்: சந்தி. சைவ-சைவ சமயத்துக்குரிய. மெய்-உண்மையான. த்: சந்தி. திருவின்-செல்வ வளத்தினுடைய. கோலம்-திருக்

கோலம். தழைப்ப-தழைத்து விளங்க. வீதியினை-திரு வாரூரில் உள்ள ஒரு திருவீதியை. ச்: சந்தி. சார்ந்தார்-அடைந்தார்.

ஆயிழை மகளிர்: ''அணுகுங் கொல்என் ஆயிழையே.'', ''அணியாயிழை.'' என்று திருமங்கையாழ்வார் பாடலிலும், ''அலம்புபாரக் குழலியொ ராயிழை.'', ''அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை.'' (உலாவியற் படலம், 21, 22), ''ஆயிழை யவரை ஏவ.'' (கோலம் காண் படலம், 2), ''ஆயிழை தன்னை அடைந்த ஆழிமன்னன்.'' (கைகேசி சூழ்வினைப் படலம், 2) என்று கம்ப ராமாயணத்திலும், வருவனவற்றைச் காண்க.

பிறகு உள்ள 186-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பெண்மணிகள், ''திருநாவலூரில் திருவவதாரம் செய் தருளிய சைவ சமயத்தினுடைய நல்ல தவத்தைப் புரிந்த ஆண் யானையைப் போன்றவரே!'' எனவும், ''பகைவர் களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்ற மூன்று அசுரர்களுடைய மூன்று பறக்கும் கோட்டை களாகிய புரங்களை அழித்து இடப வாகனத்தை ஓட்டு கிறவராகிய வன்மீக நாதருடைய பக்தரே.'' எனவும், ''கெடுதல் இல்லாத சீர்த்தியையும் பெருமையையும் கொண்ட திருவாரூரில் வாழும் அந்தணர்களுடைய தலைவரே.'' எனவும் அங்கே இருந்தவர்கள் இரண்டு பக்கங் களிலும் வேறு வேறாகவும் வாழ்த்த.' பாடல் வருமாறு:

**'' 'நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறே.'**
**என்றும்,**
**'மேவலர் புரங்கள் செற்ற விடையவர்க்**
**கன்ப.' என்றும்,**
**'தாவில்சீர்ப் பெருமை ஆரூர் மறையவர்**
**தலைவ.' என்றும்,**
**மேவினர் இரண்டு பாலும் வேறுவே றாயும்**
**போற்ற.''**

இந்தப் பாடல் குளகம். நாவலூர்-திருநாவலூரில். வந்த-திருவவதாரம் செய்தருளிய. சைவ-சைவ சமயத்தினுடைய. நல்-நல்ல. தவ-தவத்தைப் புரிந்த. களிறே-ஆண் யானையைப் போன்றவரே; உவம ஆகுபெயர். என்றும்-எனவும். மேவலர்-தம்முடைய பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்ற மூன்று அசுரர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். புரங்கள்-பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களையும். செற்ற-அழித்த. விடையவர்க்கு-இடப வாகனத்தை ஓட்டுபவராகிய வன்மீக நாதருடைய; உருபு மயக்கம். அன்ப-பக்தனே. என்றும்-எனவும். தா-கேடு. இல்-இல்லாத; கடைக்குறை. சீர்-சீர்த்தியையும். ப்: சந்தி. பெருமை-பெருமையையும் பெற்ற. ஆரூர்-திருவாரூரில் வாழும். மறையவர்-ஆதிசைவ அந்தணர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தலைவ-தலைவனே. என்றும்-எனவும். மேவினர்-அங்கே வந்தவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இரண்டு பாலும்-இரண்டு பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். வேறு வேறாயும்-வேறு வேறாகவும். போற்ற-வாழ்த்த.

ஆடவருக்குக் களிறு உவமை: ''பிடிக்குக் களிறே ஒத்தி.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''இருகை யானையை ஒத்திருந்து.'' என்று மாணிக்க வாசகரும், ''மதக்களிறிரண்டுடன் மண்டி யாஅங்கு.'' ''எஃகொழி களிற்றின் வெய்துயிர்த் திரங்கி.'', ''குழிப்படு களிற்றிற் பட்டார்கூ ரெவ்வமொடு பதைத்தனர்.'' (**பெருங்கதை**, *1. 32: 38, 33: 109, 46: 53-4*) என்று கொங்கு வேளிரும் பாடியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 187-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் துதிக்கையைக் கொண்ட ஆண் யானை, குரங்கு, கோழி, காடை, கவுதாரி ஆகிய விலங்குகளையும் பறவைகளையும் பிடித்துக் கொண்டு தம்முடைய பக்கத்திற்கு முன்னால் போகிற மக்கள் தாங்கள் பேசும் மொழியைப் பழக்கிக் கொண்டு போக,

மிகுதியாக உள்ள மலர்களை வைத்திருக்கும் தட்டுக்களை எடுத்துக் கொண்டு வருகிறவர்களும், நறுமணம் கமழும் வெற்றிலைப் பையை உடையவர்கள் தம்மைச் சூழ்ந்துவர, மையைத் தடவிக் கொண்ட கரிய கண்களைக் கொண்ட பெண்மணிகள் இவரை அடையப் பெறவில்லையே என்று எண்ணி வருந்தும் வண்ணம் நீண்ட திருவாரூர்த் தெருவில் அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**'' கைக்கடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப்**
**பக்கமுன் போது வார்கள் பயில்மொழி பயிற்றிச் செல்ல**
**மிக்கபூம் பிடகை கொள்வோர் விரையடைப் பையோர் சூழ**
**மைக்கருங் கண்ணி னார்கள் மறுகநீள் மறுகில் வந்தார். ''**

கை-துதிக்கையைப் பெற்ற. க்: சந்தி. கடா-ஆண் யானையையும். குரங்கு-குரங்கையும். கோழி-கோழியையும். சிவல்-காடையையும். கவுதாரி-கவுதாரியையும். பற்றி-தங்களுடைய கைகளில் பிடித்துக்கொண்டு. பக்கம்-சுந்தர மூர்த்தி நாயனாருக்குப் பக்கத்தில். முன்-முன்னால். போதுவார்கள்-போகிற மக்கள். பயில்-தாங்கள் பேசுகிற. மொழி-தாய் மொழியை. பயிற்றி-பழக்கிக் கொண்டு. ச்: சந்தி. செல்ல-போக. மிக்க-மிகுதியாக உள்ள. பூம்-மலர்களை வைத்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். பிடகை-தட்டை. கொள்வோர்-எடுத்துக் கொண்டு வருகிறவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். விரை-நறுமணம் கமழும். அடைப்பையோர்-வெற்றிலைப் பையை வைத்திருப்பவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். சூழ-தம்மைச் சூழ்ந்து வர. மை-மையைத் தடவிக்கொண்ட. க்: சந்தி. கரும்-கருமையான. கண்ணினார்கள்-விழிகளைப் பெற்ற பெண்மணிகள். கண்: ஒருமை பன்மை மயக்கம். மறுக-இவரை அடையப் பெற்றிலோமே

என்று வருந்தும் வண்ணம். நீள்-நீளமான. மறுகில்-திருவாரூரில் உள்ள ஒரு திருவீதியில். வந்தார்-அந்த நாயனார் எழுந்தருளினார்.

பிறகு உள்ள 188-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு

'தங்கத்தால் செய்யப் பெற்ற சேணத்தையும் அங்கவடிகளையும் உடைய ஒரு குதிரையை அலங்காரம் செய்து அதன்மேல் ஏறிக்கொண்டு, வருகிறவர்கள் தமக்குப் பின்னே வர விளங்குகின்ற பிரகாசத்தை வீசும் வாகுவலயங்களை அணிந்த பொலிவு பெற்ற தோள்களுக்கு நடுநடுவே நெருங்கி, மலர்மாலை அழகு கிளர்ந்து எழும் நிழல் சூழ்ந்திருக்க, இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய அந்தணர்களோடும் மாலையை அணிந்த அழகிய தோள்களைப் பெற்றவனாகிய சுந்தரமூர்த்தி தன்னுடைய தலைவனாகிய வன்மீக நாதன் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தை அடைந்தான்.' பாடல் வருமாறு:

"**பொலங்கலப் புரவி பண்ணிப்**
**போதுவார் பின்பு போத**
**இலங்கொளி வலயப் பொற்றோள்**
**இடையிடை மிடைந்து தொங்கல்**
**நலம்கிளர் நீழல் சூழ**
**நான்மறை முனிவ ரோடும்**
**அலங்கலந் தோளி னான்வந்**
**தணைந்தனன் அண்ணல் கோயில்.**"

பொலம்-தங்கத்தால் செய்யப் பெற்ற. கல-சேணத்தையும் அங்கவடிகளையும் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். 'ஆபரணங்களைக் கொண்ட' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. புரவி-குதிரையை. பண்ணி-அலங்காரம் செய்து. ப்: சந்தி. போதுவார்-அதன்மேல் ஏறிக்கொண்டு வருகிறவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பின்பு-தமக்குப்

பின்னால். போத-வர. இலங்கு-விளங்கும். ஒளி-பிரகாசத்தை வீசும். வலய-வாகுவலயங்களை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொன்-தோற்றப் பொலிவை உடைய. தோள்-தோள்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். இடை இடை-நடு நடுவே. மிடைந்து-செறிந்து. தொங்கல்-மலர் மாலையினுடைய. நலம்-அழகு. கிளர்-கிளர்ந்து எழும். நீழல்-ஒளி. சூழ-சூழ்ந்து வீச. நான்மறை-இருக்குவேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய. மறை: ஒருமை பன்மை மயக்கம். முனிவரோடும்-வேதியர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். அலங்கல்-மலர் மாலையை அணிந்த. அம்-அழகிய. தோளினான்-தோள்களைப் பெற்றவனாகிய சுந்தர மூர்த்தி; தோள்: ஒருமை பன்மை மயக்கம். வந்து-தன்னுடைய திரு மாளிகையிலிருந்து எழுந்தருளி. அண்ணல்-தலைவனாகிய வன்மீக நாதன். கோயில்-எழுந்தருளியிருக்கும் திருவாரூர்ப் பூங்கோயிலை. அணைந்தனன்-அடைந்தான்.

பிறகு உள்ள 189-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய வன்மீக நாதருடைய ஆலயத்தில் விளங்கும் தேவாசிரயன் ஆகும் காவணத்தில் தேவலோகத்தில் வாழும் தேவர்களைத் தவிர மண்ணுலகத்தின்மேல் வாழும் மிகுதியாகிய சீர்த்தியைப் பெற்ற அடியவர்கள் கூடிக்கொண்டு கணக்கு இல்லாதவர்கள் அமர்ந்திருந்த சமயத்தில், "இவர்களுக்கு அடியேன் அடியவனாக அமையும் நாள் எந்த நாளோ?" என எண்ணிப் பரமேசுவரராகிய வன்மீக நாதருடைய திருவடிகளை வாழ்த்தி வணங்கி விட்டுத் தம்முடைய திருமாளிகைக்கு அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

**" கண்ணுதல் கோயில் தேவா**
**சிரயனாம் காவ ணத்து**

விண்ணவர் ஒழிய மண்மேல்
மிக்கசீர் அடியார் கூடி
எண்ணிலார் இருந்த போதில்
' இவர்க்கியான் அடியே னாகப்
பண்ணுநாள் எந்நாள்?' என்று
பரமர்தாள் பரவிச் சென்றார். ''

கண்-ஒற்றைக் கண்ணை. நுதல்-தம்முடைய நெற்றியில் பெற்றவராகிய வன்மீக நாதருடைய; கண்ணுதல்: அன் மொழித் தொகை. கோயில்-திருவாரூர்ப் பூங்கோயிலில் விளங்கும். தேவாசிரயனாம்-தேவாசிரயனாகும். காவணத்து - காவணத்தில். விண்ணவர்-தேவலோகத்தில் வாழும் தேவர்களை; ஒருமை பன்மை மயக்கம். ஒழிய-தவிர. மண்மேல்-இந்த மண்ணுலகத்தின்மேல் வாழும். மிக்க-மிகுதியாக உள்ள. சீர்-சீர்த்தியைப் பெற்ற. அடியார்-வன்மீக நாதருடைய அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூடி-கூடிக்கொண்டு. எண்-கணக்கு. இலார்-இல்லாதவர்கள்; ஒருமை பன்மை மயக்கம்; இடைக் குறை. இருந்த-அமர்ந்திருந்த. போதில்-சமயத்தில். இவர்க்கு-இந்த அடியவர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். இ: குற்றியலிகரம். யான்-அடியேன். அடியேனாக-அடியவனாக, ப்: சந்தி. பண்ணும்-இறைவன் செய்தருளும். நாள்-தினம். எந்நாள்-எந்த நாளோ. என்று-என எண்ணி. பரமர்-பர மேசுவரராகிய வன்மீக நாதருடைய. தாள்-திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பரவி-வாழ்த்தி வணங்கிவிட்டு. ச்: சந்தி. சென்றார்-தம்முடைய திருமாளிகைக்கு அந்த நாயனார் எழுந்தருளினார்.

அடுத்து உள்ள 190-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் அடியேன் வன்மீக நாதரு டைய அடியவர்களுக்கு அடியேன் ஆவேன் என்கிற அன்பு மிகுதியாக உண்டாகத் துவசத்தைக் கட்டியிருக்கும் உயர்

மாக உள்ள வெற்றியைப் பெற்ற கோபுர வாசலில் வன்மீக நாதரை வணங்கிவிட்டுத் தம்முடைய கைகளைக் குவித்துக் கும்பிட்டுவிட்டு ஆலயத்துக்குள் நுழைந்தார்; நறுமணத் தைக் கொண்ட கொன்றை மலர் மாலையை அணிந்தவ ராகிய வன்மீக நாதர் அந்த நாயனாருக்கு எதிரில் அவர் தரிசிக்கும் வண்ணம் காண்பிக்கும் விதத்தில் எதிரில் தம்மு டைய காட்சியை வழங்கி நிற்க, அவருடைய திருவடிகளை வணங்கித் தம்முடைய தலையின்மேல் அணிந்து.' பாடல் வருமாறு:

**" அடியவர்க் கடிய னாவேன் என்னும்ஆ தரவு கூரக்**
**கொடிநெடும் கொற்ற வாயில் பணிந்துகை குவித்துப் புக்கார்;**
**கடிகொள்பூங் கொன்றை வேய்ந்தார் அவர்க் கெதிர் காணக் காட்டும்**
**படிஎதிர் தோன்றி நிற்கப் பாதங்கள் பணிந்து பூண்டு. "**

இந்தப் பாடல் குளகம். அடியவர்க்கு-சுந்தர மூர்த்தி நாயனார் வன்மீக நாதருடைய அடியவர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அடியவன்-அடியேன். ஆவேன்-ஆக இருப்பேன். என்னும்-என்று எண்ணும். ஆதரவு-அன்பு. கூர-மிகுதியாக உண்டாக. க்: சந்தி. கொடி-துவசத்தைக் கட்டியிருக்கும். நெடும்-உயரமாக விளங்கும். கொற்ற-வெற்றியைப் பெற்ற. வாயில்-கோபுர வாசலில். பணிந்து-வன்மீக நாதரை வணங்கி விட்டு. கை-தம்முடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். குவித்து-தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு. ப்: சந்தி. புக்கார்-ஆலயத்துக்குள் நுழைந்தார். கடி-நறுமணத்தை. கொள்-கொண்ட. பூங்கொன்றை-கொன்றை மலர் மாலையை; ஆகுபெயர். வேய்ந்தார்-அணிந்தவராகிய வன்மீக நாதர். அவர்க்கு-அந்த நாயனாருக்கு. எதிர்-எதிரில். காண-தரிசிக்குமாறு. க்: சந்தி. காட்டும்படி-காண்பிக்கும்

விருத்தில். எதிர்-அந்த நாயனாருக்கு முன்னே. தோன்றி-தம்முடைய காட்சியை வழங்கி. நிற்க-நின்று கொண்டிருக்க. பொற் சந்தி. பாதங்கள்-அந்த நாதருடைய திருவடிகளை. பணிந்து-வணங்கி. பூண்டு - தம்முடைய தலையின்மேல் அணிந்து.

பிறகு உள்ள 191-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'நிலைபெற்று விளங்கும் பெருமையைப் பெற்ற அழகிய பெரிய வேதமாகிய வண்டு சுற்றிக் கொண்டு வன்மீக நாதருடைய பக்தர்களினுடைய திருவுள்ளங்களாகிய மலர்ந்த செந்தாமரை மலர்களில் நல்ல பெருமையைக் கொண்ட பரமானந்தம் என்னும் நல்ல தேன் அடியேனுடைய திறத்திலும் வழங்கி அடியேனுக்கு எதிரில் நின்று விளங்கியது.' பாடல் வருமாறு:

**" மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ்ந்**
**தன்பர் சிந்தை அலர்ந்தசெந் தாமரை**
**நன்பெ ரும்பர மானந்த நன்மது**
**என்த ரத்தும் அளித்தெதிர் நின்றன. "**

இந்தப் பாடல் சுந்தர மூர்த்தி நாயனார் எண்ணுவதைக் கூறுவது. மன்-நிலைபெற்று விளங்கும். பெரும்-பெருமையைப் பெற்றிருக்கும். திரு-அழகிய. மா-பெருமையைத் தரும். மறை-வேதமாகிய. வண்டு சூழ்ந்து-வண்டு சூழ்ந்து கொண்டு. அன்பர்-வன்மீக நாதருடைய பக்தர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். சிந்தை-திருவுள்ளங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். அலர்ந்த-மலர்ச்சியை அடைந்த. செந்தாமரை-செந்தாமரை மலர்களில் உண்டான்; ஒருமை பன்மை மயக்கம். நன்-நல்ல. பெரும்-பெருமையை வழங்கும். பரமானந்த-பரமானந்தமாகிய. நன்-நன்மையை வழங்கும். மது-தேன். என்-அடியேனுடைய. தரத்தும்-திறத்திலும். அளித்து-வழங்கி. எதிர்-அடியேனுக்கு எதிரில். நின்றன-நின்றது; 'நின்றது' என்ற பாடம் இருக்கலாம் என்று தோன்றுகிறது.

உள்ளமாகிய தாமரை மலர்: "உள்ளப் புண்டரீகத் துள் ளிருக்கும் புராணர்.", "மலர்மிசை ஏகினான்." (3) என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர், 'அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், 'ஏகினான்' என இறந்த காலத்தால் கூறினார்.' என்று எழுதிய உரையையும், "பொள்ளலிக் காயந் தன்னுள் புண்டரீ கத்தி ருந்த வள்ளலை.", "புந்தி யாய்ப் புண்டரிகத் துள்ளாய் போற்றி." (திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்), "நினைவொடு பதுமநன் மலரது மருவிய சிவன்." (திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தேவாரம்) என்று வருவனவற்றைக் காண்க.

பிறகு வரும் 192-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் சிதம்பரம் திருக்கோயிலில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளின; யமனுடைய அருமையான உயிர் போகும் வண்ணம் கோபத்தைக் கொண்டன; மலர்மாலை தங்கிய கூந்தலைப் பெற்ற வளும் பெருமையைப் பெற்ற இமாசல அரசனுடைய புதல்வியுமாகிய பார்வதிதேவி தன்னுடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருக்கரங்கள் நல்ல பண்போடு வருடுவதால் சிவந்த நிறத்தைப் பெற்றன. (நடராஜப் பெருமானுடைய திருவடிகள்.)' பாடல் வருமாறு:

**" ஞாலம் உய்ய நடம்மன்றுள் ஆடின;**
**காலன் ஆருயிர் மாளக் கறுத்தன;**
**மாலை தாழ்குழல் மாமலை யாள்செங்கை**
**சீல மாக வருடச் சிவந்தன. "**

இந்தப் பாடல் நடராஜப் பெருமானுடைய திருவடிகளி னுடைய சிறப்பைச் சொல்வது. ஞாலம்-இந்தப் பூமண்டலத் தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். உய்ய-உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். நடம்-திருநடனத்தை. மன்றுள்-சிதம் பரத்தில் விளங்கும் ஆலயத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில்.

ஆடின-நடனமிட்டருளின. காலன்-யமனுடைய. ஆருயிர்-அருமையான உயிர். மாள்-போய் இறக்க. க்: சந்தி. கறுத்தன-கோபத்தை மேற்கொண்டன. மாலை-மலர் மாலை. தாழ்-தங்கும். குழல்-கூந்தலைப் பெற்ற. மா-பெருமையை உடைய. மலையாள்-இமாசல அரசனுடைய புதல்வியாகிய பார்வதி தேவி. மலை: திணை மயக்கம். செங்கை-செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருக்கரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். சீலமாக-நல்ல பண்போடு. வருட-தடவ. ச்: சந்தி. சிவந்தன-சிவந்த நிறத்தைப் பெற்றன.

காலன் உயிர் மாளக் கறுத்தன: "காலன் திறலறச் சாடிய கடவுள்.", "காலன்வலி காலின்னொடு போக்கி.", "சாடிக் காலன் மாள.", "காலன்றனை ஆருயிர் வவ்விய காலன்.", "கொலை யார்தரு கூற்றம் உதைத்து.", "காலனைக் காய்ந்ததம் கழலடியால்.", "காலன் உயிர்செற்ற காலனாய கருத்தனார்.", "காலினாற் கூற்று தைத்தான்." "கொலைக்கணித் தாவரு கூற்றுதை செய்தார்." "பாவற் காய் தன்றும் பரிந்து பாதத்தால் காலற் காய்ந்தான்.", "கால காலனார்.", "காலன் றன்னைக் காலாற் காய்ந்த கடவுள்.", "பதைத்தெழு காலனைப் பாதம் ஒன்றால் உதைத்து.", "காலன் மாள்வுறக் காலாற் காய்ந்த கடவுள்.", "கால காலர்.", "காலன் ஆருயிர் வீட்டிய மாமணி கண்டனார்.", "செறு காலனைப் பாய்ந்தானை.", "கடுத்தானே காலனைக் காலால்.", "காலால்உயிர் காலனை வீடு செய்தாய்.", "மிகப்பெரிய காலன் எருத்திற உதைத்தனை.", "பாலனடி பேணஅவன் ஆருயிர் குறைக்கும் காலனுடல் மாளமுன் உதைத்தஅரன்.", "மாறாத வெங்கூற்றை மாற்றி.", "காலனைக் கழலால் உதைத்து.", "கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால் மாள்வித்தவனை.", "காலன் உடல்கிழியக் காய்ந்தார்.", "காய்ந்துவரு காலனை அன் றுதைத்தவன்.", "வலிய காலன்உயிர் வீட்டினான்.", "பாய்ந்ததுவும் கழற்காலனை.", "மிக்க காலனை வீட்டி.", "மாணி தன்னுயிர் மதித்துண வந்தஅக் காலனை உதை

செய்தார்.", "அட்ட காலன்றனை வவ்வினான்.", "கூள மேகந் நிறக் காலனோ டந்தகன்...பட்டன.", "கூற்று தைத்த நீற்றி னானை.", "காலன் தன்னுயிர் வீட்டு கழலடி.", "மாணியை நாடு காலன்உயிர் மாய்தரச் செற்று.", "பாய்ந்தவன் காலனை.", "காலனை ஒருதையில் உயிர்வீடு செய்வார் கழலான்.", "கன்றிய காலனையும் உருளக் கலை வாயலறிப் பொன்றமுன் நின்ற பிரான்.", "பாலனுயிர் மேலணவு காலனுயிர் பாறஉதை செய்த பரமன்.", "காலனை உயிர்கொண்ட கயிலையார்.", "இடறினார் கூற்றை." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "உதைத்தார் மறலி உருளஓர் காலால்.", "காலனைக் காலாற் காய்ந்த கடவுளார்.", "மார்க்கண்டற் காக அன்று காலனை உதைப்பர்.", "காலின்கீழ்க் காலன் தன்னைக் கடுகத்தான் பாய்ந்து.", "காற்றனாற் காலற் காய்ந்து.", "காலனை வீழச் செற்ற கழலடி.", "காலனைக் காலாற் செற்றார்.", "காலனைக் காலாற் செற்றன் றருள்புரி கருணை யானே.", "கூற்றினை உதைத்த பாதக் குழகனை.", "காய்ந்தான் செறற்கரியா னென்று காலனைக் காலொன் றி னாற் பாய்ந்தான்.", "கூற்றைக் கடந்ததும்.", "அட்டது காலனை.", "அருமுனிக்காய்ச் சூலமும் பாசமும் கொண்டு தொடர்ந் தடர்ந்தோடி வந்த காலனைக் காய்ந்த பிரான்.", "மாணிக் குயிர்பெறக் கூற்றை உதைத்தன...மாற்பே றுடை யான் மலரடியே.", "காலற் கடந்தான்.", "கால னாய அவனைக் கடந்திட்டு.", "கூற்றினை உதைத்திட்ட குண முடை வீற்றினை.", "காலன் அஞ்ச உதைத்து.", "கால காலர்.", "கால னாகிய காலற்கும் காலனை.", "வெங் கூற்றுதை பாதனை.", "காலத் தான்உயிர் போக்கிய காலினன்.", "கால னார்உயிர் போக்கிய காலனே.", "காலனை உதைகொண்ட கருத்தனார்.", "பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தஅடி.", "காலனையும் காய்ந்த கழலார்.", "அல்லாத காலனை முன்அடர்த்தல் தோன் றும்.", "காலனைக் காலாற் கடந்தார்.", "கொலையுருவக் கூற்றுதைத்த கொள்கையான்.", "திருவடியாற் கூற்றட்

டானை.'', ''கூற்றினையும் குரைகழலால் உதைத்தார்.'', ''கூற்றம் உதைத்தான்.'',''காலனை அன்றுதை செய்தான்.''; ''குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி.'', ''காலனைக் காலாற் காய்ந்த கடவுள்.'', ''கருவனாய்க் காலனை முன் காய்ந்த நாளோ.'', ''கொலையாய கூற்றம் உதைத்தார்.'', ''காலன்உயிர் வெளவ வல்லார்.'', ''கொலையான கூற்றம் குமைத்தான் கண்டாய்.'', ''கூற்றத்தைச் சீறிப் பாய்ந்த கொலையவனே.'', ''கூற்றம் உதைத்தான் தன்னை.'', ''காலன் வாழ்நாள் மாண்டோட உதைசெய்த மைந்தன்.'', ''கழலடைந்தான் மேற்கறுத்த காலன் வீழச் சிவந்தானை.'', ''காலனுயிர் காலாற் கழிவித்தான்.'', ''நமனையொரு கால்குறைத்த நாதர்.'', ''கொடுநெடுவேற் கூற்றந் தன்னைக் குரைகழலாற் குமைத்து முனிகொண்ட அச்சம் பேர்த்தானை.'', ''கொடிய வன்கூற்றம் உதைத்தாய் போற்றி.'', ''காலன் வீழக் காலினாற் காய்ந்துகந்த காபாலியார்.'', ''குரைகழலாற் கூற்றுவனைக் குமைசெய்தாரும்.'', ''கூற்றுவனைக் குமைத்த கோன்.'', ''கனன்றெழுந்த காலனுடல் பொடியாய் வீழப் பாய்ந்தவன்.'', ''தடுத்தானைக் காலனைக் காலாற் பொன்றத் தன்னடைந்த மாணிக்கன் றருள்செய் தானை.'', ''மாளாமை மறையவனுக் குயிரும் வைத்து வன்கூற்றின் உயிர்மாள உதைத்தான்.'', ''காலன்வலி தொலைத்தகழற் காலர்.'', ''கொன்றாடும் கூற்றை உதைத்தார்.'', ''காலனையும் ஒருதையால் கண்டார்.'', ''பல்லுயிரைக் கொல்லும் கூற்றைக் காலத்தால் உதைசெய்து காதல் செய்த அந்தணனைக் கைக்கொண்ட செவ்வான் வண்ணர்.'', ''அடியடைந்த மாணிக்காக நணுகியதோர் பெருங்கூற்றைச் சேவடியினால் செற்றவன்.'', ''காலனைத்தன் கழலடியாற் காய்ந்து மாணிக் கருளீன்ற ஆரமுதை.'', ''காமனையும் காலனையும் காய்ந்தார்.'', ''காலன்தன் வாழ்நாள் கழிப்பார்.'', ''அல்லாத காலனை முன் அடர்த்தான்.'',''கூற்றுதைத்தோர் வேதியனை உய்யக் கொண்டார்.'',''கண்ணார் கழல்காலற் செற்ற துண்டோ.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''உயிர் உண்ணும்வெங்

காலனைக் கால்கொடு வீந்தவிய.'', ''வீழக் காலனைக் கால் கொடு பாய்ந்த விலங்கலான்.'', ''வரும்காலன் உயிரை மடியத்திரு மெல்விரலால் பெரும்பாலன் றனக்காய்ப் பிரிவித்த பெருந்தகையே.'', ''பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தினால் அன்று கூற்றத்தை.'', ''கொடிய காலனையும் குமைத்தவனை.'', ''கூற்றுதைத்த குரைசேர் கழலானை.'', ''கால காலனை.'', ''மறையான்ஒரு மாணிவந் தடையவார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக் கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற் கடந்த காரணம்.'', ''தஞ்சம் என்று தன் தாளது அடைந்த பாலன் மேல்வந்த காலனை உருள நெஞ்சில் ஓர்உதை கொண்ட பிரானை.'', ''மட்டுலாம் மலர் கொண் டடியிணை வணங்கும் மாணி தன்மேல் மதியாதே கட்டுவான் வந்த காலனை மாளக் காலினால் ஆருயிர்செகுத்த சிட்டனே.'', ''கால காலனே.'', ''உதையும் கூற்றுக் கொல்கா விதிக்கு வதையும் செய்த மைந்தன்.'', ''பாலனதாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த காலனை வீடுவித்து.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''ஏற்றுவந்தெதிர் தாமரைத் தாள்உறும் கூற்றம்.'', ''காலனைக் காலால் உதைத்தல் பாடி.'', ''கால னாருயிர் கொண்ட பூங் கழலாய்.'', ''காலாற் காலனைக் காய்ந்த...செய்யனே.'' என்று மாணிக்க வாசகரும், ''கூர்நுனை வேற்படைக் கூற்றும் சாயக் குரைகழல் பணிகொள மலைந்தது.'' என்று புருடோத்தம நம்பியும், ''கொன்று காலனைக் கோன் இழைத்தீர்.'' என்று சேதிராயரும், ''சந்தித்த கூற்றுக்கும் கூற்றாம்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''காலனை அடர்த்தனை.'', ''காலனைக் காய்ந்த கறைமிடற் றண்ணலை.'', ''கூற்றுவன் தனக்கோர் கூற்றுவனாகியும்.'', ''காலன் உரத்தில் உதைத்த உதைபோற்றி.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''கூற்றின் செருக்கழியச் செற்ற சிலற்கு.'', ''ஆறாவெங் கூற்றுதைத்து.'' என்று கபிலதேவ நாயனாரும், ''தாள்நிழல் அடைந்த மாணிக்காக ...புதைத்து வரும்கூற்றைப் படிமிசைத் தெறிக்க உதைத்து.'', ''கூற்றின் ஆற்றல் மாற்றி.'', ''பாலனுக் காகக் காலனைக்

காய்ந்து.'', ''வலந்தரு காலனை வதைத்தனை.'', ''இடிகுரற் கூற்றின் எருத்திற வைத்தது.'', ''குறைபடக் கூற்றினைக் குறிப்பினில் அடர்த்ததும்.'', ''காலற் சீறிய கழலோய் போற்றி.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''காலன் அந்நாள் நின்றுதை யுணாவிட்டனனே.'' என்று நம்பி யாண்டார் நம்பியும், ''மறலிக் கிறைநீள் செஞ்சே வடியாய்.'', ''பாலனாம் மறையோன் பற்றப் பயங்கெடுத் தருளு மாற்றான்...கால னாருயிர் செற்றார்க்கு.'', ''கூற்றைக் காய்ந்தவர்.'', ''காலனை மார்க்கண் டர்க்காக் காய்ந்தனை.'', ''கூற்றுதைத் தார்திருக் கொகுடிக் கோயில்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

மலையாள் செங்கை வருடச் சிவந்தன: ''அணங்கும் குழலி அணியார் வளைக்கரம் கூப்பி நின்று வணங்கும் பொழுதும் வருடும் பொழுதும் வண் காந்த ளொண்போ தணங்கும் அரவிந்தம் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே.'', ''மன்னும் மலைமகள் கையால் வருடின...இன்னம் பரான் தன் இணையடியே.'' என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியவற்றைக் காண்க.

மாலை தாழ் குழல் மாமலையாள்: ''கூழையங் கோதை குலாயவள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பங்க மாலைக் குழலி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 193-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நீதியை அறிந்தவர்களும் பெருமையைப் பெற்ற தவத்தைப் புரிந்தவர்களும் ஆகிய தவசிகளினுடைய திருவுள்ளங்களில் தியானப் பொருளாகி விளங்கின; தங்களைத் தியானிக்காத மக்களைப் பிறப்பில் அழுத்துவன; சோதியாகி எழுகின்ற எல்லாச் சோதிகளுக்குள்ளும் பெரிய சோதியாக் விளங்குவன; முன் காலத்தில் திருமாலும் பிரமதேவனும் தேடிப் பார்த்தும் பார்க்க முடியாத அளவை உடையவை.'

பாடல் வருமாறு;

"நீதி மாதவர் நெஞ்சிற் பொலிந்தன;
வேதி யாதவர் தம்மைவே திப்பன;
சோதி யாய்எழும் சோதியுட் சோதிய;
ஆதி மால்அயன் காணா அளவின."

இந்தப் பாடலும் வன்மீக நாதருடைய திருவடிகளினுடைய சிறப்பைக் கூறுவது. நீதி-நியாய நூல்களைக் கற்றிருந்த; ஆகுபெயர். மா-பெருமையைப் பெற்ற. தவர்-தவத்தைப் புரிந்த தவசிகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நெஞ்சில்-திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். பொலிந்தன-தியானத்துக்கு உரியவைகளாக விளங்கின. வேதியாதவர் தம்மை-தங்களைத் தியானிக்காத மக்களை; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. வேதிப்பன-பிறப்பில் ஆழ்த்தி மறுபடியும் பிறந்து தியானிக்கும் வண்ணம் செய்பவை. சோதியாய்-ஒளி வெள்ளத்தை வீசும் சோதிப் பொருள்களாகி; ஒருமை பன்மை மயக்கம். எழும்-எழுந்து விளங்கும். சோதியுள்-பல வகையான சோதிகளுக்குள்; ஒருமை பன்மை மயக்கம். சோதிய-பெரிய சோதியாக விளங்குபவை. ஆதி-முன் ஒரு காலத்தில். மால்-திருமாலும். அயன்-பிரமதேவனும். காணா-தேடிப் பார்த்தும் பார்க்க முடியாத. அளவின-அளவைப் பெற்றவையாக உள்ளவை.

மாதவர் நெஞ்சிற் பொலிந்தன: "நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும்.", "தலைமேலான் மனத்துளான்.", "துணைமலர்ச் சேவடிக்கே...பணிந்தெழுவார் தம்மனத்தில் கோடரவம் தீர்க்குமவன்.", "அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற் றைம் புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம்உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்.", "என்றன் உளம்மேவி இருந்தபிரான்.", "சிந்தை யிடையார்.", "இறைஞ்சுவார் சிந்தை யுள்ளே கோயிலாத் திகழ்வானை.", "உள்ளம் ஒன்றி உள்குவார் உளத்துளான்.", "உருகுவார் உள்ளத் தொண்சுடர்.", "எந்தமது சிந்தை பிரியாத பெருமான்." என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "நெஞ்சம் உமக்கே இடமாக

வைத்தேன்.", "எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே.", "இரவாடும் பெருமானை என்மனத்தே வைத்தேனே.", "வானோர்க்கும் ஏனோர்க்கும் பெருமானை என்மனத்தே வைத்தேனே.", "இண்டைசேர் சடையானை என்மனத்தே வைத்தேனே.", "ஏறேறும் பெருமானை என் மனத்தே வைத்தேனே.", "ஈசனை எம்மானை என்மனத்தே வைத்தேனே.", "துகளேதும் இல்லானை எம்மானை என் மனத்தே வைத்தேனே.", "மதில்மூன்றும் எரித்தானை எம்மானை என்மனத்தே வைத்தேனே.", "ஏகம்பம் மேயானை என்மனத்தே வைத்தேனே.", "கயிலாயம் எடுத் தானைத் தடுத்தானை என்மனத்தே வைத்தேனே.", "என் மனம் புகுந்தாய்.", "சிந்தையுட் சிவம தானார்.", "உள் குவார் உள்ளத் தென்றும் சிந்தையும் சிவமும் ஆவார்.", "மனத்தினுட் போக மாகி.", "சிந்தையார் சிந்தை உள்ளார்.", "சிந்திப்பார் சிந்தை உள்ளார்.", "சிந்தையுள் தேறல் போலும்.", "உள்ளத்துள் ஒளியு மாகும் ஒற்றியூர் உடைய கோவே.", "உன்னுவார் உள்ளத் துள்ளார்.", "உள்குவார் உள்ளத் துள்ளார்.", "நெஞ்சுளே புகுந்து நின்று நினைதரு நிகழ்வி னானே.", "நினைப்பவர் மனத்து ளானை.", "உள்குவார் உள்ளத் தானை.", "என் உள்ளமே புகுந்து நின்றார்க்கு.", "உள்ளத்தே நிற்றி.", "சித்தத் தெழுந்த செழுங்கமலத் தன்ன சேவடிகள்.", "நெஞ்சிடை நின்றகலான்.", "நெஞ்சத் தகத்தும் உன்கழற் சேவடியே.", "நினைப்ப வர்மனம் கோயிலாக் கொண்ட வன்.", "சிந்தை உள்ளும் சிரத்துளும் தங்கவே.", "சிந்தை யார் சிவனார்.", "மனத்துள் மாயனை மாசறு சோதியை.", "நினைக்கும் நெஞ்சின் உள்ளார்.", "ஓதிய சிந்தையில் கன்னல்தேன்.", "சிந்தையுட் சிவமாய் நின்ற செம்மை யோடு.", "விசய மங்கைப் பிரான் உள்ளல் நோக்கி என் உள்ளுள் உறையுமே.", "அடியேனுடை நெஞ்சம் ஆலயமாக் கொண்டு நின்றதே.", "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்.", "வந்தென் உள்ளம் கொண்டானை.", "சுடர்விடு சோதியை நெஞ்சுள்

நின்று நினைப்பிக்கும் நீதியை.'',''என்னுள்ளத்துள தெந்நீந் பிரானீரே.'', ''சிந்திப்பார் மனத்தான் சிவன்.'', ''உள்ளத்தில் ஒளியை.'', ''அந்தணர்தம் சிந்தை யானை.'', ''சிந்தையில் தீர்வினையைத் தேனை.'', ''உள்குவார் உள்ளத்துறைவாய் போற்றி.'', ''தீத்திரளாய் உள்ளே திகழ்ந்த அடி.'', ''மனத்தகத்தான்.'', ''அடியார்தம் மனத்தினுள்ளார்.'', ''பத்தர் மனத்துளேயும் பசுபதி.'', ''என்நெஞ்சத்துள்ளே நின்று காத்தானாம்.'', ''கள்ளம் அறிவார் நெஞ்சிற் கண்ணாம்.'', ''மாறாதென் உள்ளத்திருந் தார்.'', ''ஆரொருவர் உள்குவார் உள்ளத் துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்.'', ''மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானை.'', ''கலந்தார் மனத்தென்றும் காதலானை.'', ''மறவாதார் மனத்தென்றும் மன்னினானை.'', ''விரதமெல்லாம் மாண்ட மனத்தார் மனத்தான்.'', ''மெய்யடியார் உள்ளத்து வித்துக் கண்டாய்.'', ''வல்வினையேன் மனத்தகத்தே மன்னி னானை.'', ''உகப்பார்தம் மனத்தென்றும் நீங்கார்.'', ''பத்தர் மனத்து ளானை.'', ''உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி.'', ''உள்ளூரும் அன்பர் மனத்தார்.'', ''பேராதென் சிந்தை இருந்தார்.'', ''பற்றானார் நெஞ்சுளாய்.'', ''பவனாகி என்னுள்ளத் துள்ளே நின்று.'', ''நினைப்பார் மனத்துளாய்.'', ''உள்குவார் உள்ளத்தாய்.'', ''பெம்மானென் றெப்போதும் பேசும் நெஞ்சிற் சேர்ந்தவனே.'', ''வண்மை மனத்தினானே.'', ''என்னவனாய் என்னிதயம் மேவினானே.'', ''எப்போதும் ஒத்து நெஞ்சிற் செறிந்தானே.'', ''பக்தர்கள் சித்தத்தே பாவித்தானை.'', ''என்மனமே கோயிலாக இருந்தானை.'', ''உள்ளத்தின் உள்ளே நின்ற கருவே.'', ''எண்ணளந்தென் சிந்தையே மேவினான்.'', ''மந்திரிப்பார் மனத்து ளானை.'', ''சீலமுடை யடியார் சிந்தையான்.'', ''அடியேன் சிந்தையுள்ளே திகழ்ந்தானை.'', ''என் உள்ளத்துள்ளே ஊறும் அத்தேனை.'', ''என் உள்ளத்துள்ளே விள்ளா திருந்

தானை.", "நீங்காதென் உள்ளத்தின் உள்ளே நின்றவிருப்பவனை.", "மருவிஎன் சிந்தை புகுந்தாய்.", "போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி.", "வந்தென்றன் சிந்தை புகுந்தாய்.", "பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி.", "என்சிந்தை நீங்கா இறைவா போற்றி.", "கோயிலாஎன் சிந்தை கொண்டாய் போற்றி.", "பண்டேஎன் சிந்தை புகுந்தாய் போற்றி.", "நிறையுடைய நெஞ்சின் இடையாய் போற்றி.", "நீங்காதென் உள்ளத் திருந்தாய்.", "மன்னி என் சிந்தை இருந்தாய் போற்றி.", "தோன்றிஎன் உள்ளத் திருந்தாய்.", "போகாதென் உள்ளத் திருந்தாய் போற்றி.", "நீங்காதென் உள்ளத் திருந்தாய் போற்றி.", "உருகி நினைவார்தம் உள்ளாய் போற்றி.", "மன்னிஎன் சிந்தை மகிழ்ந்தாய் போற்றி.", "களங்கொளஎன் சிந்தையுள்ளே மன்னி னாரும்.", "வணங்கும் அடியார் மனத்துள் மருவிப் புக்க தேனவனை.", "அடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.", "நினைத்தவர்கள் நெஞ்சுளாய்.", "சிந்தையே மனமே வாக்கே தன்னானை யாப்பண்ணி ஏறி னானை.", "மருந்தானை மந்திரிப்பார் மனத்து ளானை.", "மகிழ்ந்தென் உள்ளத் திருந்தானை.", "என் உள்ளத்துள்ளே திகழ்ந்தானை.", "சித்த மாரத் திருவடியே உள்கிநினைந் தெழுவார் உள்ளம் ஏயவன்.", "மலர்தூவி நினைந்தெழுவார் உள்ளம் நீங்காதிருந்தவன்.", "துணையென்று தொழுவார் உள்ளம் போற்றவன்.", "ஏகம்பன் காண் அவன்என் எண்ணத் தானே.", "கூசாதார் நெஞ்சு தஞ்சே குடிகொண்ட குழகன் காண்.", "மதிப்பவர்தம் மனத்து ளானை.", "ஒருவரும் ஈங்கறியா வண்ணம் என்னுள்ளத் துள்ளே ஒளித்து வைத்த சிறையானை.", "உள்புக்கென் மனத்து மாசு களைவானை.", "உள்ளத்தின் உள்ளே நின்ற ஓங்காரத் துட்பொருள்தான் ஆயி னானை.", "என்னுள்புகுந் திடங்கொண் டென்னை ஆண்டானை.", "உள்குவார் உள்ளத்தின் உள்ளான்.", "பாவியேன் நெஞ்சகத்தே பாதப் போது பொறித்தானை.", "பத்தர்மனம் குடிகொண்டானை.", "மறவாதே தன்

திறமே வாழ்த்தும் தொண்டர் மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற திறலானை.'', ''நினைவார் நெஞ்சில் படிந் தானை.'', ''கலந்துருகி நைவார்தம் நெஞ்சி னுள்ளே பாவ வன்னை.'', ''மறவாத மனத்தகத்து மன்னி னானை.'', ''குடி கொண்டென் மனத்தகத்தே புகுந்தார்.'', ''தேறினார் சித்தத் திருந்தார்.'', ''குழைவார் சிந்தை புக்கிருந்து போகாதே புனிதன்.'', ''என் நெஞ்சத் துள்ளே நின்ற எம்மானை.'', ''கருதுவார் மனத்தானை.'', ''வணங்குவார் மனத்தானை.'', ''பரிவோர் நெஞ்சில் உற்றானை.'', ''கொண்டாடும் அடியவர்தம் மனத்தான்.'', ''என் நெஞ்சத்துள் நீங்கா எம்மான் கண்டாய்.'', ''பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி இருந்தமணி விளக்கதனை.'', ''தித்தித்தென் மனத்துள்ளே ஊறும் தேனை.'', ''மெய்யடி யார் உள்ளத்தே விரும்பி நின்ற திருத்தன்.'', ''கருதுவார் இதயத்துக் கமலத்தூறும் தேனவன்.'', ''கள்ளாத அடியார் நெஞ்சிற் சேர்ந்தானை.'', ''உள்குவார் உள்ளத்தின் உள்ளார் போலும்.'', ''பக்தர்கள்தம் சித்தத் திருந்தார்.'', ''தக்கோர் சிந்தை விருப்பவனை.'', ''என்றன் மனத்திருந்த கருத்தை.'', ''சிவன்என் சிந்தை சேர்ந்திருந்தான்.'', ''மருவினியார் மனத்துளாய்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மனத்துன்னை வைத்தாய்.'', ''பத்தர் சித்தம் பாவிக் கொண்டீர்.'', ''நெஞ்சம் கொண்டார்.'', ''சரண்அடைந்தார் நெஞ்சம் கொண்டார்.'', ''மனமே புகுந்து நின்ற சிந்தாய்.'', ''நினைவார்தம் உள்ளத்தே நிறைந்து தோன்றும் காற்றானை.'', ''எனதுள்ளம் விடகிலா விதியே.'', ''மனத்துளே மதியாய் இருப்பானை.'', ''பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை.'', ''பாவிப்பார் மனத் தூறும் அத்தேனை.'', ''சிந்திப் பாரவர் சிந்தை யுளானை.'', ''சிந்தித்தென்றும் நினைந் தெழுவார்கள் சிந்தையில் திகழும் சிவன்.'', ''பத்தர் சித்தம் பரிவினி யானை.'', ''அடியார்கள் தம் உள்ளத் தேனங்கத்தமு தாகஉள் ளூறும் தேசனை.''; ''நல்லடி யார்மனத்தெய்ப்பினில் வைப்பை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''சிவனவன்என் சிந்தையுள் நின்ற

அதனால்.'', ''சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று.'', ''அடியார் உள்ளத் தன்புமீதூரக் குடியாக் கொண்ட கொள்கையும்.'', ''அன்பர் உள்ளம் கரந்து நில்லாக் கள்வனே.'', ''ஆட்கொண் டுள்ளே புகுந்த விச்சை மாலமுதப் பெருங் கடலே.'', ''அகம்நெகவே புகுந்தாண்டான்.'', ''இருகை யானையை ஒத்திருந் தென் உளக் கருவை.'', ''முந்தி என்னுள் புகுந்தனன்.'', ''என் மனத்தே ஊறு மட்டே.'', ''விரும்பும் அடியார் உள்ளத் துள்ளாய்.'', ''ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானை.'', ''அருட்கழல்கள் சித்தம் புகுந்தவா.'', ''படமாக என்னுள்ளே தன்னிணைப்போதவையளித்திங் கிடமாகக் கொண்டிருந்து.'', ''அடியவர்கள் நெஞ்சுளே நின்றமுதம் ஊறிக் கருணை செய்து.'', ''கருணைக் கடலினர் உண்ணின் றுருக்குவர்.'', ''நிரம்ப அழகியர் சித்தத் திருப்பரால்.'', ''சிந்தையை ஆண்டன்பு செய்வரால்.'', ''உத்தர மங்கையர் மன்னுவ தென் நெஞ்சில்.'', ''என் உள்ளம் கவர்வரால்.'', ''அமுதே ஊறி நின் றென்னுள் எழுபரஞ் சோதி.'', ''என் மனத்திடை மன்னிய மன்னே.'', ''சிறைபெறா நீர்போற் சிந்தைவாய்ப் பாயும் திருப்பெருந் துறையுறை சிவனே.'', ''என்மனத் துள்ளே எழுகின்ற சோதியே.'', ''உள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று நின்றநின் தன்மை.'', ''சீருறு சிந்தை எழுந்ததோர் தேனே.'', ''சிந்தை யேகோயில் கொண்டஎம் பெருமான்.'', ''பொய்யனேன் அகம்நெகம் புகுந்தமு தூறும் புதுமலர்க் கழலிணையடி.'', ''உன்னை உள்குவார் மனத்தின் உறுசுவை அளிக்கும் ஆரமுதே.'', ''உள்புகுந்தென் உளம்மன்னிக் கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டுகொண்ட திருத்துருத்தி மேயானை.'', ''தெருளிட்டத் தடியார் சிந்தையுட் புகுந்த செல்வமே.'', ''அடியேன் உள்ளத் துள் ஒளிர்கின்ற ஒளியே.'', ''அறவையேன் மனமே கோயிலாக் கொண்டான்.'', ''என் சிந்தையுட் புகுந்து பூங்கழல் காட்டிய பொருளே.'', ''என தகம் புகுந் தாண்டதோர் அற்புதம்.'', ''ஓவா துள்ளம்கலந் துணர்வாய் உருக்கும்.'' என்று மாணிக்க வாசகரும், ''சித்தத்துள் தித்திக்கும்

தேனே.", "அளிவளர் உள்ளத் தானந்தக் கனியே.", "உள்ளத் துவகை விளைத்தவன்.", "உள்ளத்துள்ளே ஊறலந் தேறல்." என்று திருமாளிகைத் தேவரும், "மதிப்பவர் மனமணி விளக்கை.", "உளம்கொள மதுரக் கதிர் விரித் துயிர்மேல் அருள் சொரிதரும் உமாபதியை.", "நெஞ்சினுள் நிறைந்து நின்றானை." என்று சேந்தனாரும், "நெஞ்சிடர் அகல அகம்புகுந் தொடுங்கு நிலைமையோடு.", "என்மனம்நெக மகிழ்ந்தபே ரொளியே.", "ஆறாத பேரன்பின் அவர்உள்ளம் குடிகொண்டு வேறாகப் பலர்சூழ வீற்றிருத்தி.", "சிறிய என்னைஆள் விரும்பி என்மனம் புகுந்த எளிமையை என்றும்நான் மறக்கேன்.", "என துள்ளம் உள்கலந் தெழுபரஞ் சோதி.", "என்னுளம் புகுந்த எளிமையை என்றும்நான் மறக்கேன்.", "ஏந்தெழில் இதயம் கோயில்.", "தனியனேன் உள்ளம் கோயில்கொண் டருளும் சைவனே.", "என்னெடும் கோயில் நெஞ்சுவீற் றிருந்த எளிமையை என்றும்நான் மறக்கேன்.", "மழலையாழ் சிலம்ப வந்தகம் புகுந்தோன்.", "அடியேன் சிந்தையுட் புகுந்த நம்பனே." என்று கருவூர்த் தேவரும், "தில்லை அம்பலத்தான் செய்ய பாதம் வந்தென் சிந்தையுள் இடம் கொண்டனவே.", "கூத்தனார் கழற்சிலம்பு கிங்கிணி என் சிந்தையுள் இடம்கொண்டனவே.", "மணி புரைதரு திரண்டவாள் குறங்கென் சிந்தையுள் இடம்கொண்டனவே.", "உந்திவான் சுழிஎன் உள்ளத்துள் இடம் கொண்டனவே.", "உதர பந்தனம் என் உள்ளத்துள் இடம் கொண்டனவே.", "நெற்றி நாட்டம் அன்றே நெஞ்சுளே திளைக்கின்றனவே.", "பிறைக்கொள் சென்னியன்றே பிரியாதென்னுள் நின்றனவே.", "நினைப்பார் மனத்தினுளே யிருந்த மணியை." என்று திருவாலிய முதனாரும், "தேறிய அந்தணர் சிந்தை செய்யும் எல்லிய தாகிய எழில்கொள் சோதி." என்று புருடோத்தம நம்பியும், "என் மனத் தகத்தே பாலும் அமுதமும் ஒத்து நின்றான்." என்று சேந்தனாரும், "இருண்ட மொய்யொளி சேர்கண்டத்தான் என் நெஞ்சத்தான்.", "காதலாற் கர்ண்பார்க்குச் சோதி

யாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக் காதியாய் நின்ற அரன்.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''இறைவர் வந்தென் சித்தமராய் அகலாதுடன் ஆடித் திரிபவரே.'', ''உள்ளத்தினுள்ளும் திரிதரினும்.'', ''சிந்திக்கச் சிந்தாமணி ஆகித் தித்தித் தமுதமுமாம்.'', ''எவ்வுருவில் யாரொருவர் உள்குவார் உள்ளத்துள் அவ்வுருவாய்த் தோன்றி அருள்கொடுப்பான்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''தஞ்சமென் றொழுகும் தன் அடியார்தம் நெஞ்சம் பிரியா நிமலனை.'', ''உள்ளம துருகிக் கலந்து கசிந்துதன் கழலிணை யவையே நினைந்திட ஆங்கே தோன்றும் நிமலனை.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''மாமனத்தைக் கூப்பிப் புலர்ந்தும் புலராத போதும் கலந்திருந்து கண்ணீர் அரும்பக் கசிவார்க்குக் காண் பெளியன் தெண்ணீர் சடைக்கரந்த தேவு.'', ''உளம் மாசற்றக் கமலம் இல்லா அடல்வெள்ளே றூர்ந்துழலும் அங்கமல வண்ணன் அடி.'' என்று கபிலதேவ நாயனாரும், ''அடியேன் மனம் புகுந்தது.'', ''நின்னை நினைப்பவர் செம்மை மனத்தினும் தில்லை மன்றினும் நடம்ஆடும் அம்பலவாண.'', ''அடியேன் மனத்தே வந்து சந்திக்கவே.'', ''சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவி செந்தைநீ இருக்க இட்டனன்.'', ''என் உள்ளத்தே நின்ற ஒளி.'', ''தம் அடியார் மனம்விட் டகலா மதிற்கச்சி ஏகம்பர்.'', ''அன்பு செய்வோர் நெஞ்சரத் தாழ்வுகந்தோர்.'', ''பணிவோர் மனத்திடை வாரி ஆகிய வனப்பும்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும்; ''பூங்கழல்நல்ல புலத்தினர் நெஞ்சேயவன்.'', ''கிங்கிணித் தாட்செய்ய பாதம் என்னுள் புகவே.'', ''வேதகச் சிந்தை விரும்பியவன்.'', ''நின்னை என்னுள் வைத்த மதியே.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''அடியே போற்றி மறவாமை தலைநின்ற மனமே செம் பொற் கோயிலா.'' என்று உமாபதி சிவமும், ''சிந்தை யார முந்தாகிய செஞ்சடைத் தந்தையார்.'', ''மனக்கோயிலுள் ளிருத்தி.'', ''சிந்தை ஆலயத்தரனார்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 194-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களாகிய யானையின்மேல் ஏறிக்கொண்டு அமர்ந்திருந்தன; அறிவு இல்லாத அடியேன் புரியும் பிழையைப் பொறுத்துக் கொண்டு அடியேனை ஆட் கொண்டன; துன்பங்களானவற்றைப் போக்கியருள அடியே னிடம் பொருந்தி இருந்தன; உயிர்களினுடைய தலைவ னாகிய வன்மீக நாதனே, தேவரீருடைய செந்தாமரை மலர் களைப் போன்ற திருவடிகள் இத்தகையவை.' பாடல் வருமாறு:

**" வேத வாரணம் மேற்கொண் டிருந்தன;**
**பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன.**
**ஏத மானவை தீர்க்க இசைந்தன;**
**பூத நாத,நின் புண்டரீ கப்பதம். "**

இந்தப் பாடல் சுந்தர மூர்த்தி நாயனார் வன்மீக நாதருடைய திருவடிகளைப் புகழ்ந்து கூறியதைத் தெரி விப்பது. இதில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. பூத-எல்லா உயிர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். நாத-தலைவனாகிய வன்மீக நாதனே. நின்-தேவரீருடைய. புண்டரீக-செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பதம்-திருவடிகள்; ஒருமை பன்மை மயக்கம். வேத-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங் களாகிய; ஒருமை பன்மை மயக்கம். வேத-வேதமாகிய. வாரணம்-யானையினுடைய. மேல்-மேலே. கொண்டு-ஏறிக் கொண்டு. இருந்தன-அமர்ந்திருந்தன. பேதையேன்-அறி வில்லாதவனாகிய அடியேன். செய்-புரியும். பிழை-தவறு களை; ஒருமை பன்மை மயக்கம். பொறுத்து-பொறுத்துக் கொண்டு. ஆண்டன-அடியேனை ஆட்கொண்டன. ஏதம்-துன்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆனவை-ஆன வற்றை. தீர்க்க-போக்கியருள. இசைந்தன-அடியேனிடம் பொருந்தி இருந்தன.

வேதவாரணம்: ''வேத மாகிய வெஞ்சுட ரானையார்.'' என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியதைக் காண்க.

பேதையேன் செய் பிழை பொறுத் தாண்டனை: ''பின்னை என்பிழை யைப்பொறுப் பானை.'', ''தொண்ட னேன் செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை.'', ''பிழை யுளன பொறுத்திடுவர்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரே பாடியிருப்பதைக் காண்க.

பொருந்தி இருந்தன: ''பொன்னடிக் கென்னைப் பொருந்த வைத்த வேயவனார்.'' என்று அந்த நாயனாரே பாடுவதைக் காண்க.

அடுத்து வரும் 195-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'இத்தகைய முறையில் துதித்த ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனாருக்கு இடபவாகனத்தின்மேல் ஏறி எழுந்தருளும் வீரராகிய வன்மீக நாதரும் அந்த நிலையில் அந்த நாயனார் வேண்டிக் கொண்ட அந்த விண்ணப்பத்தின் வண்ணம் வழங்கியருளுவதை விரும்பி நிலைபெற்ற சீர்த்தி யைக்கொண்ட அடியவர்களுடைய வழிவழி வரும் தொண் டினைத் தெரிந்து கொள்ளுமாறு உரிய ஆற்றலை வழங்கிப் பிறகும் அந்த அடியவர்களுடைய பெருமைகளைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.' பாடல் வருமாறு:

**'' இன்னவா றேத்தும் நம்பிக் கேறுசே வகனார் தாமும்**
**அந்நிலை அவர்தாம் வேண்டும் அதனையே அருள வேண்டி**
**மன்னுசீர் அடியார் தங்கள் வழித்தொண்டை உணர நல்கிப்**
**பின்னையும் அவர்கள் தங்கள் பெருமையை அருளிச் செய்வார். ''**

இன்ன-இத்தகைய. ஆறு-முறையில். ஏத்தும்-துதிக்கும், நம்பிக்கு-ஆளுடைய நம்பியாகிய சுந்தர மூர்த்தி நாயனாருக்கு. ஏறு-இடபவாகனத்தின்மேல் ஏறிக்கொண்டு

எழுந்தருளும். சேவகனார்தாமும்-வீரராகிய வன்மீக நாதரும்; தாம்: அசைநிலை. அந்நிலை-அந்த நிலையில். அவர்தாம்-அந்த நாயனார்; தாம்: அசைநிலை. வேண்டும்-வேண்டிக் கொள்ளும். அதனையே-அந்த விண்ணப்பத்தின் படியே. அருள-வழங்கியருள. வேண்டி-விரும்பி. மன்னு-நிலைபெற்ற. சீர்-சீர்த்தியை உடைய. அடியார்தங்கள்-அடியவர்களுடைய; தங்கள்: அசைநிலை. வழி-வழிவழியே புரிந்து வரும். தொண்டை-தொண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். உணர-தெரிந்து கொள்ள. நல்கி-ஆற்றலை வழங்கி. ப்: சந்தி. பின்னையும்-பிறகும். அவர்கள் தங்கள்-அந்த அடியவர்களுடைய. தங்கள்: அசைநிலை. பெருமையை -பெருமைகளை; ஒருமை பன்மை மயக்கம். அருளிச் செய்வார்-திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.

சேவகனார்: ''சலவம் சடை வைத்த வீரன்.'', ''மதிசூடு முடியுடை வீரன்.'', ''வீர மாகிய வேதியர்.'', ''ஒளிதிகழ் வீரணர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''வீரமும் பூண்பர்.'', ''வீரனை விடம் உண்டனை.'', ''வீரன் வீழி மிழலை விகிர்தனே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''சேவகனாகித் திண்சிலை ஏந்தி.'', ''கழற் சென்னியில் வைத்த சேவக போற்றி.'', ''தேவதேவன்மெய்ச் சேவகன்.'' என்று மாணிக்க வாசகரும், ''வீரன் அயன் அரி.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''வில் ஒன்று வளைத்த வீரம் போற்றி.'', ''சிங்கம் கொன்ற சேவகம் போற்றி.'', ''மூவெயில் எரித்த சேவகத் தேவ.'', ''திரிபுரம் எரித்த சேவக.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும் பாடியருளியவற்றைக் காண்க.

*பின்பு உள்ள 196-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'' 'தங்களுக்கு இருக்கும் பெருமையினால் தங்களையே ஒப்பாக விளங்குவார்கள் அந்த அடியார்கள்; இடைவிடாமல் வழிபடுவதனால் எம்மைத் தலைவராக அவர்கள் பெற்றிருக்கிறார்கள்; ஒருமைப்பாடு அமைந்த தங்களுடைய

இயல்பினால் உலகத்தில் வாழும் மக்களை வெற்றி கொள் வார்கள்; ஒரு குறையும் இல்லாதவர்கள்; பிறரிடம் காண முடியாத அருமையாகும் நிலையில் பிறழாமல் நிலைத்து நிற்பவர்கள்; எம்மிடம் வைத்த பக்தியினால் பேரா னந்தத்தை நிறைய அடைவார்கள்; அகப்பற்று புறப்பற்று என்னும் இரண்டு பற்றுக்களையும் கடந்து நிற்பவர்கள் அவர்கள்; இத்தகைய அடியவர்களை நீ சென்று சேர்வா யாக.'' என்று வன்மீக நாதர் சுந்தர மூர்த்தி நாயனாருக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து.' பாடல் வருமாறு:

**'' ' பெருமையால் தம்மை ஒப்பார்;**
**பேணலால் எம்மைப் பெற்றார்;**
**ஒருமையால் உலகை வெல்வார்;**
**ஊனமேல் ஒன்றும் இல்லார்;**
**அருமையாம் நிலையில் நின்றார்;**
**அன்பினால் இன்பம் ஆர்வார்;**
**இருமையும் கடந்து நின்றார்;**
**இவரைநீ அடைவாய்.' என்று.''**

இந்தப் பாடல் குளகம். வன்மீக நாதர் சுந்தர மூர்த்தி நாயனாருக்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்ததைச் சொல் வது; சிவனடியவர்களின் இயல்புகளைப் புலப்படுத்துவது. பெருமையால்-தங்களுக்கு உள்ள பெருமையினால். தம்மை-தங்களையே. ஒப்பார்-ஒத்து விளங்குகிறவர்கள் அந்த அடி யவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவர்களுக்கு வேறு யாரையும் உவமையாகக் கூற இயலாது என்பது கருத்து. பேணலால்-இடைவிடாமல் விரும்பி வழிபடுவதனால், எம்மைப் பெற்றார்-எம்மைத் தலைவராகப் பெறும் பேற்றை அடைந்தவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒருமையால்-தங்களுடைய திருவுள்ளங்களில் அமைந்திருக்கும் ஒருமைப் பாட்டினால். உலகை-இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்களை; இட ஆகுபெயர். வெல்வார்-வெற்றியைக் கொள்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஊனமேல்-

குற்றமோ. ஒன்றும்-ஒன்றேனும். இல்லார்-இல்லாதவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அருமையாம்-வேறு யாரிடத்திலும் காணப்படாத அருமையாகும். நிலையில் நின்றார்-நிலையில் நிலைத்து நின்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அன்பினால்-எம்மிடம் வைத்திருக்கும் பக்தியினால். இன்பம்-பேரானந்தத்தை. ஆர்வார்-நுகர்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். இருமையும்-அகப்பற்று, புறப்பற்று என்னும் இரண்டு பற்றுக்களையும். கடந்து-அகற்றிவிட்டு. நின்றார்-நிலைபெற்று அந்த நிலையில் நின்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இவரை-இத்தகைய சிறப்புக்களைப் பெற்ற அடியவர்களை; ஒருமை பன்மை மயக்கம். நீ அடைவாய்-நீ சேர்வாயாக. என்று-எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து.

ஒருமை: "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞான சம்பந்தன்.", "புந்தி ஒன்றி நினைவார் வினையாயின தீர.", "செல்வர் அடியல்லாதென் சிந்தை உணராதே.", "அதிருறு கழலடி தொழுமறி வலதறிவறியமே.", "கழலே அடைந்து வாழ்மினே.", "நெஞ்சொன்றி நினைந்தெழுவார்மேல் துஞ்சும் பிணியாயின தானே.", "உள்ளம் ஒன்றிக் கள்ளம் ஒழிந்து.", "எம்பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே.", "சோதி நாமமே ஓதி உய்ம்மினே.", "சித்தம தொன்றிச் செய்கழல் உன்னிச் சிவனென்று நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே.", "ஒருக்கிய உணர்வினொடொளிநெறி செலுமலர்.", "ஒருக்கும்மனத் தன்பர்.", "சைவனார் அவர் சார்வலால் யாதும் சார்விலோம் நாங்களே.", "நக்கனாரவர் சார்வலால் நல்கு சார்விலோம் நாங்களே.", "அரையா உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "அடிகேள் உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "ஐயா உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "அன்பா உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "அண்ணா உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "ஆதீ உன்னையல்லால் அடையாதென தாதரவே.", "ஆனாய் உன்னையல்லால் அடையாதென

தாதரவே.'', ''அறிவே உன்னையல்லால் அடையாதென தாதரவே.''. ''அண்டா உன்னை அல்லால் அடையாதென தாதரவே.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்.'', ''ஒன்றியிருந்து நினைமின்கள்.'', ''உன் கழலே நினையும் கருத்துடையேன்.'', ''உன்பாதமே காண்பதற்கு உருகிற்றென் உள்ளமும்.'', ''உள்ளத்தை நெறிப்படுத்து நினைத்தவர் சிந்தையுள் அறிப்பு றும்மமு தாயவன்.'', ''வீரட்டம் காணில் அல்லதென் கண் துயில் கொள்ளுமே.'', ''திருவீரட்டம் நண்ணில் அல்லதென் கண்துயில் கொள்ளுமே.'', ''திருவீரட்டம் கற்கில் அல்லதென் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் கற்றா லல்லதென் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் கல்லேனாகில் என் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் கண்டால் அல்லதென் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டன்பால் கரையேனாகில்என் கண் துயில் கொள்ளுமே.'', ''திருவீரட்டம் கூறிலல்லதென் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் காணே னாகில்என் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் உரையே னாகில்என் கண்துயில் கொள்ளுமே.'', ''வீரட்டம் புலம்பேனாகில்என் கண்துயில் கொள்ளுமே.'', ''திருக்கோளில் அண்ணலார் அடியேதொழு துய்ம்மினே.'', ''கோளில் அரன்பாதமே கூறுமே.'', ''குழகனார் திருப்பாதமே கூறுமே.'', ''ஏற்ற னார்அடி யேதொழு தேத்துமே.'', ''திருக்கோளில் அருத்தி யாய அடியேதொழு துய்ம்மினே.'', ''வடதளி நிலையினான் அடியே நினைந் துய்ம்மினே.'', ''காட்டுப் பள்ளிஎம் ஐயன்தன் அடியே அடைந்துய்ம்மினே.'', ''நாலார நம்பனையே பாடப் பெற்றோம்.'', ''எம்பெருமான் திருவடியே எண்ணினல்லால் கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன் கழலடியே கைதொழுது காணினல்லால்.'', ''ஒருவனையும் அல்லா துணரா துள்ளம்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''வைத்தனன் தனக்கே தலையும்என் நாவும் நெஞ்சமும்.'', ''எம்பெருமான் நினைந் தேத்துவன் எப்பொழுதும்.'', ''நானேல் உன்னடியே நினைந்தேன்.'', ''நிலையாய்

நின்னடியே நினைந்தேன்.'', ''அடிகேள் என் அமுதே எனக் கார் துணை நீயலதே.'', ''இறைவா என் அமுதே எனக்கார் துணை நீயலதே.'', ''என் தாதை பெருமான்எனக் கார் துணை நீயலதே.'', ''ஆரா என்அமுதே எனக் கார்துணை நீயலதே.'', ''எம் ஐயா என் அமுதே எனக் கார்துணை நீ அலதே.'', ''எம் அண்ணா என்அமுதே எனக் கார்துணை நீ அலதே.'', ''ஆறார் செஞ்சடையாய்எனக் கார்துணை நீயலதே.'', ''அபனே என் அமுதே எனக் கார்துணை நீ அலதே.'', ''படுவிப்பாய் உனக்கே ஆள் பலரையும் பணி யாமே தொடுவிப்பாய்.'', ''மற்றுப் பற்றெனக் கின்றிநின் திருப்பாதமே மனம் பாவித்தேன்.'', ''விரும்பி நின்மலர்ப் பாதமே நினைந்தேன்.'', ''மற்றொரு துணை இனி மறுமைக்கும் காணேன்.'', ''உன்னையே உள்குகின்றேன்.'', ''மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே.'', ''தன் பொன்னடிக்கே நானென பாட.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா தருபரத் தொருவன் அவனியில் வந்து குருபரனாகி அருளிய பெருமையை.'', ''மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி.'', ''உடையான் அடியே நினைந்துருகி.'', ''ஆமாறுன் திருவடிக்கே அகம்குழையேன்.'', ''பேசிற்றாம் ஈசனே எந்தாய் எந்தை பெருமானே என்றென்றே பேசிப் பேசி.'', ''வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி.'', ''போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை.'', ''சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி.'', ''அன்புநின் கழற்கணே புணர்ப்பாக.'', ''இன்பமும் ஏகநின் கழலிணை யலாதிலேன்.'', ''ஐய நின்ன தல்ல தில்லை மற்றொர் பற்று.'', ''உய்த வாவ துன்க ணன்றி மற்றொ ருண்மை இன்மையின்.'', ''நின்னவாற் பற்று மற்றெனக் காவ தொன்றினி உடையனோ.'', ''பாட வேண்டும்நான் போற்றி நின்னையே.'', ''எம்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க.'', ''அங்கருணை வார்கழலே பாடுதும்காண் அம்மானாய்.'', ''வான்வந்த வார்கழலே பாடுதும்காண் அம்மானாய்.'', ''வானவன் பூங்கழலே பாடுதும்காண்

அம்மானாய்.'', ''மந்தார மாலையே பாடுதும்காண் அம்மானாய்.'', ''ஆடுவான் சேவடியே பாடுதும்காண் அம்மானாய்.'', ''சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''அம்பலவன் தேனார் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''அம்பலவன் பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''என்னை வேறே ஆட்கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''தொன்மைக் கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.'', ''தெள்ளும் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ.'', ''சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழ.'', ''பற்றுநான் மற்றிலேன்.'', ''மற்றுநான் பற்றிலேன் கண்டாய்.'', ''பாடிமால் புகழும் பாதமே அல்லால் பற்றுநான் மற்றிலேன்.'', ''நின்பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே.'', ''உடையானே உனையல்லா துறுதுணை மற் றறியேனே.'', ''கூத்தா உன் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.'', ''தேடும் பொருளும் சிவன்கழலே.'', ''திருவருளே சேரும் வண்ணம்.'', ''தன்கழலே சேரும்வண்ணம் ஐயனெனக் கருளியவாறு.'', ''தூய்நெறியே சேரும் வண்ணம் அண்ணல் எனக்கருளியவாறு.'', ''தன்கழலே சேரும்வண்ணம் ஆதிஎனக் கருளிய

வாறு.'' என்று மாணிக்க வாசகரும், ''யோக நாயகனை அன்றிமற் றொன்றும் உண்டென உணர்கிலேன் யானே.'' என்று சேந்தனாரும், ''மற்றெனக் குறவென்.'' என்று கருவூர்த் தேவரும், ''எச்சார்வும் இல்லாமை நீஅறிந்தும்.'' என்று வேணாட்டடிகளும், ''தில்லை அம்பலத்தாடும் உடைய கோவினை அன்றி மற்றாரையும் உள்ளுவ தறியேனே.'' என்று திருவாலியமுதனாரும், ''சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை.'', ''அவனை ஒழிய அமரரும் இல்லை.'' என்று திருமூலரும், ''ஈசன் அவன்அலா தில்லை எனநினைந்து கூசி மனத்தகத்துக் கொண்டிருந்து.'', ''காதல் சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்.'', ''அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம் என்றும் அவர்க்கேநாம் அன்பாவ தல்லாற் பவர்ச் சடைமேற் பாகாப்போழ் சூடும் அவர்க் கல்லால் மற்றொருவர்க் காகாப்போம் எஞ்ஞான்றும் ஆள்.'', ''ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன் ஒன்றே காண் கங்கையான் திங்கட் கதிர்முடியான் பொங்கொளிசேர் அங் கையாற் காளாம் அது.'', ''தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும் எனக்கே.'', ''பிரானவனை நோக்கும் பெருநெறியே பேணிப் பிரானவன்றன் பேரருளே வேண்டி.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''நெஞ்சே வளைகுளத் துள் ஈசனையே வாழ்த்து.'', ''பாச்சிற் றிருவாச்சிரமமே சேர்.'', ''நெஞ்சே சிராமலையான் பாதமே சேர்.'', ''திருப் பனந்தாள் தாடகைய ஈச்சரத்தான் பாதமே ஏத்து.'', ''நெஞ்சே செழுந்திரு மயானமே சேர்.'' என்று ஐயடிகள் காடவர்கோன் நாயனாரும், ''கண்ணவனை அல்லது காணா செவிஅவன தெண்ணரும்சீர் அல்ல திசைகொள்ளா அண்ணல் கழலடி அல்லது கைதொழா.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''முதல்வன் சரணமே காணுமால்.'', ''ஈசன் திறமே நினைந்துருகும் எம்மை.'', ''காளத்தியான் கழற்கேயாம் உற்றது.'', ''கண்ணும் கருத்தும் கயிலாயரே எமக்கென் றெண்ணி இருப்பன்யான் எப்பொழுதும்.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''கருதும் கருத்துடையேன் கையுடையேன் கூப்பப் பெரிதும் பிற திறத்துப் பேசேன்.''

என்று கபிலதேவ நாயனாரும், "நாயேன் தலைகொடு சார்வதுன் சரண்வழி அல்லால் அலைகடல் பிறழினும் அடாதே.", "யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை.", "மாமருதிற் பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றில் ஆசையின்றி இருந்தேன்.", "கதியாவது பிறிதியாதொன்றும் இல்லை...மருதன் கழலே சென்று வாழ்த்துவதே.", "வணக்கம் தலைநின் திருவடிக்கே செய்யும் மையல் கொண்டோர்.", "பொருளே போற்றி போற்றி என்றுனை நாத்தழும் பிருக்க நவிற்றின் அல்லதேத்துதற் குரியோரியார்இரு நிலத்தே." என்று பட்டினத்துப் பிள்ளையாரும், "வாழ்நின் பாத மலர்க்கே மருவ அருளு.", "அவன் பூங்கழற்கே மாண்டிலை." என்று நம்பியாண்டார் நம்பியும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 197-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

தலைவராகிய வன்மீக நாதர் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, நம்பியாரூராகிய சுந்தர மூர்த்தி நாயனார், "அடியேன் இந்தத் திருவாரூர்ப் பூங்கோயிலில் குற்றங்களைப் போக்கும் வழியைப்பெறும் பேற்றை அடைந்தேன்." என்று எண்ணி வன்மீக நாதருடைய சந்நிதிக்கு எதிரில் அந்த நாதரைப் பணிந்து வாழ்த்த, "நியாய முறைப்படி அந்த அடியவர்களை வணங்கி நீ சுவை நிரம்பிய சொற்கள் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தைக் குற்றம் இல்லாத வாக்கின் திறமையால் பாடுவாயாக." என்று பெருமையைப் பெற்றவராகிய வன்மீக நாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

**"நாதனார் அருளிச் செய்ய**
**நம்பியா ரூரர், 'நான்இங்**
**கேதம்தீர் நெறியைப் பெற்றேன்.'**
**என்றெதிர் வணங்கிப் போற்ற.**

**' நீதியால் அவர்கள் தம்மைப்**
**பணிந்துநீ நிறைசொல் மாலை**
**கோதிலா வாய்மை யாலே**
**பா' டென அண்ணல் கூற. ''**

இந்தப் பாடல் குளகம். நாதனார்-தலைவராகிய வன்மீக நாதர். அருளிச் செய்ய-அவ்வாறு திருவாய் மலர்ந் தருளிச் செய்ய. நம்பியாரூரர்-நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார். நான்-அடியேன். இங்கு-இந்தத் திரு வாரூர்ப் பூங்கோயிலில். ஏதம்-துன்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தீர்-போக்கும். நெறியை-வழியை. ப்: சந்தி. பெற்றேன்-பெறும் பேற்றை அடைந்தேன். என்று-என எண்ணி. எதிர்-வன்மீக நாதருடைய சந்நிதிக்கு எதிரில். வணங்கி-வன்மீக நாதரைப் பணிந்து. ப்: சந்தி. போற்ற-வாழ்த்த. நீதியால்-நியாயமான முறைப்படி. அவர்கள் தம்மை-அந்த அடியவர்களை; தம்: அசைநிலை. ப்: சந்தி. பணிந்து-வணங்கி. நீ நிறை-நீ சுவை நிரம்பிய. சொல்-செய் யுட் சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். மாலை-மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. கோது-ஒரு குற்றமும். இலா-இல்லாத; இடைக்குறை. வாய்மையால்-உன்னுடைய வாக்குத் திறமையினால். ஏ: அசைநிலை. பாடு-நீ பாடுவா யாக. என-என்று; இடைக்குறை. அண்ணல்-பெருமையைப் பெற்றவராகிய வன்மீக நாதர். கூற-திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

தலைவர், நாதனார்: ''நன்பொனை நாதனை.'', ''உமை தலைவன்.'', ''உயிர்கட்குமுன் தலையானவன்.'', 'தளையாயின தவிரவ் வருள் தலைவன்.'', ''வினை பொருள்கள் தானாகிய தலைவன்.'', ''உலகங்களை நிலை பேறு செய் தலைவன்.'', ''உமை தலைவனை.'', ''திருப்புன் கூர்த் தலைவர்.'', ''தலைவன தாள்நிழல் சார்வோம்.'', ''நஞ்சுசேர் கண்டம் உடையஎன் நாதர்.'', ''தேவர் தலைவர்.'', ''தலைவ நின்தாள் நிழற்கீழ் நிலைபுரிந்தார் இடர்களையாய்.'', ''கரவீரத்தெம் நாதன்.'', ''தாய அடி

யளந்தான் காணமாட்டாத் தலைவர்.'', ''நாதா எனவும் நக்கா எனவும்.'', ''தாழ்சடை இளமதி தாங்கிய தலைவன்.'', ''நாதன் என்பிர்காள்.'', ''நாதனென் றேத்துநம் பரன்.'', ''சிராப்பள்ளித் தலைவரை.'', ''நாதன் மேய நன்னகர்.'', ''கலிக்காழித் தலைவா.'', ''புகலி தன்னுள் நாதனை.'', ''ஆரூர்த் தந்திரமா உடையான் அவன்எம் தலைமையனே.'', ''கொடிமாடச் செங்குன்றூர் நின்ற தலைமகனை.'', ''தலையவன் தலையணி மாலை பூண்டு.'', ''வெண்டலை மாலை முடிக் கணிந்த நாதன்.'', ''தன்அடியார்க் கருள் புரியும் நாதன்.'', ''ஆண்ட என் நாதனார்.'', ''கோழம்பம் மேவிய நாதனை.'', ''நாகேச் சரநகருள் தலைவா.'', ''நமை ஆளும் நாதரே.'', ''மலர்கொண்டு புனைகின்ற நாதன்.'', ''சுடலைதன் நடமாடும் நாதன்.'', ''தண்புகார்ச் சாய்க் காட்டெம் தலைவன்.'', ''தாளால் அரக்கன் தோள்சாய்த்த தலைமகன்.'', ''நலம்திகழ் நாதனே.'', ''நாதனே இவன் என்று நயந்தேத்த.'', ''தஞ்ச மாய தலைவன்.'', ''நாதன் நம்மை ஆள்வான்.'', ''தொழுவார் தங்கள் உறுநோய்கள் தள்ளிப் போக அருளும் தலைவன்.'', ''நாவால் நாதன் நாமம் ஓதி.'', ''விடையூர்வார் தலைவர்.'', ''முப்புரங்கள் எரி செய்த நாதன்.'', ''தாயுறு தன்மை யாய தலைவன்.'', ''தாயென நின்ற அந்தத் தலைவன்.'', ''நட்டம் நள்ளிருள் ஆடும் நாதனார்.'', ''பலிகொளும் நாதனார்.'', ''உலகினில் உயிர் வாழ்க்கை கண்ட நாதனார்.'', ''அருள்செய்த தலைவ னார்.'', ''கொன்றைந் நயந்தோங்கு நாதற்கு.'', ''நாதன் அமர்கின்ற நாகேச்சரம்.'', ''தக்கன் வேள்வி தகர்த்த தலைவன்.'', ''பூந்தராய் நாதன்.'', ''தவள நீறணி தலை வனை.'', ''நாதனும் நள்ளிருள் ஆடி னானும்.'', ''விடை யானும் எங்கள் தலைவன்.'', ''தாதணி குழலுமை தலை வர்.'', ''தாருடைக் கொன்றையந் தலைவர்.'', ''வானவர் தலைவர்.'', ''அரணம் மூன்றெய்த நாதனை.'', ''நஞ்சுறு திருமிடறுடை நாதனார்.'', ''அரியசீர் நாதனார்.'', ''காட்டுப்பள்ளி நாதனார்.'', ''இளம்பிறை தானலங்கல் உகந்த தலைவனார்.'', ''கொன்றையின் தண்ணலங்கல்

உகந்த தலைவனார்.", "நாதன் நாமம் நமச்சி வாயவே.", "தானவர் முப்புரங்கள் எரிசெய்த தலைமகனே.", "தொழ நாளும் அருள்செய்ய வலநாதன்.", "நஞ்சம்இருள் கண்டமுடை நாதன்.", "கோல நன்மாலை சூடும் தலைவர்.", "இமையோர்கள் தங்களை யாரிடர் தீர நின்ற தலைவர்.", "மலையின் தலைவன்.", "நலம்கவர்ந்த நாதர்.", "நல்வளை சோர நலம்கவர்ந்த நாதர்க் கிடம்.", "நஞ்சிருள் கண்டத்து நாதர்.", "நாதன் நாள்தொறும் ஆடுவதானையே.", "நாதன் மேனியின் மாசுணம் ஊருமே.", "தாயினும் நல்ல தலைவர்.", "நாதனை நல்லூர்ப் பெருமணம் மேவிய வேதன தாள்தொழ வீடெளி தாமே." என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், "தலையாலே பலிதேரும் தலைவனை.", "நாதனார் தில்லை.", "நாதனே ஆதி மூர்த்தி.", "நாதனார் என்ன.", "தலைவர்க்கும் தலைவர்.", "சண்டியார்க் கருள்கள் செய்த தலைவர்.", "நஞ்சணி மிடற்றி னானே நாதனே.", "தானவர் தலைவர்.", "நாதனாய் உலகம் எல்லாம் நம்பிரான் எனவும் நின்ற பாதனாம் பரம யோகி.", "தாழ்வராம் தலைவன் பாலே.", "நாதனே ஞான மூர்த்தீ.", "எம்தனி நாதனே.", "வெண்பிறை துன்று சடைக்கணி நாதர்.", "பூத நாதனை.", "நாதனை நல்ல நான்மறை ஓதியை.", "உமையாளுறை நாதனார்.", "நாதன் நகர்திரு நல்லமே.", "நாதன் மேவிய நல்லம்.", "மழுவலன் ஏந்திய நாதர்.", "விண்ணோர்கள் தலைவனை.", "நீதியால் தொழுவார்கள் தலைவனை.", "பழையாறை வடதளி நாதனை.", "நாத னைநினைந் தென்மனம் நையுமே.", "கடுவாய்க் கரைத் தென்புத்தூர் நாதனை.", "நாத ராவர் நமக்கும் பிறர்க்கும்.", "பூத நாதன் பூவனூர் நாதனே.", "ஆதி நாதன் அடல்விடை மேலமர் பூத நாதன்.", "தேய நாதன்.", "தலைவனாகிய ஈசன்.", "தன்னிற் றன்னை அறியும் தலைமகன்.", "நஞ்சொடுங்கும் கண்டத்து நாதா போற்றி.", "கணநாதன்காண்", "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தானே.", "தம்மானைத் தலைமகனை.", "ஞானப் பெருங்

கடற்கோர் நாதர்.'', ''சலங்கொள் சடைமுடியுடைய தலைவா.'', ''தில்லை நடம்பயிலும் தலைவன்.'', ''விண் ணோர் தலைவனே என்றேன் நானே.'', ''பூதகண நாதன் நீயே.'', ''சாம்பர்மெய் பூசும் தலைவா போற்றி.'', ''கங்கைத் தலைவா போற்றி.'', ''நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி.'', ''சங்கைதனைத் தவிர்த்தாண்ட தலைவன்.'', ''வானவர்கள் தங்கட் கெல்லாம் நாதனே.'', ''சமயமவை ஆறினுக்கும் தலைவன்.'', ''வானோர்க்கும் ஏனோருக்கும் தலையவனை.'', ''வேதங்கள் தொழநின்ற நாதன்.'', ''நரைவிடை நற்கொடியுடைய நாதன்.'',''தலைகலனாப் பலி ஏற்ற தலைவன்.'', ''நான்மறையின் பொருள்கண்டாய் நாதன் கண்டாய்.'', ''நஞ்சடைந்த கண்டத்து நாதன்.'', ''நாதன்காண்.'', ''நக்கரவம் அரையில் ஆர்த்த நாதன்.'', ''தழலுருவைத் தலைமகனை.'', ''தாழ்வின் மனத்தேனை ஆளாக் கொண்டு தன்மை அளித்த தலைவர்.'', ''நாதனாய் வேதத்தி னுள்ளோ னாகி.'' என்று திருநாவுக்கரசு நாயனா ரும், ''துறையூர்த் தலைவா.'', ''துறையூர் நாதா.'', ''நாதனுக்கூர் நமக்கூர்.'', ''கண்டார் காதலிக்கும் கண நாதன்.'', ''வானோர் தலைவா.'', ''தன்அருள் தந்த எம் தலைவனை.'', ''தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை.'', ''கங்கை வார்சடை யாய்கண நாதா.'', ''நாதனை நாதமிகுத் தோசைய தானவனை.'', ''நாடுடைய நாதன்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''நாதன்தாள் வாழ்க.'', ''நாத நாத என்றழு தரற்றி.'', ''சைவா போற்றி தலைவா போற்றி.'', ''நாதனே நான் உனக்கோர் அன்பன் என்பேன்.'', ''தன்மை பிறரால் அறியாத தலைவா.'', ''நாதனே போற்றி போற்றி.'', ''மூவுலகுக் கொருதலைவா.'', ''கயிலாய மென்னும் மலைத் தலைவா.'', ''நான்முகன் மாலுக்கும் நாதர்இந் நாதனார்.'', ''ஏழ்பொழிற்கும் நாதன்.'', ''நாதன்அணித் திருநீற்றினை.'' என்று மாணிக்க வாசகரும், ''பிறப்பிலி நாதனை.'', ''நாதன் ஒருவனும்.'', ''நாதன் இருந்த நகர்.'', ''நாதனும் நாயகி தன்னிற் பிரியும் நாள்.'', ''தலைவன் இடம்.'',

''தானே தனக்குத் தலைவனுமாய் நிற்கும்.'', ''திசைமுக நாதனை.'', ''தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாம் தலைவன்.'', ''தானே வியாபித் தலைவனும் ஆகும்.'', ''தானவ னாகிய ஞானத் தலைவனை.'', ''தானே உலகின் தலைவன்.'', ''நான் கன்றாய் நாடி அழைத்தேன்என் நாதனை.'', ''தானவர் முப்புரம் செற்ற தலைவனை.'', ''தலைவனை நாடித் தயங்குமென் உள்ளம்.'', ''அம்பர நாதன்.'', ''தலைவனும் தானே இருக்கும்'', ''எந்தையை ஞானத் தலைவனை.'', ''நாதனார் பாறை கிடக்கப் படிகின்ற வாறே.'', ''வள்ளற் றலைவனை வானநன் னாட்டனை.'', ''நாயோட்டு மந்திரம் நாதன் இருப்பிடம்.'' என்று திருமூலரும், ''பூத நாதன் ஆதி மூர்த்தி.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''அமரர்கள் தலைவனை.'', ''நாத னாகிய நன்னெறிப் பொருளினை.'', ''விண்ணவர் தலைவனை.'', ''பிராணி தலைவனை.'', ''புண்ணிய நாதனை.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''வேதியர் பெரும விண்ணோர் தலைவ.'' என்று இளம்பெருமான் அடிகளும், ''புகவி நாதன்.'', ''பூத நாத பெரருவிடைப் பாக.'', ''நாதன்நான்.'', ''நாவா யாகிய நாத.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''தில்லை நாத.'', ''விண்ணோர் இனம்தலைவன்.'', ''வான்தலை நாதனை.'', ''நாதன் திருவடியே முடியாகக் கவித்து.'', ''நாதன் நணி பள்ளி.'', ''எண்டலைக்கும் தலைவன்.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''நாதனார் ஆதி தேவனார்.'', ''பூத நாதன் பொருவரும் தொண்டினுக்கு.'', ''அங்கண் நாதன் அதற்கருள் செய்துழி.'', ''தங்கள் நாதர் பூங்கோயில் நண்ணி.'', ''நாதனார் அருளிச் செய்ய.'', ''தன்னையா ளுடைய நாதன்.'', ''அற்புதத் தனிக்கூத் தாடும் நாதனார்.'', ''நாதர்தம் திருவருளினால்.'', ''இமையோர் தலைவனார்.'', ''தீக்காலி யாமவுண்டற்கு நாதர்தாம் அருள்புரிந்தது.'', ''நாதரும் பெருவிருப்பொடு.'', ''நாதர் மருவும் திருமலைகள்.'', ''நாதனைஎன் கண்ணுளான் எனும்திருத்தாண் டகம் நவின்றார்.'', ''நாதன்தன் அடியாரை.'', ''விரி

புனல் வேணி நாதர்.", "நாதர் அருளால் திருவிளக்கு நீரால் எரித்தார் நாடறிய.", "பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்.", "வேத நாதர்.", "நாத னார்தம் திருவாரூர்.", "பூதகண நாதர் புவிவாழ அருள்செய்த நாதன்.", "பிறை சேர் செய்ய சடைநாதன்.", "நாதர்கழல் தம்முடிமேல் கொண்டகருத் துடன்போந்தார் ஞானம் உண்டார்.", "வேதி குடியினில் நாதர்.", "தலைவர்தம் சக்கரப் பள்ளி.", "ஆறு சூழ்வேணி நாத னாரை.", "நாதர் விரும்படி யார்கள்.", "நாதர்தம் அருள்முன் பெற்று.", "நாதன் மாட்சிமை கேட்க.", "நாதர்தமை நாடோறும் வணங்கி.", "திருத்தோணி நாதர்.", "பூத நாத ரவர்தம்மைப் பூவார் மலராற் போற்றிசைத்து.", "நாதர் திருப்பெருமணத்து.", "நாதரைப் பணிந்து போற்றி.", "நாதனே நல்லூர் மேவும் பெருமண நம்பனே.", "நாதன் எழில் வளர் சோதி.", "நாதர் கோயில் சென்றடைந்தார் நம்பி தம்பி ரான் தோழர்.", "நாதர்எதிர் நின்றும் பரவி.", "நாதர்பாற் பொருள்தாம் வேண்டி.", "என்னுடைய நாதன் அருளால்.", "நாதரும் அதனைக் கேட்டு.", "நாதரை அறிவிலாதேன் நன்னுதல் புலவி நீக்கப் போதரத் தொழுதேன்.", "நாதரும் அதனை நோக்கி.", "நாதர்தம் அருளால் நண்ணும் சூளையும்.", "நாதன்றன் அடியார்க்கு நல்லடிசில் நாடோ றும் ஆதரவி னாலமுது செய்வித்து.", "சீத மதியரவி னுடன் செஞ்சடைமேற் செறிவித்த நாதன்.", "நாதனடி யார் கருணையினால் அருளிச் செய்வர்.", "நாதன் றானும் ...எனமொழிந்தார்.", "நாதர் தமக்கங் கமுதாக்க.", "பூத நாதர் திருத்தொண்டு புரிந்து.", "நாதன்றன் வல் லாணை.", "நாதனுக் காலயம்.", "தலைவர் சிவலோகம் சார்ந்தான்.", "பூத நாதன் தாள்மகிழ்ந்து.", "நாதர் மகிழும் திருப்பதிகள்." என்று சேக்கிழாரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பிறகு வரும் 198-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தன்னை ஆளாக உடைய தலைவனாகிய வன்மீக நாதன் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய அதைக்

கேட்டுத் தன்னுடைய தலையினால் அந்த நாதனைப் பணிந்து நின்று கொண்டிருந்த திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளிய சுந்தர மூர்த்தி நாயனார் "இத்தகைய வண்ணமும் இத்தகைய பண்பும் என்ன என்று அடியேன் தெரிந்துகொண்டு எவ்வாறு துதிப்பேன்? அவ்வாறு செய்வதற்கு அடியேன் யார்? அடியேன் பாடும் பாமாலையாகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடும் இயல்பை அடியேனுக்கு வழங்கியருள் புரிவாயாக." என்று அந்த நாயனார் விண்ணப்பித்த.' பாடல் வருமாறு:

"தன்னையா ளுடைய நாதன் தானருள் செய்யக் கேட்டுச்
சென்னியால் வணங்கி நின்ற திருமுனைப் பாடி நாடர்,
'இன்னவா றின்ன பண்பென் றேத்துகேன்? அதற்கி யானார்?
பன்னுபா மாலை பாடும் பரிசெனக் கருள்செய்.' என்ன."

இந்தப் பாடல் குளகம். தன்னை ஆளுடைய-தன்னை ஆளாக உடைய. நாதன்தான்-தலைவனாகிய வன்மீக நாதன்; தான்: அசைநிலை. அருள் செய்ய-அவ்வாறு திரு வாய்மலர்ந்தருளிச் செய்ய. கேட்டு-சுந்தர மூர்த்தி அதைக் கேட்டு. ச்: சந்தி. சென்னியால்-தன்னுடைய தலையினால். வணங்கி-வன்மீக நாதரைப் பணிந்து. நின்ற-நின்றுகொண் டிருந்த. திருமுனைப்பாடி நாடர்-திருமுனைப்பாடி நாட்டில் உள்ள திருநாவலூரில் திருவவதாரம் செய்தருளியவராகிய சுந்தர மூர்த்தி நாயனார். இன்ன-இத்தகைய. ஆறு-வழியில். இன்ன-இத்தகைய. பண்பு-குணம். என்று-என அறிந்து. ஏத்துகேன்-அடியேன் எவ்வாறு துதிப்பேன். அதற்கு-அவ்வாறு துதிப்பதற்கு. இ: குற்றியலிகரம். யான்-அடியேன். ஆர்-என்ன தகுதியை உடையவன். பன்னு-பாடும். பாமாலை-பாசுரங்களின் மாலையாகிய ஒரு திருப்

பதிகத்தை. பா: ஒருமை பன்மை மயக்கம். பாடும் பரிசு-பாடும் இயல்பை. எனக்கு-அடியேனுக்கு. அருள்செய்-வழங்கியருள செய்வாயாக. என்ன-என்று அந்த நாயனார் விண்ணப்பிக்க.

பின்பு உள்ள 199-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'பழையதும் பெருமையைப் பெற்றதும் ஆகிய இமய மலையினுடைய அரசன் பெற்றெடுத்த பரிசுத்தமானவ ளாகிய பார்வதி தேவியைத் தன்னுடைய அழகிய வாம பாகத்தில் தங்க வைத்திருக்கும் வன்மீக நாதன் உலகத்தில் வாழும் மக்கள் துன்பங்கள் போய் உஜ்ஜீவனம் அடையும் வண்ணம் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் வழங்கி யருளிய தன்னுடைய அழகிய வாக்கினால், "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்." என்று தொடங்கி, வரம்பு இல்லாத வளப்பத்தைக் கொண்ட புகழைப் பெற்ற வர்களாகிய திருத்தொண்டர்களினுடைய திருநாமங்களை எடுத்து அமைத்துப் பண்ணைப் பெற்ற பாசுரங்களை நீ பாடுவாயாக." என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

**"தொல்லைமால் வரைபயந்த தூயாள்தன் திருப் பாகன்**
**அல்லல்தீர்ந் துலகுய்ய மறைஅளித்த திரு வாக்கால்**
**'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்.' என்**
**றெல்லையில்வண் புகழாரை எடுத்திசைப்பா மொழி.' என்றார்."**

தொல்லை-பழையதும்; வினையாலணையும் பெயர். மால்-பெருமையைப் பெற்றதும் ஆகிய; வினையாலணையும் பெயர். வரை-இமயமலையினுடைய அரசன்; திணை மயக்கம். பயந்த-பெற்றெடுத்த. தூயாள்தன்-பரிசுத்தமானவ

ளாகிய பார்வதி தேவியினுடைய; தன்: அசைநிலை. திரு-அழகிய. ப்: சந்தி. பாகன்-வலப்பாகத்தில் உள்ள வன்மீக நாதன். உலகு-இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். அல்லல்-தங்களுடைய துன்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தீர்ந்து-போய். உய்ய-உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். மறை-இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அளித்த-வழங்கியருளிய. திரு-அழகிய. வாக்கால்-வாக்கினால். 'தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் என்று-தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என்று தொடங்கி. எல்லை-வரம்பு. இல்-இல்லாத; கடைக்குறை. வளம்-வளப்பத்தைக் கொண்ட. புகழாரை-புகழைப் பெற்றவர்களாகிய திருத்தொண்டர்களை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து-அவர்களுடைய திருநாமங்களை எடுத்துக் கூறி. இசைப்பா-கொல்லிக் கௌவாணப் பண் அமைந்த பாசுரங்களை; ஒருமை பன்மை மயக்கம். மொழி-நீ பாடுவாயாக. என்றார்-என்று வன்மீக நாதர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

மறை அளித்த திருவாக்கு: "பண்ணிசைவுமறை பாடலினான்.", "மறையும் ஓதி.", "மறையும் பலபாடி.", "நுணங்குமறை பாடி.", "வேதம் ஓதி.", "மொழிசூழ் மறைபாடி.", "மறையும் பலபாடி மயானத் துறைவாரும்.", "பாடலன் நான்மறையான்.", "அங்கமும் நான்மறையும் அருள்செய்து.", "அங்கமொ டருமறை அருள்புரிந்தான்.", "நான்மறை ஓதி.", "மறையும் ஓதுவர்.", "மொழியானை முன்னொருநாள் நான்மறை.", "மறையார்தரு வாய்மையினாய்", "வேத நாவினர்.", "பாடலார் நான்மறையான்.", "ஓதி ஆரணம்.", "மறைபாடினார்.", "சொற்றரும்மறை பாடினார்.", "மறைநின் றிலங்கு மொழியார்.", "மறைவளர் நாவன்.", "வேதம் ஓது நெறியினான்.", "மறைகள் ஓதுவர்.", "வேதம் ஓதிய நாவுடையான்.", "பாடினாய் மறையோடுபல் கீதமும்.", "பாடினை அரு

மறை வரன்முறையால்.", "வேதம தோதியும்.", "மறை புனை பாடலர்.", "மறைமல்கு பாடலன்.", "தொகுத்த வன் அருமறை.", "விரித்தவன் அருமறை.", "பாடினார் அருமறை.", "மறையணி நாவினான்.", "பண்ணி னாரரு மறை பாடினார்.", "மறையர் வாயின்மொழி.", "வாயி டைம் மறை ஓதி.", "மறையிலங்கு பாடலாய்.", "மறை மொழி வாய்மையினான்.", "மறைக்கண்டத் திறை நாவர்.", "மறைநவின்ற பாடலோடு.", "பாடல்மறை.", "சொற்பிரிவி லாதமறை பாடி.", "மறைத்திற மறத் தொகுதி கண்டு.", "பாடினர் அருமறை முறைமுறை.", "மறையொலி பாடி.", "உரைப்ப தும்பல மறைகளே.", என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், "விரித் தானை நால்வர்க்கு வெவ்வேறு வேதங்கள்.", "நாலு கொ லாம்மறை பாடின தாமே.", "ஓதினார் வேதம் வாயால்.", "மறையும் கொப்புளித்த நாவர்.", "பாடினார் மறைகள் நான்கும்.", "வேதராய் வேதம் ஓதி.", "தூய நன்மறைகள் நான்கும் பாடினார்.", "மறையது பாடி.", "ஓதிய வேத நாவர்.", "மறையணி நாவி னானை.", "வேதியா வேத கீதா.", "மறையுறு மொழியர்.", "மறை யொலி பாடி.", "பன்னிய மறையர்.", "மறைநவில் நாவி னானை.", "வேதங்கள் ஓதும்.", "மறைநான் குடன் ஓதியை.", "அரிய நான்மறை ஓதிய நாவரோ.", "வேதம் ஓதும் விரிசடை அண்ணலார்.", "மறையும் ஓதுவர் மான் மறிக் கையினர்.", "நல்ல நான்மறை ஓதியை.", "பண்ணி னார் மறை பலபல.", "வேதம் ஓதி விளங்குவெண் தோட ராய்.", "வேதம் ஓதி வந்து.", "மறைகொள் வாய்மொழி யார்.", "பன்மறை ஓதி.", "பாடி னார்மறை நான்கினோ டாறங்கம்.", "நல்ல நான்மறை ஓதிய நம்பனை.", "மறைகொள் நாவினன்.", "பண்ணினான் மறை.", "வேத நாவர் விடைக்கொடியார்.", "வேத நாவன்.", "மறைகொள் நாவன்.", "மறையும் பாடுதிர்.", "வேதங் கள் ஓதிஓர் வீணை ஏந்தி.", "பாடுமே ஒழியாமே நால் வேதம்மும்.", "மறையார்ந்த வாய்மொழியான்.".

"வேதங்கள் வேள்வி பயந்தார்.", "வேதத்தை விரிப்பதற்கு முன்னோ.", "மறையுடைய வேதம் விரித்தாய் போற்றி.", "வேதியனே வேத கீதா.", "நாலார்ந்த மறை பாடி." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "விரித்த வேதம் ஓத வல்லார்.", "மாமறை ஓதி.", "மறை நான்கும் கல்லால் நிழற்கீழ்ப் பன்னிய எங்கள் பிரான்.", "குறையாத மறைநாவர்.", "மறையன்றிப் பாடுவ தில்லையோ.", "வேதம் ஓதி வெண்ணீறு பூசி.", "திருந்த நான்மறை பாட வல்லானை.", "மறை அங்கம் கூறு நம்பி.", "பாடிய நான்மறையான்." என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், "வேத மெய்ந்நூல் சொன்னவனே.", "பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடி.", "நன்றாக நால்வர்க்கும் நான்மறையின் உட்பொருளை அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான்.", "அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி.", "வேத மொழியர் வெண்ணீற்றர்." என்று மாணிக்க வாசகரும், "ஆரணம் மொழிந்த பவளவாய்.", "ஆரணம் பொழியும் பவளவாய் மணியே.", "பதிகம் நான்மறை." என்று கருவூர்த் தேவரும், "வேதம் உரைத்தானும்.", "மாமறை ஓதியை." என்று திருமூலரும், "உரைவளர் நான்மறை ஓதி.", "மறைக் கண்டம் பாடலுற்றோ." என்று சேரமான் பெருமாள் நாயனாரும், "ஆற்கீழ் நால் வேதம் தெரிந்துரைப்பான்.", "தீதில் மறைக்கண்டன்.", "நான்குநின் வாய்மொழி.", "வேத கீதனை." என்று நக்கீரதேவ நாயனாரும், "முன்னுமறை நாவனை." என்று கபிலதேவ நாயனாரும், "வேத கீத விண்ணோர் தலைவ." என்று பட்டினத்துப் பிள்ளையாரும், "வேத காரண ராய ஏகம்பர்.", "எழுதாத மறையளித்த எழுத்தறியும் பெருமானை.", "வேதங்கள் மொழிந்தபிரான்.", "ஆரணமும் உலகேழும் ஈன்றருளி.", "வேதகா ரணாராய வெண்பிறை சேர்செய்ய சடைநாதன்.", "வேதகாரணர் அடியார்.", "ஆரண காரணக் கூத்தர்." என்று சேக்கிழாரும் பாடியருளி யவற்றைக் காண்க.

பிறகு வரும் 200-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நிலைபெற்று விளங்கும் சீர்த்தியையும், வயல்களையும் பெற்ற திருவாரூரை ஆட்சி புரியும் அரசராகிய வன்மீக நாதரை வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தம்முடைய தலை தரையிற் படிய வன்மீக நாதருடைய திருவடிகளைப் பணிந்து அந்த நாதருடைய திருவருளைத் தம்முடைய மேலே கொண்ட சமயத்தில் முன்காலத்தில் திருமாலும் அயனும் தேடிப் பார்த்தும் திருவடிகளையும் திருமுடியையும் தெரிந்து கொள்ளாத முதல்வராகிய வன்மீக நாதர் எழுந்தருள, அந்த தலையைத் தரிசித்து அடியவர்களிடத்தில் சேர்வதற்கு அந்த நாயனார் அடைகிறவரானார்.' பாடல் வருமாறு:

**" மன்னுசீர் வயல் ஆரூர் மன்னவரை வன்றொண்டர்**
**சென்னியுற அடிவணங்கித் திருவருள்மேற் கொள்பொழுதில்**
**முன்னம்மால் அயன்அறியா முதல்வர்தாம் எழுந்தருள**
**அந்நிலைகண் டடியவர்பால் சார்வதனுக் கணைகின்றார். "**

மன்னு-நிலை பெற்று விளங்கும். சீர்-சீர்த்தியையும். வயல்-வயல்களையும் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். அந்த வயல்களாவன: சம்பா நெல் விளையும் வயல், குறுவை நெல் விளையும் வயல், கரும்புத் தோட்டம், வாழைமரத் தோப்பு, தென்னமரத் தோப்பு, புளியமரத் தோப்பு, மகிழ மரத் தோப்பு, வாத நாராயண மரத் தோப்பு, பலாமரத் தோப்பு, வேப்பமரத் தோப்பு, வாகைமரத் தோப்பு, வேங்கை மரத் தோப்பு முதலியவை. ஆரூர்-திருவாரூரை. மன்னவரை-ஆட்சி புரியும் அரசராகிய வன்மீக நாதரை, வன்றொண்டர்-வன்றொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார். சென்னி-தம்முடைய தலை. உற-தரையில்

படியும்படி. அடி-வன்மீக நாதருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி-பணிந்து. த்: சந்தி. திருவருள்-வன்மீக நாதருடைய திருவருளை. மேற்கொள்-தம்முடைய மேலே கொண்ட. பொழுதில்-சமயத்தில். முன்னம்-முன் காலத்தில். மால்-திருமாலும். அயன்-பிரம தேவனும். அறியா-திருவடிகளையும் திருமுடியையும் தேடிப் பார்த்தும் தெரிந்து கொள்ளாத. முதல்வர்தாம்-முதல்வராகிய வன்மீக நாதர். தாம்: அசைநிலை. எழுந்தருள-அங்கே எழுந்தருள. அந்நிலை-அந்த நிலையில். கண்டு-அந்த நாதரைத் தரிசித்து. அடியவர்பால்-திருத் தொண்டர்களிடத்தில்; ஒருமை பன்மை மயக்கம். சார்வதனுக்கு-போய்ச் சேருவதற்காக. அணை கின்றார்-அந்த நாயனார் அடைகிறவர் ஆனார்.

பின்பு உள்ள 201-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'சுந்தர மூர்த்தி நாயனார் சேய்மைக்கண் திருத் தொண்டர்களின திருக்கூட்டத்தைப் பல தடவைகளால் வணங்கிப் பக்திகூடத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்தத் தொண்டர்களுக்குச் சமீபத்தைப் போய் அடைந்து நின்று கொண்டு அழியாத வீரத்தைக் கொண்ட அவர்கள் யாவருக் கும் தனித்தனியாக அடியேன் அடியவன் என்ற கருத்தை அமைத்துப் பேராவலோடு திருத்தொண்டத் தொகை ஆகும் ஒரு திருப்பதிகத்தைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்வா ரானார்.' பாடல் வருமாறு:

**"தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால்**
**தொழுதன்பு**
**சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி**
**நின்றழியா**
**வீரத்தார் எல்லார்க்கும் தனித்தனிவே**
**றடியேனென்**
**றார்வத்தால் திருத்தொண்டத் தொகைப்**
**பதிகம் அருள்செய்வார்."**

தூரத்து-சுந்தர மூர்த்தி நாயனார் தூரத்தில் நின்ற படியே. ஏ: அசைநிலை. திருக்கூட்டம்-திருத் தொண்டர் களின் திருக்கூட்டத்தை. பல முறையால்-பல தடவைகளால்; ஒருமை பன்மை மயக்கம். தொழுது-வணங்கி. அன்பு-பக்தி. சேர-கூட. த்: சந்தி. தாழ்ந்து-தரையில் விழுந்து அந்தத் திருக்கூட்டத்தை வணங்கிவிட்டு. எழுந்து-பிறகு தரையி லிருந்து எழுந்து நின்று. அருகு-அவர்களுடைய சமீபத்தில். சென்று-போய். எய்தி-அடைந்து. நின்று-நின்றுகொண்டு. அழியா-அழியாத. வீரத்தார்-வீரத்தை உடைய திருத் தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ''வீரம் என்னால் விளம்பும் தகையதோ.'' என்று சேக்கிழார் பாடியருளியதைக் காண்க. எல்லார்க்கும்-யாவருக்கும். தனித்தனி-தனித் தனி யாக. வேறு-வேறு வேறாக. அடியேன்-அடியேன் அடியவன். என்று-என. ஆர்வத்தால்-பேராவலோடு; உருபு மயக்கம். திருத்தொண்டத் தொகை-திருத்தொண்டத் தொகை யாகிய. ப்: சந்தி. பதிகம்-ஒரு திருப்பதிகத்தை. அருள் செய் வார்-திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார். திருத் தொண்டத் தொகை கொல்லிக் கௌவாணப் பண் அமைந் தது. அதில் வரும் முதற் பாசுரம் வருமாறு:

'' தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்;
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்;
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்;
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும்
அடியேன்;
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்;
விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்
கடியேன்;
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்;
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. ''

இந்தத் திருப்பதிகத்தில் உள்ள இறுதிப் பாசுரம் வருமாறு:

"மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்;
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்;
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்;
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே."

பிறகு உள்ள 202-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய தலைவனாகிய வன்மீக நாதன் வழங்கியருளிய சொல்லை முதலாக வைத்துச் செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய திருப்பதிகத்தினுடைய செம்மையான அர்த்தத்தோடு திருத்தொண்டத் தொகையாகிய திருப்பதிகத்தைப் பாடியருளி எல்லாத் தேவர்களுக்கும் தலைவனாகிய வன்மீக நாதன் வழங்கியருளும் உணர்ச்சியைப் பெறவும், இந்த உலகத்தில் வாழும் மக்கள் துதிக்கவும், அடியேங்களுடைய தலைவரும் வன்றொண்டரும் ஆகிய சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளி அந்த நாதருடைய எதிரில் தரையில் விழுந்து வணங்கினார்.' பாடல் வருமாறு:

**"தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத்
தமிழ்மாலைச்
செம்பொருளால் திருத்தொண்டத் தொகையான
திருப்பதிகம்
உம்பர்பிரான் தானருளும் உணர்வுபெற
உலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடிஅவர் எதிர்
பணிந்தார்."**

தம்-தம்முடைய. பெருமான்-தலைவனாகிய வன்மீக நாதன். கொடுத்த-வழங்கியருளிய. மொழி-சொல்லை. முதலாக-முதலாக வைத்து. த்:சந்தி. தமிழ்-செந்தமிழ் மொழியில்

அமைந்த. மாலை-மாலையாகிய திருப்பதிகத்தில் உள்ள. செம்-செம்மையான. பொருளால்-அர்த்தத்தோடு; உருபு மயக்கம். திருத்தொண்டத் தொகையான-திருத்தொண்டத் தொகை ஆகிய; காலமயக்கம். திருப்பதிகம்-திருப்பதிகத்தைப் பாடியருளி. உம்பர்-எல்லாத் தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான்தான்-தலைவனாகிய வன்மீக நாதன். தான்: அசைநிலை. அருளும்-வழங்கியருளும். உணர்வு-உணர்ச்சியை. பெற-அடையவும். உலகு-இந்த உலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். ஏத்த-துதிக்கவும். எம்-அடியேங்களுடைய. இது சேக்கிழார் தம்மையும் மற்றத் தொண்டர்களையும் சேர்த்துப் பாடியது. பெருமான் தலைவரும்; ஒருமை பன்மை மயக்கம். வன்றொண்டர்-வன்றொண்டருமாகிய சுந்தர மூர்த்தி நாயனார். பாடி-பாடியருளி. அவர்-அந்த நாதருடைய. எதிர்-எதிரில். பணிந்தார்-தரையில் விழுந்து அவரை வணங்கினார்.

பிறகு வரும் 203-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தேவர்களின் தலைவராகிய வன்மீக நாதருடைய அடியவர்கள் பெரிய மகிழ்ச்சியை அடையும் வண்ணம் நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார் தொண்டர்களுடைய திருக்கூட்டத்தின் நடுவில் போய்ச் சேர்ந்தார்; தம்பிரான் தோழராகிய அந்தச் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய செந்தமிழ்த் திருப்பதிகமாகிய திருத்தொண்டத் தொகையில் உள்ள முறைப்படியே அடியேங்களுடைய தலைவனாகிய வன்மீக நாதனுடைய பந்துக்களாகிய நாயன்மார்கள் ஆற்றிய திருத்தொண்டுகளை இனிமேல் துதித்துப் பாடத் தொடங்குகிறேன்.' பாடல் வருமாறு:

**"உம்பர்நா யகரடியார் பேருவகை தாமெய்த**
**நம்பியா ரூரர்திருக் கூட்டத்தின் நடுவணைந்தார்;**
**தம்பிரான் தோழரவர் தாம்மொழிந்த தமிழ்**
**முறையே**
**எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்தல்**
**உறுகின்றேன்."**

இது சேக்கிழார் கூற்று. உம்பர்-எல்லாத் தேவர்களினு டைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகர்-தலைவராகிய வன்மீக நாதருடைய. அடியார்-அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பேருவகைதாம்-பெரிய மகிழ்ச்சியை; தாம்: அசைநிலை. எய்த-அடையும் வண்ணம். நம்பியாரூரர்-நம்பியாரூரராகிய சுந்தர மூர்த்தி நாயனார். திருக்கூட்டத் தின்-தேவாசிரயன் என்னும் காவணத்தில் அமர்ந்திருந்த தொண்டர்களினுடைய திருக்கூட்டத்திற்கு. நடு-நடுவில். அணைந்தார்-போய்ச் சேர்ந்தார். தம்பிரான் தோழர்-தம் பிரான் தோழராகிய. அவர்தாம்-அந்த நாயனார். தாம்: அசைநிலை. மொழிந்த-பாடியருளிய. தமிழ்-செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகமாகிய திருத்தொண்டத் தொகையில் உள்ள; ஆகுபெயர். முறையே-வரிசைப்படியே. எம்-அடியேங்களுடைய. இது சேக்கிழார் தம்மையும் வேறு தொண்டர்களையும் சேர்த்துப் பாடியது. பிரான்-தலைவ னாகிய வன்மீக நாதனுடைய. தமர்கள்-பந்துக்களாகிய நாயன்மார்கள். திருத்தொண்டு-ஆற்றிய திருத்தொண்டு களை; ஒருமை பன்மை மயக்கம். ஏத்தல்-துதித்துப் பாடு வதை. உறுகின்றேன்-தொடங்குகிறேன்.

தமர்கள்: ''திண்ணன் கெடிலப் புனலும் உடையார் ஒருவர் தமர்நாம்.'' என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியதைக் காண்க,



முருகன் துணை

## சிறப்புப் பெயர் முதலியவற்றின்

# அகராதி

# பெரிய புராண விளக்கம்

## (பகுதி - 1)

'வாகீச கலாநிதி' **கி. வா. ஜ.**

இது பெரிய புராணத்தின் முகவுரை, சேக்கிழார் வரலாறு, பாயிரம், திருமலைச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, திருக்கூட்டச் சிறப்பு ஆகியவை அடங்கியது. முதலில் பொழிப்புரையைத் தந்து, பிறகு பாடல் எழுதி, பிறகு சொற்களின் பொருள்களையும், இலக்கணக் குறிப்புகளையும், ஒப்புமைப் பகுதிகளையும் காட்டியுள்ளார்.

ஒப்புமைப் பகுதிகள் சங்க நூல்கள், திருமுறைகள், சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, பெருங்கதை, சூளாமணி, கம்ப ராமாயணம் முதலிய நூல்களில் உள்ளன.

---

**அபிப்பிராயங்கள் சில:**

**தினமணி:** கி. வா. ஜ. அவர்கள் பரந்துபட்ட கல்வி கேள்வி அறிவினாலும், எடுத்துக்கூறும் பாங்கினாலும் சிறியோர் முதல் பெரியோர்கள் வரை எளிதில் உணரும் வண்ணம் ஒளிவிட்டுச் சுடர்கிறது.

**THE HINDU:** This book is bound to help all readers in a clear understanding of the text.

**ராமகிருஷ்ண விஜயம்:** பெரிய புராணப் பாடல்களுக்கு பொழிப்புரை, சொற்பொருள், இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப் பகுதி ஆகியவற்றைக் கொண்ட நல்ல நூல்.

விலை ரூ. 26-25

## வழி காட்டி · கி. வா. ஜ.

திருமுருகாற்றுப் படைக்கு மிகத் தெளிவான முறையில் அமைந்த விளக்கமும், கதைபோல் அமைந்த வரலாறுகளும், 2000 ஆண்டுகளுக்கு முன் தமிழர் வாழ்க்கை எவ்வாறு இருந்தது? தெய்வ வழிபாடு எப்படி நிகழ்ந்தது? முருகக் கடவுளை எவ்வாறு பூசித்தார்கள்? இத்தகைய கேள்விகளுக்கு விடை வேண்டுமானால் இந்நூலைப் படித்து உணரலாம்.

தண்டமிழ்ப் பெருஞ்சான்றோராகிய திரு.வி.க. அவர்களது முகவுரை கொண்டது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் பாராட்டும் பெற்றது.

---

**அபிப்பிராயங்கள் சில :**

**தினமணி :** ஆற்றுப்படையை வழிகாட்டி என்று அழைத்து தமிழிலக்கிய பொக்கிஷத்திற்கும், முருகன் அருள் நெறிக்கும் வழிகாட்டும் ஆசிரியருடைய எளிய நடை, யாவரையும் படிக்குமாறு தூண்டும்.

**ராமகிருஷ்ண விஜயம் :** திருமுருகாற்றுப் படைக்கு அருமையான விளக்கவுரை.

**வீரகேசரி :** பத்துப் பாட்டில் முதலாவதாகிய திருமுருகாற்றுப் படையை ஒவ்வொருவரும் படித்து நன்கு அறிந்து கொள்வதற்கு ஏற்றபடி புதுமுறையில் தெளிவான நடையில் விளக்கம் தந்துள்ளார். ஒரு அருமையான துணை நூலாகும் "வழிகாட்டி."

**THE HINDU :** Ki. Va. Ja. has taken immense pain to explain the contents of this valuable literature to the lay man in as thorough and scholory a manner as possible and in this task he has excellently succeeded.

வாகீச கலாநிதி கி. வா. ஜ. அவர்கள்

எழுதிய

# பெரிய புராண விளக்கம்

என்ற நூல் சுமார் பதினைந்து பகுதிகள் வரை விரைவில் வெளிவர உள்ளது. தமிழன்பர்கள் எப்போதும் அளிப்பது போல் இப்புத்தகத்திற்கும் தக்க ஊக்கம் தர வேண்டுகிறோம்.

மூன்றாம் பகுதியில் பெரிய புராணத்தில் முதற் காண்டத்தில் இரண்டாவதாகிய 'தில்லைவாழ் அந்தணர் சருக்கத்'தில் திருநீலகண்ட நாயனார் புராணம், இயற்பகை நாயனார் புராணம், இளையான்குடி மாற நாயனார் புராணம், மெய்ப்பொருள் நாயனார் புராணம், விறன்மிண்ட நாயனார் புராணம், ஆகியவை அடங்கியுள்ளது.

உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்

---

அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை-600 004

## எமது புதிய வெளியீடுகளிற் சில

| | | | |
|---|---|---|---|
| 1. | ராமமூர்த்தி | எஸ். வி. வி. | 28 00 |
| 2. | கோபாலன் ஐ. ஸி. எஸ். | ,, | 17 00 |
| 3. | உல்லாச வேளை | ,, | 22 00 |
| 4. | சம்பத்து | ,, | 22 00 |
| 5. | வாழ்க்கையே வாழ்க்கை | ,, | 12 00 |
| 6. | செல்லாத ரூபாய் | ,, | 11 50 |
| 7. | பொம்மி | ,, | 7 00 |
| 8. | தீபாவளிக் கதைகள் | ,, | 7 25 |
| 9. | At a Dinner | ,, | 16 00 |
| 10. | Marriage | ,, | 12 00 |
| 11. | Soap Bubbles & More Soap Bubbles | ,, | 18 00 |
| 12. | மங்கையர்க்கரசியின் காதல் | வ. வெ. சு. ஐயர் | 11 00 |
| 13. | கனகாம்பரம் | கு. ப. ரா. | 11 50 |
| 14. | ஆத்ம சிந்தனை | ,, | 7 50 |
| 15. | டால்ஸ்டாய் வாழ்க்கையும் உபதேசமும் | ,, | 11 00 |
| 16. | ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் | ,, | (அச்சில்) |
| 17. | சந்தனக் காவடி | தி. ஜ. ர. | 11 50 |
| 18. | ஆசிய ஜோதி ஜவாஹர் | ,, | 22 00 |
| 19. | கன்யா குமாரி | த. நா. குமாரசாமி | (அச்சில்) |
| 20. | குறுக்குச் சுவர் | ,, | ( ,, ) |
| 21. | கம்பதாசன் கவிதைத் திரட்டு தொகுப்பு-சிலோன் விஜயேந்திரன் | | 25 00 |
| 22. | கம்பதாசன் வாழ்வும் பணியும் | ,, | 15 00 |
| 23. | எரி நட்சத்திரம் | வி. ஸ. காண்டேகர் | 24 25 |
| 24. | தேசபக்தன் கந்தன் | கா. சி. வேங்கடரமணி | 20 00 |

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை-4

| | | | |
|---|---|---|---|
| 25. | படித்த மனைவி | 'லக்ஷ்மி' | 12 00 |
| 26. | மஹாபாரதக் கதைகள் | பி. ஸ்ரீ. | 32 50 |
| 27. | கன்றுங் கனியுதவும் | L. உலகநாத பிள்ளை | 5 50 |
| 28. | கவிச் சக்கரவர்த்தி கம்பர் | ச. தா. மூர்த்தி | 17 00 |
| 29. | இருபதாம் நூற்றாண்டின் சங்கீத மேதைகள் | சு. ரா. | 22 00 |
| 30. | ஒரே ஒரு ஊரில்... | ,, | 11 00 |
| 31. | தென்னாட்டுக் கோயில்கள் | M. ராதாகிருஷ்ண பிள்ளை | 12 00 |
| 32. | வரலாற்றுக் கதைகள் | ,, | 7 50 |
| 33. | இந்துமத உபாக்கியானம் | கிருஷ்ணசாமி | 15 00 |
| 34. | தெய்வத்தின் அருள் வாக்கு | Dr. K. K. ராமலிங்கம் | 9 00 |
| 35. | மங்கல வாழ்வுக்கு மணியான யோசனைகள் | ,, | 10 00 |
| 36. | கொல்லைக் கோழி வளர்ப்பு | ச. கு. க. | 5 00 |
| 37. | பட்டினக் காக்காய் | ராஜசூடாமணி | 7 50 |
| 38. | வாயு பகவானும் ஆல மரமும் | ,, | 6 50 |
| 39. | நரி அண்ணாவின் வால் | ,, | 6 50 |
| 40. | சிந்தைக்கு இனிய சிறுவர் கதைகள் | ,, | 6 50 |
| 41. | ஆத்திசூடிக் கதைகள் | சீனிவாசன் | 20 00 |
| 42. | இயற்கையில் அறிவியல் | ,, | 12 00 |
| 43. | அன்றாட வாழ்வில் சுகாதாரம் | ,, | 3 50 |
| 44. | ஆரோக்கியமாய் வாழ .. | ,, | 5 00 |
| 45. | பல்லவ மகேந்திரவர்மன் | தி. நா. சுப்பிரமணியம் | 9 00 |
| 46. | காட்டு மல்லிகை | ,, | 7-50 |
| 47. | தியாகி சத்தியமூர்த்தியின் —தீரச் செயல்கள் | P.L. ராஜேந்திரன் | 7 50 |
| 48. | நன்னடையால் உயர்ந்தோர் | ம.க.ஜயராம் | 5 50 |
| 49. | சாணக்கிய சபதம் | ஏ. நாராயணசாமி | 7 00 |
| 50. | ஐரோப்பிய சிறுகதைகள் | க.நா.சுப்ரமண்யன் | 13 00 |

